# பொருளடக்கம்

# முன்னுரை

ஆகஸ்டு மாதம் 30-ஆந் தேதி ராணிப்பேட்டையில் பாரதியார் மண்டப நிதிக்கு அந்த ஊர்த் தமிழன்பர்கள் அளித்த ரூபாய் இரண்டாயிரத்துச் சொச்சத்தை வாங்கிக்கொண்டு இரவு ஒன்றரை மணிக்குத் திரும்பி வந்தேன். வந்ததும் மேஜை மேல் இருந்த "நினைவு அலைகள்" என்னும் பைண்டு பூர்த்தியாகாத புத்தகம் கண்ணில் பட்டது.

புத்தகத்தைப் பிரித்து "முதல் பள்ளிக்கூடம்" என்னும் முதற் கட்டுரையைப் படிக்க ஆரம்பித்தேன்.

* * * *

"இது என்ன? ராத்திரி ஒன்றரை மணிக்கு வந்து, படிக்க ஆரம்பித்துவிட்டீர்களே? பொழுது விடிந்தால் ஆவணி அவிட்டம்! ராத்திரி சிறிது நேரமாவது தூங்கவேண்டாமா?"

"தூங்குவதற்காகத்தான் படிக்கிறேன். நேரந் தப்பிவிட்ட படியால் படுத்தால் தூக்கம் வராது; பதினைந்து நிமிஷம் படித்தால் ஒருவேளை தூக்கம் வரும்."

"அழகாய்த்தான் இருக்கிறது!"

* * * *

முதலாவது கட்டுரையில் வர்ணித்திருந்த தேர் முட்டிப் பள்ளிக்கூடம் அழகாய்த்தான் இருந்தது! ராயர் வாத்தியாரைத் தேடிப்பிடித்து, அவரிடமிருந்து பிரம்பைப் பிடுங்கி, குழந்தை சௌந்தர ராஜனை அடித்த கையில் பத்து அடி வெளுத்து விட்டு வரவேண்டும் என்று தோன்றியது.

அடுத்தாற்போல், பெரிய பள்ளிக்கூடம் என்னும் இரண்டாவது கட்டுரையைப் படித்ததும் கோபம் இன்னும் அதிகமாயிற்று. நெற்றியில் வடகலை நாமத்தைப் போட்டுக்கொண்டு நல்ல வாட்ட சாட்டமாகப் பருத்து உருண்டு இளந் தொந்தியுடன் விளங்கிய ஐயங்கார் வாத்தியாரை, அவருடைய ரூல் தடியைப் பிடுங்கி மணிக்கட்டில் இருபது அடி அடித்துவிட்டு வரவேண்டும் என்று ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது. சின்னஞ் சிறு குழந்தை சௌந்தர ராஜனின் மணிக்கட்டில் ரூல் தடியால் அடித்த பாதகனை என்ன செய்தால்தான் என்ன?

"மணி இரண்டு அடித்துவிட்டதே? இன்னும் படுத்துக் கொள்ளவில்லையா?"

"தூக்கம் வரவில்லை; வந்ததும் படுத்துக்கொள்கிறேன்."

"அழகாய்த்தான் இருக்கிறது!"

*　　*　　*　　*

பொன் வர்ணப் பட்டாணிக்கடலையின் வர்ணனை மிகவும் அழகாய்த்தான் இருந்தது. பச்சைப் பட்டாணிக் கடலையைச் சட்டியில் போட்டு வறுக்கும்போது ஏற்படும் அபூர்வமான மணம் மூக்கிலே வந்து தாக்கிற்று. பாவம்! பட்டாணிக் கட லைக்கு அவ்வளவு ஆசைப்படும் பிள்ளையின் கையில் அந்தப் பட்டாணிக்காரன் ஒரு பிடி பட்டாணிக் கடலை கொடுத்தால் என்ன? அவனுக்கு என்ன குறைந்து போய்விடும்? ஒன்றுக் குப் பத்தாகப் பெருகாதா? தரித்திரம் பிடித்தவன்!

அடடா! திருவிழாவில் அதிருஷ்டச் சீட்டுப் போட்ட அந்தச் சாயபு நன்றாயிருக்கவேண்டும்! அவன் எத்தனை பேரைப் பிளாங்கிச் சீட்டினால் மோசம் செய்தாலும் செய்யட்டும்! பாலன் செளந்தர ராஜனுக்குப் பட்டாணிக்கடலை வாங்கத் துட்டுக் கொடுத்தானல்லவா? வாழ்க! அவன் குலம் வாழ்க!

பிறகு அந்தப் பெரியம்மாள்! செளந்தர ராஜனை அன்போ டும் அருமையோடும் வளர்த்த பெரியம்மாள்! வீட்டிலே எல் லோரும் வைது திட்டிக் குழந்தையை இம்சித்துக்கொண் டிருந்த காலத்தில், கதை சொல்லியும் கோயிலுக்கு அழைத்துச் சென்றும், கோயிலில் சித்திரங்களைக் காட்டி விளக்கியும், புராண படனங்களுக்கு அழைத்துச் சென்றும், பட்சணங்கள் செய்து கொடுத்தும் செளந்தர ராஜனைப் பரிவுடன் வளர்த்த அந்தப் புண்ணியவதி! வைகுண்டம் என்பதாக ஒன்றிருந்தால், அந்த அம்மாள் அங்கே பகவானுடைய சந்நிதியில் என்றென்றைக் கும் சேவை செய்து பேரானந்தத்தில் மூழ்கி இருக்கட்டும்!

*　　*　　*　　*

"இது என்ன கூத்து? மணி இரண்டரை ஆகிறதே? இன்னுமா படித்துக்கொண்டிருக்கிறீர்கள்? அது என்ன அப்ப டிப்பட்ட அதிசயமான புத்தகம்?"

"அதிசயமான புத்தகந்தான். இதைப் படித்தால் தூக் கம் வரும் என்று நினைத்தேன். அது தவறு. வரக்கூடிய தூக்கமும் போயே போய்விட்டது!"

"அதுதான் அப்போதே சொன்னேன்; கேட்டால்தானே? என்ன புத்தகம்? ஏதாவது பயங்கரத் துப்பறியும் நாவலோ?"

"நாவலும் இல்லை; கீவலும் இல்லை. டாக்டர் ராஜன் எழுதிய புத்தகம். அவருடைய சொந்தக் கதை. நாவலையும் கீவலையும் விட அதிக சுவாரசியமாக இருக்கிறது."

"டாக்டர் ராஜன் புத்தகமா? அப்படியானால் இன்றைக்கு எங்கே தூங்கப் போகிறீர்கள்? விடிய விடியச் சிவராத்திரி தான்!"

"வைகுண்ட ஏகாதசி என்று சொல்லு. இப்போது ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி உத்ஸவத்தைப்பற்றிப் படித்துக்கொண்டிருக்கிறேன். டாக்டர் ராஜன் சிறு பிள்ளையாக இருந்தபோது தோசை வடை பிரசாதத்துக்காக ஆழ்வாரைத் தூக்கும் கைங்கரியம் செய்தாராம்!"

"ஆழ்வாரைத் தூக்கினாரோ, பெருமாளைத்தான் தூக்கினாரோ? இன்று தூக்கமில்லாமல் அடித்துவிட்டார்!"

* * * *

ஸ்ரீ சௌந்தரராஜன் வைத்தியக் கல்லூரியில் உதவிச் சம்பளம் பெற்றுப் படித்துத் தேறி டாக்டர் ராஜன் ஆனார். மனைவியையும் அழைத்துக்கொண்டு சர்க்கார் கடனைக் கழிக்கப் பர்மாவுக்குச் சென்றார். நானும் அவருடன் கூடச் சென்றேன். அங்கே சர்க்கார் ஆஸ்பத்திரியில் எத்தனையோ கஷ்டங்களை அவர் அநுபவித்தார். நானும் கூட அநுபவித்தேன். மேலதிகாரியின்மேல் கண்ணாடிக் குவளையையும் தர்மாமீட்டரையும் வீசி எறிந்தார். நானும் பக்கத்திலிருந்த கண்ணாடி 'வெயிட்'டைத் தூக்கி எறிந்தேன். பிறகு டாக்டர் ராஜன்கூடச் சென்று நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களுக்கு அவர் வைத்தியம் செய்ததைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவர் பணம் நிறையச் சம்பாதித்து எனக்கு மிக்க மகிழ்ச்சி அளித்தார். கோர்ட்டிலே அவர் சாட்சி சொன்னபோது நானும் கூட இருந்தேன். மாஜிஸ்திரேட் அவரை, 'வெறும் சப் அஸிஸ்டெண்ட் சர்ஜன்' என்று சொன்னபோது அவருக்கு வந்த ஆத்திரத்தைவிட எனக்கு அதிகம் வந்தது. சீமைக்குப் போய்ப் பெரிய வைத்தியப் பட்டத்துடன் திரும்பி வருவதென்று தீர்மானித்தார். அவர் கப்பலில் ஏறினபோது நானும் டிக்கட் இல்லாமல் ஏறிவிட்டேன்.

இப்படியாக டாக்டர் ராஜனுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளையெல்லாம் நானும் கூட இருந்து அநுபவித்தேன். டாக்டர் ராஜன் மந்திரியாகும் வரையில் அதாவது 335 பக்கங்கள்

படித்துவிட்டேன். அது வரையில் மணி பார்க்கவில்லை. கடிகாரம் மணி அடித்ததும் காதில் விழவில்லை. ராஜாஜி, மந்திரிசபையில் டாக்டர் ராஜன் சுகாதார மந்திரியாகும் கட்டத்துக்கு வந்தபோது டாண் டாண், டாண் என்று ஐந்து மணி அடித்தது. போதும்! அப்புறம் படிக்க வேண்டியதில்லை. எனக்கே தெரிந்த விவரங்கள்தாம். அதோடு பத்திரிகையிலும் படித்திருக்கிறேன். எனவே புத்தகத்தை மூடி வைத்தேன்.

ஆனால் இனிமேல் தூக்கம் எங்கே? இதோ பாற்காரன் பசு மாட்டுடன் வரும் சத்தம் கேட்கிறது. பத்து நிமிஷத்துக்கெல்லாம் காப்பி வந்துவிடும். காப்பியைச் சாப்பிட்டுவிட்டு இந்த அருமையான புத்தகத்துக்கு முன்னுரை எழுத வேண்டியதுதான். ஆவணி அவிட்ட புண்ணிய தினத்தில் இந்தப் புத்தகத்துக்கு முன்னுரை எழுதுவதைவிட வேறு என்ன நல்ல கைங்கரியம் செய்வதற்கு இருக்கிறது?

புத்தகம் என்றால் இதுவல்லவா புத்தகம்! சுயசரிதம் என்றால் இதுவல்லவா சுயசரிதம்! எழுதியவரின் உள்ளத்தோடு நம்முடைய உள்ளம் ஒட்டி ஒன்றாகிவிடுகிறதே! அவருடைய கோபதாபங்கள் நமக்கும் உண்டாகின்றனவே! அவருடைய தியாக உணர்ச்சியும் பொதுத் தொண்டில் ஆர்வமும் நம்மையும் பற்றிக்கொள்கின்றனவே! அவர் தமது குற்றங்களை எடுத்துச் சொல்லும்போது நமக்குக் கொஞ்சமும் அருவருப்பு உண்டாகாமல் அநுதாபம் உண்டாகிறதே! அவர் கடிகாரம் திருடியதைப் படிக்கும்போது, அவரைத் தண்டித்தவர்கள் மீதல்லவா நமக்கு ஆத்திரம் உண்டாகிறது! "குழந்தைகளுக்குக் கடிகாரத்தின்மேல் ஏற்படக்கூடிய ஆசையை அறிய முடியாத முட்டாள்கள்!" என்று திட்டத் தோன்றுகிறதே! அவர் கஷ்டப்படும்போது நாமும் கஷ்டப்படுகிறோமே! அவர் கண்ணீர் விடும்போது நாமும் கண்ணீர் விடுகிறோமே! அவர் வெற்றியின் சிகரத்தைக் காணும்போது, அவருக்கு முன்னாலேயே நாம் அச்சிகரத்தில் போய் உட்கார்ந்துகொண்டு "ஜே!" போடுகிறோமே!

இதுவல்லவா புத்தகம்? இதுவல்லவா சுயசரிதம்? சாதாரணமாய்க் கதைகளைப் படிக்கும்போது, (மிக உயர்ந்த ஆசிரியர்களின் கதைகளைப் படிக்கும்போதுகூட) ஆசிரியருடைய கற்பனைத் திறன், அவர் கையாளும் நடையின் சிறப்பு, கட்டுக் கோப்பின் உயர்வு ஆகியவற்றின் மீதுதான் நம்முடைய நினைவு ஊசலாடிக்கொண்டிருக்கிறது. ஆனால் டாக்டர் ராஜனின் இந்த "நினைவு அலைகள்" என்னும் புத்தகத்தைப் படிக்கும்போது நமக்கு மேற்படி விஷயங்களைப்பற்றிய நினைவே இருப்பதில்லை. நம்மையே அடியோடு மறந்து போய்விடுகிறோம். டாக்டர் ராஜ

னுடைய வாழ்க்கையில் நமது மனம் ஒன்றிப் போய்விடுகிறது. வேறு நினைவுக்கே இடமிருப்பதில்லை. எழுதினால் இப்படியல்லவா எழுதவேண்டும்?

*   *   *   *

டாக்டர் தி. சே. சௌ. ராஜன் அவர்கள் என்னுடைய குருவும் தலைவரும் ஆவர். பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்குத் தொண்டு செய்வதற்காகக் குமாஸ்தாக்களைத் தயாரிப்பதற்கென்றே ஏற்பட்ட கல்வி முறையை நான் பயின்றுகொண்டிருந்த காலத்தில், என்னைப் பள்ளிக்கூடத்துக்கும் பரீட்சைக்கும் தலை முழுகிவிட்டுத் தேசத் தொண்டில் ஈடுபடச் செய்தவர் டாக்டர் ராஜன். தீரத்துக்கும் செயல் திறமைக்கும் சொல்லின் ஆற்றலுக்கும் சுயநலமற்ற தியாகத் தொண்டுக்கும் நான் இலட்சிய புருஷர்களாகக் கொண்டிருக்கும் ஒரு சிலரில் டாக்டரும் ஒருவர்.

அத்தகைய அருமைத் தலைவர் எழுதியுள்ள நூலுக்கு நான் முன்னுரை எழுதுவதென்பது அதிகப் பிரசங்கித்தனத்தில் சேரவேண்டிய காரியமாகவே தோன்றும். இந்தக் காரியத்தின் மூலம், "குருவுக்கு மிஞ்சிய சீடன்" என்னும் பட்டத்துக்கு நான் தகுதி பெற்றவனாகிறேன்.

ஆயினும், ஒரு விதத்திலே பார்த்தால் டாக்டர் ராஜன் அவர்களுடைய புத்தகத்துக்கு முன்னுரை எழுதும் தகுதி எனக்கு உண்டு என்று உரிமை பாராட்டிக்கொள்ளலாம்.

தமிழில் எழுதத் தங்களுக்கு நன்றாய் வராது என்று எண்ணிக்கொண்டிருந்த சில பெரியோர்களையும், தமிழில் எழுதுவதற்கு ஆர்வமோ தூண்டுதலோ இல்லாமலிருந்த இன்னும் சில பெரியோர்களையும் தமிழில் எழுதும்படி செய்த பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது. இவர்களில் ராஜாஜி, எஸ். வி. வி., மகாகனம் சாஸ்திரி ஆகியவர்களோடு டாக்டர் ராஜன் அவர்களையும் சேர்க்கவேண்டும்.

பத்து வருஷத்துக்கு முன்னால் காந்தி மகாத்மா தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, டாக்டர் ராஜன் மகாத்மாவின் மொழிபெயர்ப்பாளராகப் பிரயாணம் செய்து வந்தார். அந்தப் பிரயாண அநுபவங்களைக் கட்டுரைகளாக எழுதும்படி டாக்டரவர்களைக் கேட்டுக்கொண்டேன். டாக்டரும் மனமுவந்து எழுதினார். அந்தக் கட்டுரைகள் தமிழ் நாட்டின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. புதிது புதிதாகத் தமிழில் எழுதத் தொடங்கிய டாக்டரின் நடையில் ஜீவ

சக்தியும் ஹாஸ்யமும் ததும்பியதோடு தங்கு தடையில்லாத தெளிந்த இயற்கை ஓட்டமும் இருந்தது. கட்டுரைகளைப் படித்தவர்கள் எல்லோரும் மகாத்மாவுடன் தாங்களும் பிரயாணம் செய்து எல்லா வைபவங்களையும் நேரில் கண்டு கேட்டு அநுபவித்தது போலவே மகிழ்ச்சி அடைந்தார்கள்.

அதற்குப் பிறகு டாக்டர் ராஜன் எவ்வளவோ விஷயங்களைப்பற்றி எழுதியிருக்கிறார். எழுதியவை எல்லாவற்றிலும் ஜீவனுள்ள உயர்ந்த தமிழ் நடைக்கு இருக்கவேண்டிய மேற்கூறிய லட்சணங்கள் எல்லாம் பொருந்தியிருந்தன.

இப்போது வெளியாகும் "நினைவு அலைகள்" என்னும் இந்த நூலிலும் அந்த லட்சணங்கள் எல்லாம் சிறப்பாகப் பொருந்தி யிருக்கின்றன. அவற்றோடு, ஒவ்வொரு வரியிலும் ஒவ்வொரு வார்த்தையிலும் உண்மைப்பற்றும் விடுதலை ஆர்வமும் முட்டி மோதித் ததும்பிக்கொண்டு நிற்கின்றன. சமூகமும் அரசியலும் சேர்ந்து ஏற்படுத்திய விலங்குகளை எல்லாம் தகர்த்தெறிந்து பூரண விடுதலை பெறுவதற்கு ஓர் உயர்ந்த ஆத்மா நடத்திய தீரப் போராட்டங்களை இந்தப் புத்தகம் நமக்கு உள்ளது உள்ளபடி தெரியப்படுத்துகின்றது. இதைப் படிப்பவர்களுக்கெல்லாம் "நாமும் அத்தகைய தீரப் போராட்டங்களை நடத்தலாம்; எவ்வளவு விரோதமான சூழ்நிலையிலும் போராடி வெற்றி காணலாம்" என்ற நம்பிக்கையை உண்டாக்குகிறது.

இந்த அருமையான புத்தகத்தை வெளியிடும் பாக்கியத்தைப் பெற்ற "கலைமகள்" காரியாலயத்தை வாழ்த்துகிறேன்.

சென்னை
31-8-47.

ரா. கிருஷ்ணமூர்த்தி

# முதல் பள்ளிக்கூடம்

"எங்கள் ஊர்" என்று சொல்வதற்கு அப்படிப்பட்ட ஊர் ஒன்று இருந்தால் அல்லவோ அதைப் பற்றி எழுதலாம்? அப்படி யில்லாமல் யாரும் இருப்பார்களா என்று கேட்கலாம். இருக்கக்கூடும் என்பதற்கு நானே அத்தாட்சி. என் பாட்டனர் - ஏன், தகப்பனர்கூட - இளவயசில் வாழ்ந்த கிராமம் திருவையாற்றுக்குச் சமீபமாயுள்ள தில்லை ஸ்தானம் (திருநெய்த்தானம்). பரம்பரையாக அந்தக் கிராமத்தினர் என்பதற்காக என் தகப்பனர் தம் பெயருக்கு முன்பாக, 'தி' என்று வைத்துக்கொண்டார். நான் அவர் மகன் என்பதற்காக, 'தி' வைத்துக்கொண் டிருக்கிறேன். ஆனல் 'தி' என்னும் எழுத்து என் வாழ்நாட்களின் மாறுபாட்டுக்குப் பொருந்தியே இருக்கிறது. தில்லைஸ்தானம், திருவரங்கம், திருச்சிராப்பள்ளி, திருஈங்கோய் மலை என்று அடுத்தடுத்து வாழ்ந்துவரும் எல்லா இடங்களும் 'தி'யில் ஆரம்பிக்கின்றன.

நான் பிறந்த ஊர் நாகபட்டினமென்று என் தகப்பனர் சொல்லியிருக்கிறர். குழந்தைகளின் ஐந்து அல்லது ஆறு வயசிற்கு முன் நினைவுகள் ஞாபகத்தில் இருக்கமாட்டா என்பது எனது அநுபவம். நாகபட்டினத்தைப் பற்றி எனக்கு யாதொரு நினைவும் இல்லை. ஆனல் ஒன்றே ஒன்று மட்டில் இன்றைக்கும் என் மனத்தை விட்டு அகலவில்லை. மீசை வைத்த ஒருவர், சற்றுக் கருநிறமானவர், நெற்றியில் பட்டை நாமமும் உண்டு, என்னைத் தோளில் சுமந்துகொண்டு கடை, கோவில் முதலிய இடங்களுக்குச் செல்வார். அவருடைய பெயர் மணவாள ராஜு என்று என் தாயினிடமிருந்து தெரிந்துகொண்டேன். அந்த நினைவைத் தவிரப் பிறகு ஒரு முறையாகிலும் அவரைச் சந்திக்கவில்லை. அவர் உருவமும் நாமமும் என் மனத்தின்கண் நின்றுகொண் டிருக்கின்றன.

அவருடைய அன்பினால் என் பிற்கால வாழ்வு எவ்விதம் நடந்ததென்று சொல்லமுடியாது.

எனக்கு நினைவு தெரிந்த பிறகு கண்ட ஊர் திருவரங்கம் அல்லது ஸ்ரீரங்கம். கட்டி முடிந்த கோபுரங்கள், முடியாத மொட்டைக் கோபுரங்கள், இடிந்த மதில்கள், இடியாத மதில்கள், பாழடைந்த மண்டபங்கள், அதிவிசித்திரமான கல்வெட்டுக்கள், உலகப் போக்கை அறிவித்துக்கொண்டு உடைந்தும் உடையாமலும் உள்ள அழியாத கற்சிலைகள் - இவ்விதம் பல விநோதங்கள் அடங்கிய அவ்வூரைப் பற்றிச் சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள் தாம் எழுத முடியுமே தவிர என்னால் முடியாது.

நான் பிறந்தது ஏழைக் குடும்பம். என் பாட்டனாருக்கு மாதம் ஐந்து ரூபாய் சம்பளம். எங்கள் தகப்பனாருக்குத் தென் இந்திய ரெயில்வேக் கம்பெனியில் எங்கள் பாட்டனாரைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகமான சம்பளம். எங்கள் பாட்டனாருக்கு ஒரே பிள்ளை. எனினும் எங்கள் குடும்பம் வளர்ந்துகொண்டேதான் வந்தது. ஆனால் வருவாய் மட்டும் வளரவில்லை. ஒரே முற்றுப் புள்ளிதான். பாட்டனார், தகப்பனார், தாயார் - இம்மூவரும் இருபத்தைந்து ரூபாயில்தான் வயிறு வளர்த்தனர். நாங்கள் ஆறு மக்களும் பிறந்து குடும்ப ஜனத்தொகை ஒன்பது பேரான காலத்திலும் அதே இருபத்தைந்து ரூபாய்தான். வாடகை கொடாமல் அகோபில சுவாமிகள் மடத்தில் இரண்டு இருட்டு அறைகளுடன் எங்கள் உலகம் நடந்தது.

தேர்முட்டிக்கும் திண்ணைப் பள்ளிக்கூடத்திற்கும் என்ன உறவு என்பது எனக்குத் தெரியாது. ஆனால் நான் படித்த ஆரம்பப் பாடசாலைகள் இரண்டும் தேர்முட்டி மண்டபங்கள். சித்திரை மாதத்தில் நடக்கும் ரதோத்ஸவத்திற்கு ஓடும் தேர், கிழக்குச் சித்திரை வீதியில் உள்ளது. சுவாமியைத் தேரில் ஏற்றுவதற்கான இருபது படிக்கட்டுகளுள்ள மேடை மண்டபமும், அதனடியில் பதினாறு கற்கம்பங்கள் அடங்கிய பெரிய மண்டபமும் இன்னும் இருக்கின்றன. அந்த அடி மண்டபத்தில் இருபுறம் மதில்களாலும் மற்றும் இருபுறம் மூங்கில் தட்டிகளாலும் அடைக்கப்பட்டிருந்த இடமே என் முதல்

பள்ளிக்கூடம். எங்கள் பள்ளிக்கூடத்தில் மேஜை, பெஞ்சு, நாற்காலி ஒன்றும் இல்லை. எல்லோரும் தரையில் உட்காருவோம். உயர்தர வகுப்பு, கருங்கல் தளவரிசை போட்ட பாதியில் நடக்கும். எங்கள் வகுப்பு மணல் தரை. சுவர்களில் படம் ஒன்றும் இராது.

மத்தியில் இரண்டு தூண்களுக்கு இடையில் பத்தடி உயரத்தில் ஒரு பனைவிட்டம். அதன் மத்தியில் இரண்டு துளைகள். அதனின்று திரித்த முரட்டுக்கயிறு ஒன்று வளைவாகத் தொங்கிக்கொண்டிருக்கும். அதற்குப் பெயர் கோதண்டம் என்று சொல்வது அக்காலத்திய வழக்கம். குறும்பு செய்யும் பையன்களைத் தலைகீழாகத் தொங்கவிட்டுப் பின்புறத்தில் உபாத்தியாயர் பிரம்பால் அடிப்பதற்காக ஏற்பட்ட ஒரு சாதனம் இது. இந்த அலங்காரத்தைத் தவிர எங்கள் பள்ளிக்கூடத்தில் வேறு சாமான்கள் இல்லை. நான் முதல் நாள் பள்ளியில் நுழைந்ததும், இதன் வரலாற்றைத் தெரிந்துகொண்டேன். அன்று என் மனத்தில் உண்டான திகில் இன்றும் மறக்கவில்லை.

உபாத்தியாயர் ஏழை மாத்துவப் பிராமணர்; கறுப்பு நிறம், இளவயசு, அழுக்கடைந்த நீர்க்காவி ஏறிய உடை, நெற்றியில் கரிக்கோடு, உடலில் கோபி முத்திரைச் சின்னங்கள்-இவைகளோடு விளங்கினார். அவருடைய முகத்தில் சிரிப்பு, புன்முறுவல், மலர்ச்சி இவைகளை நான் ஒருபொழுதும் காணவில்லை. எப்பொழுதும் கடுகடுப்பு. பிரம்பைக் கீழே வைப்பதே இல்லை. பள்ளியில் இருந்த மூன்று வகுப்பிற்கும் ஒரே உபாத்தியாயர். உபாத்தியாயர் கவனம் இல்லாத பொழுது சட்டாம்பிள்ளையின் கண்காணிப்பு இருக்கும். உபாத்தியாயரை 'ஸார்' என்று நாங்கள் சொல்லுகிறதும் கூப்பிடுவதும் வழக்கம். என் மனத்தில் அந்தப் பள்ளியில் வேரூன்றிய படிப்பு, கோதண்டமும், ஸாரின் தரிசனமும், பிரம்படியுந்தான். என்னை எதற்காக 'ஸார்' அடிக்கிறாரென்பது எனக்கே தெரியாது. 'ஸார்" என்றால் பிரம்பால் அடிக்க வேண்டியவர் என்பதுதான் அந்நாளில் என் மனத்தில் ஏற்பட்ட முடிவு.

அந்தப் பள்ளிக்கூடத்தில் என்ன கற்றுக்கொண்டேன் என்பது எனக்குத் தெரியாது. மணலில் எழுத்து எழுதப் பழகியது ஞாபகம் இருக்கிறது. நான் வேண்டுமென்று குறும்பு செய்ததாக நினைவில்லை. ஆனால், தினந்தோறும் அடிவாங்குவது மட்டும் வழக்கமாக இருந்தது. சில சமயங்களில், 'ஸாரு'க்குக் கைவலி எடுத்ததாலோ வேறு எந்தக் காரணத்தாலோ என்னை அடிக்காமல் வேறு தண்டனைகள் விதித்ததும் உண்டு. 'குறிச்சி போடுகிறது' ஒரு வகை; அதாவது சுவரில் முதுகை வைத்துக்கொண்டு, முழங்கால் மண்டி போட்டு நிற்பது; அந்தக் காட்சி கையில்லாத நாற்காலிபோல் இருக்கும். இப்படி சுமார் அரை மணிக்குக் குறையாமல் நிற்கவேண்டும்; ஒரு மணி வரை நீடிக்கும். போதாக்குறைக்கு ஒரு தடிப்பையனை வேறு மடியில் உட்காரவைப்பதும் உண்டு. அவனையும் துடையில் சுமந்துகொண்டு நிற்க வேண்டும். இந்தச் சித்திரவதை மிகவும் லேசான தண்டனை. வீட்டில் வந்து இதைப்பற்றிச் சொல்ல எனக்குப் பயம். அப்படி ஒரு சமயம் சொன்னாலும் அதிகப் பயன் இராது. குற்றமில்லாமல் உபாத்தியாயர் ஒன்றும் செய்ய மாட்டார் என்பது என் தகப்பனாரின் முடிவான எண்ணம். எனக்கோ தினந்தோறும் பள்ளிக்கூடத்திற்குப் போவது சிறைக்கூடம் போவதுபோல் இருந்தது. போகாமல் வெளியே விளையாடிவிட்டால் வீட்டிற்குத் தகவல் கிடைத்துவிடும். பள்ளிக்கூடத்தில் விழும் அடிகளைச் சாயங்காலத்தில் என் தகப்பனாரிடம் பெற்றுவிடுவேன்.

சுமார் இரண்டு வருஷம் இந்தப் படிப்பு நடந்தது. எங்கள் வீட்டுக்கு எதிரில் கோவிலின் கருங்கல் மதில் உண்டு; மதிலுக்குச் சற்று வடக்கே உயர்ந்த கோபுரம். அதற்கு வெள்ளைக் கோபுரமென்ற பெயர் இன்னும் வழங்கிவருகிறது. சுமார் இருநூறு அடி உயரம் இருக்கும். கோபுரம் கறுப்பாக மாறிவிட்டது; எனினும் அது வெள்ளைக் கோபுரந்தான். மதிலில் தரைமட்டத்திலிருந்து பத்து அடி உயரத்திற்குமேல் முக்கோண வடிவமாக ஒரு சிறிய துவாரம் உண்டு. அந்தத் துவாரத்தில் மிகவும் அழகான பச்சைக்கிளி, கழுத்தில் பவளமணி

கட்டியது போலிருக்கும். செங்கோட்டுடன் பார்ப்போர் மனத்தைக் கவரும் காட்சி அளிக்கும். பள்ளிக்கூடம் போவதைக் காட்டிலும் சுவாரஸ்யமாக, அந்தக் கிளி அடிக்கடி வந்து அந்தத் துவாரத்திற்குள் புகுந்து சற்று நேரம் தங்கிய பிறகு ஓடிவிடுவதை அடிக்கடி கவனித்திருக்கிறேன். அதுதான் அதனுடைய வீடு. அதற்கு வாசஸ்தலம் அழிவில்லாத கருங்கல் கட்டிடத்தில் அதற்கு ஏற்பட்டுவிட்டது. அது வருவதையும் போவதையும் வெகு நேரம் பார்த்துக்கொண் டிருப்பதில் எனக்கு ஓர் ஆசை. உள்ளே என்ன செய்கிறதென்பதைத் தெரிந்துகொள்ள மிகுந்த ஆர்வம். பல நாள் பார்த்திருந்து கடைசியாக ஒரு நாள் கிளி உள்ளே நுழைந்திருக்கும் சமயம் பார்த்து, ஓர் ஏணியின் உதவியைக் கொண்டு அந்தப் பொந்தில் விரலை விட்டேன். கிளி வெடுக்கென்று கொத்தி விரலில் ரத்தம் வந்துவிட்டது. இந்தச் சங்கதி தெரிந்த என் தாய், "நீ ஏன் பள்ளிக்கூடம் போகாமல் இப்படிக் குறும்பு பண்ணிக்கொண் டிருக்கிறாய்? நல்ல தண்டனை" என்று வியாக்கியானம் செய்தாள். அப்பொழுதும் நான் குற்றம் செய்ததாக எனக்குத் தோன்றவில்லை.

பள்ளிக்கூடத்தில் இருக்கும்பொழுது குறைந்தது அரை மணிக்கு ஒரு தடவையாவது, "ஸார், ஒண்ணுக்கு" என்று ஆள் காட்டி விரலை நீட்டிக்கொண்டு நிற்பேன். "தொலை" என்று 'ஸார்' ஆசீர்வதிப்பார். சட்டாம்பிள்ளையின் மேற்பார்வையாக இருந்தால் கால் மணிக்கு ஒரு தரம் 'ஒண்ணு'க்கு வெளியேறிவிடுவேன். உபத்திரவம் பொறுக்கமுடியாவிட்டால், "ஸார், இரண்டுக்கு" என்று இரண்டு விரல்களைக் காண்பிப்பேன். வெளிவந்ததும் வீட்டிற்கு வந்து கிளியைப் பார்க்கலாமென்று காத்திருப்பேன். என் ஆரம்பப் படிப்பு இவ்வளவு விமரிசையாக நடந்தது.

பள்ளிக்கூடத்திற்கு மாதம் ஓர் அணாச் சம்பளம் கொடுத்ததாக நினைவிருக்கிறது. உபாத்தியாயர் உட்பட ஒருவரும் சொக்காய் போடுவதில்லை. வேறு செலவுகளோ இல்லை. இரண்டு வருஷத்தில் போதிய படிப்பு இந்தப் பள்ளிக்கூடத்தில் வரவில்லையென்று என்னை வேறு பள்ளிக்கு அனுப்பினார்கள்.

# பெரிய பள்ளிக்கூடம்

நான் புதிதாகச் சேர்ந்த பள்ளிக்கூடத்துக்குப் பெரிய பள்ளிக்கூடமென்று பெயர். நாலு வகுப்புகளும், இரண்டு உபாத்தியாயர்களும், சுமார் நூறு பையன்களும் இருந்தார்கள். ஆனால் பள்ளிக்கூடம் என்னவோ மற்றொரு 'தேர்முட்டி' மண்டபந்தான். சித்திரைத் தேர்முட்டிக்குப் பதிலாகத் 'தைத் தேர்முட்டி'. தேர்முட்டிகளில் பள்ளிக்கூடங்கள் வைப்பதால் பள்ளிக்கூடத்திற்குக் கக்கூஸ் தேவையில்லை. தேரின் அடிப் பக்கத்திலும் சக்கரங்களின் மறைவுகளிலுமே எல்லாப் பையன்களும் மலம், நீர் முதலியவை கழிப்பார்கள். மலத்தைப் பன்றி தினந்தோறும் வந்து சுத்தம் செய்துவிடும். நீர்மட்டிலும் மண்ணில் தங்கி, காய்ந்து காற்றடிக்கும்போதும், வெயிலடிக்கும்போதும் நாற்றம் எடுக்கும். அந்தக் காலத்தில் அது நாற்றம் எடுப்பதாகவே நான் உணரவில்லை. தேரின் மேல்தட்டில்தான் ரங்கநாதஸ்வாமி எழுந்தருளித் தேர் உத்ஸவத்தில் வருஷந்தோறும் காட்சியளிப்பார். தெய்வபக்தியும் சுகாதார உணர்ச்சியும் ஒரே நிலையில் இருந்தன.

இந்தப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயருக்கு நாற்காலி மேஜை உண்டு. எங்களுக்கு உட்காருவதற்குச் சுவர் ஓரமாகப் பெஞ்சுகள் இருந்தன. சுவரிலும் யானை, பூனை, மாடு முதலிய வர்ணப் படங்களும் இருந்தன. நான் அங்கே படித்தது மூன்றாவதோ நான்காவது வகுப்போ எனக்குத் தெரியாது. இரண்டு வகுப்புப் பிள்ளைகளும் சேர்ந்து உட்காருவோம். வாத்தியார் மாத்திரம் ஒருவரே. கோதண்டம் போன்ற அலங்காரங்கள் இங்கே இல்லை. 'குறிச்சி போடுகிற' பழக்கமும் இல்லை. வாத்தியார் நல்ல வாட்ட சாட்டமாகப் பருத்து உருண்டு இளந்தொந்தியுடனும், நெற்றியில் வடகலை நாமத்துடனும் விளங்கினார். ஆனால் அவரும் சொக்காய் முதலியவைகள் போடுவதில்லை. அந்த நாளில் போடவேண்டுமென்று சட்டமும் இல்லை

போலும்! அநேகமாய்க் கால்களை மடக்கிச் 'சப்பளம் கூட்டி' உபாத்தியாயர் நாற்காலியில் அமர்ந்திருப்பார். மேஜையின் பேரில் ஒரு முழ நீளமுள்ள சிவப்பு, மஞ்சள் வர்ணம் மாறி மாறிப் போட்ட ஒரு ரூல்தடி இருக்கும். ஆனால் இந்தத் தடி ரூல் போடுவதற்கு மட்டும் உபயோகப்படாது. உபாத்தியாயர் கையில் உருட்டிக்கொண் டிருப்பதற்கும், பையன்கள் மணிக் கட்டில் அடிப்பதற்கும் பயன்பட்டுக்கொண் டிருந்தது. உபாத்தி யாயருக்கு மூக்குப்பொடி போடுவதில் வெகு பிரியம். மற்ற வர்களைப்போல விட்டுவிட்டுப் போடமாட்டார். பள்ளிக்கூடம் நடக்கும் பகல் நேரம் முழுவதற்கும் தேவையான மூக்குப் பொடியை ஒரு சிறிய குன்றுபோல மேஜைமேல் குவித்து வைப்பார். வலதுகைப் பெருவிரலையும் ஆள்காட்டிவிரலையும் சேர்த்து, நிஷ்டையில் இருப்பவர்கள் போல, இடையில் பொடியை வைத்து மெதுவாக இழுத்துக்கொண்டே இருப்பார். இந்த மூக்குப்பொடி ஜபம் பையன்களை ரூல் தடியால் அடிக் கும்பொழுது நின்றுவிடும். ஒரு சமயம் இந்த நிஷ்டை கலைய விருப்பம் இல்லாவிட்டால், இடது கையால் ரூல் தடியை எடுத்து உபயோகப்படுத்துவதும் உண்டு.

இந்த உபாத்தியாயருக்கு ஒரே ஓர் எண்ணம்: பையன் களுக்குக் கையெழுத்து நன்றாக இருக்கவேண்டும். தம் பையன் கள் எல்லோரும் குமாஸ்தாவாகவே வேலை பார்த்துத் தமக்கு நல்ல பெயர் கிடைக்கச் செய்யவேண்டுமென்கிற ஆசை அவ ருக்கு. அதற்காகவே, பையன்களுடைய கைமணிக்கட்டில் போர் புரிந்துகொண் டிருப்பார். என் கையெழுத்து உருப்படி யில்லாமல் போனதற்கு இந்த உபாத்தியாயரும், அவருடைய தடியுந்தான் காரணம். எவ்வளவோ முயன்று எழுதிய போதிலும், சற்றுக் கோணலாகவே போகும். பேனாவைச் சரியாகப் பிடிப்பதைப் பற்றியோ, நேராக நல்ல வெளிச் சத்தில் உட்கார்ந்து எழுத வேண்டியதன் அவசியத்தைப் பற்றியோ அவர் ஒன்றும் சொல்லிக்கொடுக்க மாட் டார். எழுத்துப் ப்ழக்கிக் கொடுக்கவும் மாட்டார். ரூல் தடிப் பிரயோகம் ஒன்றுதான் அவருடைய உபாத்திமைத் தொழிலின் திறம். அந்தப் பயத்தினாலும், சரியானபடி எழுதும்

முறை கற்றுக்கொடுக்கப் படாததனாலும் என் கையெழுத்து இன்றைக்கும் திருந்தவில்லை. முதல் படித்த பள்ளிக்கூடத்தில் எவ்வளவு வெறுப்பு இருந்ததோ, அதைக் காட்டிலும் இன்னும் அதிகமாகவே இந்த இடத்திலும் இருந்தது.

வெள்ளைக் கோபுர வாசல் வழியாக, அழகான சிற்ப வேலைப்பாடுகளும் கல்வெட்டுக்களும் அடங்கிய நூற்றுக்கால் மண்டபத்தின் வழியே தெற்குக் கோபுரவாயில் தாண்டியவுடன் தைத்தேர் மண்டபம் இருக்கிறது. வீட்டை விட்டுச் சரியான நேரத்தில் நான் புறப்பட்டபோதிலும், பள்ளிக்கூடத்திற்குச் சரியான நேரத்தில் வந்துசேரமாட்டேன். வெகு அழகாகச் செதுக்கப்பட்ட கல் குதிரைகள் கம்பங்களில் உயிருடன் இருப்பது போலத் தோன்றும். உடனே புத்தகம், பலகை எல்லாவற்றையும் கீழே வைத்துவிட்டு அரைமணி நேரமாகிலும் அந்தக் குதிரைகளில் தினம் ஒன்றாக ஏறி ஓட்டுவதை ஆனந்தமாக அநுபவிப்பேன். ஓடாத கல் குதிரையானாலும் அது ஓடுவதாகவே எனக்கு உணர்ச்சியும் ஆனந்தமும் இருக்கும். அலுத்துப் போன பிறகுதான் இறங்கி, வேண்டா வெறுப்பாகப் பள்ளிக்கூடம் போவேன்.

ஸ்ரீரங்கத்தில் மிகவும் பெயர்போனது வைகுண்ட ஏகாதசி உத்ஸவம். மகத்தான கொட்டகை நிருமாணித்து, அதில் அலங்காரங்கள் செய்வதற்காகச் சுமார் இரண்டு மாதங்களுக்கு முன்பாகவே அசைந்தாடிகளும் பொம்மைகளும் சேகரித்து வைக்கப்படுவது வழக்கம். நூற்றுக்கால் மண்டபத்தில் (இதைச் சேஷகிரிராயர் மண்டபமென்று சொல்வார்கள்) கீற்றடைப்பு அடைத்து, அங்கு வேலைக்காரர்கள் வர்ணக் காகிதங்கள், குருணைப்பட்டை, நெட்டி இவைகளால் வெகு அழகாக வேலை செய்வார்கள். அவர்கள் செய்யும் வேலையைக் கவனிக்க என் மனம் நாடும். ஆனால் என்னை உள்ளே விடமாட்டார்கள். அடைத்திருக்கும் தட்டிகளில் ஒரு சிறு துவாரம் செய்துகொண்டு, அதன் வழியாக மணிக்கணக்காக அவர்கள் வேலையை மிக்க ஆச்சரியத்துடன் கவனிப்பேன். காலையில் பள்ளிக்கூடம் போகும்பொழுதும்

நெட்டியைச் சீவிக் கட்டி உருவம் உண்டாக்குவதற்கான வேலை நடக்கும். அப்பொழுது உடலின் ஒரு பாகம் செய்யப்பட்டிருக்கும். மறுபடியும் சாயங்காலம் பார்க்கும்பொழுது கைகால்கள் உண்டாகிவிடும். மற்றொரு புறத்தில், உயர்தர வேலைக்காரன் ஒருவன் தலை, முகம், கண், காது, இவைகளை உண்டுபண்ணிக்கொண்டிருப்பான். சில பொம்மைகள் முண்டமாக இடைவரையில் தான் இருக்கும். தினந்தோறும், பொம்மைகள் உருவடைந்து வருவதைப் பார்ப்பதில் என் மனம் சென்றுகொண்டிருக்கும். கடைசியாக மண் பூசி, வர்ணங்கள் தடவி, கண் முதலியவைகள் வைத்து உருவமாக்க ஒரு மாதத்திற்கு மேலாகும். பள்ளிக்கூடம் போவதை விட்டு, இடுக்கு வழியாக, இந்த விநோத உற்பத்திகளைச் சலிக்காமல் கவனித்து வருவேன். வெட்டுண்டு, சிதறிக் கிடக்கும் வர்ணக் காகிதங்களையும் குருணைப்பட்டைகளையும் சேகரிப்பதில் எவ்வளவு நேரம் செலவழித்திருப்பேனென்று கணக்கு எடுக்கமுடியாது.

ஒரு நாள் பள்ளிக்கூடம் புறப்பட்டபின் வழக்கம்போல் வர்ணக் காகிதம் பொறுக்கும் வேலையில் ஈடுபட்டு, சற்று அலுத்துப்போய் அங்கே கிடந்த ஒரு மரக்கட்டையில் புத்தகத்தை வைத்துவிட்டு, அதன் பேரில் தலையை வைத்துக்கொண்டு தூங்கிவிட்டேன். அந்தக் காலத்தில் பையன்கள் பள்ளிக்கூடம் வராவிட்டால், உபாத்தியாயர் சட்டாம்பிள்ளையை அனுப்பி வராத பிள்ளைகளை வீட்டிற்குப் போய்க் கூட்டிவரச் செய்வது வழக்கம். இந்த வழக்கம் இன்னும் கிராமங்களில் நடந்துவருகிறது. நான் சேஷகிரிராயர் மண்டபத்தில் தூங்கிக்கொண்டிருந்த தினம், சட்டாம்பிள்ளை எங்கள் வீட்டிற்குப் போய்த் தேடியபொழுது, நான் சரியான நேரத்திலே பள்ளிக்கூடம் புறப்பட்டுவிட்டதாக என் தாய் சொல்லிவிட்டாள்.

நான் காகிதம் பொறுக்கும் தொழிலில் ஈடுபட்டிருப்பதை அறிந்த என் நண்பர்கள், உபாத்தியாயரிடம் நான் இருக்கக்கூடிய இடத்தைப்பற்றிக் 'கோள்' சொன்னார்கள். உடனே இரண்டு தடிச் சட்டாம்பிள்ளைகளை அனுப்பி, என்னைக்

கையோடு பிடித்து இழுத்து வரும்படி உபாத்தியாயர் உத்தர விட்டார். அந்த இரண்டு கிங்கரர்களும் வந்து, தூங்கிக்கொண் டிருந்த என்னை, ஒரே கட்டாகக் கட்டித் தூக்கிக்கொண்டு போய்ப் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயருக்கு முன்னே நிறுத்தினார்கள். நான் அகப்பட்டுக்கொண்ட பிரமையில் ஒன்றும் சொல்லத் தெரியாமல் விழித்தேன். அன்றைத்தினம் எனக்கு இரட்டை உபயம். உபாத்தியாயர் பையன்கள் கண் முன்பாக எலும்பு நொறுங்கும்படி புடைத்தார். வீடு வந்ததும், என் தகப்பனார் என்னைக் கண்டிக்கும் முறையில் என் உடம்பில் அடிபட்டிராத பாக்கி இடங்களைப் பிரம்படியால் நிரப்பிவிட்டார்! இந்த நிலைமையில், பள்ளிக்கூடமும் படிப்பும் என்ன முறையில் எனக்குப் பயன்பட்டிருக்குமென நான் சொல்லவேண்டியதில்லை. பள்ளிக்கூடத்தைப்பற்றி நாங்கள் அக்காலத்தில் பாடிவந்த பாட்டு எனக்கு இன்னும் மறக்க வில்லை. அந்தச் செய்யுளுக்கு ஆசிரியர் யாரோ தெரியாது.

> ''நெடுமால் திருமருகா
> நித்த நித்தம் இந்த இழவா ?
> வாத்தியார் சாகாரு ?
> வயிற்றெரிச்சல் தீராதா ?''

இதைப் பாடிப் பாடி என் வயிற்றெரிச்சலை ஒருவாறு தீர்த்துக்கொள்வேன்.

உபாத்தியாயரின் மேஜைமீது ஒரு சிறிய கடிகாரம் வைத்திருக்கும். அது அவருடைய உபயோகத்திற்காகவும் மணி அடிப்பதற்காகச் சட்டாம்பிள்ளையின் உபயோகத்திற் காகவும் இருக்கும். பையன்களுக்கு மணி பார்க்கிற படிப்பு நாலாவது வகுப்பில்தான் என்பது பள்ளிக்கூடத்துத் திட்டம். ஆனால், எனக்கு அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற ஆவல் அதிகமாக இருந்தது. அதற்காக, ஒரு சிறிய பைக் கடிகாரமாகிலும் இருந்தால் நலமென நினைத்தேன். அது டக் டக் என்று சப்தம் செய்வதைக் காதில் வைத்து நெடுநேரம் சலியாது கேட்பதில் ஆசை. ஆனால் கடிகாரம் ஏது? வாங்குவதற் குப் பணம் யாரிடம் கேட்பது? ஒருவரும் கொடுக்கமாட்டார்க ளென்பது திண்ணம்.

என் மாமா திருச்சி காலேஜில் ஓர் உயர்தர உபாத்தியாய ராக இருந்தார். ரூபாய் எண்பதுக்குமேல் மாதச் சம்பளம். அவரும் ஸ்ரீரங்கத்தில் கிழக்குச் சித்திரை வீதியில் ஒரு மேல் மெத்தையுள்ள வீட்டில் இருந்துவந்தார். ஒரு நாள் காலையில் விளையாடுவதற்காக அங்கே சென்றபொழுது மேல் மாடியிலுள்ள என் மாமா அறைக்குச் சென்றேன். அங்கு ஒருவரும் இல்லை. அவருடைய பைக்கடிகாரம் டக் டக் என்று மேஜையின்மீது அடித்துக் கொண்டிருந்தது; அதைத் தொங்கவிட்டுக் கொள்வதற்கு ஒரு சன்னக் கறுப்புக் கயிற்றுடன் விளங்கியது. என்ன காரணத்தினாலோ, திருடுகிறோமென்கிற எண்ணமில்லாமல், ஒரு நாளைக்காகிலும் அதை வைத்துக்கொண்டிருந்து என் ஆசையைத் திருப்தி செய்து கொள்ளலாமென்று எண்ணி, ஒருவருக்கும் தெரியாமல் எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடம் சென்றுவிட்டேன். அதை என் நண்பர்கள் கண்டவுடன், என்னைப் புகழ ஆரம்பித்துவிட்டார்கள். எல்லோருக்கும் அன்றைத் தினம் என் கடிகாரத்திலேயே மணி பார்க்கக் கற்றுக்கொண்டு விடவேண்டுமென்கிற எண்ணம். கூட்டங்கூடி ஒருவன் மற்றொருவனைத் தள்ளிக் கடிகாரத்தைப் பிடித்து இழுத்ததில், அது கீழே விழுந்து முன் பக்கத்திலுள்ள கண்ணாடியில்லை உடைந்து தூள் தூளாகப் போய்விட்டது.

இந்த அமளியில் உபாத்தியாயரும் வந்துவிட்டார். கடிகாரத்தைக் கைப்பற்றி விசாரணை நடத்தினார். அது என் மாமாவின் கடிகாரமென்றும் அவருக்குத் தெரியாமல் நான் எடுத்து வந்துவிட்டேனென்றும் சொன்னேன். தாம் அவரிடம் திருப்பிக் கொடுத்துவிடுவதாகச் சொல்லி அதை வாங்கிக்கொண்டுவிட்டார். பிறகு அதைப்பற்றி நான் ஒன்றும் கவனிக்கவில்லை. பிற்பகல் பள்ளிக்கூடம் முடிந்து வீடு சென்றேன். இரவில் என் தகப்பனாருக்கு மாமா சொல்லியனுப்பித் தம் கடிகாரத்திற்கு ஏற்பட்ட விபத்தையெல்லாம் அவரிடம் சொல்லிவிட்டார். இரவு எட்டு மணி இருக்கும். வீடு திரும்பிய என் தகப்பனார் என்னைக் கூப்பிட்டு, "ஏன் கடிகாரத்தைத் திருடினாய்?" என்று கேட்டார். 'திருடவில்லை' என்று நான் பதில் சொல்லவே, அவருக்குக் கோபம் அதிகரித்துவிட்டது. சுமார் ஒருமணி நேரம்

என்னைச் சித்திரவதை செய்துவிட்டார். நான் பட்ட அடியும், கத்தின கதறலும் எனக்கு இன்றைக்கும் ஞாபகம் இருக்கின்றன.

அன்று முதல் கடிகாரத்தை எங்கே பார்த்தாலும் ஒரே பயம். மணி பார்க்கும் வித்தையை அன்றோடு மறந்தேன். இனி இந்த ஜன்மத்தில் கடிகாரம் என்பதையே கனவில்கூட நினைப்பதில்லையென என் மனத்தில் முடிவு செய்துகொண்டேன். பத்தொன்பதாவது வயசில் சென்னை மெடிகல் காலேஜ் வரும் வரையில், கடிகாரத்தை ஏறிட்டும் பார்த்ததில்லை.

பள்ளிக்கூட வாழ்க்கையில், இந்தச் சங்கடங்களுக்கிடையில் எனக்கு ஓர் ஆறுதல் மட்டும் உண்டு. வீட்டில் எழுபத்தைந்து வயசுள்ள என் பாட்டனார் மட்டிலும் என்னை ஒரு தரமும் அடித்ததே இல்லை. சாயங்காலமானால், என்னைக் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்காரவைத்துக் கொள்வார். வருஷம், மாதம், திதிகள், நட்சத்திரங்கள், கிழமைகள், சூலம், ராகு காலங்கள், ஸ்தோத்திரபாடம் இவைகளை எனக்குக் கற்பிப்பார். அவர் முதலில் சொல்ல, நான் பிறகு அவர் சொல்வதைச் சொல்லிவருவேன். தினந்தோறும், சலிக்காமல் இவைகளைக் கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் வரையில் சொல்லிவைப்பார். எனக்கு மனப்பாடமான பிறகுகூடத் தாமும் கூடவே சொல்லி வருவார். அந்த வயசில் நான் என்ன படித்தேன் என்று எனக்குத் தெரியாது. கையெழுத்தோ தலையெழுத்துப் போலத் தான் இருக்கும். நான்கு வருஷத்தில் நாலாவது வகுப்பு முடித்துவிட்டேன். என் தாத்தா சொல்லிவைத்த பாடம் மட்டில் எனக்கு மிச்சம். மற்றப்படி பள்ளிக்கூடத்துப் படிப்பில் வெறுப்பும், வாத்தியார் பேரில் அழியாத துவேஷமும், பள்ளிக்கூடம் ஒரு சிறைக்கூடம் என்கிற முடிவுமே மிஞ்சின.

# பட்டாணியின் மணம்

"பட்டாணிக் கடலைக் கடைக்காரனுக்கு ஈவு இரக்கமே இல்லை" என்பது என் முடிவு. வைகுண்ட ஏகாதசித் திருவிழா மார்கழி மாதத்தில் இருபது நாளைக்கு ஸ்ரீரங்கத்தில் வருஷந்தோறும் நடைபெறும். கூட்டமும் ஏராளமாகக் கூடும். கடைகளில் வியாபாரம் மும்முரமாக நடக்கும். பச்சைப் பட்டாணிக் கடலையை வறுத்து விற்பதில் லாபம் என்ன கிடைக்குமென்பது எனக்குத் தெரியாது. அரை விரல் உயரமும், ஒரு விரல் உள் நுழையும்படியான அகலமும் உள்ள குட்டிப்படிகள் முதற்கொண்டு பக்காப் பட்டணம் படிவரையில் பலதரப்பட்ட அளவுகள் உண்டு; துட்டுக்குத் தகுந்தபடி வியாபாரம் நடக்கும். அநேகமாய் முழுரூபாய் வியாபாரத்தில் புரளாது. செப்புக்காசுகளுக்கும் சில்லறைப் பணங்களுக்குமே விற்பனை நடக்கும். வெள்ளைக் கோபுரவாசல் பக்கத்தில் கீற்றுக் கொட்டகை போட்டு, அதில் அடுப்பு வைத்து, பச்சைப் பட்டாணிக் கடலையை மஞ்சள் சாயமேற்றி வறுத்துக் குவியலாகப் போட்டு விற்பார்கள்.

தெள்ளிய மணலில் கொதிக்கும் சூட்டில் பச்சைக் கடலையைப் போட்டு வறுத்தால் அதற்கு ஏன் அவ்வளவு மணம்? அகோபில மடத்துத் திண்ணையில் கையில் காசில்லாமல் உட்கார்ந்துகொண்டிருக்கும் என் மனத்தைக் கொள்ளை கொண்டு போவதற்காகவா அந்த மணம்? அந்த மணம் வீசிக்கொண்டிருக்கும்பொழுது என் மனம் பள்ளிக்கூடத்திலோ படிப்பிலோ எப்படிச் செல்லும்? திறந்த புத்தகம் பக்கம் திருப்பாமலே அப்படியேதான் இருக்கும். சற்றுநேரத்திற்கெல்லாம் அது திறந்தபடியே திண்ணையில் என்னை அறியாமலே கிடக்கும். நான் மெள்ள நடந்து பட்டாணிக் கடையை நாடுவேன். ஆயி

னும் என்ன பயன்? கையில் காசு இருந்தால் அல்லவோ, பொற்குவியலைப்போலக் குவிந்து கிடக்கும் கடலைமணிகள் எனக்குக் கிட்டும்?

அந்தக் கடலைக்குத்தான் என்ன அழகு! என்ன பிகு! தோல் முழுவதும் வெடித்து உதிர்ந்துவிட்டால் எல்லாம் ஒரே நிறமாகத் தோன்றும். ஆனால் அப்படி வெடிப்பதில்லை. ஒருபுறம் திறந்து உள்ளிருக்கும் பொன்மயமான பருப்பு சற்று வெளியே காணப்படும். வறுமை வாய்ப்பட்டு வாங்க முடியாமல் இருக்கும் என்னை ஏளனம் செய்வதுபோலத் தோன்றும். அடிக்கடி கடையைச் சுற்றி வட்டமிடும் என்னைக் கண்டு அந்தப் பாவி, கடைக்காரன் சற்றும் இறங்கமாட்டான். அவனுக்குத் தாகத்திற்குக் குடிதண்ணீர் கொண்டுவந்து கொடுப்பேன். அடுப்புப் பற்ற வைப்பதற்கு வீட்டிலிருந்து நெருப்புத்தணல் திருடிக் கொண்டுவந்து கொடுப்பேன். சமையல் செய்துகொண் டிருக்கும் என் பெரிய தாயாருக்குத் தெரியாமல் தணல் எடுத்து வரவேண்டும். தெரிந்தால், சமையலடுப்புத் தீட்டாகிவிட்டதென்று, செய்த சமையலைச் சாக்கடைத் தொட்டியில் கொட்டிவிட்டு அடுப்பு மெழுகி மறுபடியும் சமைக்க ஆரம்பித்துவிடுவாள். அவள் வைதிக சிஷ்டாசாரங்களில் நன்கு தோய்ந்தவள். பிராம்மணனல்லாத பட்டாணிக் கடைக்காரனுக்கு நெருப்புத் தணல் கொடுக்க அவளுடைய உத்தரவு கிடைக்காது. ஆகையால் திருடவேண்டியதுதான். இவ்வளவும் எதற்காக? துட்டு இல்லாமல் ஒரு சமயம் சூடான கடலை ஒரு பிடி கருணையுடன் எனக்குக் கொடுக்கமாட்டானு என்ற கனவுதான் அவனுக்குத் தொண்டு செய்ய என்னைத் தூண்டியது. எவ்வளவு செய்து என்ன? அவன் கல்நெஞ்சம் கொஞ்சமேனும் இளகாது. "உனக்குச் சும்மா கொடுத்தால் முதலாளி என்னைச் சும்மா விடமாட்டான் சாமி. காசு கொண்டுவந்தால் கால் ஆழாக்குக் கடலை அதிகமாகக் கொடுக்கிறேன்" என்பான். அப்பொழுது என் மனம் என்ன பாடு படும் தெரியுமா?

ஸ்ரீரங்கம் பிராம்மணர்கள் பெருத்த ஊர். பூணூல் போடாத சிறுவர்களும், கல்யாணமாகாத சிறுமிகளுமே வறுத்த பட்டாணியை வாங்கலாம். மற்றவர்கள் வாங்கமாட்

டார்கள். வைதிகம் பழுத்த வீடுகளில் பட்டாணியைத் தொட மாட்டார்கள். சாஸ்திரத்தில் அதை உபயோகப்படுத் தும்படி சொல்லவில்லை என்பார்கள். மற்றும் சிலர் பச்சைப் பட்டாணியை வாங்கிக் கொண்டுபோய் வீட்டிலேயே வறுத்து உண்பார்கள். ஆனால், கடையிலுள்ள நிறமும் மணமும் அதற்கு இரா. அகன்ற அடுப்பு, ஒரே சீராக உள்ள பொடி மணல், அதற்கு ஏற்ற சட்டி, சல்லடை இவைகளெல்லாம் கடைகளில் பொருந்தி யிருக்கும். வேலை செய்பவனும் கடலையைப் பக்குவப்படுத்துவதில் நல்ல அனுபவம் உள்ளவன். இவை வீடுகளில் கிடைக்கமாட்டா. பட்டாணிக்கடலை வாங்கித் தின்பதற்காகப் பிறரைக் காசு கேட்பதென்றால் எனக்கு வெட்க மாக இருக்கும். கடைக்காரனிடத்தில் பிச்சை கேட்பதற்கும் மனம் துணியாது. ஆனால் கடலையின் பேரிலுள்ள ஆசை மட்டும் குறையவே இல்லை. திக்கற்று இருந்த எனக்குக் காசு கிடைக்க ஒரு வழி பிறந்தது.

வைகுண்ட ஏகாதசித் திருவிழாவுக்குக் கோவிலின் உட் பிராகாரங்களில் கீற்றுக் கொட்டகை போட்டு, அதில் பல வகைப்பட்ட கடைகள் வைப்பதற்கு ஏற்பாடு செய்வது வழக் கம். பித்தளை, வெண்கலம், ஈயம் முதலிய பாத்திரக் கடைகள், மரச்சாமான்கள், கற்சட்டிகள், தமிழ், கிரந்தம், ஸம்ஸ் கிருதம் முதலிய புத்தகக் கடைகள், இவைபோன்று சுமார் ஐம்பது முதல் நூறு கடைகள்வரை ஏற்படும். தவிர ஜால வேடிக்கை, கடிகாரங்கள், இரண்டுதலை ஐந்து காலுள்ள மாடு, பேசும் பானை, பிரைஸ் சீட்டுக் கடைகள், இவைகளும் இருக் கும். என்னுடைய கவனம் முற்றும் பிரைஸ் சீட்டுக் கடைகளில் தான் செல்லும். இந்தக் கடை முதலாளிகள் தமிழ் முஸ்லிம் கள். சாயங்கால வேளைகளில் திருச்சியில் மார்க்கெட் ஓரமாக அடிக்கடைகள் வைப்பவர்கள். குண்டூசி முதல் நிலைக்கண்ணாடி வரையில் சகல சாமான்களும் விற்பதற்காகப் பகட்டாகப் பரப்பி வைத்திருப்பார்கள். வியாபாரம் அதிகரிப்பதற்காகப் பிரைஸ் சீட்டுப் போடுவார்கள். சீட்டுகளில் பிளாங்கியே இல்லை. ஒவ்வொரு சீட்டுக்கும் ஏதாகிலும் ஒரு சாமான் கிடைக்கும். சீட்டின் விலை காலணா.

சீட்டில் சாமான் பெயர் எழுதிச் சுருட்டி ஒரு பெட்டியில் போட்டுக் குலுக்கிக் காலணுக் கொடுத்தவர்களைக் கொண்டு பொறுக்கச் சொல்லுவார்கள். அதைப் பிரித்துப் பார்த்து அதில் கண்டிருக்கும் சாமானைக் கொடுத்துவிடுவார்கள். இதற்கு விளம்பரம் செய்வதற்குத் தகுந்த ஆள் ஒருவன் இருப்பான். காலி ஜாதிக்காய்ப் பெட்டியின் பேரில் நின்று கொண்டு வாசாமகோசரமாக அதிருஷ்டத்தின் பெருமைகளைப் பற்றியும், காலணுவுக்கு மிகுந்த விலைபெற்ற சாமான்கள் கிடைக்கக் கூடியதைப் பற்றியும் உரத்த குரலில் சொற் பொழிவு ஆற்றுவான். ஆட்கள் கும்பலாக வருவதைப் பார்த்துவிட்டால் பலமான பிரசாரம் நடத்துவான். இதை யெல்லாம் கவனமாக நெடுநேரம் கவனித்திருப்பேன்.

காலணுப் போடுபவர்களில் ஒருவருக்காவது ஒரு பைசா அல்லது இரண்டு பைசா பெறுமானத்திற்கு மேலான சாமான் கிடைப்பதே இல்லை. அதைக்காட்டிலும் விலையுயர்ந்த சாமான் கள் பகட்டாக அடுக்கிவைத்திருந்த போதிலும் அவற்றில் எது வும் ஒருவருக்கும் கிடைக்காது. இப்படியே மோசம் செய்தால் வியாபாரம் அதிக நாள் நடக்காதென்று தெரிந்த முதலாளி இதற்கு உள்ஆள் வைத்து வேலை செய்வதுண்டு. அதற்காகச் சிறு பையன்களைப் பிடிப்பது வழக்கம். சாயங்கால நேரத்தில் கூட்டம் அதிகமாக இருக்கும் சமயத்தில் இந்த உளவுப் பையன் வந்து சீட்டுப் பொறுக்குவான். சீட்டைக் கடைக்காரனை விட்டே படிக்கச் சொல்லிவிடுவான்.

குண்டூசி இரண்டு என்று எழுதியிருந்தால், நிலைக் கண்ணுடி ஒன்று என்று படித்துவிட்டு, காகிதத்தைச் சுருட்டிப் பெட்டியில் போடுவான். பார்ப்பவரெல்லோரும் கண்டு பிரமிக்க, ரூபாய் ஒன்று அல்லது இரண்டு பெறுமான கண்ணுடியை அந்தப் பையன் எடுத்துச் சென்று வீட்டில் வைத்திருப்பான். இரவு முதலாளி வந்து அரை அணு முதல் ஓர் அணுவரையில் அதற்குத் தரகு கொடுத்துக் கண்ணுடி யைத் திருப்பி வாங்கிக்கொண்டு போய்விடுவான்.

அங்கே கூடியிருக்கும் ஜனங்களும் இதைக் கண்டு பிரமித்து அநேக காலணுக்களைக் கொட்டி அதிருஷ்டப்

பரீக்ஷை பார்ப்பார்கள். அவர்களில் சிலர் நிலைக் கண்ணுடி கிடைத்த பையனுடைய கையில் அதிருஷ்டம் இருக்கிறதென்று எண்ணி அவனை விட்டுச் சீட்டுப் பொறுக்கச் சொல்லுவார்கள். அந்த அதிருஷ்டம் அந்தப் பையனைத் தவிர மற்றவர்களுக்கு எட்டுவதில்லை. அந்த அதிருஷ்ட ஏலத்திற்குத் தினம் ஒரே பையன் வந்து விலையுயர்ந்த சாமான்களை எடுத்துக்கொண்டு போனால் சந்தேகத்திற்கு இடமுண்டாகுமாதலால், பல பையன்களை இந்த வேலையில் ஈடுபடுத்த முதலாளி முயற்சி செய்வான். மேலும், திருவிழாக் கும்பலான படியால் ஒரு நாளைக்கு வந்தவர்கள் மறு நாளைக்கு வர மாட்டார்கள். ஆனால் நான் மட்டும் சாயங்கால நேரத்தில் அடிக்கடி அங்கே சென்று வேடிக்கை பார்த்துக்கொண் டிருப்பேன். என்னை இரண்டு நாள் கவனித்துப் பிறகு அந்த முதலாளி, "என்ன சாமி, சும்மா சும்மா வந்து நிக்கறே? சீட்டுப் போடுகிறதில்லையா?" என்று விசாரித்தான். "கையிலே காசு இல்லை, சாயபு!" என்று பதிலளித்தேன். "நான் தர்ரேன் சாமி, போடு" என்று சொன்னவுடன், என்னையும் உளவுப் பையன் சேனையில் சேர்த்துக்கொள்ள நிச்சயித்து உபதேசம் செய்துவிட்டான். அன்று வீட்டிற்குத் திரும்பும்பொழுது கையில் அழகான வேலைப்பாடுள்ள சிறிய பெட்டியும், மடி நிறையச் சூடான பட்டாணிக் கடலையுமாகத் திரும்பினேன். கண்ணுடிப் பெட்டியை வீட்டில் உள்ளவர்களுக்குக் காண்பிக்கப் பயம். ஆகையால் வெகு கஷ்டப்பட்டு ஒளித்துவைத்திருந்து இரவு சாயபுவிடம் திருப்பிக் கொடுத்துவிட்டேன்.

அந்த ஒரு நாள் வேலைக்கு அரையணுக் கூலி. அதற்குக் கால் படி பட்டாணி வாங்கி, நானும் என் உடன் பிறந்தவர்களும் மற்ற நெருங்கிய நண்பர்களும் ஆனந்தமாக நெடுநேரம் சாப்பிட்டோம். ஆனால் இந்த ரகசிய வேலையின் நிமித்தம் கிடைத்த ஊதியத்தைப் பற்றி மாத்திரம் ஒருவரிடமும் சொல்லவில்லை.

பொதுமக்கள் ஏன் அதிருஷ்டத்தை நம்பி மோசம் போக வேண்டும்? இது கல்விக் குறைவா? நாகரிகக் குறைவா? இரண்டும் இல்லை. மனிதனுடைய இயற்கை,

நம்பிக்கையெனத் தோன்றுகிறது. கிடைக்கக் கூடாததை விரும்புவது, பார்க்க முடியாததைக் காண முயலுவது, கட்டுக் கடங்காததை அடக்க எத்தனிப்பது, பேரின்பத்தைச் சிற்றின் பங்களால் அனுபவிக்கக் கூடுமென நினைப்பது—இவை மனித வர்க்கத்துக்கு இன்றியமையாத குணங்கள். இவைகளை மாற்றுவதே சிருஷ்டியின் தத்துவம்.

இப்பொழுது அந்த ஏலச் சீட்டுக் கடைகள் வருகிறதில்லை. பெரிய நகரங்களில் குதிரைப் பந்தயம் என்னும் மோசடி நடக்கிறது. பெரிய கிராமங்களில், 'பாம்பே ஷோ', 'கார் னிவல்' என்ற பணம் பிடுங்கும் காட்சிகளும், லாட்டரிகளும் நடக்கின்றன. ஸ்ரீரங்கம் திருவிழாவில் காலணுவில் ஒரு பைசாத்தான் நஷ்டம். ஆனால் இந்த நவீன வேடிக்கைகளில் நூற்றுக்கணக்கான ரூபாய்கள் அடியோடு தொலைந்து போகின்றன. தற்கொலைகளும் ஏற்படுகின்றன.

# திருவிழா நிகழ்ச்சிகள்

ஸ்ரீரங்கத்தில் நடக்கும் திருவிழா இந்தியாவிலேயே ஓர் ஒப்பற்ற சம்பவம். தமிழ் வேதமாகிய திவ்யப் பிரபந்தத்தைச் சாமான்னிய மக்களுக்கு எடுத்துரைக்கும் ஒரு காட்சி. இங்கே நடைபெறும் முறையை வகுத்தவர் ஸ்ரீமத் ராமாநுஜர். "பொதுமக்கள் வைணவத்தில் ஈடுபடவேண்டும். உலகில் பிறந்தவர் அனைவருக்கும் முக்தி உண்டு. எந்த ஜாதியில் பிறந்த போதிலும் இந்த ஜன்மத்திலேயே நற்கதி உண்டு. மோட்சமென்பது எல்லோரும் அடையவேண்டிய சாதனம்." இது ஸ்ரீ ராமாநுஜ சித்தாந்தம். இவற்றைக் 'கோயிலொழுகி'ல் மக்கள் காணவேண்டும். உலகில் கோயில் என்றால் ஸ்ரீரங்கம் கோயில் ஒன்றுதான் என்று வழங்கும்படியான எண்ணத்தை மக்கள் மனத்தில் வேரூன்றும்படி செய்தவரும் அம்மகானே. இன்றைக்கும் திருவரங்கத்திலிருக்கும் வைதிக வைணவர்களை, "தங்கள் ஊர் எது?" என்று கேட்டால், "கோயில்" என்று சொல்லுவார்கள். அது உண்மைக்குப் பொருந்தும்.

நான் உலகத்தில் பார்த்த கோயில்களுக்குள் பெரியது திருவரங்கம் பெரிய கோயில்தான். கோயிலுக்கேற்ற வைபவங்களின் ஒழுங்கு, அழகு, ஆராதனைக் கிரமங்கள், மரியாதை, உபசரணை, பொது வாழ்வுக்கு இன்றியமையாதனவும் நுட்பமுமான வழக்கங்கள் எல்லாம் அங்கே கையாளப்பட்டு வருகின்றன. இவையெல்லாம் அன்று நிறுவிய ஸ்ரீமத் ராமாநுஜர் உத்தரவின்படியே இன்றும் நடக்கின்றன. ஆனால் இந்த முறைகளில் இன்று உயிர் இருக்கிறதா என்று நவீன நாகரிகத்தில் ஈடுபட்டவர்கள் கேட்டால், அதற்கு என்னால் பதில் கூற முடியாது. தத்துவம் தெரிந்து தெய்வபக்தியுடன் வாழ்வு நடத்தினால் உயிரைக் காணமுடியும்.

எனது இளமைக் கல்வியில் ஸ்ரீரங்கத்தைப் பற்றியாவது கோயிலைப் பற்றியாவது கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைப் பற்றியாவது என் உபாத்தியாயர்கள் ஒரு பொழுதும் சொன்னதில்லை. நான் படித்த இரண்டு தேர்முட்டிப் பள்ளிக்கூடங்களில் உபாத்தியாயர்கள் வைஷ்ணவ மாத்வ வகுப்பினராக இருந்துங்கூட எனக்குத் தெரிவித்ததில்லை. இதற்குக் காரணம் எங்கள் படிப்பைக் கண்காணிக்கவரும் உத்தியோகஸ்தர்கள் குறிப்பில் இந்தப் பரிசீலனை இல்லை. படிப்புத் திட்டத்திலும் இல்லை. உபாத்தியாயர் சொல்லித் தர வேண்டிய அவசியமும் இல்லை. நாங்களும் படிக்கவேண்டிய கடமையை அறியவில்லை.

நான்கு வருஷங்கள் ஆரம்பக்கல்வி முடிந்ததும் மேற்படிப்பிற்குத் திருச்சியிலுள்ள கிறிஸ்தவ ரோமன் கத்தோலிக் பாதிரிமார்கள் நடத்தும் சூசையப்பர் கல்லூரியில் (St. Joseph's college) சேர்ந்துவிட்டேன். ஸ்ரீரங்கத்திலேயே ஸ்தல விசேஷத்தை அறியக் கூடாத எனக்குப் பாதிரிமார் பள்ளிக்கூடத்தில் அதை எப்படித் தெரிந்துகொள்ளக் கூடும்? ஏதோ தினந்தோறும் மூன்று மைல் வண்டியில் சென்றோ நடந்தோ கட்டுச் சோற்றைச் சுமந்துகொண்டு போன பல வருஷங்கள் நினைவில் இருக்கின்றன. இன்னது தெரிந்து கொண்டேன் என்பது மட்டும் ஞாபகம் இல்லை.

ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசித் திருநாள் வரவிருக்கும் சமயத்தில் எனக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு மட்டும் அளவில்லை. பட்டாணிக் கடலைக் கடை, பிரைஸ் சீட்டுக்கடை, ஆயிரக்கால் மண்டபத்திற்கு வெளிப்புறம் வானளாவும் கொட்டகை, இதன் அலங்காரம், அங்கு வைக்கப்பட்டிருக்கும் பொம்மைகள் இவைகளே என் மனத்தில் குடிகொண்டிருந்தன. என் பிற்கால வாழ்க்கை இந்தச் சம்பவங்களினால் எப்படி உருவாயிற்று என்பதைத் தெளிவாகச் சொல்லமுடியாது. நான் படித்த பள்ளிக்கூடப் போதனா முறையால் 'சாசுவதமான பயனில்லை என்பது மட்டும் நிச்சயம்.

எனது இளமைப் பருவத்தில் என்னிடம் அன்பு பூண்டு இன்னும் என் மனத்தில் மறக்க முடியாத நல்லெண்ணத்தைக் குடிகொண்டிருக்கும் வண்ணம் செய்தவள் என் பெரியம்மாள். என் தாயுடன் பிறந்தவள் அல்ல. என் பாட்டனுருடன் பிறந்த அண்ணன் தம்பிகள் அறுவர். அவர்களுள் என் பாட்டனுருடைய அண்ணன் மகனை மணம்புரிந்து கொண்டவள் அவள். ஆதலால் முறையில் பெரியம்மாள். இளங் கைம்பெண்; சிறு வயசிலே புருஷனை இழந்துவிட்டு எங்கள் வீட்டில் அடைக்கலம் புகுந்தாள். பிறந்த வீட்டார் பரம ஏழை. பெரியம்மாளுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. கற்பு, குணம், அடக்கம் இவைகளுடன் தன் சரீரத்தை எங்கள் குடும்பத்திற்காக உழைக்க அர்ப்பணம் செய்துவிட்டாள். இப்பொழுது நினைத்த போதிலுங்கூட அவ்வளவு இளவயசில் உயர்ந்த சீலமும், அன்பும், பொறுமையும் எந்தக் கல்வி கேள்வியினுல் அந்த அம்மாளுக்கு ஏற்பட்டிருந்தன என்று சொல்ல இயலவில்லை.

என்னைப் பெற்ற தாய் குழந்தைகளைப் பெறுவதிலும் இடையிடையே வெகு காலம் நோய்வாய்ப் பட்டிருப்பதிலும் காலங்கழித்தாள். தாய் என்ருல் எனக்கு அந்தப் பெரியம்மாள்தான். எங்கள் வீட்டில் எங்களுக்காக ஓயாது சலியாது ஏன் உழைத்தாள்? அவள் ஏன் அவ்வளவு சாதுவாக இருந்தாள்? மன உறுதியும் தேகக்கட்டும் குன்ருது வாழ்க்கையை நடத்திய ரகசியந்தான் என்ன? - இது ஒன்றும் எனக்கு இளமைப் பருவத்தில் தெரியாது. அந்த அம்மாளால் கொடுக்க முடியாததையெல்லாம் தரவேண்டுமென நான் செய்த தொல்லைகளுக்கு அளவே இல்லை. சமையலறையில் அந்த அம்மாளால் செய்து தரக்கூடியவற்றையெல்லாம் செய்வாள். அதற்குமேல் என்ன தான் செய்யமுடியும்? இயன்றதெல்லாம் செய்தாள். அவளால் இனிச் செய்ய இயலாது என்கிற எண்ணம் எனக்கு இருந்தால்தானே?

என்னைச் சமாதானப்படுத்துவதற்காக விடுமுறை நாட்களில் என்னைக் கோவிலுக்கு அழைத்துச் செல்வாள். அங்

குள்ள ராமாயணக் கதைச் சித்திரங்களை எனக்குக் காண்பித்துக் கதை சொல்லுவாள். சுவாமி தரிசனத்தைக் காட்டிலும் சித்திரக் கதையைப் பார்ப்பதிலும் கேட்பதிலும் என் மனம் செல்லும். தினந்தோறும் இரவு வீட்டுவேலையெல்லாம் முடித்துவிட்டு எங்கள் தெருக்கோடியில் வால்மீகி ராமாயணம் படிப்பதைக் கேட்கப் போவாள். அநேகமாய் அதற்குள் நான் தூங்கிவிடுவேன். அப்படி விழித்திருந்தாலும், படிக்காமல் கதை கேட்டு நேரத்தை வீண் செய்துவிடுவதாக என் தகப்பனார் கோபிப்பார். அதற்குப் பயந்து என் பெரியம்மாள் பக்கத்தில் படுத்து உறங்குவதாகச் சாக்குச் சொல்லிவிட்டு அவளுடன் நானும் கதை கேட்கப் போய்விடுவேன். ஒரு வார்த்தைகூட விடாமல் முடியும் வரையில் கவனமாகக் கேட்பேன். கதை கேட்போரில் பெரும்பாலோர் பெண்கள். அதிலும் பெரும்பாலோர் கைம்பெண்கள். வீட்டில் பேசச் சந்தர்ப்பப்படாத வம்புப் பேச்சு, மாமியார், நாத்தி நாட்டுப் பெண் இவர்களைப் பற்றிய புகார்கள், இவையெல்லாம் பேசி முடிப்பதற்கு நல்ல காற்றுள்ள புராணவீதி உபயோகப்படும். என் பெரியம்மாள் சதா உழைப்பினால் அலுத்துத் தூங்கிவிடுவாள். நான்மட்டும் கண்கொட்டாது கவனிப்பேன். கதை எதுவரையில் நடந்தது என்று என்னைக் கேட்டு என் பெரியம்மாள் தெரிந்துகொள்வதும் உண்டு. நான் போகமுடியாத நாட்களில் அன்றைக் கதையை மறுநாள் எனக்குப் பெரியம்மாள் சொல்லிவிடுவாள். ஒருசமயம் தூங்கிவிட்டாலும் விழித்திருந்தவர்கள் யாரையாகிலும் கேட்டு எனக்குச் சொல்லுவாள்.

பள்ளிக்கூடத்து விடுமுறைநாள் என்றைக்கு வருமென்று ஆவலுடன் காத்திருப்பேன். அன்று கோவிலுக்குப் போய்க் கேட்கும் கதையைச் சித்திரத்திலும் கண்டு மகிழ்வேன். இந்தக் கதைகளை என் எட்டு வயசுமுதல் பன்னிரண்டு வயசு முடியக் கேட்டேன். ராமாயணம் முழுவதும், பாரதம் அங்குமிங்குமாகவும் தெரிந்துகொண்டேன். அது இன்றும் மறக்கவில்லை. பள்ளிக்கூடத்துப் படிப்பில் கெட்டிக்காரன் என்பதாக எனக்குப் பெயர் கிடைக்கவில்லை. எனினும் மெட்றிகுலேஷன்

வகுப்புவரையில் தவருது வருஷந்தோறும் தேறிக்கொண்டு வந்தேன்.

என் பெரியம்மாளின் அன்பிஞல் ராமாயணம் முழுவதும் மனப்பாடமாகிவிட்டது. இடையிடையே பாரதக் கதைகளிலும் அங்கும் இங்குமாகப் பல பகுதிகளைக் கேட்டறிந்தேன். தவிர நாங்கள் வாடகையில்லாமல் குடியிருந்த ஸ்ரீரங்கம் அகோபில மடத்தில் வருஷந்தோறும் புரட்டாசி மாதத்தில் அம்மடத்தின் ஆதிபுருஷரான ஸ்ரீ ஆதிவண் சடகோப மகாதேசிகன் திருநக்ஷத்திரத்தை யொட்டி ஏழு நாட்கள் உத்ஸவம் நடைபெறுவது வழக்கம். அம்மடத்தில் ஆராதிக்கப்பட்டு வரும் ஸ்ரீ ஆதிவண் சடகோப மகாதேசிகன் விக்கிரகத்திற்கு அந்நாளில் மடத்தை விட்டு வெளியே வரக்கூடாதபடி கோர்ட்டு மூலம் தடையுத்தரவு. தென்கலை வடகலைக் கட்சிகளுள் ஏற்பட்டிருந்த சச்சரவிஞல் இந்தக் கதி அவருக்கு உண்டாயிருந்தது. பாவம்! அவர் உயிருடன் இருந்த காலத்தில் மைசூர் சம்ஸ்தானத்தில் திருநாராயணபுரம் என்கிற மேல்கோட்டையில் உத்தமசீலராகவும், வித்துவாளுகவும், ஞானியாகவும் வாழ்க்கை நடத்திவந்தார். ஒரு நாள் இரவில் கர்நூல் ஜில்லாவில் நல்லமலைச் சாரலில் காட்டில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் லக்ஷ்மி நரஸிம்மபகவான் தம்மை அழைத்ததாகக் கனவு கண்டு அகோபிலம் சென்று, அம்மூர்த்தியின் கிருபையால் துறவியாகி வைஷ்ணவ சித்தாந்தத்தை நமது நாடு முழுவதும் பரப்புவதற்காக அம்மூர்த்தியையும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஒரு நாள் இருந்த இடம் மறுநாள் தங்காமல் அலைந்து திரிந்தார். அத்தகைய மகானுக்கு வைணவப் பிராமணர்களின் கேவலச் சண்டையால் இந்தச் சிறைவாசம் ஏற்பட்டுவிட்டது. ஆகையால் இந்தத் திருவிழா மடத்திற்குள்ளே நடந்துவந்தது.

சிறுவர்களாகிய நாங்களெல்லோரும் இதை, "புளியோரை உத்ஸவம்" என்று வேடிக்கையாகப் பேசிக்கொள்ளுவோம். வைணவக் கோயில்களிலே உத்ஸவங்களில் முக்கிய அம்சம் பிரசாதங்களும் அவற்றின் விநியோகங்களுமே என்

பது உலகறிந்தது. அந்த வழக்கை யொட்டியே ஸ்ரீரங்கம் அகோபிலமடம் ஆதிவண் சடகோப மகாதேசிகன் உத்ஸவத்திலும் பிரசாத விநியோகம் உண்டு. மொத்தம் ஏழு நாட்கள் நடக்கும். அந்த ஏழு நாட்களிலும் பிரசாத விநியோகம் புளியோரைதான். வேகவைத்த கொத்துக்கடலைச் சுண்டலும் உண்டு. எல்லாப் பிரசாதங்களிலும் புளியோரை ஒன்றுதான் குறைந்த செலவில் செய்யக்கூடும். ஸ்ரீரங்கம் வடகலை வைணவர்களில் அகோபில மடத்துச் சீடர்களில் பணம் படைத்தவர்கள் மிகக் குறைவு. அவர்களிடமிருந்து யாசகம் செய்து திருவிழா நடத்துவார்கள். புளியோரையைத் தவிர வேறு பிரசாதம் செய்யப் போதுமான பணம் கிடைக்காது. ஆனால் புளியோரை அடிக்கடி செய்த பழக்கத்தினால் 'மடம் புளியோரை' பெயர் பெற்றதாகி விட்டது.

என் தகப்பனார் தென் இந்திய ரெயில்வே ஆடிட்டர் ஆபீஸில் ஒரு சிறு குமாஸ்தா. சொற்பச் சம்பளம். இதற்கு ஸ்ரீரங்கத்திலிருந்து மூன்று மைல் வண்டியிலோ நடந்தோ சென்று, பிறகு மூன்று மைல் ரெயிலில் சென்று திருச்சி ஜங்ஷனுக்கு அருகிலுள்ள ஆபீஸுக்குப் போய் வருவார். இந்த வேலைக்குப் போய்வந்து எஞ்சிய நேரத்தில் அகோபில மடத்தில் காரியஸ்தர் வேலையும் செய்து வந்தார். அந்த மடத்தில் நடக்கும் வைபவங்களை நடத்தும் பொறுப்பையும் அவர் மேற்கொள்ளவேண்டியதாயிற்று. என்னைப்பற்றிய மட்டில் தகப்பனாரின் இந்த உத்தியோகம் ஆனந்தத்தைக் கொடுத்து வந்தது.

செலவு போக எஞ்சிய பிரசாதம் இரவில் எங்கள் சமையலறைக்கு வந்துவிடும். இரவு எவ்வளவு நேரமானாலும் புளியோரை சாப்பிடாமல் படுக்கமாட்டேன். புதுப் புளியோரையைக் காட்டிலும் பழைய புளியோரைக்கு ருசி அதிகம். அது என்னுடைய அநுபவம். முதல் நாள் புளியோரையை மறுநாள் மத்தியான்ன நேரம் சாப்பிடும் கட்டுச்சாதத்திற்குப் பதிலாக, பெரியம்மாள் கட்டிக்கொடுத்து விடுவாள். புளியோரையை எடுத்துக்கொண்டு போவதிலேயே ஒருவித உத்

ஸாகம். பகல் ஒரு மணிக்கு வகுப்புப் பாடம் முடிந்து ஓய்வு நேரத்தில் சாப்பிடவேண்டும். பத்து மணி முதல் ஒரு மணி வரையுள்ள மூன்று மணி நேரத்தில் வகுப்புப் பாடம் என்னைப்பற்றிய மட்டில் வீண். மனத்தை எவ்வளவு கட்டுப்படுத்தினாலும் அது புளியோரையை விட்டு அகலாது. ஒரு மணி எப்பொழுது வருமென்று தியானம். மணியடித்ததும் என் நெருங்கிய நண்பர் ஒருவர் இருவருடன் புளியோரையைத் தின்பதற்கு ஓடிவிடுவேன்.

அஹோபில மடத்தில் நடக்கும் உத்ஸவ முறை வழக்கமாக மற்ற வைணவக் கோயில்களில் நடப்பது போன்றதே. தினசரி திவ்யப் பிரபந்தத்திலிருந்து முந்நூறு அல்லது நானூறு பாடல்கள் "கோஷ்டியார்கள்" என்று அழைக்கப்படும் வடகலை வைணவர்களால் பாடப்படும். இதற்குச் சுமார் இரண்டு மணி நேரமாகும். நாலாயிரம் பாசுரங்களும் ஏழு நாட்களில் பாடியாக வேண்டும். பிறகு ஸ்தோத்திர பாடம், மடத்துத் தனியன்கள் சொன்னபின், கோஷ்டியாருக்கும் மற்றவர்களுக்கும் சந்தனம், புஷ்பம், வெற்றிலை பாக்குக் கொடுத்து, கடைசியாகச் சுண்டலையும் புளியோரையையும் விநியோகம் செய்வார்கள். ஆண்பிள்ளைகளுக்கு முதலிலும், பிறகு சிறுவர்களுக்கும், கடைசியாகப் பெண்பிள்ளைகளுக்கும் வழங்கப்படும். பெண்பிள்ளைகளில் பெரும்பாலோர் விதவைகளாக இருப்பார்கள். புளியோரை கொடுக்ும்வரையில் எனக்கு ஆத்திரம் பொறுக்க முடியாது. எஞ்சிய புளியோரை இரவு நிச்சயம் வீட்டில் கிடைக்குமெனத் தெரிந்தும் கோஷ்டி விநியோகத்தில் கிடைப்பதை முதலில் ருசி பார்த்துவிடுவதில் அளவற்ற ஆசை. அதற்காக இரண்டு மணி நேரம் 'சேவா காலத்'தையும் கேட்டுத்தான் ஆகவேண்டும்.

திவ்யப் பிரபந்தம் என்பது விஷ்ணு பக்தியில் ஆழ்ந்து, மெய்ம்மறந்து தெய்வத்தை உள்ளத்தில் கண்ட பரவசத்தால் ஆழ்வார்கள் வாய்விட்டுக் கதறின பாடல்கள். செய்யுளாக இருந்த போதிலும், பெரும்பான்மையான பாசுரங்கள் இனிய எளிய தமிழ் நடையில் பாடப்பட்டவை; பெரியோர்கள் பாடியவை. பாமரமக்கள் அறியக் கூடியவை. தமிழர்

களுக்குப் புரியாமல் இரா. எனினும் தமிழ்ச் சங்கீத வித்துவான்கள் தியாகராஜ சுவாமிகள் கீர்த்தனம் பாடுவது போலவே, வைணவ கோஷ்டியாரும் சந்தை சொல்லிப் பயின்று பாராயணம் செய்யும் காலத்தில் கவனித்தால், நல்ல தமிழ்ப் பண்டிதர்களுக்குக்கூட அர்த்தம் புரியாது. அப்படிப் பாடும் காலத்தில்கூட, குறிப்பிட்ட ராகங் களை யொட்டிப் பாடுவதாகவும் இராது. உதாரணமாக, ஸ்ரீ வில்லிபுத்தூர்க் கோதை, அரங்கனையே காதல் புரிந்த ஸ்ரீ ஆண்டாள், பகவானைத் தான் திருமணம் புரிவதாகக் கனவு கண்டு பாடிய பாசுரங்கள் ஆழ்ந்த கருத்துள்ளவை. தன் தோழிகளிடம் தான் கண்ட கனவைச் சொல்லியதாகச் சரித்திரம். "வாரண மாயிரம் சூழ வலஞ் செய்து" என்றால் பெரும்பான்மையாக எல்லோரும் அறிந்துகொள்ளக் கூடும். ஆனால் அதைக் கோஷ்டியார்கள் பாடும்பொழுது, "வாராணு மாயிரம் சூழாவ லஞ்செய்து" என்று பாடுகிறார்கள். அதைக் கேட்பவர்களுக்கு விளங்குவது கடினமாகிறது. இது போலவே தான் மற்றப் பாட்டுக்களும்.

கோஷ்டியில் ஒரு சாரார் முன் இரண்டடி பாடுவார்கள். மற்றொரு சாரார் பின் இரண்டடிகளைப் பாடுவார்கள். திருமழிசைப்பிரான் அருளிச்செய்த திருச்சந்த விருத்தங்கள் பாடும்பொழுது ஒருவரை யொருவர் சண்டைக்கு இழுப்பது போலத் தோன்றும். கோஷ்டியார்கள் ஒருவரையொருவர் வசைச்சொல் மூலம் திட்டிக்கொள்கிறார்கள் என்று நினைப் பேன். அடக்க முடியாத சிரிப்பு வந்துவிடும். இந்த விருத்தங்கள் பாடி முடியும் வரையில் கம்பத்தின் மறைவில் நின்று சிரித்துக்கொண் டிருப்பேன். கடைசியில், கிடைக்கும் புளியோரைப் பிரசாதத்தை நினைத்துக்கொண்டு, கோஷ் டியை விட்டு வெகு தூரம் விலகிப் போய்விடமாட்டேன்.

இப்பொழுது நவீன முறையில் கவனிக்கும் பொழுது, அவர்கள் அரும் பாடுபட்டுக் கதறும் பாசுரங்களுக்குக் கடை சியில் அவர்களுக்குக் கிடைக்தும் ஊதியம் வெகு சொல்ப மெனத் தோன்றுகிறது. வைதிக முறையில் ஈடுபட்டிருப்பவர் கள் பெறும் ஊதியம் பொருளாதார முறைக் கணக்குக்கு

அடங்காது; புலப்படாது. பக்தியும் வறுமையும் ஒப்பற்ற தோழர்கள். இது அழியாத உண்மை. உலகப் பற்றென்னும் பாசம் பக்தியினால் சிறிது சிறிதாகக் கரைந்து, உள்ளத்தில் கிடக்கும் இறைவன் புலப்படுகிறான். எந்த மதத்திலும் இம் முறைக்கு மாறுபாடு இல்லை.

என் தமிழ் அறிவு பெரும்பாலும் இளவயசில் பாசுரங்கள் கேட்ட பழக்கத்தினால் உண்டானது என்பது எனக்கு இப்பொழுது நன்கு புலனாகிறது. திவ்யப் பிரபந்தமே நான்கு வேதங்களும் அடங்கிய ஞான சாரம் என்பது பெரியோர்களின் துணிபு. வடமொழி பயிலத் தடைப்பட்டு, முக்திபெற வழி தெரியாமல் அவதிப்படும் மக்களுக்குத் திவ்யப் பிரபந்தம் உயர்ந்த செல்வம். ஆண், பெண், எந்த வகுப்பினரும் பயின்று அறிந்துகொள்ளக்கூடும். நமது நாட்டில் நிகரற்ற புண்ணிய க்ஷேத்திரமாகிய திருவரங்கத்தில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானின் திருவிழாக்களில் பிரசித்தி பெற்றதான வைகுண்ட ஏகாதசி உத்ஸவத்தின் மூலம் திவ்யப் பிரபந்தப் பிரசாரம் இன்றும் நடந்துவருகிறது.

இந்தத் திருவிழா இருபது நாட்கள் நடக்கிறது. பகல் பத்து இராப்பத்து என்று இரு பாகமாக நடைபெறும். இராப்பத்து ஆரம்ப தினத்தன்றுதான் வைகுண்ட ஏகாதசி. திருவரங்கப்பெருமாளரையர் என்று வழங்கும் குடும்பத்தினர் தமிழ்ப் பிரபந்தம் பாடும் மிராசு உடையவர்கள். இவர்கள் அஹோபில மடத்தை அடுத்த நான்கு வீட்டுக்காரர்கள். கம்பராமாயணத்தை ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தில் அரங்கேற்றிய மகாநாட்டுக்கு அந்நாளில் தலைமை வகித்தவரான ஸ்ரீமந் நாதமுனிகளுடைய சந்ததியார்கள். திருவாய் மொழியைத் தொகுத்து எழுதி வெளிப்படுத்திய புலவரான நாதமுனிகள் ஆசாரிய கோஷ்டியில் ஒருவர். இவருடைய அநுக்கிரகத்தை முன்னிட்டே இந்த உத்ஸவம் முன் நாளில் ஆரம்பிக்கப்படும். இப்பொழுது கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாதமுனிகள் வடகலை நாமம் சாத்தப்பட்டிருக்கிறார். கோயில் அரையர்கள் தென்கலை நாமக்காரர்கள். இந்த மாறுபாடு எப்பொழுது ஏற்பட்டதோ தெரியவில்லை. இந்தச் சச்சர

வின் காரணமாக, வடகலை நாதமுனிகளுடைய உத்தரவு தேவையில்லை என்று கோயில் அரையர்கள் பிரபந்தம் பாடி வருகிறார்கள்.

பாட்டுக்குத் தாளம் உண்டு. ஆனால் தாளம் மாறுதலில் லாத ஒரே தாளம். பாடல்களில் சில பாகங்களில் அபிநயம் பிடித்து ஆடுவதும் உண்டு. நான் சிறுவனாகக் கோயிலைச் சுற்றி அலையும் காலத்தில் ரங்கசாமி அரையர் என்பவர் ஆடும் ஆட்டம் மிகவும் அழகாய் இருக்கும். வாட்டசாட்டமான உடம்பு. நல்ல நிறம். கணக்காக, கோணலில்லாமல் இடப் பட்டிருக்கும் பன்னிரண்டு திரு நாமங்கள். பட்டுக்கரை வேஷ்டி ; பஞ்ச கச்சம் வைத்துக் கட்டி, இடையில் உத்தரீயம் பட்டுக்கரையுடன் இருக்கும். மார்பில் பெருமாள் மாலைகள். தலையில் கிரீடம். இவற்றுடன் அவர் தாளத்தோடு ஆடும் ஆட்டத்தை நான் இன்னும் மறக்கவில்லை. அவருக்குப் பிறகு இன்று வரையில் அவரைப்போல ஆடும் அரையர்கள் இல்லை என்றே சொல்லலாம்.

ஆட்டத்திற்குப் பிறகு முதல்நாள் பாடிய பாசுரங்களுக்கு வியாக்கியானம் சொல்லுவார்கள். ஆறாயிரப்படி, பன்னீரா யிரப்படி என்று சொல்லும் வியாக்கியானங்களை ஏட்டுச் சுவடி களிலிருந்து ஒருவர் பின்புறமிருந்து மெதுவாகச் சொல்லிவர அதையே உரத்த குரலில் அரையர் சொல்லுவார். அந்த வியாக்கியானம் அவ்விருவருக்கும் புரியாத நடையில் இருக்கும். கேட்போருக்கும் புரியாது. கூட்டத்தில் ஒருவரும் கவனிக்க மாட்டார்கள். வியாக்கியான புருஷர்கள் தங்கள் பாண்டித்தி யத்தைப் பறைசாற்றவே உரை கூறியதாகத் தோன்றும்.

வில்லிபுத்தூர் விஷ்ணுசித்தர் என்று பெயர்பெற்ற பெரி யாழ்வார் பாசுரங்களைக் காலையில் பாடிய பிறகு, பிற்பகலில் கிருஷ்ணலீலையின் சில பாகங்களை வசன நடையில் நாடகம் போல நடத்துவார்கள். வேஷம் எதுவும் போடுவதில்லை. அரையர்களிலே ஒருவர் கோபிகையாகவும் மற்றொருவர் கிருஷ்ணனாகவும் பாவனை செய்துகொண்டு பேசுவார்கள். அரையர்களின் வீட்டுப் பிள்ளைகள் ஆய்ப்பாடியினர் போல வும், முழந்தாளிட்டு மாடுகள் போலவும் நடிப்பார்கள்.

மேளம், தாளம், பின்பாட்டு, ஆண்வேஷம், பெண்வேஷம், வர்ணப் படுதாக்கள், அலங்கரித்த திரைகள் என்பவைகளில் ஒன்றும் இல்லை. பக்தி ஒன்றிருந்தால்தான் இந்த நாடகத்தைக் கவனிக்கமுடியும்.

சபையில் அசையாது இருபுறமும் வீற்றிருப்பவர்கள் வைணவ சமய ஆழ்வார் ஆசாரியர்களின் விக்கிரகங்கள். எல்லாம் கண்மூடிக் கைகூப்பின விக்கிரகங்கள். இன்ன பிரதிமை இன்னவர் என்று சொல்லமுடியாது. திருவிழாவுக்குத் தினசரி வரும் கோயில் அரையர்களுக்குங்கூடச் சந்தேகந்தான். நாலும் என்னால் இயன்றவரையில் இளவயசில் ஒவ்வொரு விக்கிரகத்தையும் கவனித்துப் பார்ப்பதுண்டு. கண்டுபிடிக்க முடியாது.

உடையவர் எனப்பட்ட ஸ்ரீ ராமானுஜர் செப்புத் திரிதண்டம் வைத்திருப்பதால் தெரிந்தவர்கள் அவரைச் சுலபமாகக் கண்டுபிடிக்கக்கூடும். திருமங்கை மன்னனென்று வழங்கும் கள்ளப்பிரான் கத்தி கேடயம் தாங்கி யிருப்பதால் தெரிந்துகொள்ளக்கூடும். திருப்பாணாழ்வார் கையில் தாளம் வைத்திருப்பதிலிருந்து அவரை அறியக்கூடும். கூரத்தாழ்வாரைத் தாடியினால் தெரிந்துகொள்ளலாம். மற்றவர்களைத் தெரிந்துகொள்ள முடியாது. திருவிழாவுக்கு வரும் பெரும்பாலோருக்குத் தெரிந்துகொள்ள விருப்பம் இருந்ததாக எனக்குத் தெரியவில்லை. பாசுரம் பாடுவதைக் காட்டிலும் பிற்பகல் நாடகம் பார்ப்பதில் எனக்கு மிகவும் ஆசை. பெரியம்மாளுடன் சென்று சலியாமல் உட்கார்ந்திருப்பேன்.

அரையர் சேவை முடிந்தபிறகு, பெருமாளுக்குத் திருப்பணியாரம் அமுது செய்விக்கவென்று திரைபோட்டுக் கூடைகூடையாகத் தோசை, வடை, செல்வர் அப்பம் இவைகளையும் இன்னும் கரடுமுரடான பலவிதப் பணியாரங்களையும் மணி, மேளம் முதலியவைகளுடன் அமுது செய்விப்பார்கள். திரை திறந்ததும் பணியாரங்களின் விநியோகம் நடக்கும். ஸ்ரீரங்கத்தில் கிடைக்கும் புத்துருக்கு நெய்க்குத் தனி மணம். கோயில்

பணியாரம் முழுவதும் அந்த நெய்யில் செய்திருப்பதால் நெய்யின் மணம் ஒருபுறமும், பரிமள ரங்கநாதருடைய கஸ்தூரியின் மணம் மற்றொரு புறமும் என் மனத்தைக் கொள்ளை கொண்டுபோகும். கோயில் ஊழியத்திலோ பரம்பரையாக ஏற்பட்டுள்ள கோயில் பிராசு முறைகளிலோ ஈடுபடாத எனக்குத் திருப்பணியாரம் பெறும் பாத்தியதை இல்லை. பத்து, இருபது, ஐம்பது, நூற்றுக் கணக்காக எண்ணி முறைக்காரர்களும் ஊழியர்களும் வாங்கிக்கொண்டு, திருப்பணியாரங்களைத் தூக்க முடியாமல் தூக்கிப்போய் விலைக்கு விற்று விடுவார்கள். பகவத் பிரசாதம் யாரும் பெறலாம். கையில் காசு இருந்தால் எவ்வளவு வேண்டுமானாலும் பெறலாம். ஆனால் அதுதான் என்னிடம் பூஜ்யம். மன வெறுப்புடன் கூடை கூடையாக இருப்பவை வெளியே போவதைப் பார்த்துக்கொண்டிருப்பேன். இவ்வளவு கூடைகள் வெளியே போன பிறகுங்கூட ஒன்று இரண்டு கூடைப் பணியாரம் மிச்சமிருக்கும். அவற்றை யெல்லாம் துண்டு துண்டாக நொறுக்கிக் குவிப்பார்கள். இதிலிருந்துதான் வந்தவர்களுக்குப் பிரசாதம் விநியோகிக்கப்படும்.

விநியோகிக்கும் முறை ஸ்ரீரங்கம் கோவிலுக்கென்று தனி. எல்லோரும் உட்காரவேண்டும். கோவில் மணியகாரர் அல்லது அவருடைய பிரதிநிதி ஒருவர் கூட்டத்தின் மத்தியில் நின்றுகொண்டு தம் கைவிரலால் யாரைக் குறிப்பிடுகிறாரோ அவர் எழுந்திருந்துபோய்ப் பணியாரக் குவியலில் எதை எவ்வளவு கொடுக்கிறார்களோ அதை வாங்கிப் போவார். ஆயிரக் கணக்காகக் கூடியிருக்கும் மக்கள் அனைவரும் அவருடைய முகத்தையே பார்த்துக் கழுத்தை நீட்டிக்கொண்டு, முன்னிருப்பவர்கள் எழுந்து செல்லச் செல்ல, காலியிடங்களுக்கு நகர்ந்துகொண்டே மணியகாரர் கடாக்ஷம் தம் பேரில் விழாதா என ஏங்கியிருப்பார்கள்.

நானும் அக்காலத்தில் அந்தக் கூட்டத்தில் உட்கார்ந்து நகர்ந்துகொண் டிருந்தவர்களில் ஒருவன். 'நெற்றியில் வடகலை நாமம் போட்டுக்கொண் டிருக்கிறோமே, சிறு வயசாக இருக்கிறோமே, கல்யாணமாகாததனால் பஞ்ச கச்ச வேஷ்டி உடுத்த

வில்லையே' என்றெல்லாம் மனத்தில் எண்ணங்கள் ஊசலாடிக் கொண் டிருக்கும். விரைவாகக் கரைந்துகொண் டிருக்கும் பணியாரக் குவியலின் பேரிலும் கண் சென்றுகொண் டிருக் கும். பணியாரம் தீர்ந்துவிட்டால் விநியோகமும் தீர்ந்து விடும். பிறகு யாருக்கும் கிடைக்காது. அந்தக் கதி எனக்கு நேர்ந்துவிடுமோ என்கிற பயம்; மனத்திற்குள் பெருமாளைப் பிரார்த்தித்துக்கொள்ளுவேன். எனினும் கடைசியாக எனக்குக் கிடைக்காது. ஒரு மணி நேரத்திற்கு மேலாக நீட்டிய கழுத்து வலி எடுத்துவிடும். அடக்கமுடியாத துயரத்துடன் கோயிலை விட்டு வெளியே வருவேன். ஆனால் ஏமாற்றமடைவது மட் டும் இல்லை. எப்படியாகிலும் தோசை வடைகள் சம்பாதித்து விடவேண்டுமென்று சங்கல்பம் செய்துகொள்வேன்.

திருவிழா இருபது நாட்களிலும் ஆழ்வார் ஆசாரியர்களில் பன்னிருவர் பெரிய பெருமாள் காட்சி கொடுக்கும் மண்டபத் திற்கு, சுவாமி வருவதற்கு முன்பாகவே எழுந்தருளிவிட வேண்டும். மிகுதியிருக்கும் நால்வர் சுவாமியுடன் பின் தொடர்ந்து வருவார்கள். ஆழ்வார்கள் தங்களுடைய ஜீவிய காலத்திலேயே பக்தியில் ஆழ்ந்து வறுமையை வரவேற்று, இறைவனருளால் சிற்றின்பச் சுகபோகங்களைத் துறந்தவர்கள். அவரவர்கள் அவதார ஸ்தலங்களைத் தவிர மற்ற இடங்களி லுள்ள விஷ்ணு கோயில்களில் இன்றும் அவர்கள் வறுமை வாய்ப்பட்டுக் கிடக்கிறார்கள். தங்கள் தங்கள் சந்நிதிகளி லிருந்து நால்வர் தூக்கவேண்டிய கேடயத்தில் அமர்ந்து ஸ்ரீரங்கநாதன் சந்நிதிக்கு வந்து சேரவேண்டும். நான்கு பேர்களுக்குக் கூலி கொடுத்துத் தூக்கிவரும் சக்தி ஆழ்வா ருக்கும் இல்லை; அவர்களை நிர்வகிப்பவர்களுக்கும் இல்லை. ஆகையால் தயவும் வைணவத்தில் ஆர்வமும் கொண்ட பக்தர் களின் உதவியால் இந்த ஆழ்வார்கள் கோவில் வந்து சேர்வார் கள்.

இந்தக் கஷ்டம் கோவில் வந்து சேருவதுடன் நில்லாது. மறுபடியும் அன்றாடம் திருவிழா முடிந்து இரவு பன்னிரண்டு மணியான போதிலும், இருப்பிடம் போய்ச் சேரவேண்டிய கஷ்டம் மிகவும் அதிகம். இவர்களைப் பிராமணர்களே தூக்க

வேண்டுமென்ற நிபந்தனை இல்லை. யாராயிருந்தாலும், நெற்றியில் நாமம் மட்டும் இருந்தால் போதும். வடகலை நாமமாக இருந்தால்கூடப பரவாயில்லை. இந்தக் கைங்கர்யத்திற்குக் கூலியாக, பகவான் அமுது செய்யும் திருப்பணியாரங்களில் ஒரு தோசையும் ஒரு வடையும் கிடைக்கும். ஏன் அந்த வேலையைச் செய்து தோசையும் வடையும் துட்டு இல்லாமல் பெறக்கூடாது என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது.

என் உயரமும் தேகக்கட்டும் அந்த வேலைக்குப் போதுமென நினைத்தேன். ஆழ்வார்களைத் தூக்குகிறவர்கள் சுமார் ஒரு மணி நேரமாகிலும் சுமந்து நிற்கவேண்டி வரும். பெருமாள் சந்நிதியில் ஆழ்வாருக்கு மரியாதைகள் நடத்தும் சமயத்தில் கேடயத்தை இறக்கிக் கையில் சுமந்து நின்று, பிறகு தோளில் தூக்கி நிற்கவேண்டும்.

ஒரு நாள் சுமந்து நிற்பவரிடம் சற்று நேரம் நின்று, "நானும் கொஞ்சம் கைங்கர்யம் செய்யட்டுமா?" என்று கேட்டதற்கு அவரும் சந்தோஷத்துடன் "சரி" எனவே நான் தூக்கிப் பார்த்தேன். சற்று உயரம் குறைவாக இருந்தால், மேலிருக்கும் சவுக்கத்தை மடித்துத் தோளில் கொடுத்தேன். உயரம் சரியாகிவிட்டது. ஆனால் பளுவாகத்தான் தோன்றியது. இருந்த போதிலும் தூக்கலாமென்று தைரியம் பிறந்துவிட்டது. எந்த ஆழ்வார் லேசாக இருப்பார், தூக்க ஆட்கள் கிடையாமல் அவதிப்படுகிறார் எனத் தெரிந்து கொண்டு அவரைத் தூக்க ஆரம்பித்துவிட்டேன். நான் தூக்கிக்கொண் டிருக்கும்பொழுது என்னைப் பார்த்த என் பள்ளிக்கூடத்து நண்பர்கள் எல்லோரும் என்னை நையாண்டி செய்வார்கள். கடைசியாகப் பள்ளிக்கூடத்தில், "ஆழ்வார் தூக்கி" என்று புனைபெயரும் பெற்றுவிட்டேன். தோசையும் வடையும் இனமாகப் பெற்றேன்.

ஆழ்வார் தூக்கியபொழுது என்னைப் பார்த்த என் பெரியம்மாளுக்கு அடங்காத சந்தோஷம். "ஆழ்வார் தூக்கினால் புண்ணியம் கிடைக்கும். நீ பள்ளிக்கூடத்துப் பரீக்ஷகளெல்

லாம் நன்ருகத் தேறிவிடுவாய்'' என்று சொல்லுவாள். ஆனல் என் தாயும் தந்தையும் என்ன நினைத்தார்கள் என்பது எனக்குத் தெரியாது. நான் ஆழ்வார் தூக்கியது அவர்களுக்குத் தெரியாதென்றே நினைக்கிறேன். அந்தப் புண்ணியந்தான் வெகு நாளைக்குப் பிறகு காங்கிரஸ் ஆட்சியில் மந்திரிப் பதவியில் தேவஸ்தான நிர்வாகமும் என் பொறுப்பில் வந்ததோ! என் பெரியம்மாளைக் கேட்டால்தானே தெரியும். ஆனல் அவள் காலம் கழிந்து வெகு நாட்களாகிவிட்டன.

# கல்யாணங்கள்

## என் பூணூல் கல்யாணம்

என் எட்டாவது வயசில் எனக்குப் பூணூல் போட்டுக் கொள்ளும் சடங்கு நடைபெற்றது. எனக்கு இது எதற்காக நடந்ததென்று தெரியாது. வீட்டில் இருக்கும் பெரியவர்களும் எனக்குச் சொல்லவில்லை எல்லோரும் 'பூணூல் கல்யாணம்' என்று ஆரவாரம் செய்தார்கள். எனக்கும் மணையில் உட்கார்ந்துகொள்வதும், சுற்றத்தார்கள் சூழ மேளவாத்தியத்துடன் பூணூல் போட்டுக்கொள்வதும் ஆனந்தமாகவே இருந்தன. எல்லோரையும் விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்வதில் ஓர் உத்ஸாகம். மொட்டைத் தலையுடன், மஞ்சள் சாயமேற்றின தட்டாடையுடன் அங்கும் இங்குமாக நான்கு நாட்கள் அலைந்தது ஞாபகம் இருக்கிறது. என் பாட்டனார் காலை, நடுப்பகல், மாலை மூன்று நேரங்களிலும், என்னை எங்கிருந்தாவது பிடித்துவந்து சந்தியாவந்தனம் செய்யும் முறையையும், அதற்கு உண்டான ஜபம் முதலிய மந்திரங்களையும் இரண்டு மாதங்களுக்குள் மனப்பாடம் செய்துவைத்துவிட்டார். இது எனக்கு ஒரு பெரிய உபத்திரவமாகத் தோன்றியது. பள்ளிக்கூட உபாத்தியாயர் தொல்லையை ஒருவாறு குறும்பு செய்வதனால சகிக்க முடிந்தது. ஆனால் என் தாத்தாவின் தொல்லை சகிக்க முடியவில்லை. பள்ளிக்கூடம் இருந்தாலும், இல்லாவிட்டாலும், பசியாக இருந்தாலும், பரீக்ஷை சமயமாக இருந்தாலும் என்னை விடமாட்டார். தேடிப்பிடித்து ஸ்நானம் செய்வித்து, சந்தியாவந்தனம் தவறாமல் நடத்திவிடுவார்.

## தொல்லைகள்

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு எனக்குப் பலவிதத் தொல்லைகள் உண்டாகிவிட்டன. என் பெரியம்மாள் வைதிக

சிஷ்டாசாரத்தைக் கைப்பிடிப்பவள். ஆகையால், பூணூல் போட்ட பையன்களுக்குத் தீட்டு உண்டு என்று சித்தாந்தப் படுத்திவிட்டாள். அன்றுமுதல், ஸ்நானம் செய்து மடி உடுத்திய பிறகுதான் எந்தப் பாத்திரத்தையும் தொடலாம்; சமையலறையில் புகுந்து குடத்திலிருந்து தாகத்திற்குத் தண்ணீர் எடுத்துக்கொள்ளலாம்; பெரியம்மாளைக் கையால் தொடலாம். என் விழுப்புத் துணிகள் காற்றில் பறந்து பெரியம்மாள் புடைவையின் பேரில் பட்டுவிட்டதானால், எல்லா வேலைகளையும் நிறுத்திவிட்டு ஸ்நானம் செய்யத் தொடங்கிவிடுவாள். அவளுக்குத் தீட்டுப் பட்டுவிடும் என்கிற பயமும், அதனால் பாவம் என்கிற நம்பிக்கையும் அளவிட முடியாதனவாக இருந்தன. ஆனால் தீட்டு என்ன என்பது எனக்கு அன்றும் தெரியாது; இன்றும் தெரியாது. ஒரு சமயம் தீட்டும் அழுக்கும் ஒன்றாக இருக்கலாமோ என்பது சந்தேகம். ஆனால் வழக்கத்தில் அப்படி முடிவு செய்வதற்கு இடமில்லை.

பெரியம்மாள் பேரில் கோபம் வந்தால் அவளுக்குத் தெரியாமல் அவள் மடியாக வைத்திருந்த சேலைகளைத் தொட்டுவிடுவேன். பிறகு பழிவாங்குவதற்காகத் தொட்டுவிட்டேன் என்று சொன்னபோதிலும் நம்பமாட்டாள்; "நான் நேரில் பார்த்தால்தான் தீட்டு உண்டு" என்று சொல்லிவிடுவாள். "இந்தச் சனியன் பிடித்த பூணூல் எதற்கு? அறுத்துவிடுகிறேன், பார்!" என்று மிரட்டுவது உண்டு. இதைப் பெரியம்மாளால் சகிக்க முடியாது. எப்பாடு பட்டாகிலும் நான் பூணூலை மட்டும் அறுத்து எறியக்கூடாது என்பது அவளுடைய கொள்கை.

### தீட்டுத்தர்மம்

எங்களுடைய கிராமமாகிற தில்லைஸ்தானத்தில் எங்கள் பங்காளிகளுடைய வீடுகள் முப்பது இருக்கலாம். பங்காளிகள் என்றால் சொத்தைப் பங்கிட்டுக்கொள்பவர்கள் என்று பொருளல்ல. தீட்டு மூட்டையில் பங்குக்காரர்கள். யாராகிலும் ஒருவர் இவர்கள் வீட்டில் இறந்துவிட்டால், மற்றப் பங்காளிகள் எல்லோருக்கும் பத்து நாட்களுக்குத் தீட்டு

வந்துவிடும் ; சுபமான காரியம் ஒன்றும் செய்யக்கூடாது. கல்யாணங்கள் நின்றுவிடும். திருவிழாக்கள் கொண்டாடக் கூடாது. கோயில்களுக்குப் போகக்கூடாது. நெற்றியில் பாழும் நாமம் போடவேண்டும். ஸ்ரீசூரணம் தரிக்கக்கூடாது. இம்மாதிரியான நிபந்தனைகள் அநேகம்.

ஆனால், தீட்டுக் காக்கும் குடும்பங்களில் ஒருவருக்கொருவர் சண்டை சச்சரவு, கோர்ட்டுகளில் விவகாரம், பேச்சு வார்த்தை இல்லாமலிருத்தல், மாறுபாடான கொடூரச் செயல்கள் - இவைகள் மலிந்து கிடக்கும். இந்த விநோத மனப்பான்மை யையும், தீட்டுக் காக்கும் கடுமையையும் பார்த்தால், அடிமைப் புத்தியும், ஈனத்தனமுமே என் முன் தாண்டவமாடிக்கொண் டிருக்கும். பூணூல் போட்டுக்கொண்டதன் விளைவாக இந்த அநுபவமெல்லாம் எனக்கு ஏற்பட்டன. எழுதப்படாத இந்தச் சாஸ்திர முறைகளெல்லாம் என் பெரியம்மாளுக்கு மனப்பாடம். என் தகப்பனாருக்கும் பெரியவர்களான முன் னோர்கள் செய்து வந்ததெல்லாம் தர்ம நியாயம். அதற்கு ஆதாரம் கேட்கவோ, விசாரணை செய்யவோ கூடாது. கீழ்ப் படியவேண்டியதைத் தவிர வேறு வழி இல்லை என்ற ஒரே கொள்கை. இந்தத் 'தீட்டுத் தர்மம்' வெகு நாட்கள் வரை யில் எங்கள் குடும்பத்தில் பின்பற்றப்பட்டு வந்தது. நல்ல வேலையாக வயிற்றுப்பிழைப்பை நாடிக் கப்பலேறி ரங்கூன் போனேன். அன்று முதல் எங்கள் பங்காளிகள் எங்களைத் 'தள்ளி வைத்து' விட்டார்கள். நல்லது பொல்லாதது ஒன் றுக்கும் தகவல் கிடைப்பதில்லை. அன்று முதல் நான் தீட்டுக் காப்பதில்லை. பூணூலினால் ஏற்பட்ட ஒரு சனி, பூணூலை அறுக்கவேண்டிய அவசியம் இல்லாமலே ஒழிந்தது. ஆனால், பூணூல் துயரம் இதோடு நின்றுவிடவில்லை.

'பூணூல் போட்ட பிறகு கடைத்தெருவிலுள்ள பலகாரக் கடைகளில் விற்கும் எவற்றையும் சாப்பிடக்கூடாது' என்ற நிபந்தனை எங்கள் வீட்டில் உண்டு. அதனால் எல்லோரும் அறி யக் கடைத்தெருவில் விற்கும் மிட்டாய், பணியாரம் - ஒன்றும் சாப்பிடக்கூடாது. கோயில் பண்டாரத்திலும், சுற்றுக்

கோவில்களான ஆழ்வார்கள் முதலியவர்களுடைய திரு மடைப்பள்ளிகளிலும் செய்து விற்கும் பணியாரங்களோ பிர சாதங்களோதாம் வாங்கிச் சாப்பிடலாம். தற்செயலாகத் திடீரென்று இந்தத் திருமடைப் பள்ளிகளில் சமையல் செய் வோரையும், அவர்கள் உடை முதலியவற்றையும் பார்த்து விட்டால் பகவானை நம்பித்தான் பிரசாதங்களை வாங்கிச் சாப்பிடவேண்டும். அவர் கருணையினால்தான் உயிரும் பிழைத் திருக்கவேண்டும். கடைத்தெருவில இருக்கும் கரூர் ராயர் கடையில் பலகாரம் வாங்கவேண்டுமானால் இரவில் மறைந்து வாங்கி, அதைத் திருடியவன் போல அவசர அவசரமாக விழுங்கவேண்டி யிருக்கும்.

### ஸமாச்ரயணச் சடங்கு

பூணூல் பற்றிய சம்பவங்களில் மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சி உண்டு. வைஷ்ணவர்களாகப் பிறந்தவர்கள் தவறாது உட்படவேண்டிய ஒரு சடங்கு உண்டு. இது ஆண் பெண் இருவருக்கும் இன்றியமையாதது; ஆண் பிள்ளைகளுக்குப் பூணூல் போட்டபிறகும், பெண்பிள்ளைகளுக்குக் கல்யாண மானபிறகும் நடக்கவேண்டியது. மற்றச் சடங்குகளைப்போல, இதை ஏன் செய்யவேண்டும், செய்துகொள்ளவேண்டும் என்று செய்பவர்களும் சொல்வதில்லை; செய்துகொள்பவர் களுக்கும் தெரியாது.

எனக்கு உபநயனம் ஆகி ஒரு வருஷம் கழிந்த பின்னர் ஒரு சமயம் என் தகப்பனாருடன் தில்லைஸ்தானத்திற்குச் சென் றிருந்தேன். அகோபிலமடம் ஜீயர் தம் பரிவாரங்களுடன் சுற்றுப்பிரயாணம் செய்யும் முறையில் அங்கு அப்பொழுது சில நாட்கள் தங்கியிருந்தார். அவரைத் தரிசிக்க நானும் என் தகப்பனாரும் போயிருந்தோம். வயசான ஜீயர் ஓர் ஆசனத்தில் வீற்றிருந்தார். அவரைச் சுற்றிலும் அநேகர் ஓயாது விழுந்து விழுந்து நமஸ்கரித்துக்கொண் டிருந்தார்கள். என் தகப்ப னாரும் அவ்விதமே செய்ய, நானும் அவரைப் பின்பற்றினேன். இரண்டு தடவை நமஸ்கரித்த பிறகு எனக்கு மேல்மூச்சு

விடும்படி ஆகிவிட்டது. அத்துடன் நிறுத்தலாமென்று திரும்பிப் பார்த்தாலோ மற்றவர்கள் ஓயாமல் நமஸ்கரித்த வண்ணமே எழுவதும் விழுவதுமாகவே இருந்தார்கள். மெதுவாகப் பின்புறம் நகர்ந்து அந்தக் கூட்டத்தைவிட்டு வெளியே வந்துவிட்டேன். ஆசாரியனுடைய பார்வைக்கும் அனுக்கிரகத்திற்கும் பாத்திரமாகும் வரையில் நமஸ்கரித்துக்கொண்டே இருக்கவேண்டும் என்பது முறை. கடைசியாக, ஆசாரியன் சந்நிதானத்திற்கு என்னை என் தகப்பனார் கூட்டிச் சென்றார்.

"என்ன, சேஷையங்காரே! பையன் உம்முடைய பிள்ளையாண்டான்தானே? உபநயனம் ஆச்சா? இன்னும் ஸமாச்ரயணம் ஆகல்லைபோலிருக்கு?" என்றார் சுவாமிகள்.

"அடியேன்; அழசிங்கர் நியமனப்படி நடத்தவேண்டும்" என்றார் என் தகப்பனார்.

"சரி; நாளையதினம் காலையில் அபிகமன ஆராதனம் நடந்தவுடனே செய்துவிடலாம். கூட்டி வாருங்கள். சந்நிதி ஸ்ரீகாரியக்காரரிடம் தெரிவித்துவிடும்" என்று உத்தரவு பிறந்துவிட்டது.

எனக்கு இது ஒன்றும் புரியவில்லை. வீட்டிற்கு வந்த பிறகு என்னவென்று விசாரித்ததில் விவரம் தெரிந்துகொண்டேன். மனத்தில் உண்டான திகில் அளவிட முடியாது. நெருப்பில் காய்ச்சின இரும்புக் கம்பிகளால் சங்குசக்கர முத்திரைகளை என் இரு புஜங்களிலும் ஆசாரியன் கையினால் சூடு பெற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் 'ஸமாச்ரயணம்' என்று தெரிந்துகொண்டேன். "செய்துகொண்டால் அஹோபில மடத்திற்குச் சிஷ்யனாகிவிடுவாய். பன்னிரண்டு திருமண் போட்டுக்கொள்ள உரிமை உண்டு. வைஷ்ணவ கோஷ்டியில் சேர்த்துக்கொள்ளப்படுவாய். முத்திரைக்கோல் படும்பொழுது சற்றுச் சுரீர் என்று இருக்கும். பிறகு ஒன்றும் தெரியாது. அதைப்பற்றிக் கவலைப்படாதே" என்றெல்லாம் தைரியப்படுத்தினார்கள். என் உள்ளமோ, மறுநாள் காலையில் தூக்கிவிடப் போகிறவன் மனம் எவ்வாறு இருக்குமோ அவ்வாறு

தான் துடித்தது. ஆனால் என் பெரியம்மாளின் திருப்திக்கு அளவில்லை. "இனிமேல் சமையல் பாத்திரத்தை யெல்லாம் தொடலாம். எனக்குச் சாதம் எடுத்துப் பரிமாறலாம். நீ தொட்டு நான் சாப்பிடலாம்" என்றெல்லாம் ஆறுதல் சொன்னாள்.

மறுநாள் காலையில் சூடுபோடும் சடங்கு முடிந்தது. நான் பயப்பட்ட அளவு கஷ்டமில்லை. ஒரு தட்டில் வெற்றிலை பாக்கு, பழம், புஷ்பம் முதலியவற்றுடன் இரண்டு ரூபாயையும் வைத்து ஆசாரியன் அனுக்கிரகத்தைப் பெறும்படியான வேலை முடிந்தது. நானும் வைஷ்ணவ கோஷ்டியில் சேரச் சீட்டு வாங்கிவிட்டேன். பன்னிரண்டு திருமண் சாத்தவும் உரிமை பெற்றுவிட்டேன். ஆனால் அந்த ஜீயர்மீது உண்டான கோபம் வெகு நாட்களுக்கு அடங்கவில்லை.

### கல்யாணக் காப்பு

"பையனுக்கோ வயசாகிக்கொண்டு போகிறது. நெடு நெடுவென்று உயர்ந்துகொண்டே போகிறான். யாராகிலும் பெண் கொடுக்க வந்தால் வெறுங் காலும் வெறும் கையுமாக நின்றால் யார் கொடுப்பார்கள்? கையில் செப்புக்கட்டை கொடுத்து ஒரு தங்கக் காப்பாகிலும் இருக்க வேண்டாமா?" என்று சொல்லி எனக்கு ஒரு ஜோடித் தங்கக் காப்புச் செய்து என் தாய் போட்டுவிட்டாள். எனக்கு அப்பொழுது சுமார் பதினைந்து வயசு இருக்கும். கல்யாண மார்க்கெட்டில் விலை போக யோக்கியதை பெற்றுவிட்டேன். எனக்கும் தங்கக் காப்புப் போட்டுக்கொள்வதில் ஆசைதான். 'பணக்கார வீட்டுப் பையன்' என்று சொல்லுவார்கள் என்பது எனது அபிப்பிராயம். அதன் பிறகு பெண்களை உடைய தாய்மார் கள் என்னை உற்றுக் கவனிப்பதாக எனது நினைவு. தங்கக் காப்பினால் கல்யாணமாயிற்று என்பதைப்பற்றி நான் ஒன் றும் சொல்ல முடியாது. கல்யாணம் நடந்து ஒரு வருஷம் கழிந்த பிறகுதான் அது கையைவிட்டு நீங்கியது. அதனால் தான் ஓர் உயர்தரப் பெண்ணை மணந்தேன் என்பதும் தெரி

யாது. கல்யாண மார்க்கெட்டில் நான் விலையாகிவிட்டேன். அதற்கு உண்டான காப்பும் நீங்கியது. இரண்டு வருஷம் காப்புப் போட்டிருந்த பிறகுதான் கல்யாணம் நடந்தது. பலன் கிட்டியது. பெண்சாதி கிடைத்துவிட்டாள். ஆனால் வயசு பதினாறை அப்பொழுதுதான் கடந்தேன்.

### என் மனைவி

நான் மணக்கப் போகும் பெண்ணை என் தாய் பார்த்து நிச்சயித்தாள். நான் பார்க்கவில்லை. பார்க்கவேண்டுமென்ற விருப்பம் இருந்தபோதிலும் வெட்கத்தினால் வெளியிடவில்லை. பெண்ணின் தாய் மட்டிலும் ஒரு நாள் இரவு என்னைப் பார்க்க வேண்டுமென்று வந்திருந்தாள். ஆனால் என்னைக் கண்டதும் இருட்டில் மறைந்துவிட்டாள். அந்நேரத்தில் மறைவில் இருந்துகொண்டு என்னைக் கண்டு எவ்வளவு தெரிந்து கொண்டாள் என்பது எனக்குத் தெரியாது. கல்யாணம் நிச்சயமானதால் நான் மகளுக்கு ஏற்ற கணவன் என்பதாக நினைத்தாள் என்பது என் முடிவு.

எனக்கும் என் மனைவியாக வரும் பெண்ணிற்கும் நான்கு வருஷமே வித்தியாசம். பாடத் தெரிந்தவள். நல்ல பேச்சுக் காரி என்பதாக எனக்குக் கேள்வி. நிறம் கறுப்பாக இருந் தாலும் அழகுடையவள் என்று சொல்லிக்கொண்டார்கள். உள்ளூர்ப் பெண் ஆனபடியால் இந்த விவரம் நன்கு தெரிந்து கொண்டேன். கல்யாணம் செய்துகொள்வதில் எனக்குப் பிரியம். பெண்ணின் பேரில் பிரியமுண்டாவதற்கு நேரில் பார்த்தால்தானே? ஆகையால் கல்யாண வைபவங்களில் என் மனம் சென்றது.

### கல்யாணக் கனவுகள்

பெரிய மனிதர்கள் வீட்டுக் கல்யாணங்களைப்போல் இருக்கவேண்டும் என்பது என் ஆசை. 'அலங்கரித்த பெரிய கொட்டகைப் பந்தல் இருக்க வேண்டும். நல்ல மேளகாரர் களான தங்க நாயனம் அல்லது வெள்ளி நாயனக்கார

ராகிலும் வாத்தியம் வாசிக்க வேண்டும். ஊரிலுள்ளவர்களும் என் உறவினர்களும் நான் புஷ்பப் பல்லக்கில் ஏறிக்கொண்டு ஊர்வலம் போவதைப் பார்த்து நான் களிப்புறவேண்டும். என்னை எல்லோரும் சுற்றிக்கொண்டு மாப்பிள்ளை என்று அழைக்கவும், நல்ல உணவு பணியார வகைகளுடன் நான் பன்முறை விசாரிக்கப்பட்டு, வருந்தி உபசரிக்கப்பட வேண்டும்.' இம்மாதிரியான எண்ணங்களே என் கல்யாணக் கனவுகள்.

நல்ல பட்டு ஜரிகை போட்ட பகட்டான உடைகளும் கிடைக்குமென்று எதிர்பார்த்துக்கொண்டு இருந்தேன். ஆனால் என் உள்ளத்தில் ஊசலாடிக்கொண்டிருந்த எண்ணங்களை யாரிடத்திலும் தெரிவிக்கவில்லை. எனக்கு வரிக்கப் பட்டவள் தன் தாய்க்கு ஒரே பெண்ணாக இருந்தாலும் அந்த மணப்பந்தலில் என் மாமியாருடைய தங்கைக்கும், அவள் சிறிய தாயின் மகளுக்கும் ஆக மூன்று கல்யாணங்கள் நடை பெற்றன. என் மனைவியின் சிறு வயசிலேயே அவள் தகப்பனார் இறந்துவிட்டபடியால் தாயைப் பெற்ற பாட்டனார் வீட்டிலேயே வளர்ந்து வந்தாள். தகப்பனில்லாத பெண் என்பதனால் பாட்டனாருக்கும் பாட்டிக்கும் செல்வக் குழந்தை யாக வளர்ந்தாள்.

### ஏமாற்றமும் திருப்தியும்

ஸ்ரீரங்கத்தில் வடக்குச் சித்திரை வீதியில் கல்யாணம் நடத்துவதாக நிச்சயம் செய்யப்பட்டிருந்தது. குறிப்பிட்ட தேதிக்கு ஒரு வாரம் முன்பாகவே சாயங்கால இருட்டு நேரத் தில் அந்தத் தெருக்கோடியில் போய்ப் பார்த்தேன். 'நல்ல அழகான கொட்டகைப் பந்தலாகப் போடவேண்டுமானால் ஒரு வாரம் முன்பே முகூர்த்தக் கால் நாட்டிவிடுவார்களே ; எவ்வளவு தூரம் வேலை நடக்கிறதென்று பார்த்து மகிழ்ச்சி யடையலாம்' என்று போய்ப் பார்த்தேன். அந்த வீட்டு வாச லில் ஒன்றையும் காணவில்லை. 'ஏது! கல்யாணம் மோசமாகத் தான் இருக்கும் போலிருக்கிறது!' என்று ஒருவாறு கவலை

கொண்டேன். ஆனால் என் கவலையை யாரிடம் சொல்வது? இதுதான் எனக்கு முதல் ஏமாற்றம்.

கடைசியாக முகூர்த்த தினத்திற்கு முதல்நாள்தான் ஒரு மட்டப் பந்தல் போட ஆரம்பித்தார்கள். சாமானியப் பந்தலினால் உண்டான ஏமாற்றம் மாப்பிள்ளையை வரவேற்கும் உத்ஸாகத்தில் மறையுமென்று எண்ணினேன். கல்யாணத்திற்கு முதல்நாள் இரவு வெகுநேரம் வரையில் என்னை ஊர்வலமாக அழைத்துப் போவார்களென்று எதிர்பார்த்தேன். ஒன்றையும் காணவில்லை.

கல்யாணத்தின் பேரில் வெறுப்பும் கோபமும் மூண்டு விட்டன. இரவு வெகுநேரம் வரையில் உறக்கமில்லாமல், என்னை அழைக்கவரும் மேளச் சத்தம் கேட்குமோ என்று நினைத்துப் படுக்கையில் புரண்டுகொண்டு இருந்தேன். விடியற்காலை நாலுமணி சுமாருக்கு எதிர்பார்த்த மேளச் சத்தம் கேட்டது. உடனே எழுந்து பல்துலக்கி, முகம் கழுவி, எனக்கு இருந்த நல்ல வேஷ்டிகளில் ஒன்றை உடுத்துக்கொண்டு தயாராகிவிட்டேன். வரவேற்று அழைத்துப்போகப் பெண்வீட்டார் இருவரே வந்திருந்தனர். எங்கள் வீட்டாரும் அவ்வளவு அதிகாலையில் புறப்படத் தயாராக இல்லை. வந்தவர்களோ நிச்சயதார்த்த முகூர்த்தம் தவறிவிடுமென்று உடனே புறப்படவேண்டி வற்புறுத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

எங்கள் வீட்டில் புறப்படக்கூடிய சிலருடன் இருட்டு நேரத்தில் ஓர் ஓட்டைப் பெட்டிப்பல்லக்கில் ஏறினேன். மேளகாரனுடைய சத்தமோ காதால் கேட்க முடியவில்லை. அந்த ஊருக்குள் அவர்கள் மிகவும் மலிவான பேர்வழிகள். இருட்டைப் போக்குவதற்குப் பல்லக்கிற்கு இருபுறமும் இரண்டு கைப்பந்தங்கள் பிடிக்கப்பட்டு வந்தன. பல்லக்கிற்கு நடுமத்தியில் இருக்கும் திறப்பில் என்னை எல்லோரும் பார்க்கும்படி உட்கார்ந்தேன். என்ன பயன்? அந்த வேளையில் என்னையும், இந்த ஏழை ஊர்வலத்தையும் பார்ப்பவர்களே இல்லை. பல்லக்குத் தூக்கிகளும் ஓட்டத்திலேயே

சென்றார்கள். கால்மணி நேரத்திற்குள் கல்யாண வீடு வந்து சேர்ந்துவிட்டேன். வீட்டிற்குள் நுழைந்ததும் அங்கே சுற்றத்தார் எல்லோரும் கூடத்தில் கூடியிருந்த னர். மணையில் நான் உட்கார்ந்ததும் கல்யாணப் பெண்ணும் வந்து நமஸ்கரித்துவிட்டுப் பக்கத்தில் அமர்ந்தாள்.

வரும்பொழுது நேராகவும் உட்கார்ந்த பிறகு கடைக் கண்ணாலும் கவனித்தேன். நான் அதுவரையில் அடைந் திருந்த ஏமாற்றம் மாறிவிட்டது. என் மனத்திற்குப் பிடித்த பெண் என்கிற உணர்ச்சியில் கல்யாண வைபவக் குறைகள் மறைந்துவிட்டன. பக்கத்திலிருந்த மற்ற இரண்டு மணை களையும் கவனித்தேன். என் மனைவிதான் மணப்பெண்கள் மூவரில் வயதில் பெரியவள். நான்தான் மணமக்கள் மூவரில் வயதில் சிறியவன். இதை எல்லோரும் கவனித்தார்கள். அதைப்பற்றிய வம்புக்கும் குறைவில்லை.

# வைத்தியப் படிப்பு

மிரெஸ்ஸர் திருமலைசாமி நாயுடு கம்பீரமான தோற்றமுள்ளவர். இரு கண்களும் எப்பொழுதும் சிவந்திருக்கும். முகத்தில் அம்மை வடுக்கள். கட்டு வாய்ந்த தேகம். அவருடைய தொந்தியும் கம்பீரமானதுதான். ஜரிகைத் தலைப்பாகை. நன்றாகச் சலவை செய்துள்ள மல்வேஷ்டி. மூலைக்கச்சம். நீண்ட பட்டுக் கோட்டு. தங்கக் கடிகாரச் சங்கிலி. ஸ்ரீரங்கம் முனிசிபல் ஆஸ்பத்திரியில் அவர் வேலை நடத்தும் கெடுபிடியைப் பார்த்தால் வரம்பற்ற அதிகார தோரணை நன்கு விளங்கும்.

என் இளம் பிராயத்தில் வயிற்றுவலி நோயினால் வெகு நாட்கள் அவதிப்பட்டதுண்டு. டாக்டர் திருமலைசாமி நாயுடு அரசு புரியும் தர்ம ஆஸ்பத்திரியில் வைத்தியத்திற்குப் போய் மணிக் கணக்காக மருந்து கிடைக்கத் தவம் கிடந்தேன். திருமலைசாமி நாயுடுவின் கருணை கடாக்ஷம் என் மீது பாய்வதற்கே இரண்டுமணி நேரம் ஆகிவிடும். அதிகாரத்திலிருக்கும் பெரிய மனிதர்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் வீட்டிலேயே போய்க் கண்டு பீஸ் கொடுத்துவிட்டுத் தர்ம ஆஸ்பத்திரி ரிஜிஸ்டரில் பெயர் தாக்கல் செய்து வைத்தியம் செய்துகொள்வார்கள். இவர்களையெல்லாம் கண்டு களித்துப் பேசிய பிறகுதான் சற்றுக் கடுகடுத்த முகத்தோடு என்னைப் பார்த்து, ஒரே வார்த்தையில் என் நோயின் கொடுமையைத் தெரிந்துகொண்டு ஒரு சீட்டில் 15, 18 நெம்பர் மருந்தென்பதாக எழுதி, விட்டு எறிவார். கீழே விழுந்த சீட்டைப் பொறுக்கிக்கொண்டு மருந்து சேர்க்கும் இடமிருக்கும் ஜன்னலண்டை போனால், கம்பவுண்டர் கண் பார்வைக்கு வெகுநேரம் சீசாவையும் காகிதத்தையும் வைத்துக்கொண்டு நிற்கவேண்டும்.

கம்பவுண்டர் வேணுகோபால் நாயுடுவும் எஜமானரையே பின்பற்றும் மனோபாவமுள்ளவர். முடிவில் காலை ஏழு மணிக்கு ஆஸ்பத்திரி சென்றால் பத்து மணிக்கு முன்பாக வீடு திரும்ப முடியாது. பள்ளிக்கூடம் போக முடியாது. இப்படிச் சில மாதங்கள் நடந்தேன். வியாதி சற்றும் குறையவில்லை.

என் தகப்பனாரிடம் முறையிட்டேன். மாசச் சம்பளம் வாங்கிய மறுநாள் அவர் என்னைக் கூட்டிக்கொண்டு திருமலைசாமி நாயுடு வீட்டிற்கு அதிகாலையில் சென்றார். நாயுடுகாரு புன் சிரிப்புடன் எங்களை வரவேற்றார். என் தகப்பனார் ஐந்து ரூபாய்களை அவருடைய மேஜைமேல் வைத்தார். உடனே நாயுடு என் வியாதியைப்பற்றி அளவுகடந்த பரிவுடன் கேட்டுவிட்டு, “பயப்படவேண்டாம். நல்ல விலையுயர்ந்த மருந்தாகக் கொடுத்து வெகு சீக்கிரம் குணப்படுத்தி விடுகிறேன்” என்று வாக்களித்து ஐந்து நிமிஷத்தில் எங்களை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

அன்று முதல் ஆஸ்பத்திரியில் அவர் என்னைக் கண்டவுடன் நோயைப்பற்றிக் கேட்டுச் சீட்டுக் கொடுத்துவிடுவார். ஆனால் கம்பவுண்டர் வேணுகோபால் நாயுடுவுக்கு மட்டும் என்மீது கோபம் தணியவில்லை. கம்பவுண்டரிடத்தில் நேரமானால் டாக்டரிடம் வந்து நிற்பேன். உடனே டாக்டர் கம்பவுண்டரைக் கூப்பிட்டு, “இந்தப் பையனுக்கு மருந்து சீக்கிரம் கொடுத்துவிடு” என்று உத்தரவு போட்டதும் சீக்கிரம் கிடைத்துவிடும். “எவ்வளவு உயர்ந்த விலையுள்ள மருந்தை யெல்லாம் அடித்துக்கொண்டு போகிறாய்!” என்று வேணுகோபால் நாயுடுவும் முணுமுணுத்துச் சொல்வதுண்டு. ஆறுமாத காலம் வைத்தியம் நடந்தது. ஆனால் ஐந்து ரூபாய் என் தகப்பனார் கையை விட்டுப் போனது தவிர வேறு லாபம் எதுவும் இல்லை. வியாதி அப்படியேதான் இருந்தது.

அந்த அநுபவத்தில் என் மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியே பிற்பாடு என்னை டாக்டர் தொழிலில் புகுத்தக் காரண

மாயிற்று. 'இவ்வளவு அதிகாரமும், பல விதமான வருவாயு முள்ள தொழிலில் நாம் ஈடுபட்டால்!' அன்று ஊன்றிய விதை என்னை ஸௌந்தரராஜனிலிருந்து பிறகு டாக்டர் ராஜனாக மாற்றியது. மருத்துவத் தொழில் எங்கள் பரம்பரையில் இல்லை. ஆயுர்வேதம் படித்து அறிந்துகொள்ளக் கூடிய ஸம்ஸ்கிருத பாஷை அநுபவமும் எனக்கு இல்லை. தமிழ் வைத்தியர்கள் தங்களுக்குத் தெரிந்த முறைகளை வெளியிடக் கூடாதென்ற கொள்கையுடையவர்கள். வீட்டிலோ குருட்டு வைதிகம் கெடு பிடியாகக் கையாளப்பட்டு வந்தது. தொட்டால் தீட்டு, நெருங்கினால் தீட்டு, பார்த்தால் தீட்டு. வேத சாஸ்திரப் பயிற்சி, எண்ணற்ற சடங்குகளின் கருத்து - ஒன்றும் அறியாத வர்களாக நாங்கள் வளர்ந்தோம். குடித்தன வாழ்க்கைக்கு யாதொரு தொடர்பும் இல்லாத ஒரு படிப்பு. இந்த நிலையில் நான் வைத்தியனாகக் கூடிய காரணம் ஒன்றுமே இல்லை. டிரெஸ்ஸர் திருமலைசாமி நாயுடுவின் வாழ்க்கைச் சரித்திரமே என் உள்ளத்தில் குடிகொண்டது.

எப். ஏ. பரீக்ஷைக்கு ஒரு முறை சென்று தோற்றேன். அப்போது எல்லாப் பாடங்களிலும் ஒரே தடவையில் தேர்ச்சிபெற வேண்டும். ஏதாகிலும் ஒன்றில் மார்க்குச் சற்றுக் குறைவாக இருந்தாலும் கீழே போகவேண்டியதுதான். மறு முறை ஒரு வருஷம் படிக்கும்படி என் தகப்பனார் உத்தரவு போட்டு விட்டார். எனக்கோ மறு முறை யுனிவர்ஸிடியாரோடு யுத்தம் புரிவதில் மனமில்லை. எனக்கு அப்பொழுது வயசு பத்தொன்பது. வைத்தியப் படிப்புப் படிக்கக் கவலை. அதற்கு யார் உதவி புரிவார்கள்? என் தகப்பனாரைக் கேட்டேன்.

"இது நம் போன்ற பிராமணர்கள் செய்யக்கூடிய தொழில் அல்ல. பிணத்தை அறுக்க வேண்டும். ஜாதி வேற்றுமை இல்லாமல் எல்லோரையும் தொடவேண்டும். நமக்குரிய ஆசாரங்களை எல்லாம் கைவிட்டுவிட வேண்டும். எவ்வளவோ தொழில்கள் இருக்கின்றன. அவற்றை யெல்லாம் விட்டு இதில்தானா உன் மனம் செல்லவேண்டும்? நீ

பி. ஏ. பாஸ் செய்துவிட்டால் குமாஸ்தா உத்தியோகத்திலிருந்து டிபுடி கலெக்டர் வரையில் மேலேறிப் போகலாம். மேலும் இதற்கான பணச் செலவுக்கு நான் எங்கே போவது?" என்று சொல்லிவிட்டார். படிப்பில் கவனம் செல்லாமல் இதே கவலையுடன் இருக்கும்பொழுது என் நண்பர் ஒருவர் - சென்னையில் மெடிகல் காலேஜில் சர்க்காரிடம் உபகாரச் சம்பளம் பெற்று ஒரு வருஷமாகப் படித்து வந்திருப்பவருடைய உபதேசத்தின் பேரில் நானும் சர்க்காருடைய உதவியின்பேரில் படிக்கலாமென்று முடிவு செய்தேன். உபகாரச் சம்பளம் பெறுவதற்காகப் போட்டிப் பரீக்ஷைக்கு ஐந்து ரூபாய் பிரவேசக் கட்டணம் செலுத்த வேண்டும். எப். ஏ. வகுப்பிற்குப் படிக்கக் காலேஜ் சம்பளம் செலுத்த வேண்டிய ஐந்து ரூபாய் என் கையில் என் தகப்பனார் கொடுத்திருந்தார்.

அதைக் காலேஜுக்குச் செலுத்தாமல் உபகாரச் சம்பளம் பெறுவதற்காகப் போட்டிப் பரீக்ஷைக்குக் கட்டிவிட்டேன். காலேஜுக்கு ஒரு மாதம் தவணை கேட்டுக்கொண்டேன். போட்டிப் பரீக்ஷை எழுதிவிட்டு முடிவுக்கு இலவு காத்த கிளி போலக் காத்துக்கொண்டிருந்தேன். போட்டியில் ஜயமடையாவிட்டால், தகப்பனாருக்கும், நான் படிக்கும் காலேஜ் அதிகாரிக்கும் என்ன பதில் சொல்வது? இதைப் பற்றிய சிந்தனையே மனத்தில் குடிகொண்டது. வைத்தியப் படிப்பு நான்கு வருஷம். சென்னையில் வைத்தியக் கல்லூரியில் படிக்க வேண்டும். படிப்பு முடிந்த பிறகு பர்மா கவர்மெண்டாரிடம் ஐந்து வருஷம் அவர்கள் கொடுக்கும் சம்பளத்திற்கு உழைக்க வேண்டுமென்பது ஒப்பந்தம். அதற்காகத்தான் உபகாரச் சம்பளம். பர்மாவுக்குப் போவதாக இருந்தால் முறையே வருஷமொன்றுக்கு 9, 12, 15, 18 ரூபாய் வீதம் மாதமாதம் நான்கு வருஷங்கள் கிடைக்கும். படிக்கும் புத்தகங்களும், வேலை பழக வேண்டிய ஆயுதங்களும் இனாமாகக் கிடைக்கும். பிறர் உதவியில்லாமல் படிக்க வேண்டியதற்காக அதிக உபகாரச் சம்பளம் பெறக் கூடிய பர்மா கவர்மெண்ட் போட்டிப்

பரீக்ஷைக்குத்தான் பணம் கட்டினேன். முதல் ஆறு பெயர் களுக்குத்தான் இந்தப்படி கிடைக்கும். அந்த அறுவரில் நானும் ஒருவனாக வந்துவிட்டேன். என் மகிழ்ச்சிக்கு அள வில்லை. டாக்டராகிவிட்டதாகவே என் உணர்ச்சி.

சென்னையில் வைத்தியக் கல்லூரியில் சேருவதற்காக என் சக்திக்குத் தகுந்தவாறு ஒரு புதிய கோட், குல்லா இவைகளைத் தயாரித்துக்கொண்டு கோடை விடுமுறைக்குப் பிறகு காலேஜ் திறக்கும் தினத்தன்று காலை பத்து மணிக்குக் கல்லூரி வெளி வாயிலைக் கடந்தேன். அழகான தோட்டம், புஷ்பச் செடிகள், நன்கு ஒதுக்கப்பட்ட சாலை, சிறிது தூரத்திற்கப் பால் பெரிய கட்டிடங்கள், அடர்ந்த மரங்கள் இவைகள் தென்பட்டன. உத்ஸாகத்தோடு இவைகளைப் பார்த்துக் கொண்டு சென்றேன்.

சுமார் நூறு அடி தூரம் உள்ளே சென்றதும் ஆறு பெயர்கள் - ஆங்கிலோ இந்தியச் சிறுவர்கள், நல்ல தடியர் கள் - மிகுந்த சிநேக பாவத்துடன், "நீ புதிதாக வருகிறவனா? வா" என்று பரிவுடன் சூழ்ந்துகொண்டார்கள். ஒரு நிமிஷத் திற்கெல்லாம் ஒருவன் என் புதிய குல்லாயைத் தட்டி எறிந் தான். மற்றொருவன் அதைக் காலால் துவைத்தான். இன்னும் ஒருவன் என் புதிய கோட்டைப் பற்றி இழுத்துக் கிழித் தான். ஒருவன் கழுத்தைப் பற்றி நெட்டித் தள்ளினான். முதுகில் ஓர் அடி விழுந்தது. இன்னது செய்வதென்று புரிய வில்லை. 'ஏன் என்னை இந்தப் பாடு படுத்துகிறார்கள்? நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே?' என்று திகைத்து முதுகில் விழுந்த அடியை வாங்கிக்கொண்டு அலங்கோலமாகக் காலேஜ் கட்டிடத்தை நாடி ஓடினேன். அங்கு நின்ற இன்னும் சில தடியர்கள் என்னைக் கண்டு கைதட்டிச் சிரித்தார்கள். இந்தக் கோலாகலமான வரவேற்புடன் பள்ளியில் நுழைந் தேன்.

யாரிடம் சென்று முறையிடுவது என்று புரியாமல், தலைமை அதிகாரியின் அறையை நோக்கி ஓடினேன். அங்கே

காலேஜ் ரைட்டர்—தலைமை அதிகாரியின் முக்கியக் குமாஸ்தா—உட்கார்ந்திருந்தார். என் அவதியைத் தெரிவித்தேன். அவர் புன்னகை புரிந்த வண்ணமே, "ஏன் அப்பா, இன்றைக்கு வந்தாய்? பள்ளிக்கூடம் திறக்கிற தினத்தன்று இந்தப் பறங்கிப் பையன்கள் இப்படித்தான் செய்வார்கள். அதற்காக ஒன்றும் செய்யமுடியாது" என்று சொல்லி விட்டு என் பெயரைப் பதிவு செய்துகொண்டு என்னை வகுப்பிற்கு அனுப்பிவிட்டார். இதற்குப் பெயர் ராக்கிங் (Ragging) என்று ஆங்கிலத்தில் சொல்வர்: சீமையில் கல்லூரியில் நடக்கும் ஒரு வைபவம். இதைத் தெரிந்து கொள்வதற்காக ஒரு குல்லாயும் கோட்டும் பறிகொடுக்க நேரிட்டது. இந்த மேல்நாட்டு நாகரிகச் சின்னத்தை இந்தியாவிலேயே அநுபவித்தேன்.

மறு நாள் நான் கலேஜில் நுழையும்பொழுது இந்த மரியாதைகளைக் காணவில்லை. என்னைத் தொந்தரவு செய்தவர்களைப் பழைய வகுப்பில் கண்டேன். அவர்களை நான் நேசிப்பதா, வெறுப்பதா ஒன்றும் விளங்கவில்லை. நான்கு வருஷப் படிப்பையும் நன்கு கற்றேன். முதல் வகுப்பில் தேர்ச்சிபெற்றேன். வைத்தியர் என்ற யோக்கியதையைப் பெற்றேன்.

# அடிமை வாழ்வு

என் அடிமை வாழ்வு தொடங்கியது. உபகாரச் சம்பளம்பெற்றதன் பலனைப் பரீக்ஷை தேறி ஒருமாத காலத்திற்குள் ரங்கூன் சென்று வேலையில் அமர்ந்துவிட உத்தரவு கிடைத்துவிட்டது. "ஆயிரம் மைல் கப்பற் பிரயாணமா! பிராம்மணன் கப்பலேறுவதா? இவ்வளவு கஷ்டத்திற்கு ஊதியந்தான் என்ன? மாதம் இருபத்தைந்து ரூபாய்! அந்த ரூபாய் நம்முடைய ஊரிலேயே கிடைக்காதா?" இவ்விதமான கேள்விகள் பெற்றோர், சுற்றத்தார் இவர்களிடமிருந்து கிளம்பின. போகாமல் இருந்து விடலாம். ஆனால் ஆயிரம் ரூபாய் உபகாரச் சம்பளமாகப் பெற்றதைத் திருப்பிக் கொடுக்கவேண்டுமே? அடிமைத்தனம் நீங்க, பர்மாவில் ஐந்து வருஷம் உழைத்துத் தீரவேண்டும். பரீக்ஷையில் தவறிப் போயிருந்தால் எனக்குச் சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்ட வைத்தியப் பதவி கிடைக்காது. நான் ஆயிரம் ரூபாயைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய அவசியமும் இராது. விதிவசத்தால் பரீக்ஷையில் முதலில் தேர்ச்சிபெற்று விட்டேனே. வேறு வழியில்லை. ஐம்பது ரூபாய் முன்கடனாகச் சென்னைச் சர்க்காரிடமிருந்து வழிச் செலவுக்குப் பெற்றுக் கொண்டு நானும் என் மனைவியும் ஒரு மகளுடன் ரங்கூன் புறப்பட்டு, அங்கே வைத்தியத் தொழிலில் ஈடுபட்டேன்.

எனது தொழிலும் எனது வாழ்வும் ஒன்றோடொன்று ஈடுபட்டு விட்டதால் ஒன்றை மற்றொன்றிலிருந்து பிரிக்க முடியாது. வைத்தியத் தொழிலில் நான் ஒரு நிபுணன் என்பதாக என் மனத்தில் எண்ணம். பரீக்ஷையில் முதலில் தேர்ச்சிபெற்று விட்டேனல்லவா? தவிர வைத்திய சாஸ்திரத்தில் வெவ்வேறு பாகங்களிலும் நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்றிருந்ததால் என் அறிவைப்பற்றி நானே பெருமை கொண்டேன். கப்பலை விட்டு இறங்கி மறுநாள் பர்மா கவர்மென்டார் வைத்திய இலாகா ஆபீஸுக்குச் சுமார் பன்னிரண்டு

மணிக்குச் சென்றேன். கடல் கடந்து வந்திருக்கும் என்னைக் கவனிப்பார் யாருமில்லை.

மூன்றுமணி நேரத்திற்குப் பிறகு அந்த ஆபீஸ் மானேஜர் பேட்டி கொடுத்தார். கோபத்துடன் உள்ளே நுழைந்தேன். "என்னை மூன்றுமணி நேரமாகக் காத்திருக்கும்படி செய்வது என்ன முறை?" என்று கேட்டேன். எனது கேள்வி அவருக்கு வியப்பை உண்டாக்கியது. என்னை ஏற இறங்கப் பார்த்தார். 'சிறுவயசு, உலக அனுபவமில்லை, அதனால்தான் நீ என்னிடம் முறையிடும் துணிச்சல்' என்பதாக நான் குற்றம் செய்துவிட்டதுபோல் முகத்தைச் சுளித்துக் கொண்டார். எனக்குச் சென்னைக் கவர்மெண்டாரால் கொடுக்கப் பட்டிருக்கும் உத்தரவையும், என் படிப்பின் அத்தாட்சிகளையும் காண்பித்தேன். எலலாவற்றையும் பார்த்துவிட்டு, "இவையெல்லாம் சரி. இவைகளுக்கும் நீ செய்ய வேண்டிய வேலைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. இந்த நற்சாட்சிப் பத்திரங்களின் மகிமை நீ படித்த காலேஜோடு முடிவாகிவிட்டது. அதற்கும் நீ இனிச் செய்யவேண்டிய வேலைக்கும் சம்பந்தமே இல்லை" என்றார்.

என் மனம் திகைத்துவிட்டது. 'வைத்தியத் தொழில் கற்றேன். அதையும் நன்கு கற்றேன். அதன் காரணமாகச் சர்க்காரால் ஏற்படுத்தப்பட்ட வைத்திய இலாக்காவில் வேலையில் அமர்ந்தேன். இந்த இலாக்காத் தலைவருக்கு அடுத்த ஸ்தானத்தில் அமர்ந்திருக்கும் மானேஜர் தேவதை நான் படித்த படிப்புக்கும் என் வேலைக்கும் சம்பந்தமில்லை என்று சித்தாந்தம் செய்கிறாரே. இதற்கு அழுவதா, நகைப்பதா? வேலையை விடமுடியாமல் அடிமை ஒப்பந்தத்தில் புகுந்துவிட்டேனே?' என என் மனத்துள் உண்டான துயரத்தை வெளியிட முடியாமல் கண்ணீர் விட்டேன்.

"உனக்கு இப்பொழுது சாசுவதமான வேலை இல்லை. இந்த ஊர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஓர் உதவி டாக்டராக உத்தரவு கொடுத்திருக்கிறேன். நீ நாளைத்தினம் வேலையில் சேர்ந்துவிடவேண்டும்" என்று சொல்லி வெளியே அனுப்பி

விட்டார். சில்லறைத் தேவதைகளின் மூலமாக இந்த உத்தர வுக் காகிதத்தைப் பெறுவதற்குள் மாலை ஐந்துமணி ஆகிவிட் டது. புதிய ஊர், புதிய வேலை, புண் பட்ட மனம் இவைக ளுடன் வீடு திரும்பினேன்.

மறு நாள் காலை முதல் என் டாக்டர் தொழில் ஆரம்ப மாயிற்று. மாதம் ஒன்றுக்கு இருபத்தைந்து ரூபாய் சம்பளம். பர்மாவில் வேலை பார்ப்பதற்காக அதிகப்படி பன்னிரண்டரை ரூபாய். இதில் முன் கடனாகச் சென்னையில் வாங்கினதற்காகத் தவணையாக மாதம் பிடித்தம் பத்து ரூபாய். முடிவில் கையில் மாதக் கடைசியில கிடைக்கக்கூடிய ஊதியம் இருபத்தேமுரை ரூபாய். ரங்கூன் நகரம் முழுவதும் என் சம்பளத்திற்குத் தகுந்த வீடு தேடினேன். கிடைக்கவில்லை. ஒட்டைத் துத்தநாகத் தகடு களால் அமைந்த ஒரு சிறிய வீடு மாதம் பதினெட்டு ரூபாய்க்கு ஆஸ்பத்திரிக்கு ஒரு மைல் தூரத்திற்கப்பால் கிடைத்தது. தின சரி நான்கு முறையும், இரவு ஆஸ்பத்திரியில் படுக்கை முறை வரும் தினத்தில் ஆறு முறையும் நடக்கவேண்டியிருந்தது. மிகுதியான ஒன்பதே முக்கால் ரூபாயில் ஜீவனம் நடத்தவேண் டிய என்னால் நடந்துபோவதைத் தவிர வேறு சாதனங்களைப் பெற முடியவில்லை.

'புதிதாகப் படித்து வந்த படிப்புக்கு ஏற்றவாறு நோயாளி களைப் பார்க்கலாம். சிகிச்சை முறைகளைக் கொண்டு அநுப வம் பெறலாம். நோயாளிகளுக்கு என் திறமையைக் காட்ட லாம்!' என்பதாக மனக்கோட்டை கட்டிக்கொண்டு ஆஸ்பத் திரியில் நுழைந்தேன். 'அங்கே தலைமை வகிக்கும் பெரிய டாக் டரைக் காணலாம். அவரிடம் என் யோக்கியதா பத்திரங் களைக் காட்டிப் பொறுப்புள்ள வேலையாகக் கேட்கலாம்' என் றும் நினைத்திருந்தேன்.

காலை ஏழு மணிக்கு அங்கே சென்றவுடன் பெரிய துரை என் போன்ற உதவி டாக்டர்களைக் காண முடியா தென்று தெரியவந்தது. உதவி டாக்டர்களில் தலைமையாய் இருப்பவர்தாம் எனக்குரிய தெய்வமெனவும் அவரைத்

தான் நான் வழிபடவேண்டும் என்றும் அங்கிருப்பவர்கள் சொன்னார்கள். அவர் பஞ்சாபிலிருந்து வந்திருக்கும் ஓர் இந்தியர். அவருடைய ஆபீஸில் நோய் ரிஜிஸ்டர் தாக்கல் செய்யும் குமாஸ்தா உத்தியோகம் எனக்குக் கொடுத்தார். வைத்தியப் படிப்பில் முதலில் தேறின எனக்குக் குமாஸ்தா உத்தியோகமா? எதற்காக நான்கு வருஷங்கள் படித்தேன்? என் ஏமாற்றத்திற்கு அளவில்லை.

வரும் நோயாளிகளுக்கு அந்த டாக்டர் சொல்வதை ஒரு காகிதத்தில் எழுதி நோயாளியின் பெயர் முதலிய விவரத்தைப் பதிவு செய்ய வேண்டியது என் வேலை. அந்த டாக்டருக்குப் பதினாயிரம் வேலை. ஐந்து நிமிஷங் கூடச் சேர்ந்தாற் போல நாற்காலியில் அமர்ந்து வேலை பார்க்கமுடியாது. நியாயமாக அவருக்கு வைத்தியம் செய்யும் தொழில் கொடுத்திருக்கக் கூடாது. மானேஜர் வேலைதான் அவருடைய வேலை. அவர் இல்லாத சமயத்தில் நான் ஒரு நோயாளியையும் பார்க்கக்கூடாது. அந்த அறையை விட்டு அவர் உத்தரவின்றி வெளியே போக முடியாது. ஆஸ்பத்திரிக்கு வரும் நோயாளிகளும் நான் ஒரு குமாஸ்தா என்றே நினைத்தார்கள். அந்த எண்ணம் வருவது நியாயமே.

சில நாட்கள் கழிந்தன. ஆஸ்பத்திரி வேலைக்காரர்களுக்குள் என்னைப்போலக் குறைந்த சம்பளம் வாங்குபவர்களே இல்லை. எனக்கு அடுத்தபடி குறைந்த சம்பளம் வாங்குபவர்கள் தோட்டிகளே. கம்பவுண்டர்கள், நோயாளிகளுக்கு ஊழியம் புரியும் நோய்க் காப்பாளர்கள் (நர்ஸ்), குமாஸ்தாக்கள் எல்லோருக்கும் என்னைக் காட்டிலும் அதிகச் சம்பளம். வைத்தியத் தொழிலோ அதற்குரிய மதிப்போ ஒன்றையும் காணவில்லை. இப்படி இரண்டு மாதங்கள் கழிந்தன.

நான்கு வயசுள்ள என் மகளுக்குச் சீதபேதி கண்டுவிட்டது. மிகவும் கடுமையாக இருந்தது. மழை அதிகம். வீடெல்லாம் ஒழுகிக் குளம் போலத் தண்ணீர் நிறைந்துவிட்டது. நிற்பதற்குக்கூட இடமில்லை. இதன் நடுவில் சமையல், சாப்பாடு, நோயாளி எல்லாவற்றையும் கவனிக்க

வேண்டும். சற்று நேரமாகி ஆஸ்பத்திரிக்குச் சென்றால் அதிகாரிக்குக் கோபம். என் குறைகளை அவரிடம் சொன்னேன். "நீ எதற்காக இவ்வளவு சொற்பச் சம்பளத்தில் பெண்சாதி பிள்ளைகளோடு வந்து விட்டாய்? உனக்கு ஓரிடத்தில் நிலையாக இருந்து வைத்தியம் செய்யும் தொழில் ஏற்படுவதற்கு ஐந்து ஆறு வருஷங்களாகும். உன் பிழைக்கு நான் என்ன செய்யமுடியும்? உன் கஷ்டம் எப்படி இருந்தாலும் என் ஆபீஸ் வேலைக்கு நீ தவறாமல் வந்து விடவேண்டும். நோயாளியையும், உன் பெண்சாதியையும் ஆஸ்பத்திரி வார்டில் வைத்துவிடு" என்று புத்திமதி கூறினார்.

அவர் சொல்லியதில் பிசகொன்றுமில்லை. ஆனால் என் அகம்பாவம் அவர் சொல்லியதற்கு இடங் கொடுக்கவில்லை. நான் ஒரு டாக்டர். என் குழந்தைக்கு வைத்தியம் செய்யச் சக்தி இல்லையா? ஏதோ பரதேசி மாதிரி தர்ம ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் வைப்பதா? என்ற இறுமாப்பு அவ்விதம் செய்ய இடங்கொடுக்கவில்லை.

நானே வைத்தியம் செய்துவந்தேன். ஆஸ்பத்திரிக்கு நேரம் தவறி வந்து அதிகாரியின் கோபத்திற்கு ஆளானேன். சீதபேதி குணமடையவில்லை.

என் பக்கத்து வீட்டிலிருந்த ஒரு முதலியார் நண்பர் என் கஷ்டத்தைப் பார்த்து விட்டு, "ஐயா, உங்கள் குழந்தைக்கு நீங்களே வைத்தியம் பார்த்தால் குணமாகாது. கை தேர்ந்த யூனானி வைத்தியரான ஒரு முஸ்லிம் இருக்கிறார். அவரிடம் போய் நாம் குழந்தையைக் காட்டி வைத்தியம் செய்வது நலமாக இருக்கும்" என்றார். அதற்குச் சம்மதித்து அவரிடம் கொண்டு போய்க் குழந்தையைக் காண்பித்தேன். என் நண்பர் முதலியார் நான் ஒரு டாக்டரென்றும், அந்த ஊர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் வேலை செய்பவரென்றும் தெரிவித்தவுடனே, யூனானி வைத்தியர் தம் தாடியை உருவிப் புன்னகை செய்து கொண்டு தாம் குணப் படுத்தி விடுவதாகச் 'சொல்லி மருந்து கொடுத்தார். அன்று முதல் வியாதி குணமடைய ஆரம்பித்து

விட்டது. என் மமதையும் மனத்தை விட்டு விலக ஆரம்பித்தது.

நான் தம்மிடம் சரிவர வேலை பார்க்கவில்லை என்று உதவித் தலைமை அதிகாரி எனக்கு வேறு வேலை கொடுத்துவிட்டார். அந்த ஆஸ்பத்திரியில் 'பம்பூ வார்டு' என்று ஒரு கட்டிடம். அது யமன் உலகுக்குப் போவதற்குப் பூலோக வாசல் என்று சொல்லவேண்டும். இருபது கட்டில்கள் உண்டு. எல்லாம் மரப்பலகைகளால் செய்யப்பட்டவை. கட்டிலின் மத்தியில் வட்டமான ஓரடித் துவாரமுண்டு. நோயாளியின் இடை அதற்கு நேராகப் பொறுத்தப்பட்டிருக்கும். ஆஸ்பத்திரியில் மற்றெல்லா வார்டுகளிலுமுள்ள குணப்படுத்த முடியாத வயிற்றுப் போக்கு நோயாளிகளை இந்தப் 'பம்பூ வார்டு'க்கு அனுப்பி விடுவார்கள். அதற்கு ஏன் அந்தப் பெயர் வந்ததென்று சொல்ல முடியவில்லை. ஒரு சமயம் இறந்தவர்களின் பிணத்தைத் தூக்கிச் செல்லும் பொழுது 'பம்' என்று ஊதும் சங்கின் சத்தத்திற்கு அறிகுறியாக 'பம்பு' என்று பெயர் வந்திருக்கலாமென நான் நினைத்தேன்.

அந்த வார்டின் வராந்தாவில் ஒரு மேஜையும் ஒடிந்த நாற்காலி ஒன்றும் இருக்கும். அதில் இரண்டு பவுண்டு சீசா நிறைய வெள்ளை நிறமுடைய மருந்து இருக்கும். எல்லாப் பேதி நோயாளிக்கும் இந்த ஒரே சீசா மருந்துதான். கட்டிலின் துவாரத்தின் வழியாக நோயாளியின் மலம் கழிந்துகொண்டிருக்கும். மூன்று மணிக்கு ஒரு தரம் தோட்டி 'ராமையா லோஷன் போட்டுக் கழுவிச் சாக்கடையில் தள்ளிவிடுவான். அந்த வார்டுக்குத்தான் என்னை உதவி டாக்டராக மாற்றி விட்டார்கள்.

அந்த வார்டில் நோயாளிகளைப் பேணிப் பணிசெய்ய, நோய்க் காப்பாளராக ஓர் ஆங்கிலோ இந்தியச் சிறுமி இருந்தாள், ஆனால் அவள் நிறத்தில் என்னைக் காட்டிலும் கறுப்பு. அவள் நிறத்தின் காரணமாகவே அவளுக்கு இந்த வார்டில் வேலை கொடுக்கப் பட்டதென்பது என் எண்ணம்.

முதல் நாள் அந்த வார்டுப் பக்கத்தில் செல்லும்பொழுதே அங்கு உண்டான துர் நாற்றம் சகிக்க முடியவில்லை. உள்ளே நுழைந்தால் மல வெள்ளத்தில் நீந்தவேண்டியதைத் தவிர வேறு வழியில்லை. இருபது கட்டில்களிலும் ஐவருக்குக் குறையாமல் இறந்துகொண்டோ இறக்கும் தறுவாயிலோ இருப்பார்கள். அவர்களுக்கெல்லாம் தெய்வம் தோட்டி 'ராமையா'. மூன்று மணிக்கு ஒரு தரமாகிலும் அவன் குறுக்கும் நெடுக்குமாகப் போய் மலவெள்ளத்தைக் கழுவிக்கொண் டிருப்பான். நோயாளிகளுக்குப் படுக்கை தலையணை ஒன்றும் இல்லை. நர்ஸ் அம்மாளும் உள்ளே போகாமல் ராமையா மூலம் வெள்ளை மருந்தை உயிரிருந்து விழுங்கச் சக்தியிருக்கும் நோயாளியின் வாயில் ஊற்றிவிடச் சொல்லுவாள்.

எனக்கு வார்டு வேலை அந்த அம்மணிதான் சொல்லிக் கொடுத்தாள். இறந்த பிணங்களைத் தூக்கிப் போகப் 'பிரேதச் சீட்டுக்' கொடுப்பதுதான் என் ஒரே வேலை. காலையில் வந்தவுடன் இறந்தவர்களின் தொகையைத் தெரிந்துகொண்டு பிரேதச் சீட்டு எழுதிக் கையெழுத்துப் போடவேண்டியது. இந்த வேலைக்கு எனக்கு உதவி அதிகாரி தோட்டி ராமையா. நர்ஸ் அம்மாள் எவ்விதம் எழுதவேண்டுமென்று பாடம் கற்பிப்பாள். அடுத்தபடி இறக்க வந்திருக்கும் மற்றவர்கள் ஜாப்தாவைப் பதிவு செய்து எல்லோருக்கும் உள்ள ஒரே மருந்தைக் கொடுத்ததாக எழுதவேண்டியது. உத்தரவு இருந்தாலும் இல்லாவிட்டாலும் ராமையா தன் பொறுப்பிலேயே அந்த வேலையைச் செய்துவிடுவான். எல்லோருக்கும் ஒரே உணவுதான். அது சவ்வரிசிக் கஞ்சி. அதற்குப் பாலும் சர்க்கரையும் உண்டு. அவை இரண்டும் அநேகமாக ராமையா வயிற்றிலே போய்விடும். சுமார் கால் மணி நேரத்தில் வார்டு வேலை முடிந்து விடும். அதற்குமேல் நாற்றம் பொறுக்கமுடியாது. ராமையாவின் மூக்கை இறைவன் வாசனை நுகரும் உணர்ச்சியின்றிச் சிருஷ்டித்திருக்க வேண்டுமென்பது என் எண்ணம்.

இந்த வார்டுக்கு ஒரு பெரிய டாக்டர் உண்டு. அவர்

ஐ. எம். எஸ். கோஷ்டியைச் சேர்ந்தவர். கொழுத்த சம்பளம் வாங்கும் ஓர் ஆங்கிலேயர். அவர் தினசரி பத்து மணிக்கு அந்த வார்டுக்கு ஐம்பது அடி தூரத்திலுள்ள மரத்தடியில் வந்து நிற்பார். நானும் நர்ஸ் அம்மாளும் அவரைக் கண்டதும் அவரிடம் மருந்துப் புஸ்தகம், மரண ரிஜிஸ்டர் இவற்றைத் தூக்கிக்கொண்டு ஓடுவோம். அந்தப் பிரபு என்னோடு பேசவே மாட்டார். நர்ஸம்மாளுடன் பேசிவிட்டு இரண்டு கையெழுத்துப் போட்டுவிட்டு ஒரே நிமிஷத்தில் போய்விடுவார். அவர் போகும் வரையில் காத்திருந்து அவர் மறைந்தவுடன் நானும் ஆஸ்பத்திரியை விட்டு மறைந்து, வீடு திரும்பிவிடுவேன்.

ஆனல் என் மனத்தில் குடிகொண்ட துயரத்திற்கு அளவில்லை. படித்த வைத்தியம் மறக்கத் தொடங்கிவிட்டது. வைத்தியம் செய்ய நோயாளியைக் காணவில்லை. மரணக் கணக்கு எடுப்பதில் தோட்டி ராமையாவுக்கு உதவி செய்வதை விட நான் கற்றுக்கொண்டது ஒன்றுமில்லை. 'இதற்காகத் தானு இரவு பகலாய் விழுந்து விழுந்து படித்து, சென்னை ஆஸ்பத்திரிகளில் பழகி, பரீக்ஷையில் முதலில் தேறி, கடல் கடந்து கால்வயிற்றுக் கஞ்சிக்குக்கூட வழியில்லாமல் தினசரி உடை போட்டுககொண்டு, ஆறுமைலுக்கு மேலாக ரங்கூன் ரோட்டில் நடக்கும் வைத்தியனுகி விட்டேன்?' என்ற ஏக்கம் மனத்தைப் பிளந்துகொண் டிருந்தது.

# முட்டாள் யார்?

என் அநுபவத்திலிருந்து சில முடிவுகள் ஏற்பட்டன. நான் படித்தது வைத்திய முறையானபோதிலுங் கூட, வைத்தியத் தொழிலில் ஈடுபட்டேன் என்பதாகச் சொல்ல முடியாது. என் படிப்பும், தேர்ச்சியும் உபயோகப்படுத்தக் கூடாத முறையில், கவர்ன்மென்டாரிடம் உபகாரச் சம்பளம் பெற்ற காரணத்தினுல் இட்ட வேலையை என் மேலதிகாரியின் உள்ளம் குளிர அவருடைய தயவை நாடிப் பணி செய்யும் தொண்டனுக என்னை மாற்றிவிட்டன. மேலதிகாரி முட்டாளாக இருந்த போதிலும், அவருடைய முட்டாள்தனத்திற்குத் தாளம் போடுவதைத் தவிர வேறு தொழில் முறை பழகச் சந்தர்ப்பம் இல்லாமலே இருந்தது. மேலும் இந்த அடிமைத் தொழிலுக்குப் போதுமான ஊதியமாகிலும் கிடைத்ததா என்ருலோ அதுவும் இல்லை. மாத மாதம் வயிறு வளர்ப்பதற்குக் கிடைக்கும் சம்பளத்திற்கு மேலாக ஐம்பது ரூபாய் கடன் வாங்கிப் பிழைக்கவேண்டியிருந்தது. இப்படி மூன்று மாதங்கள் கடந்தன. மரணவாயிலாக இருந்த 'பம்பூ வார்'டில் பிணச்சீட்டுக் கொடுக்கும் வேலையும் நடந்துவந்தது. நான் நினைத்த பொழுது வருவதும் போவதுமாகக் காலங் கடத்தியதைத் தலைமை உதவி டாக்டர் கவனித்துவந்தார். ஒரு நாள் என்னை வருவித்து என் வேலையின் விவரத்தைக் கேட்டார்.

"வைத்தியத் தொழில் செய்யவேண்டிய கவலை எனக்கு இல்லை. தோட்டி ராமையாவுக்கு உதவியாகப் பிரேதச் சீட்டுக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். தினம் ஐந்து நிமிஷந்தான் என் வேலை. பெரிய துரை வரும்பொழுது சலாம் போடவேண்டியது இரண்டாவது வேலை. இது தவிர வேறு ஒன்றுமில்லை" என்றேன்.

இந்த உதவித் தலைமை அதிகாரிக்கு நான் என் வேலை

விவரத்தைச் சொல்லிய பிறகு தான் பம்பு வார்டு வேலை இன்ன தென்பதே விளங்கியது. சுமார் பத்து வருஷமாக ஆஸ்பத்திரியில் சின்ன துரை வேலை செய்து வந்தவருக்கு அன்றுதான் இந்த வார்டு வேலை என்னவென்று ஒரு விதமாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. "இது வரையில் உனக்கு முன்பு வேலை செய்த ஒருவரும் இவ்விதம் புகார் செய்ததில்லை. நாளைத் தினம் முதல் பம்பு வார்டின் மேல் மெத்தையிலுள்ள இன்னும் இருபது படுக்கைகளும் உன்னைச் சேர்ந்தவை. அவற்றையும் நீ சேர்த்துப் பார்த்துவந்தால் உனக்கு வேலை சரியாக இருக்கும்" என்று எனக்கு உத்தரவு போட்டு விட்டார். இனி யாகிலும் வைத்தியம் செய்யச் சந்தர்ப்பம் ஏற்படுமென்று எண்ணி மகிழ்ந்தேன்.

தினந்தோறும் காலையில் பம்பு வார்டு மரணச் சீட்டுகளை எழுதி விட்டு மேல் மாடிக்குச் செல்வேன். நோயாளிகளை ஒவ்வொருவராகப் பரிசீலனை செய்து, வியாதியின் குணங்களையும், என் அபிப்பிராயங்களையும் ஒரு சீட்டில் எழுதி வைத்துக் கொண்டு மேலதிகாரி வரும் வரையில் காத்திருப்பேன். அவர் வந்ததும் நான் எழுதி வைத்திருக்கும் குறிப்புகளை ஒரு விநாடியில் பார்த்துவிட்டு, "இந்த மருந்தைக் கொடு" என்று என்னை எழுதச் சொல்லி விட்டு, கால்மணி நேரத்திற்குள் இருபது நோயாளிகளையும் பார்வையிட்டுவிட்டுப், போகும்போது நர்ஸ் அம்மாளிடம் சிறிது வார்த்தையாடி வந்தனமளித்துப் போய்விடுவார். நான் வெகுநேரம் கஷ்டப்பட்டு, ஆராய்ச்சி செய்து வெகு சாமர்த்தியமாகக் கண்டுபிடித்ததாக நினைத்து எழுதியிருக்கும் குறிப்புகளை அவர் கவனித்து மருந்து கொடுப்பதாகத் தெரியவில்லை. சில சமயங்களில் என் மனத்தில் தோன்றுகிற நோய்க்கு மாறுபாடான மருந்துகள் கொடுபடுவதையும் பார்த்தேன்.

"நான் எழுதி வைத்த குறிப்புகள் தவறுகவாவது காணப்படும் குறிகளுக்கு மாறுபட்டனவாகவாவது இருக்கின்றனவா? ஏன் அம்மாதிரி எழுதினேன்?" என்ற விவரங்

களைப்பற்றி என்னுடன் அவர் பேசமாட்டார். இந்திய உயர்தர வைத்திய இலாகாவில் 'காப்டன்' என்ற பதவி வாய்ந்த ஆங்கில இளைஞர் என் அதிகாரி. என் நிறத்தின் பேரில் கோபமா? படிப்பின் கேவலத்தினால் உதாசீனமா? நான் ஆங்கிலம் பயின்றிருப்பேனோ என்ற சந்தேகமா? எதனால் என்னை இப்படி நடத்துகிறார் என்பது எனக்கு விளங்கவில்லை. நான் ஒரு நர்ஸாக இருந்திருந்தால் துரையின் கருணைக்குப் பாத்திரமாக இருந்திருக்கலாம். இவ்வாறு நான் குழம்பிக் கொண்டிருந்தபோது எதிர்பாராத ஒரு சம்பவம் நேர்ந்தது.

ஒரு நாள் ஒரு நோயாளியைப் பரிசீலனை செய்யாமலே பார்த்த மாத்திரத்தில் அவனுக்குக் கபவாதக் காய்ச்சல் (Pneumonia) என்று நிர்ணயம் செய்துவிட்டார் துரையவர்கள். முறையாகப் பரீக்ஷை செய்திருந்த எனக்கு அவருடைய முடிவு முற்றும் தவறு என்பது திண்ணமாகத் தெரியும். ஒரு நாளும் பேசாதிருந்த துரை அன்று, "நீ என்ன நோயென்று நினைக்கிறாய்?" என்று கேட்டார். "குளிர் காய்ச்சல்" என்றேன், "நீ ஒரு முட்டாள்" என்று சொல்லி என்னை ஆசீர்வதித்துவிட்டு, "நான் சொல்லும் மருந்தைக் கொடு" என்று சொல்லிப் போய்விட்டார்.

அவர் எனக்கு அளித்த 'முட்டாள்' பட்டத்தைப் பொறுக்க முடியவில்லை. ஆயினும் அவர் சொல்லிய மருந்தைக் கொடுப்பதில்லையென நிச்சயித்து எனக்கு எது குணம் தருமெனத் தோன்றியதோ அந்த மருந்தை நோயாளியின் சீட்டிலும், வார்டுக் குறிப்பிலும் எழுதிவிட்டு அதை நான்கு முறை அன்று கொடுத்தேன். மறுநாள் துரை வரும்பொழுது நோயாளியின் குறிப்புப் படத்தில் குறித்திருந்த மருந்தின் பெயரைப் பார்த்தார்; நோயாளிக்குக் காய்ச்சல் நின்றுவிட்டது. இவை இரண்டையும் கண்ட அவருக்கு என்மீது அடங்காக் கோபம் மூண்டுவிட்டது. "நான் கொடுக்கச் சொன்ன மருந்தைக் கொடுக்காமல் இந்த மருந்தை உன்னை யார் கொடுக்கச் சொன்னார்கள்?" என்று சீறினார். "நான் முட்டாளல்ல

என்பதை ருசுப்படுத்துவதற்காக நான் என்ன காய்ச்சல் என்று நினைத்தேனோ அதற்குத் தகுந்த மருந்தைக் கொடுத்தேன்" என்றேன்.

உத்தியோக முறைப்படி நான் செய்தது தவறு. வைத்திய முறைப்படி நியாயம்; நோயாளிக்கு நலம். இந்தத் தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்ட துரையவர்களுக்கு என்மீது கோபம் பொங்கியெழவே, தம் கையிலிருந்த பிரம்பின் நுனியால், "நீ பெரிய அகம்பாவம் பிடித்தவன். ஒரு சிறிய ஆஸ்பத்திரி ஊழியன் (Hospital assistant)" என்று கொக்கரித்துக்கொண்டு எனது கன்னத்தில் குத்தினார். வெகு நாளாக நொந்துகொண்டிருக்கும் எனக்கு இன்னது செய்வதென்று தெரியவில்லை. கையில் வைத்திருந்த ஒரு கண்ணாடி டம்ளர் கிருமி கொல்லியையும் (lotion), அதில் இருந்த உஷ்ணமானியையும் (thermometer) துரை அவர்கள் பேரில் விட்டெறிந்து, அந்த வார்டைவிட்டு வெளியே ஓடினேன். தலைமை உதவி டாக்டரிடம் சென்று நடந்ததைச் சொல்லிவிட்டு, என் வேலையை ராஜீனாமாச் செய்துவிடுவதாகவும் சொன்னேன். "நீ சர்க்காருக்கு ஐந்நூறு ரூபாய் கொடுக்க வேண்டும். ஒரு மாதம் நோட்டீஸ் கொடுக்கவேண்டும். மேலதிகாரி நீ நடந்துகொண்டதை விசாரிக்க வேண்டும்" என்று பதிலளித்தார். ஆனால் காப்டன் துரை அவர்கள் நடந்த சச்சரவைப்பற்றி ஆஸ்பத்திரிப் பெரிய துரைக்கோ மற்றவர்களுக்கோ ஒன்றும் தெரியப்படுத்தவில்லை நான் மறு நாள் வேலைக்கு ஆஸ்பத்திரியில் நுழைந்தவுடனே என்னை மூன்று மைலுக்கு அப்பாலுள்ள பட்டாள ஆஸ்பத்திரிக்கு மாற்றிவிட்டதாக உத்தரவு கிடைத்துவிட்டது. "சனி ஒழிந்தது!" என்ற மகிழ்ச்சியுடன் பட்டாள ஆஸ்பத்திரி போய்ச் சேர்ந்துவிட்டேன்.

# விடுதலை

இந்தப் பட்டாள ஆஸ்பத்திரியில் வைத்திய முறையே விநோதம். இந்தத் தளத்தில் இந்தியச் சிப்பாய்களின் தொகை ஆயிரம். இருபது பெயர்கள் படுக்கக்கூடிய வார்டு ஒன்று உண்டு. வாரம் இரு முறை பெரிய துரை மேஜர் ஒருவர் வந்து பார்ப்பார். மற்ற வேளைகளில் அதிகாரி நான் தான். ஆனால் நான் அதிகாரியென்று சொல்வது பெயரள வில்தான். காலையில் இரண்டுமணி நேரமும் மாலையில் ஒரு மணி நேரமும் அங்கிருப்பேன். சதாகாலமும் அங்கிருப்பவர் கம்பவுண்டர். 'சோடா பாபு' என்று சிப்பாய்கள் அவரை அழைப்பார்கள். நான் 'படா பாபு'. பட்டாள ஆஸ்பத்திரியில் 'படா பாபு' உள்ளே நுழையும் பொழுதும், வெளியே வரும் பொழுதும், எங்கே கண்டாலும் ஆயுதம் தாங்கிய சிப்பாய் களும், ஆயுதம் தாங்காத சிப்பாய்களும், பட்டாள முறை யில 'ஸெலூட்' (Salute) - கையடித்து ஸலாம் - செய்வார் கள். சில நாட்களுக்கு எனக்கு இது ஒரு பெருமையாகவே தோன்றியது. நாளாக நாளாக இந்தப் பெருமை மங்கி மறைந்துவிட்டது.

தினம் காலையில் ஏழு மணிக்கு ஆஸ்பத்திரியில் 'அவுட் பேஷன்ட்' - ஆஸ்பத்திரியில் தங்க அவசியமில்லாத சில்லறை நோயாளிகள் - பார்க்கப்பட வேண்டியது முறை. முதல் நாள் நான் போகும்பொழுது மணி ஏழரை. அரைமணி நேரம் கடந்து செல்லுகிறதே என்ற கவலையுடன் அவசர அவசர மாகச் சென்று என் ஆசனத்தில் அமர்ந்து, நோயாளிகளின் பெயர் பதிவு செய்யும் புத்தகத்தைத் திறந்தேன். அதைப் பார்த்ததும் என் ஆச்சரியத்திற்கு அளவில்லை. அன்றைத் தேதியில் ஏற்கனவே இருபது பெயர்கள் வைத்தியம் பார்த் துக் கொண்டதாகக் கண்டிருந்தது. உடனே கம்பவுண்டரைக்

(மருந்து கலப்பவரை) கூப்பிட்டு, "இதென்ன கூத்து? இருபது பெயருக்கு வைத்தியம் நடந்திருக்கிறதே. யார் பார்த்தார்கள்? என்ன மருந்து கொடுக்கப்பட்டது? யார் உத்தரவின் பேரில் மருந்து கொடுக்கப்பட்டது?" என்று கேட்டேன்.

"நான்தான் எல்லாம் செய்தேன்" என்றார் அவர்.

"உமக்கு வைத்தியம் செய்ய யார் உத்தரவு கொடுத்தார்கள்?" என்று வினவினேன்.

"ஐயா, தாங்கள் வயசில் இளைஞர். வேலைக்குப் புதியவர். உங்களுக்குமுன் எவ்வளவோ சர்விஸ் பெற்றவர்கள் படா பாபுக்களாக வேலை செய்திருக்கிறார்கள். அவர்களிடம் நான் வேலை செய்தவன். அது மட்டுமல்ல. அவர்களுக்கு நல்ல பெயரும் வாங்கிவைத்திருக்கிறேன். அவர்கள் காலத்திலேயே இந்த அவுட் பேஷன்ட் வேலையை என்னைச் செய்யச் சொல்லிவிட்டு, காலையில் ஆற அமர எட்டு மணிக்குமேல் தான் வருவார்கள். அவர்கள் கையெழுத்திடவேண்டிய வேலையைத் தவிர மற்ற எழுத்து வேலை, ரிபோர்ட்டுகள், எல்லாம் நானே தயாரித்து விடுவேன். இன்றைக்கும் அப்படியேதான் செய்திருக்கிறேன். இந்த ஆஸ்பத்திரியில் இருபது வருஷ அநுபவம் எனக்கு உண்டு. நீங்கள் இஷ்டமான பொழுது வந்து கையெழுத்தைப் போட்டுவிட்டுப் போகலாம். சாயங்காலம் வரத் தேவையில்லை. பெரிய துரை வரும் காலத்தில் அவருடைய பார்வைக்கு வேண்டியவைகளை நான் தயாரித்து வைத்துவிடுகிறேன்" என்றார்.

'இந்த ஆஸ்பத்திரியிலும் வைத்தியம் செய்யவேண்டிய தேவை இல்லைபோல் இருக்கிறது' என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். மருந்துகள் வைத்திருக்கும் அறையில் சென்று பார்த்தேன். உபயோகமற்ற சில மருந்துகளே இருந்தன. முக்கியமான மருந்துகளில் ஒன்றையும் காணவில்லை. புட்டிகள் எல்லாம் காலியாகவும், உள்ளடங்கியிருக்கவேண்டிய மருந்தின் பெயர்கள் கொட்டை எழுத்துக்களில் எழுதி ஒட்டப்பட்டும் விளங்கின. இதன் கதை என்னவென்று கம்பவுண்ட

ரைக் கேட்டேன். "ஸார், இது பட்டாள ஆஸ்பத்திரி. சில முக்கியமான மருந்துகளே அனுமதிக்கப்படும். அவைகளும் ஆறு மாதத்திற்குத்தான் போதுமானவை. மற்ற மாதங்களில் இருப்பதை வைத்துக்கொண்டுதான் வைத்தியம் செய்யவேண்டும். நோயாளிகள் அதிகம் இல்லை. வருகிறவர்களும் செய்யவேண்டிய 'டூடி' யிலிருந்து தப்புவதற்காகத் தான் வியாதியென்று சொல்லி வருவார்கள். மருந்து கொடுத்தாலும் மறைவாகக் கொட்டிவிடுவார்கள். ஒரு நாள் அரை நாள் லீவுப் பேர்வழிகளே 'அவுட் பேஷன்ட்'களாக வருவார்கள். இவற்றையெல்லாம் பார்ப்பதற்கு உங்களைச் சிரமப்படுத்த வேண்டாமென்று நானே பார்த்துவிட்டேன்" என்று சமாதானம் சொன்னார். நாலு நோயாளிகள் கட்டிலில் படுத்திருந்தார்கள். அவர்களுக்கு என்ன நோயென்று கேட்டதில் எல்லோரும் ஒரே வியாதியைத்தான் சொன்னார்கள். வயிற்றுவலியும் இடுப்புப் பிடிப்பும் சேர்ந்து தங்களை வாட்டுவதாகத் தெரிவித்தார்கள்.

"இந்த ஆஸாமிகளில் ஒருவனுக்காகிலும் நோய் இல்லை. எல்லோரும் மூன்று மாதம், ஆறு மாதம் லீவு வாங்க வந்திருக்கிறார்கள். என்ன மருந்து கொடுத்தாலும் வலி குறையவில்லையென்று சத்தியம் செய்வார்கள். இரவில் வந்தால் எல்லோரும் குறட்டை விட்டுத் தூங்கிக்கொண் டிருப்பார்கள். கேட்டால் ஒரு விநாடிகூடத் தூங்கவில்லையென்று சாதிப்பார்கள். நீங்கள் உங்களுக்குத் தோன்றியதை நோயாளியின் குறிப்பில் எழுதி வைத்துவிடுங்கள். பிறகு பெரிய துரை வரும்பொழுது அவர் இஷ்டம்போல் செய்யட்டும்" என்று அந்த ஆஸ்பத்திரியின் நுட்பங்களைக் கம்பவுண்டர் எனக்குச் சொல்லிக்கொடுத்தார். இந்த ஆஸ்பத்திரி வேலைக்கு மாதம் பத்து ரூபாய் அதிகப்படி உண்டு. வேலை மாத்திரந்தான் இல்லை. நிர்வாகியான கம்பவுண்டருக்கும் பொறுப்பாளியான பெரிய துரைக்கும் நடுவில் வைத்தியம் செய்யவேண்டிய அவசியமில்லாத ஒரு டாக்டர் உத்தியோகம்,

மாதம் முடிந்ததும் சம்பளத்தைப் பெறுவதில் மட்டும் ஊக்க முள்ளவர்களுக்கு நிம்மதியான தொழில்.

ஆனால் இந்த வாழ்வு அதிக நாள் நடக்கவில்லை. பதி னைந்து நாட்கள் கழிந்தன. மேல் அதிகாரிகளிடமிருந்து ஓர் உத்தரவு கிடைத்தது. 'உன்னைக் 'காலம் டூடி'க்குப் போட் டிருக்கிறது. ஆகையால் தலைமைப் பட்டாளா அதிகாரியிடம் ரிபோர்ட் செய்துகொள்க'' என்று கண்டிருந்தது. 'காலம் டூடி' என்பது பர்மாவில் சிவில் இலாகாவில் வேலை செய்யும் சின்ன டாக்டர்களுக்குக் கிடைக்கும் ஒரு பதவி. பர்மா சர்க்காருக்கு ஒப்பந்தமாக உழைக்கவேண்டிய ஐந்து வருஷங் களுக்குள் இந்தப் பதவி கட்டாயம் கிடைத்துவிடும். என் அதிருஷ்டம், நான் வேலைக்குச் சென்ற மூன்று மாதங்களுக் குள் இந்த வேலை கிடைத்துவிட்டது. மேலதிகாரியின்பேரில் கண்ணாடித் தம்ளரை வீசியதால் கிடைத்த பலன்தானோ என்னவோ எனக்குத் தெரியாது.

வட பர்மாதேசம் சில ஆண்டுகளுக்கு முன்னர்த்தான் ஆங்கில அதிகாரத்தின்கீழ் வந்தது. அங்கு ஒழுங்கும், அமைதியான ஆட்சி முறையும் பல இடங்களில் ஏற்பட வில்லை. சீனா, ஸையாம் தேசங்களுக்கும் பர்மாவிற்கும் எல்லை சரியாகக் குறிப்பிடவில்லை. நிலவரி முதலிய சட்ட பூர்வமான வருவாயும் சர்க்காருக்குக் கிடையாது. ஆகை யால் ஆள்வரி வசூலிப்பது, எல்லைகளைக் குறிப்பிடுவது முத லிய வேலைகளுக்காக ஒரு பட்டாளத்தோடு ரிவின்யூ அதிகாரி கள் சென்று வேலைகள் செய்வது வழக்கம். இந்த வேலை வருஷக் கணக்கில் நடக்கும். வருஷத்திற்கு எட்டு மாதம் காடுகளில் சுற்றி அலைந்து நான்கு மாதங்களுக்கு ஏதாகிலும் ஒரு பெரிய பட்டணத்தில் தங்கியிருப்பார்கள். இந்தக் கோஷ்டியாருடைய பாதுகாப்பிற்காக ஒரு வைத்தியரும் கூடப் போகவேண்டும். அவர் வேலைக்குத்தான் 'காலம் டூடி' என்றுபெயர்.

நான் காட்டை நாடிச் சென்றுவிட்டால் என் மனைவி மக்

கள் கதியென்ன? அவர்களை யார் பார்த்துக்கொள்வது? ரங்கூன் நகரத்தில் எவ்விதம் அவர்கள் காலம் கழிப்பது? அதற்காகி லும் போதுமான ஊதியம் உண்டா? ஒன்றும் இல்லை. இந்த நிலையில் இந்த உத்தரவு கிடைத்தவுடனே சர்க்கார் வைத்திய உத்தியோகத்தை விட்டுவிட வேண்டுமென்று முடிவு செய்து விட்டேன். வயிறு வளர்ப்பதற்குக் கடன் பட்டேன். சர்க்கார் வேலையை ராஜீநாமாச் செய்தால் ஐந்நூறு ரூபாய் தண்டம் கொடுக்கவேண்டும். பணம் கொடுக்க முடியாமல் சிறை சென்றபோதிலும் சரி, வேலையை உடனே விட்டுவிட வேண்டு மென்று அப்பொழுதே நிச்சயித்து, எனது ராஜீநாமாவை யும் உடனே அனுப்பிவிட்டேன். என் மனைவியையும், மகளை யும் சென்னைக்கு அனுப்பவேண்டிச் சிறிய தொகை கடன் வாங்கிக் கப்பலில் அனுப்பிவிட்டேன். நாம் தனியாயிருந்தால் எப்பாடு பட்டாகிலும் கடனைத் தீர்த்துக்கொண்டு தாய்நாடு திரும்பலாமென்று எண்ணியே இந்த ஏற்பாடுகளைச் செய் தேன்.

ரங்கூனில் புதிதாகக் கிடைத்த ஒரு நண்பர் எனக்கு எதிர்பாராத உதவிபுரிய உடன்பட்டார். அவரை நான் என் றைக்கும் மறக்க முடியாது. என் கஷ்டத்தை அறிந்து சர்க்கா ருக்குச் செலுத்தவேண்டிய ஐந்நூறு ரூபாயையும் கடனாகக் கொடுத்தார். அவர் செய்த உதவி பிறருக்குத் தெரியாது. அவர் மிகுந்த பணக்காரரும் அல்லர். தேசபக்தி, தயை, பரோ பகாரம் நிறைந்த குணமுடையவர். கம்மர்ஷியல் பாங்கில் பொக்கிஷதார் (cashier) வேலை பார்த்துவந்தார். பசுபதி ஐயரென்று பெயர்; காலஞ்சென்ற தேசபக்தர் வ. வே. சு. ஐயருடைய மைத்துனர். ஐயர் சீமைக்குச் சென்றதும், அங்கு வாழ்ந்ததும் அவருடைய பணத்தைக் கொண்டுதான். எனக் கும் சீமையில் படிக்கப் பெரும்பகுதி உதவியவரும் அவரே. சற்றும் தயங்காது அவர் செய்த பேருதவியால் சர்க்கார் ஒப்பந்தத்தினின்று விடுதலை அடைய எனக்கு முடிந்தது. இன்றைக்கும் அவர் பெங்களூரில் சுகவாசம் செய்து வருகிறார். என்போன்ற திக்கற்ற அநேகருக்கு ஆயிரக்கணக்காக உதவி

யிருக்கிறார். தென்னிந்தியாவில் அவரைப்போல நன்கொடை கொடுத்து உதவியவர் வெகு சிலரே.

சர்க்கார் வேலையை விடும்பொழுது கையில் காலணாக் கூட இல்லை. கடன் சுமார் ஆயிரம் ரூபாய்க்கு இருந்தது. வைத்தியத் தொழில் செய்து ரங்கூனிலேயே கடனை அடைத்துவிட்டு வீடு திரும்பவேண்டுமென்று முடிவு செய்தேன். அக்காலத்தில் ரங்கூனில் நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகளுடைய லேவாதேவிக் கடைகள் சுமார் ஐந்நூறுக்கு மேலாக இருந்தன. வட பர்மா, தென் பர்மா இரண்டிலும் சுமார் ஐயாயிரம் கடைகள் இருந்தன. பத்தாயிரம் செட்டியார்களுக்குமேல் இந்தக் கடைகளில் வியாபாரம் நடத்திவந்தார்கள். அவர்களுக்கு மேல்நாட்டு வைத்திய உதவி புரியக்கூடிய, சர்க்கார் பற்றற்ற தமிழர் ஒருவரும் இல்லை. அவர்களுடைய நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்றால் நலமாக இருக்குமென்று எண்ணி அவர்கள் இருக்கும் தெருவில் வைத்தியசாலை ஒன்று அமர்த்தித் தொழில் செய்யத் தொடங்கினேன். என் புத்திக்கு எட்டிய வைத்திய முறைகளையும் நோயாளிக்கு இதமான சிகிச்சைகளையும் செய்யச் சுதந்தரம் பெற்றுவிட்டதனால் எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. நோயாளிகளைக் கவலையுடன் பேணிப் பார்ப்பது, இன்புறப் பேசுவது, அவர்களுடைய பழக்க வழக்கங்களையொட்டி, பத்தியம் முதலானவைகளைச் செய்யும் முறைகளைச் செய்யச் சொல்வது - இம்மாதிரியான பல பல துறைகளில் கவனம் செலுத்தித் தொழில் நடத்தினேன். வைத்திய நூல்களையும், வைத்தியப் பத்திரிகைகளையும் படித்து நோய்க்குத் தகுந்த பக்குவம் செய்யவும் தெரிந்துகொண்டேன். வியாதியஸ்தனாக வருபவனுடைய நோயைப்பற்றிப் பிறருடன் பேசக் கூடாதென்பது நான் கற்றுக்கொண்ட முதற் பாடம்.

ஒரு கடையில் மேலாள் - முதலாளி - நோயுடன் வருவான். அவன் கீழ் வேலைசெய்யும் கணக்குப் பிள்ளை, அடுத்தஆள், பெட்டியடியான் இவர்களும் நோயுடன் வருவார்கள். அவரவர்களைத் தனித்தனியே சந்தித்துச் சிகிச்சை செய்ய

வேண்டுமே யல்லாமல் ஒருவர் நோயைப்பற்றி மற்றவர்கள் தெரிந்துகொள்ள விரும்பினாலும் அதை வெளிவிடாமல் இருக்கவேண்டும். வைத்தியஞானத்திற்கு முன்பாக மனிதர்களுடன் பழகும் ஞானமே தொழிலில் லாபத்தைத் தரும். சிறிது காலத்திற்குள் ஆயிரக் கணக்கான வருவாய் பெற நேர்ந்தது. முதல் மூன்று மாதத்தில் என் கடன் தீர்ந்து விட்டது. ஊர்திரும்பும் எண்ணமும் மறைந்துவிட்டது. மனைவி மக்களும் திரும்பவும் ரங்கூன் வந்து சேர்ந்து விட்டார்கள்.

ஆங்கில வைத்திய முறையில் தொழில் செய்யும் டாக்டர்கள் வைத்தியம் செய்யும் நோயாளிகளுக்கு அவர்களுடைய நோய், அதன் விவரம், தேவையான ஓய்வு நாட்கள் இவ்வளவு, இவற்றைக் குறிப்பிட்டு வேண்டியவர்களுக்கு அத்தாட்சிகள் (certificate) கொடுக்கவேண்டும். சண்டை சச்சரவு மூலம் காயங்கள் ஏற்படுமானால் அதற்கும் அத்தாட்சி கொடுக்கலாம். போலீஸ் அதிகாரிகள் கோரினாலும், காயம் பட்டவர்கள் கோரினாலும் அத்தாட்சி கொடுக்கவேண்டும். இதுவும் தொழில முறையில் செய்ய வேண்டிய கடமை. நியாய ஸ்தலங்களுக்குக் கூப்பிடும் பொழுது சென்று, நீதிபதிக்கு உதவியாக நியாயம் வழங்க வேண்டிய முறையில், சாட்சி சொல்லவேண்டும். நான் தொழில் நடத்தும்போது இம்மாதிரியான ஒரு சம்பவம் நேர்ந்தது.

ரங்கூனில் வியாபாரம் செய்துவரும் செட்டிப் பிள்ளைகளில் ஒருவராகிலும் தங்கள் வீட்டுப் பெண்மணிகளை அழைத்து வருவதில்லை. தாங்கள் கடல் கடந்து திரவியம் தேடினும் தங்கள் மனைவிமார் கடல் தாண்டக் கூடாதென்ற சமுதாயக் கட்டுப்பாடு உள்ளவர்கள் அவர்கள். தவசிப் பிள்ளை, வேலைக்காரர்கள் எல்லோரையும் இந்தியாவிலிருக்கும் தங்கள் கிராமங்களிலிருந்தே அழைத்து வந்துவிடுவார்கள். கடையில் எல்லோருக்கும் நல்ல சாப்பாடு; கைநிறையப் பணம்; நல்ல தேகக்கட்டு; வயசும் நாற்பதுக்

குக் கீழேதான். இவ்வளவும் சேர்ந்திருக்கும்பொழுது செட்டிப் பிள்ளைகள் எல்லோரும் பிரம்மசரிய விரதம் பூண்டிருந்தார்களென்று சொல்ல முடியாது. சிற்றின்ப சுகங்களில் மனம் நாடுவது இயல்பே. மேலும், சம்பளம் பேசி வருவது மூன்று வருஷங்களுக்கு. இதற்கிடையில் குடும்பத்தில் ஏதாகிலும் எதிர்பாராத சம்பவம் இந்தியாவில் ஏற்பட்டாலொழிய வீட்டிற்குத் திரும்பிப் போகிறதில்லை.

வயசு முதிர்ந்தவர்கள் பெரிய கடைகளுக்கு மேலாளாக வருவார்கள்; கூடியமட்டில் சுத்தமாக இருப்பார்கள். ஆனால் அவர்களுக்குக் கீழாக நூற்றுக் கணக்கான இளைஞர்கள் வேலையில் ஈடுபட்டவர்களாக இருந்தார்கள். இவர்களைத் தங்கள் மாயவலையில் சிக்கவைக்க, தமிழ்நாட்டிலிருந்து விலைமாதர்கள் ஏராளமாக ரங்கூனில கூடியிருந்தார்கள். இவர்களுக்குத் தொழில் நடத்தத் துணையாக இருந்து, தாங்களும் இவர்களைக் கொண்டு லாபம் சம்பாதிப்பதற்காகப் பல காலிகளும் போக்கிரிகளும் அங்கே சேர்ந்திருந்தனர். பொருளீட்டும் வேலையில் சிறுவயசுமுதல் பழகி வரும் செட்டிப் பிள்ளைகள், சுபாவத்தில் மிகப் பயந்தவர்கள். அநேகமாய் ஆங்கிலம் படிக்காதவர்கள். நடை முறையில் வக்கீல்களின் சட்ட ஞான உதவியால் தங்கள் இடையூறுகளை ஒருவாறு தீர்த்துக்கொள்ளும் பழக்கமுள்ளவர்கள். முன்சொன்ன காலிகள் தங்கள் லாபத்திற்காக, இவர்களை நேசிப்பதுபோலப் பாவித்து வேசிகளிடத்தில் சேர்த்துவிடுவது வழக்கம்.

இதன் விளைவு இதோடு நிற்பதில்லை. வேசிகளால் கிடைக்கும் நோய்கள், நேரும் பணச்செலவு இவற்றைத் தவிர இந்தக் காலிகள் உபத்திரவம் அப்பொழுதுமுதல்தான் ஆரம்பமாகும். வேசிகளிடம் போவது முறைத் தவறு. அதனால் நாணயக் குறைவு உண்டாகும். முதலாளிகளுக்கு நம்பிக்கை குறையும். கொடுக்கல் வாங்கல் தொழிலில் பலவிதத் தொல்லைகள் உண்டாகும். இவற்றையெல்லாம் அறிந்த நகரத்தார்கள் (செட்டிமார்கள்) வேசி வீட்டிற்குப் போகிற

வனை வேலையிலிருந்து நீக்கிவிடுவார்கள், ஆனால் இந்தப் பழக்கம் அவர்கள் சமூகத்தினரில் பலருக்கு ஏற்பட்டு விட்டபடியால் ரகசியமாக, மறைமுகமாக, நடந்து வந்தது.

அக்காலத்தில் நகரத்தார் அநேகருக்குத் தொள்ளைக் காது; தலையையும் மழுங்கச் சிறைத்துவிடுவார்கள். உடல் நிறைய விபூதி பூசியிருப்பார்கள். கோட், ஷர்ட் முதலியன போடமாட்டார்கள். வெகு சிக்கனமான முறையில் வாழ்வு நடத்துவார்கள். நடந்துபோய்ச் செய்யக் கூடிய வேலையை நடந்தே செய்வார்கள். வண்டி, குதிரை, மோட்டார்கார் இவைகளை வைத்துக்கொள்வதில்லை. "திரைகட லோடியும் திரவியந் தேடு" என்ற முதுமொழிக்கொப்ப, தங்களுக்கும் முதலாளிகளுக்கும் எவ்வளவு பொருளீட்ட முடியுமோ அவ்வளவும் சேகரிப்பார்கள். செட்டிப்பிள்ளைகளை முன்னேசொன்ன காலிகள் வேசிகள் வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் அங்கே அவர்களை மறித்துக்கொண்டு, பயமுறுத்திச் சில சமயங்களில் அடித்தும் அவர்களிடமிருந்து ஆயிரக் கணக்கான ரூபாய்களுக்கு நோட் பாண்டு (promissory note) எழுதி வாங்கிவிடுவார்கள். சில நாட்களுக்குள் அவர்கள் கடையண்டை வந்து ரகசியமாகப் பணத்தைப் பெற்றுக்கொண்டு போய்விடுவார்கள். இது பகிரங்கப்படாமல் இருக்கவேண்டுமென்று போலீஸிலோ கோர்ட்டுகளிலோ செட்டிப்பிள்ளைகள் வழக்குத் தொடரமாட்டார்கள்.

ஒரு நாள் ஒரு கடை மேலாளாகிய செட்டியார் (ஏஜெண்டு) ஒரு தாசி வீட்டிற்குப் போயிருந்தார். போயிருந்த இடத்தில் போக்கிரிகள் அவரை மடக்கிக் கொண்டார்கள். அவர்களுக்குப் பயந்து அவர் இரண்டு அடுக்கு மேல் மெத்தையுள்ள அந்த வீட்டின் பின்புறத்திலிருந்த ஜன்னலிலிருந்து குதித்துவிட்டார். சுமார் ஐம்பது அடி உயரத்திலிருந்து விழுந்ததால் படுகாயமடைந்து மூர்ச்சையாகிவிட்டார். இரவு மணி இரண்டு. உடனே என்னை அந்தத் தெருவில் இருப்பவர்கள் வந்து அழைத்துப் போனார்கள். நான் செட்டியாரை என் விடுதிக்குத் தூக்கி வந்து வேண்டிய சிகிச்சை செய்து, இந்தச் சம்பவத்தைப் போலீஸ் அதிகாரிகளுக்கும் தெரிவித்து

விட்டேன். உடனே போலீஸார் அந்த வீட்டில் இருந்த தாசியையும், போக்கிரிகளையும் கைது செய்துவிட்டார்கள்.

மூன்று நாள் கழித்துத் தம் சுய ஞாபகம் வந்தவுடன் செட்டியார் திகிலடைந்து போனார். தாம் உயிர் தப்பியதற்கு மகிழ்ச்சி அடையாமல், 'இது போலீஸ் கேஸ் ஆகிவிட்டதே' என்று வருந்தினார். அதன் பிறகு நகரத்தார்களில் முக்கியமானவர்களை நான் சந்தித்து இந்தச் சமூகக் கட்டுப்பாட்டின் கொடுமையை எடுத்துச் சொல்லி, எல்லோரும் இந்த வழக்கில் ஈடுபட்டு இந்தத் தொல்லையை ஒழிக்க வேண்டுமென்று வற்புறுத்தினேன். அவர்களும் அதற்கு இசைந்து காயமடைந்த செட்டியாரைச் சமூக விலக்கு ஒன்றும் செய்வதில்லையென்றும், வழக்கு நடத்தும் செலவுகளைப் பொதுப்பணத்திலிருந்து கொடுப்பதென்றும் முடிவு செய்தார்கள். மூன்றுமாத காலம் நோய்வாய்ப்பட்டு, கடைசியில் ஒரு கால் சற்று ஊனமாகச் செட்டியார் பிழைத்தார். இந்த நடவடிக்கைகளில் நான் ஒரு முக்கியமான சாட்சி. மூன்று நாட்கள் விசாரித்தார்கள். குற்றவாளிகள் தண்டனை அடைந்தார்கள். ஆனால் நீதிபதி, நான் மேற்படிப்புள்ள ஒரு டாக்டரல்ல, ஒரு 'ஸப் அஸிஸ்டெண்டு சர்ஜன்'தான் என்று தீர்ப்பில் கண்டிருந்தார். பெரிய பட்டதாரிகளான வைத்தியர்களைக் காட்டிலும் அதிக வருவாயுள்ள நான் இந்த நீதிபதியின் குறிப்பைக் கேட்டு வருந்தினேன். வியாதிக்காரன் நோய் தீரவேண்டுமென்று வைத்தியம் செய்துகொள்ளுகிறான். குணமடைந்தால் பொருளை ஏராளமாகக் கொடுக்கிறான். என் வைத்தியப் படிப்பைப்பற்றிக் கேட்பதில்லை. குணமாகாவிட்டால் எவ்வளவு பெரிய படிப்புக்காரனாக இருந்தாலும், மறு முறை வைத்தியம் செய்துகொள்ள வரமாட்டான்.

நோயும் நோயாளியும் சம்பந்தப்பட்டமட்டில் நான் நல்ல வைத்தியனென்ற பெயர் எடுத்தும், நியாயஸ்தலத்தில் மதிப்புக் குறைவாக நினைக்கும்படி ஏற்பட்டு விட்டதல்லவா? இந்தப் பழியை ஒழிக்கவேண்டுமென அன்று முடிவு செய்தேன். 'என்ன செலவும் கஷ்டங்களும் நேர்ந்தபோதிலும் சரி; இங்

இலாந்திற்குச் சென்று அங்கு வைத்தியப் பட்டம் பெறவேண்டும். பணமிருந்தாலும், பதவியும் வேண்டும்' என நினைத்து, ஏராளமான வருவாயுள்ள என் தொழிலை நிறுத்திவிட்டு இருக்கிற பொருளை யெல்லாம் சேகரித்துக்கொண்டு, என் உயிர் நண்பரான பசுபதி ஐயரிடம் மேல் உதவியைப்பெற உறுதிமொழி கொடுத்துவிட்டு, லண்டனுக்குப் பிரயாணமாகி விட்டேன். இந்தச் செட்டியாருடைய வழக்குக்குப் பிறகு காலிகள் தொல்லையும் ஒழிந்தது.

# நீலக் கடல் அலையில்

பார்ப்பனர்கள் கடல் தாண்டுவது முறைத் தவறு என்ற காலம் மலையேறிப் போய்விட்டது. ஆனால் முப்பது வருஷங்களுக்கு முன்பு இவ்வாறில்லை. முக்கியமாகக் கிராமங்களிலும், கோயிலிலும், வைதிகப் பார்ப்பனர்கள் குழுமியிருக்கும் ஸ்ரீரங்கம் போன்ற சிறிய நகரங்களிலும் கடல் தாண்டும் வழக்கம் ஆதரவு பெறவில்லை. ரங்கூனில் நான் தொழில் செய்து அதன்மூலம் பொருளீட்டும் தகவல் தெரியவந்ததும், என்னைக் கண்டு, சில காலம் என்னுடன் இருக்கப் பிரியப்பட்டு என் தகப்பனார் கப்பலேறிப் பர்மாவிற்கு வந்தார். வைதிகச் சமூகக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடந்து வந்தவர் அவர். சமயப்பற்றிற்கு இந்தக் கட்டுப்பாடுகள் முக்கிய அங்கங்கள் என்ற கொள்கையுடையவர். வயசு ஐம்பத்தேழு கடந்துவிட்டதையும் கவனியாமல், மகனிடத்தில் உள்ள அன்பு மிகுதியால் கப்பலேறிக் கடல் கடந்துவிட்டார்.

திரும்பும் காலையில் கல்கத்தா வழியாக வந்து, கயை, பிரயாகை, காசி, ஹரித்துவாரம், மதுரை, பிருந்தாவனம் முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கெல்லாம் சென்று, கங்கை, யமுனை முதலிய நதிகளில் ஸ்நானம் செய்து, கங்கா ஜலத்தைக் கொணர்ந்து சேதுவில் சேர்த்து ஸ்நானம் செய்து ஸ்ரீரங்கம் திரும்பினார். இந்த க்ஷேத்திரப் பிரயாணங்களில் என் தாயாரும் சேர்ந்துகொண்டார். பார்ப்பனர்கள் செய்யவேண்டிய பல சடங்குகளில் பிதுரு சிராத்தம் மிகவும் முக்கியமாக இன்னுங்கூடக் கருதப்பட்டு வருகிறது. என் தகப்பனார் அதற்காகப் பிராம்மணர்களை அழைத்தபொழுது அவர்கள் வர மறுத்து விட்டார்கள். பங்காளிகள் பெருத்த எங்கள் பூர்விகக் கிராமமாகிய தில்லை ஸ்தானத்திற்குச் சென்றும் எங்கள் பங்காளிகளும் அவரை வரவேற்க மறுத்துவிட்டனர்.

நெருங்கிய உறவினர் இருவரை வைத்துக்கொண்டு சிராத்தத்தை என் தகப்பனார் நடத்தினார். ஆனால் அதனால் அவர் மனத்தில் உண்டான குறை அளவிடமுடியாது. 'என்னுடைய வாழ்வில் முறை தவறாக நான் ஒருபொழுதும் நடந்ததில்லை. தினசரி, பிராம்மணர்கள் செய்ய வேண்டிய கர்ம அநுஷ்டானங்களைக் கைவிட்டவனல்ல. எப்பொழுதும் வைதிக சிரத்தையும் தெய்வ பக்தியும் உள்ள நான் ஜாதியினின்று ஒதுக்கி வைக்கும்படியான ஒரு பாவமும் செய்யவில்லையே!' என்று அடிக்கடி வாய்விட்டுப் புலம்பிக்கொண் டிருந்தார். இதன் இடையில் நான் கப்பலேறி ரங்கூன் போனது போதாதென்று, சீமைக்கும் போக முடிவுசெய்து, அவர்களிடம் விடைபெற்றுப் போக ஸ்ரீரங்கம் வந்தபோது, அவருடைய வருத்தத்தை என்னவென்று சொல்வது?

'நீ எதற்காக இப்பொழுது சீமைக்குச் செல்லவேண்டும்? போகாமல் இருப்பதால் உன் தொழிலில் வரும்படி குறைவாக இருக்கிறதா? மாதம் ஆயிரக் கணக்காகச் சம்பாதிக்கும் நீ அங்கே போய்வந்தால் என்ன அதிகமாகச் சம்பாதித்துவிடப் போகிறாய்? மேலும், கையில் சேர்ந்திருக்கும் சில ஆயிர ரூபாய்களையும், அதன் மேலும் கடன் வாங்கியோ, யாசகம் செய்தோ எல்லாவற்றையும் சீமையில் மூன்று வருஷங்களில் செலவழித்துவிட்டு, வெறுங் கையோடு திரும்பிவந்து மறுபடியும் பழைய வறுமை நிலையை அடைந்து, அதனின்றும் வெளியேற முயல்வதில் என்ன பயன்? தாயுந் தகப்பனுமாகிய எங்கள் இருவருக்கும் வயசாகிக்கொண்டு வருகிறது. எந்தச் சமயத்தில் எங்கள் காலம் முடிவுறுமோ! வீட்டிற்கு முதல் பிள்ளையாகிய நீ திரும்ப முடியாத, கண்காணாத தேசம் போய்விட்டால் நாங்கள் என்ன செய்வது! இதன்றியும் உனக்கு இதுவரையில் மூன்று பெண் குழந்தைகள் இருக்கிறார்கள். சாதாரணமாகவே அவர்களுக்குக் கல்யாணம் செய்துகொடுப்பது இந்த நாளில் பிரும்மப் பிரயத்தனமாக இருக்கிறது. அதோடு நீ சீமைக்கும் போய்விட்டு வந்தால் நம் ஜாதியில் ஒருவரும் கல்யாணம் செய்துகொள்ளமாட்டார்

கள். நான் ரங்கூன் வந்துவிட்டுப் படும் கஷ்டம் போதாதா? இதையெல்லாம் யோசனை செய்து, போவதை நிறுத்தி விட வேண்டும்' என்று அழுத கண்ணும் கண்ணீருமாக மன்ருடினர். அவர் கூறிய ஒவ்வொரு விஷயமும் உண்மையே. இதையெல்லாம் முன்கூட்டியே எண்ணித்தான் ஒரு சமயம் புறப்பட முடியாமல் இடையூறு நேர்ந்து விடுமோவெனப் பயந்து, ரங்கூனிலிருந்து புறப்படுவதற்கு முன்பாகவே, சீமைக்குப் புறப்படவேண்டிய தேதி, கொளும்புத் துறை முகத்தில் அன்று வரும் கப்பலில் இடம், எல்லாம் ஏற்பாடு செய்து 'தாமஸ் குக்' கம்பெனியாரிடம் அதற்கான பணம் எலலாம் கட்டிவிட்டேன்.

என் மனைவியின் முறையீடு வேறு சேர்ந்துகொண்டது. 'நீங்கள் திரும்பி வராமலே அங்கேயே யாராகிலும் ஆங்கிலப் பெண்ணை மணந்து தங்கிவிட்டால், நானும் மூன்று மக்களும் கதியற்றவர்களாகிவிடுவோம் என்ற துக்கம் எனக்கு உண்டாகிறது. மேலும், என் தாய் வீட்டில் நான் எவ்வளவு காலம் தங்கியிருப்பது? என் உடன் பிறந்தவன், அவன் மனைவி இவர்களுடன் காலம் கழிக்க வேண்டுமே! எவ்வளவு தான் தாயின் அன்பு இருந்தபோதிலும், நாடு கடந்த கணவன் நன்மை பயக்கக்கூடிய முறையில் கண்ணியமாகத் திரும்பும் வரையில் எனது துயரம் அளவிட முடியுமா? மேலும் ஏழைக் குடும்பம். நீங்கள் கொடுத்து உதவும் தொகை உணவிற்கே போதும் போதாததுமாக இருக்கிறது. இதனுடன் மூன்று பெண் குழந்தைகளின் பராமரிப்புவேறு இருக்கிறது. உங்களை நான் எவ்விதம் உத்ஸாகத்தோடு அனுப்ப முடியும்?" என்று அளவிட முடியாத துயரத்தைத் தெரிவித்தாள். என் வீட்டினரே இவ்வளவு தடை கிளப்பும்பொழுது மற்றவர்களைப் பற்றிக் கேட்கவேண்டியதில்லை. என்னுடன் பள்ளியில் பயின்று ஸ்ரீரங்கம் உயர்தரப் பாடசாலையில் உபாத்தியாயராக இருந்த ஒரு நண்பர் மாத்திரம் என்னை ஆதரித்து உத்ஸாகப் படுத்தி வழியனுப்பினர்.

நான் திருச்சியிலிருந்தே இரண்டாவது வகுப்பு ரெயில்

வண்டியில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தேன். சீமைக்குப் படிக்கப் போகிறவன் சாதாரண மனிதர்களைப்போல மூன்றாம் வகுப்பில் பிரயாணம் செய்யக்கூடாது என்பதான ஒரு முட்டாள்தனமான எண்ணம். 'உயர்தர வகுப்பில் பிரயாணம் செய்பவர்கள் எல்லோரும் பெரிய மனிதர்கள். நாமும் பெரிய மனிதன் ஆகவேண்டுமானால் அப்படிச் செய்ய வேண்டும். அந்த வகுப்பில் பிரயாணம் செய்யாவிட்டால் பெரிய மனிதனென்று நம்மை எண்ணமாட்டார்கள்' என்ற பயம். ஆகையால் இதுவரையில் இரண்டாம் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்து அறியாத நான் சீமைக்குப் படிக்கப்போவதே ஒரு பெரிய மனிதத்தனமென நினைத்து உயர்ந்த வகுப்பில் பிரயாணம் செய்தேன். என் பெருமையை மெச்சி, என் பெரிய மனிதத்தனத்தைக் கவனிப்பார் ஒருவரையும் காணவில்லை! வழியனுப்ப நண்பர்கள், உற்றார், உறவினர் ஒருவரும் வரவில்லை. அந்த நாளில் விடைபெற்றுப் போவோருக்குப் பூமாலை போடும் வழக்கம் இல்லை. எனக்குப் போடுவாரும் இல்லை. என் நண்பர் ஒருவர் மட்டும் என்னோடு வந்து எனக்கு ஆசி கூறி விடை கொடுத்தார்.

நான் ரங்கூனில் இருந்தபோது சீமைக்குப் போய்த் திரும்பி வந்த இந்திய டாக்டர்கள் இருவரைக் கண்டு, அங்கே கையாளப்படும் பழக்க வழக்கங்களையும் பிரயாணம் செய்ய வேண்டிய முறை, நடை, உடை, பாவனைகளையும் கேட்டு அறிந்துகொண்டேன். அவர்கள் எனக்குச் செய்த உபதேசத்தை நான் இன்றும் மறக்கவில்லை, 'நாம் சிக்கனமாக இருக்கக்கூடாது. உயர்ந்த உடை, அதற்கேற்ற படியான தோற்றம், உணவு, எல்லாம் பொருந்தி இருக்கவேண்டும். ஆங்கிலேயர்கள் எம்மாதிரியான பழக்க வழக்கங்களை மேற்கொண்டிருக்கிறார்களோ அம்மாதிரியே நாமும் பழகத் தெரிந்துகொள்ளவேண்டும். இந்த ஊரிலேயே ஆங்கிலேயர்கள் தங்கும் பெரிய ஹோட்டல்களில் போய், கத்தி, கரண்டி, முள் முதலியவை பிடித்து உண்ணப் பழகிக்கொள்ள வேண்டும். தலையில் குடுமி, தலைப்பாகை இவைகளெல்லாம்

கூடா. அவர்களுடன் பழகும்பொழுது அவர்களுக்கு நம்மிடம் வெறுப்பு உண்டாகாமல் நடந்துகொள்ள வேண்டும். பணச் செலவைக் கவனிக்கக்கூடாது. லண்டனில் வைத்தியப் படிப்பும், பரீக்ஷைகளும் கடினம். இந்தியாவிலேயே சிறிய பரீக்ஷை கொடுத்திருக்கும் உங்களைப் போன்றவர்கள் 'எடின்பரோ' விற்குப் போவதுதான் நலம். பிரயாணம் உயர்ந்த வகுப்பு வண்டிகளில் செய்யவேண்டும். அப்போதுதான் மதிப்பிற்கு உரியவர்களாவோம்' என்று இம்மாதிரியெல்லாம் அடுக்கடுக்காக இலவசப் புத்திமதி கூறினார்கள். நான் என்னுடைய செல்வ நிலைக்கு மேலாகச் செலவு செய்துகொண்டு இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்ததற்கு இந்த நண்பர்களின் உபதேசமும் ஒரு காரணம்.

'சீமைக்குப் போகிறவர்கள் தலையில் குடுமி வைத்துக் கொள்ளக்கூடாது. அந்த ஊரில் தலைப்பாகை அணிந்து கொள்வதை வைத்தியப் படிப்புக்குப் போகிறவர்கள் செய்வதில்லை' என்ற உபதேசமும் எனக்குக் கிடைத்தது. நான் சென்னையில் மெடிகல் காலேஜில் படிக்கும் பொழுதும் ரங்கூனுக்குப் போய்ச் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்த பொழுதும், வைதிக முறையில்தான் முடி வைத்துக்கொண்டிருந்தேன். வேலை செய்யும்பொழுதும், மற்றப்படி வெளியே போகும் நேரங்களிலும் தலைப்பாகை அணிந்துகொண் டிருந்தேன். அதன் பயனாகவே இந்த உபதேசம் சீமை சென்று திரும்பிய நண்பர்களால் எனக்குச் செய்யப்பட்டது. ஸ்ரீரங்கத்தினின்று புறப்படும்பொழுதுகூட, என் பெற்றோர்களின் மனக்கலக்கத்தை எண்ணி, முடியை எடுக்க நான் துணியவில்லை. கொழும்புத் துறைமுகத்தில் கப்பலேறப் புறப்பட்ட நான் தூத்துக்குடி சென்று அங்கிருந்து கப்பலேறி ஓர் இரவு பிரயாணம் செய்து மறுநாள் கொழும்பு சேரவேண்டியிருந்தது. அந்தக் காலத்தில் (1908) தனுஷ்கோடி மார்க்கம் இல்லை. தூத்துக்குடியில் ஒரு நண்பர் வீட்டில் தங்கினேன். 'முடிவெட்டப் பரியாரி வேண்டும்' என்றேன். அவர் சற்றுத் திகைத்தார். 'இன்று க்ஷவரம் செய்துகொள்ள நல்ல நாள் இல்

லையே! பரியாரி கிடைப்பதுகூட அரிதாக இருக்கும். ஆனு லும் நீங்கள் கப்பலேறிச் சீமைக்குப் போகிறவர்கள். இதெல் லாம் பார்த்து முடியாது. கொளும்பில் போய்ச் செய்து கொண்டால் என்ன?" என்றார்.

"கொளும்பிலா? முன்பின் தெரியாத இடம். தங்குவது ஓரே நாள். கப்பல் ஏற வழி செய்துகொள்வதா, பரியாரி யைத் தேடிக்கொண்டு அலைவதா?' என்றேன். அந்த நாளில் நம் பட்டணங்களில் "பார்பர் ஷாப்" இல்லை. கடைசி யாக எங்கோ தேடிப் பிடித்து நல்ல பட்டிக்காட்டுப் பரியாரி ஒருவனை என் நண்பர் கொணர்ந்தார். அவன் வந்ததும், 'முடியா வெட்டச் சொல்கிறீர்கள்? எனக்குச் செய்து பழக் கம் இல்லையே!" என்றதும் எனக்கு இன்னது செய்வ தென்று தெரியவில்லை. 'கத்தரிக்கோல் இருக்கிறதா?' என் றேன்.'இருக்கிறது' என்றான். நானும் அவனுமாகச் சேர்ந்து என் முடியை நீளமும், குட்டையுமாக வெட்டினோம். மாடு மேய்ந்த புல்லுக் காடுபோல் இருந்தது என் தலை. இருந்த ரோமத்தை வாரி ஒதுக்கக் கையில் சீப்பு, கண்ணாடி முதலி யவை இல்லை. ஏதோ குடுமியைக் கப்பலேறுமுன் கத்தரித்து விட்டோமென்ற ஆறுதலுடன் பிரயாணமானேன்.

அந்தச் சமயம் 'சுதேசிச் சண்டை' வெகு மும்முரமாகத் தூத்துக்குடியில் நடந்துகொண்டு வந்தது. முதல் முதலாக இந்தியர்களுக்குச் சொந்தமான கப்பல இரண்டு தூத்துக் குடித் துறைமுகத்திற்கும் கொளும்பிற்கும் காலஞ் சென்ற தேசபக்தர் வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களால் 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' என்ற பெயரால் ஓட்டப் படும் காலம். ஆங்கிலக் கம்பெனியாரின் ஏகதேச உரிமை யாக இருந்த 'பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' யாருடைய கப்பல்களுடன் போட்டி. ஊரில் உத் ஸாகத்திற்கும், ஊக்கத்திற்கும் குறைவில்லை. தூத்துக்குடி வியாபாரிகள் பெரும்பாலோர் சுதேசிக் கப்பலிலேயே சரக்கு ஏற்ற ஒப்பந்தம் செய்துகொண்டனர். இரண்டு கம்பெனி களுக்கும் போட்டி மும்முரமாக நடந்துகொண் டிருந்தது.

என் நண்பர்கள் சுதேசிக் கப்பலில்தான் நான் பிரயாணம் செய்யவேண்டுமென முடிவுசெய்து சீட்டு வாங்கி, என்னை வழியனுப்பினார்கள். நான் கொளும்பிற்கு முன்பின் போகாதவனானபடியால், எனக்கு வழிகாட்டி, சீமைக்குப் போகும் கப்பலில் ஏற்ற நான் ரங்கூனில் சீட்டுவாங்கிய 'தாமஸ் குக்' கம்பெனியாரின் கொளும்புக் கிளை ஆபீஸிற்கு என் வரவைப் பற்றித் தந்தி கொடுத்து என்னைக் கொளும்புத் துறைமுகத்தில் சந்திக்கும்படி அறிவித்து விட்டேன்.

'பிரிட்டிஷ் இந்தியா' கப்பல் சரியாகச் சாயங்காலம் ஆறு மணிக்குப் பிரயாணமாயிற்று. சுதேசிக் கப்பலும் அந்நேரத்திற்கே புறப்படுமென்று கேள்வியுற்று ஐந்து மணிக்கே கப்பலில் ஏறிவிட்டேன். ஆனால் இரவு பன்னிரண்டு மணிக்குத்தான் கப்பல் புறப்பட்டது. சுதேசிக் கப்பலில் மூட்டைகளை எப்பொழுது வேண்டுமானாலும் ஏற்றலாமென வியாபாரிகள் இரவு பன்னிரண்டுமணி வரையில் அரிசி மூட்டைகளை ஏற்றிய வண்ணமாக இருந்தார்கள். சாப்பாடு, சிற்றுண்டி முதலிய வசதிகளில் ஒன்றையும் காணவில்லை. 'ஒன்றும் கிடைக்காதா?' என்று கேட்டபொழுது, 'என்ன ஐயா ஓர் இரவு பிரயாணத்திற்குச் சாப்பாடு எதற்கு?' என்று பதில் சொல்லிவிட்டார்கள்.

மறுநாள் பகல் பன்னிரண்டு மணிக்குக் கப்பல் கொளும்புத் துறைமுகம் சேர்ந்தது. என்னைக் கூட்டிப்போக ஒருவரையும் காணவில்லை. விசாரித்ததில் சுதேசிக் கப்பலுக்குத் 'தாமஸ் குக்' கம்பெனி ஏஜெண்டுகள் வரமாட்டார்களென்று சொன்னார்கள். கடைசியாக ஒரு படகு அமர்த்திக்கொண்டு என் சாமான்களுடன் கரை வந்துசேர்ந்து, சமீபத்தில் இருந்த ஒரு சத்திரத்திற்குப் போனேன். அந்நேரத்தில் சாப்பாடு கிடைக்கவில்லை. ஸ்நானம் செய்துவிட்டுக் கிடைத்த சிற்றுண்டியை உண்டு சற்றுக் களைப்பாறி, பிறகு சத்திரத்தில் ஹோட்டல் வைத்திருந்த சிதம்பர ஐயர் என்பவரிடம் சென்று சீமைக்குப் புறப்படும் கப்பல் எப்பொழுது வருமென்று கேட்டேன். அவர் தமக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாதென்

றும், நான் தாமஸ் குக் கம்பெனியாரிடம் சென்று தெரிந்து கொள்ளவேண்டுமென்றும் சொன்னார். என் சாமான்களை அவரிடம் ஒப்படைத்து விடலாமென்று நினைத்து அவரைக் கேட்டபொழுது அந்தப் பொறுப்பைத் தாம் வகிக்கமுடியா தெனச் சொல்லிவிட்டார். சத்திரத்தில் காலியாக இருக்கிற சில அறைகள் தினசரி வாடகைக்குக் கிடைக்குமென அறிந்து அறை ஒன்றிற்கு முக்கால் ரூபாய் வாடகை பேசி, அங்கே சாமான்களைப் போட்டுப் பூட்டிவைத்துப் புறப்பட்டேன்.

அந்தச் சமயத்தில் ஹோட்டல் சிதம்பரஐயர் பரிவுடன் அணுகி, 'ஐயா சீக்கிரம் வந்துவிடுங்கள். இங்கே காலிகள் அதிகம். சாமான் ஏதாகிலும் உருப்படியாக இருந்தால் மறு சாவி போட்டு அடித்துக்கொண்டு போய்விடுவார்கள். இருட்டுவதற்கு முன் வந்துவிடுங்கள்' என்று எச்சரிக்கை செய்தார். ஐந்நூறு ரூபாய் பெறும்படியான சாமான்கள் என்னிடம் இருந்தன. அதைக் கொளும்பில் இழக்க இஷ்டமில்லாதவனாக, தாமஸ் குக் கம்பெனிக்குச் சென்று அவசர அவசரமாகத் திரும்பிவிட்டேன். ஊரைச் சுற்றிப் பார்க்கவோ, கடைகளுக்குச் சென்று ஏதாகிலும் தேவையானவற்றை வாங்கவோ மனம் இடம் கொடுக்கவில்லை. கொளும்புத் திருடர் அனைவரும் என் சாமானைக் கொள்ளை கொண்டு போய் விடுவதாகவே எண்ணி, சத்திரத்தை விட்டு நகராமல் இருந்து விட்டேன். மறுநாள் காலையில் கப்பல் வருவதாகவும், அன்றிரவு பன்னிரண்டு மணிக்குப் புறப்படுவதாகவும் தெரிந்து கொண்டேன். அன்று காலையில் எட்டு மணிக்குத் தாமஸ் குக் கம்பெனிக் கூலியாட்களிடம் என் சாமான்களை ஒப்பித்து விட்டு, சாயங்காலம் எட்டு மணிக்குள் கப்பலேறிவிட வேண்டுமென்று கம்பெனி ஆபீஸ் குமாஸ்தா ஒருவர் எனக்குத் தெரிவித்தார். என் மனத்தில் உண்டான திகிலைப்பற்றி அந்தக் குமாஸ்தாவிற்குத் தெரிவிக்கவில்லை. சத்திரத்திற்குத் திரும்பியபொழுது ஆழ்ந்த கவலை கொண்டேன். 'ஐந்நூறு ரூபாய்ச் சாமானைக் கூலி ஆட்களிடம் ஒப்பிப்பதா? கப்பலில் கொண்டுபோய்ச் சேர்க்காமல் வேறு எங்கேயாகிலும் கப்பல்

துறைமுகத்தை விட்டு வெளியேறும் வரையில் அப்புறப் படுத்தி, பிறகு அதை விற்றுக் கிடைத்த பணத்தை எடுத்துக் கொண்டு விட்டால் நான் நடுக்கடலில் இருந்துகொண்டு இவர் களை என்ன செய்யமுடியும்?' என்று இப்படியெல்லாம் எண் ணினேன். கடைசியில் சத்திரம் சிதம்பர ஐயர் ஊட்டிய தைரி யத்தின் பேரில் கூலிகளிடம் ஒப்பிக்க முடிவு செய்து இர வைக் கழித்தேன்.

காலையில் எட்டு மணிக்குக் கூலிகள் வந்து என் சாமான் களுக்குச் சீட்டு ஒட்டி எண்ணி எடுத்துச் சென்றார்கள். நானும் சாயங்காலம் சாப்பிட்டுவிட்டுப் புறப்பட்டேன். 'ஸார், வெகுதூரம் போகிறீர்கள். நம்மூர்ச் சாப்பாடு இனி உங்களுக்குக் கிடைக்காது. உங்களுக்காகவே வெங்காய சாம் பார் செய்திருக்கிறேன். ஆற அமரச் சாப்பிட்டுப் புறப்படுங் கள்' என்று பரிவுடன் சாம்பாருக்கு எட்டணா அதிகம் வாங்கிக்கொண்டு சிதம்பர ஐயர் உணவு அளித்தார். ஆனால் அவர் சொன்னது உண்மைதான். மூன்று வருஷங்கள் கழித்து இந்தியா திரும்பும் வரையில் வெங்காய சாம்பார்ச் சாதம் எனக்குக் கிட்டவில்லை. சுமார் ஏழு மணிக்குத் துறை முகம் சென்று படகிலேறி, நான் ஏறவேண்டிய பிரெஞ்ச் மெயில் கப்பல் 'மெஸரஜரி மாரிடையம்ஸி'ல் ஏறினேன்.

முழு வெள்ளைக்காரக் கப்பல் ஒன்றில் ஏறியது இதுதான் முதல் தடவை. வேலைக்காரர்கள் வெள்ளைக்காரர்கள்; சமை யற்காரர் வெள்ளைக்காரர்; மற்றச் சிப்பந்திகளும் அப்படியே. அடி முதல் நுனிவரையில் எல்லாம் ஒரே வெள்ளை மயம். மருந்திற்குக் கூட ஆங்கிலம் பேசுபவர்கள் இல்லை. வெகு கஷ் டப்பட்டு, கைஜாடை, கண்ஜாடை முதலியவைகளின் உத வியைக்கொண்டு, கப்பலின் அமைச்சனைக் (steward) கண்டு பிடித்தேன். நான் போனசமயம் கப்பலில் சாப்பாட்டு நேரம். பிரயாணிகள் தடபுடலாக உடைகள் தரித்து, உல்லாசமான உணவு அருந்திக்கொண் டிருந்தார்கள். உள்ளே செல் வதற்குப் பயம். 'போகலாமோ, கூடாதோ? யாராகிலும் முரட்டுத்தனமாக வெளியே தள்ளிவிட்டால் என்ன செய்

கிறது ?' என்றெல்லாம் யோசனை. அரைமணி காத்திருந்த பிறகு என் சீட்டைப் பார்த்துவிட்டு, கப்பல் அமைச்சர் என் அறையைக் காண்பித்தார். எல்லோரும் சாப்பாட்டிற்குப் போயிருந்த படியால் அறை காலியாக இருந்தது. பக்கத்திற்கு மூன்று தட்டுகள் வீதம் ஆறு படுக்கைகள் கொண்ட அறை. ஒரு புறத்தில் மேல் தட்டில் எனக்கு இடம் கொடுத்திருப்பதைப் பார்த்துக்கொண்டேன். 'என் சாமான்கள் எங்கே ?' என்று கேட்டேன். பிரெஞ்சுக்காரர்கள் வழக்கம் போலத் தலையை அசைத்து, தமக்குத் தெரியாதென அமைச்சர் கையை விரித்தார். கப்பலில் எனக்குத் தோன்றிய இடமெல்லாம் அலைந்து திரிந்தேன். சாமானைக் காணவில்லை. முதல் நாள் எண்ணிய பிரகாரம் கூலிகள் அடித்துக்கொண்டு போயிருப்பார்கள் என்ற முடிவிற்கு வந்துவிட்டேன்.

பிரயாணம் செய்வதா கரை திரும்பிச் சாமான்களைத் தேடுவதா என்று மனக்குழப்பம் ஏற்பட்டது. அப்பொழுது இரவு எட்டு மணி. கப்பல் புறப்பட நாலு மணி நேரம் இருந்தது. படகு ஒன்றை அமர்த்திக்கொண்டு கரைக்குத் திரும்பித் தாமஸ் குக் கம்பெனிக்கு வந்தேன். ஓர் இந்தியக் குமாஸ்தா மாத்திரம் விளக்கடியில் உட்கார்ந்து வேலை செய்துகொண்டிருந்தார். அவரிடம் என் துயரத்தைத் தெரிவித்தேன். அவருக்கு அந்த ஆபீஸ் துரைமேல் கோபமோ, கப்பலின்மேல் கோபமோ, இரவில்கூட வேலை செய்ய நேரிட்டதன் ஆத்திரமோ தெரியாது ; "என்ன ஐயா, கறுப்பு மனிதன் என்றால் இந்த வெள்ளைப் பயல்கள் இப்படித்தான் செய்கிறது. தங்கள் இனத்தினர் வந்தால் மட்டும் ஆரவாரித்து வரவேற்று, அவர்கள் மூட்டை முதற்கொண்டு பாதுகாத்து, மாப்பிள்ளைகளை வழியனுப்புவதுபோல உழைக்கிறார்கள். நீங்களும் அதே பணந்தான் கொடுத்திருக்கிறீர்கள். கப்பல் புறப்படப் போகிறது. இந்த ஆபீஸ் துரை மேல்மாடியில் உட்கார்ந்து உல்லாசமாகக் குடித்துக்கொண்டிருக்கிறான். இவன் கப்பலுக்கு வந்து சீட்டுக் கொடுத்த பிறகு தான் கப்பல் புறப்படவேண்டும். நீங்கள் வந்திருப்பதை

அவனுக்குத் தெரிவிக்கிறேன். அவன் உங்களை வந்து பார்ப்பான். நீங்கள் பயந்துகொண்டு மரியாதையாகப் பேசாதீர்கள். அவன் உங்கள் எஜமானன் அல்ல. நீங்கள் கொடுத்திருக்கும் பணத்திற்கு உழைக்கக் கடமைப்பட்டவன். இரைந்து சத்தம் போட்டுத் தடபுடலாகப் பேசுங்கள். 'சாமான் கிடைக்காமல் பயணம் தடைப்பட்டுவிட்டால் சும்மா விடமாட்டேன். சரியான கவனிப்பில்லை. உங்கள் சொற்படி உங்கள் கூலிகளிடம் ஒப்படைத்த சாமானைக் காணவில்லை. எனக்கு ஏதாகிலும் வழி பிறக்கும் வரையில் கப்பல் துறைமுகத்தை விட்டு நகரக்கூடாது' என்ற தோரணையில் விறைப்பாகப் பேசுங்கள். இல்லாவிட்டால் அந்தப் பயல் மசியமாட்டான்" என்று புத்தி கூறி, குடித்துக் கொண்டிருந்த துரைமகனுக்கு என் வரவை அறிவித்தார்.

துரை ஐந்து நிமிஷத்திற்கெல்லாம் கீழே இறங்கிவந்து என்னைப் பார்த்தார். ஆனால் அவர் குடிவெறியில் ஆழ்ந்தவராகக் காணப்படவில்லை. எனினும் குமாஸ்தா சொல்லிய பாடத்தைப்போலவே கூச்சல் போட்டுத் தடபுடலாக, பயத்தைக் காட்டாது அதிகாரமாகவே பேசினேன். என் பேச்சின் பயனோ, துரையின் குணமோ தெரியாது; 'ஏன் கூச்சல் போடுகிறாய்? நான் உன்கூட வந்து சாமானைப் பார்த்து எடுத்துக்கொடுக்கிறேன்' என்று சொல்லிவிட்டு, தொப்பியை எடுப்பதற்காக மேலே சென்றார். இதை யெல்லாம் மறைவிலிருந்து கேட்டுக்கொண் டிருந்த குமாஸ்தா அப்பொழுது என்னிடம் வந்து, 'பார்த்தீர்களா? நீங்கள் அந்தப் போடு போடாவிட்டால் இந்தப் பயல் மசிய மாட்டான், ஐயா! தானே தலையெழுத்தை நினைத்துக்கொண்டு ஓடிவருவான் பாருங்கள்!' என்று சொல்லி மறைந்தார். நானும் துரையும் படகிலேறிக் கப்பலுக்குச் சென்றோம். அங்கிருந்த சிப்பந்திகள் எல்லோருமாகச் சாமானைத் தேட ஆரம்பித்து, அரை மணிக்குப் பிறகு, முதல் வகுப்புப் பிரயாணிகள் காற்று வாங்கும் மேல் தட்டிற்குப் போகும் படிக்கட்டிற்கு அடியில் என் சாமானைக் கண்டுபிடித்தார்கள். உடனே பெட்டிகளைத்

திறந்து எல்லாம் சரியாக இருக்கின்றனவா என்று பார்த்தேன். ஒன்றும் களவு போகவில்லை. வைத்தது வைத்தபடியே இருந்தது. இந்த அமளியில் என் சார்பாக இவ்வளவு பொறுப்பை ஏற்றுக்கொண்டு உதவிய துரைக்கு வந்தனம் கூற மறந்துவிட்டேன். எனக்குத் தோது சொல்லிய இந்தியக் குமாஸ்தாவிற்கும் வந்தனம் அளிக்கவில்லை.

என் சாமான் கண்டுபிடிக்கப்பட்ட ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் கப்பல் நங்கூரம் தூக்கப்பட்டது. நடுநிசியில் களங்கமற்ற நிலாவின் வெள்ளிமயமான ஒளியின் பிரகாசத்தில், பளிங்குபோல அசைவற்று விரிந்து கிடக்கும் கடலில் கம்பீரமாக, கப்பல் ஆடாது அசங்காது அன்னப் பறவை தண்ணீரில் போவது போல் பிரயாணமாயிற்று. பகலில் பட்ட அல்லல்களுக்கிடையே தூங்க மனம் வராமல், இந்த அற்புதக் காட்சியைக் கவனித்துக்கொண்டே ஒரு மணி நேரத்திற்கு மேலாக அசைவற்று நின்றேன்.

கப்பல் மேற்கு நோக்கிச் செல்லச் செல்ல, கரை மறைந்துகொண்டே வந்தது. ஒரு மணி நேரத்திற்குப் பிறகு எங்கே பார்த்தாலும் வெண்ணிறமான கடல். கப்பலில் அநேகமாகப் பிரயாணிகள் எல்லோரும் உறங்கிவிட்டார்கள். என் பெட்டிகளைக் காலையில் எடுத்துக்கொள்ளலாமென மேல் தட்டிலேயே வைத்துவிட்டுப் படுக்கையறையை அடைந்தேன். எல்லோரும் அயர்ந்து தூங்கிக்கொண் டிருந்தார்கள். அந்த அறைக்கு முன்புறத்தில் அங்கே படுத்திருப்பவர்களின் பூட்ஸ் ஐந்து ஜதைகள் வைத்திருந்தன. அவற்றை எதற்காக அங்கே வைத்திருந்தார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. இரவில் படுக்கைக்குப் போகும்பொழுது அணிந்துகொள்ளும் மாற்று உடை பெட்டியிலேயே தங்கிவிட்டதால், பகலில் தரித்திருந்த உடையுடன், காலில் அணிந்திருந்த பூட்ஸ் உட்பட அப்படியே சத்தம் செய்யாமல் ஏறிப் படுக்கையில் விரித்திருந்த விரிப்பின் மேல் படுத்தேன். உறக்கம் வரவில்லை. மனம் ஸ்ரீரங்கத்தை நாடிச் சென்றது. பெற்றோர், மனைவி, மக்கள் இவர்களுடைய ஞாபகம் ஒரு புறம். 'கண்காணாத இடத்தை நாடிச் சென்று

பெறவேண்டிய அவசியம் இல்லாத ஒரு வித்தையைக் கற்க வேண்டி, என்னவெல்லாம் செய்ய வேண்டியதாக இருக்கிறது?' என்ற எண்ணம் ஒருபுறம். என்னுடன் பெட்டி போன்ற அந்த இடுக்கறையில் தூங்குபவர்கள் ஐந்து பிரெஞ்சுக்காரர்கள்; ஆங்கில வாசனையே அறியாதவர்கள். அதிக வெப்பமான இரவு. அதோடு களையாத என் உடை. அலையே இல்லாத கடலில் என் மனம் அலைகளைக் கிளப்பி உறக்கத்தைத் தடுத்துவிட்டது. விடியற்காலை நேரத்தில்தான் சற்றுக் கண் அயர்ந்தேன்.

# கப்பல் பிரயாணம்

நான் முழு வெள்ளையர்கள் கப்பலில் அன்று வரையில் பிரயாணம் செய்தது இல்லை. சென்னைக்கும் ரங்கூனுக்கும் ஓடிக்கொண்டிருக்கும் கப்பல்களில் பிரயாணம் செய்ததுண்டு. ஆனால் அதில் கப்பலோட்டிகளும், உயர்தர அதிகாரிகளும் ஆங்கிலேயர்களாக இருந்தபோதிலும், அவர்கள் வெகு சிலரே. பெரும்பாலோர் இந்தியர்களே. ஊழியம் செய்பவர்களும், பிரயாணிகளுக்குத் தேவையானவற்றை மேற்பார்வை பார்ப்பவர்களும் வங்காள முஸ்லிம்களும், கோவாக்காரர்களுந்தாம். நான் கொளும்பில் ஏறிய பிரெஞ்சுக் கப்பலில் எல்லோரும் வெள்ளைக்காரர்கள். மருந்திற்குக்கூட ஒரு கறுப்பு இந்தியனோ அல்லது வெளுத்த இந்தியனோ இல்லை. தச்சுவேலை செய்யும் இரண்டு சீனர்களைத் தவிர ஆசியாவைச் சேர்ந்தவர்களே இல்லை. கப்பலோட்டும் மாலுமி முதல் தோட்டி உட்பட எல்லோரும் ஆங்கிலம் அறியாத பிரெஞ்சுக்காரர்கள். என்போன்ற இந்தியனுக்கு எல்லோரும் வெள்ளையராகக் காணப்பட்டார்களே தவிர, ஆங்கில வெள்ளையன், பிரெஞ்சு வெள்ளையன் என்று பிரித்துத் தெரிந்துகொள்ளக் கூடிய பழக்கம் இல்லை. பழகினவர்களுக்குக்கூட இந்தப் பாகுபாட்டைக் கண்டு பிடிப்பது கடினமாக இருக்கும்.

இரவு வெகு நேரம் விழித்திருந்து உறங்கினபடியால் என் அறையில் இருந்த மற்றவர்கள் அதிகாலையில் படுக்கையை விட்டு எனக்கு முன் எழுந்து போய்விட்டார்கள். நான் கண்ணை விழிக்கும்பொழுது சூரியன் உதயமாகி ஒருமணி நேரம் இருக்கலாம். நான் படுத்திருந்த மேல்தட்டிற்கு எதிரே மேல்தட்டில் இருந்த ஒரு பிரெஞ்சுப் பிரயாணி மட்டிலும், கண்ணை விழித்துக்கொண்டு என்னைக் கவனிப்பதைக்

கண்டேன். நான் அவனைப் பார்த்ததும் அவன் புன்சிரிப்புடன் எனக்குத் தெரியாத பாஷையில் ஏதோ சில வார்த்தைகள் சொன்னான். அது பிரெஞ்சுப் பாஷை என்று பிறகு தெரிந்து கொண்டேன். நான் உடையைக் கழற்றாமல் காலில் பூட்ஸ், கழுத்தில் காலர், டை இவைகளுடன் மூடியிருக்கும் படுக்கைக் கம்பளியின் பேரில் படுத்திருக்கும் விநோதத்தைக் கண்டோ, என் தலைமயிர் வெட்டி யிருக்கும் அழகைக் கண்டு வியந்தோ, என் நிறத்தையும் முக வெட்டுக்களையும் கண்டு சிரித்தோ, கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லத் தெரியாமல் படும் அவதியைக் கண்டோ, எதற்கு அவன் மகிழ்ந்தானோ எனக்குத் தெரியாது. சற்று நேரம் கைகளால் ஜாடை காண்பித்துப் பிறகு முகத்தை மூடிக்கொண்டான்.

நான் மெள்ளக் கீழே இறங்கி அறையை விட்டு வெளியே வந்தேன். நடையில் சூரிய வெளிச்சம் அடித்துக்கொண் டிருந்தது. அறை வாயிலில் நான்கு ஜதை காலி பூட்ஸ் வைக் கப்பட் டிருந்தன. அவைகள் அதிகப் பளபளப்பாக இல்லை. 'ஏன் இவைகள் இங்கே வைக்கப்பட் டிருக்கின்றன? இவை யாருடையவை?' என்ற கேள்விகள் என் உள்ளத்தில் எழுந் தன. கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்றாலோ, அங் கும் இங்கும் போய்க்கொண் டிருந்தவர்களில் ஒருவருக்காவது ஆங்கிலம் தெரியவில்லை. காலில் தரிக்கும் பூட்ஸ் அழுக் கடைந்திருக்கும் ஆகையால் அதை அறைக்குள் எடுத்துப் போகக்கூடாது என்பதற்காக இருக்கலாமென நினைத்தேன். என்னைப்போன்ற இந்தியர்களுக்கு, இந்த வழக்கம் நம்முடைய ஊர் வழக்கத்தை ஒட்டியது போலல்லவா இருக்கிறது என்று தோன்றும். நாம் நம்முடைய வீடுகளில் செருப்பு, பூட்ஸ் முதலியவைகள் அணிந்துகொண்டு நடப்பதில்லை அல்லவா? அதுபோலவே பிரெஞ்சுக்காரர்களுடைய வழக்கமும் இருக்க லாமென எண்ணினேன். சில நிமிஷங்களுக்கெல்லாம் ஒரு வெள்ளை வேலைக்காரன் வந்து அவைகளைப் பொறுக்கி எடுத் துக்கொண்டு போவதைப் பார்த்தேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை. தினசரி காலில் போடும் பூட்ஸைத் தினசரி

புருஷ் போட்டுத் தேய்த்து, அழுக்கெடுத்துப் புது வர்ணம் தடவித் தயாரிப்பது வழக்கம் என்பது எனக்குத் தெரியாது; பார்த்ததும் இல்லை. நான் அணிந்துகொண் டிருந்த பூட்ஸ் களைத் துடைத்துப் பேணிப் பார்த்து வழக்கமில்லை. சீமைக் குப் புறப்படும்பொழுது புதிய பூட்ஸ் வாங்கவில்லை. இங்கு வாங்கவேண்டா மென்றும், லண்டன் சென்று அங்குள்ள நடைமுறைக்குத் தக்கபடி, உடை, பூட்ஸ், தொப்பி முதலிய வைகளை வாங்கிக் கொள்ளலாமென்றும் என் நண்பர்கள் சொல்லியிருந்தார்கள். அதை நம்பியே நான் இந்தியாவில் இருக்கும்பொழுது எந்த உடைகள் உயர்ந்தவையென நினைத் திருந்தேனே, அவற்றை மட்டிலும் போட்டுக்கொண்டு புறப் பட்டேன். ஆனால் அந்தக் கப்பலில் இருந்த வெள்ளை வேலைக் காரர்கள் சாயங்கால வேளையில் சாப்பாட்டு மேஜையில் ஊழி யம் செய்யும்பொழுது போட்டிருக்கும் உடையை விட என் உடை கேவலமாகத்தான் இருந்தது. உடையே இந்தக் கதி யில் இருக்கும்பொழுது என் பூட்ஸைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை!

நான் நடையில் நின்றுகொண்டு பூட்ஸ் தத்துவத்தைப் பற்றி மனோராஜ்யம் செய்துகொண் டிருக்கையில், ஆணும் பெண்ணுமாக அநேக வெள்ளையர்கள் அவசர அவசரமாகக் குறுக்கும் நெடுக்கும் போய்க்கொண் டிருந்தார்கள். 'ஏன் இவ் வளவு தடபுடலாக இவர்கள் ஓடிக்கொண் டிருக்கிறார்கள்' என்பது எனக்குப் புரியவில்லை. கடைசியாக நான் நின்றி ருந்த இடத்தை விட்டு அகன்று, கப்பலிலுள்ள சாப்பாட் டிடம், குளிக்கும் அறை, மேல்தட்டு முதலிய இடங்களை யெல்லாம் பார்த்துத் தெரிந்து கொண்டு, பல் விளக்கிவிட்டு, சாப்பாட்டு அறைக்குச் சென்றேன். காலை வேளையில் எல் லோரும் சேர்ந்தாற்போல மேஜையில் உட்கார்ந்துகொள்ளும் வழக்கம் இல்லை. அவரவர்கள் வந்து மேஜையின்மேல் வைக் கப்பட்டிருக்கும் பதார்த்தங்களில் தங்களுக்குத் தேவையான வற்றைத் தாங்கள் உட்காரும் இடத்திலிருக்கும் தட்டில் வைத்துக்கொண்டு உண்டு, பிறகு காப்பியோ, டீயோ, எது

விருப்பமோ அதைக் கோப்பையில் ஊற்றிக் குடித்துவிட்டுப் போகவேண்டியது. இந்தப் பழக்கமும் எனக்கு இல்லை. ஆகையால் சற்று நேரம் சும்மா உட்கார்ந்திருந்தேன். ஒருவரும் என்னைக் கவனிக்கவில்லை. கப்பலிலுள்ள பெரும்பாலோர் நான் வருவதற்கு முன்னரே வந்து உண்டுவிட்டுப் போய்விட்டார்கள். எனக்குப் பிறகு வந்தவர்கள் தங்களுக்குத் தேவையானவற்றை எடுத்துக்கொண்டு உண்டுவிட்டுப் போவதைப் பார்த்தேன். நாமும் அப்படியே செய்யலாமோ என்கிற சந்தேகம் எனக்கு. யாரையும் கேட்பதில் பயன் இல்லை.

அப்படிச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்த பொழுது, வெள்ளை வேலைக்காரன் ஒருவன் சாப்பாட்டுச் சாமான்களை எல்லாம் எடுத்து, மேஜையைச் சுத்தம் செய்யத் துவக்கிவிட்டான். அவனைத் தடுத்து 'நான் இன்னும் சாப்பிடவில்லை' என்று சமிக்ஞை செய்தேன். அவன் பதிலுக்கு எனக்கு எது வேண்டும் என்று கேட்டான். எனக்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. அவன் என்ன கேட்டானென்று தெரிந்தால் அல்லவோ?

அன்றைவரையில் நான் ஐரோப்பிய உணவு உண்டதும் இல்லை; உண்பதைப் பார்த்ததும் இல்லை. மேலும் எனது உணவு சுத்த சைவம்; கோழி முட்டையைக்கூட நான் கையால் தொட்டதும் இல்லை; உண்டதும் இல்லை. வைத்தியப் படிப்பிலும், தொழிலிலும் பல வருஷங்கள் ஈடுபட்டிருந்த போதிலும், உணவைப் பொறுத்தமட்டிலும் நான் பரம வைணவ வைதிகனுகவே இருந்தேன். 'கப்பலில் தனிச் சைவச் சாப்பாடென்பது இல்லை', இரண்டும் கலந்தேதான் இருக்கும்; என்று சொன்னுர்கள். அதில் எது மாமிச சம்பந்தமானது, எது இல்லாதது என்பது தெரிந்தாலல்லவோ நமக்கு வேண்டியதைக் கேட்கலாம்? அல்லது எடுத்துக் கொள்ளலாம்? மனத்தில் இந்தச் சந்தேகம் ஊசலாடிக்கொண்டிருக்கையில், தெளிவாகச் சைவம் என்று தெரிந்த உணவையே உட்கொள்ள வேண்டுமென முடிவு செய்துகொண்டேன். ஒரு ரொட்டித் துண்டு, வெண்ணெயுடன் சில பிஸ்கோத்து, ஒரு வாழைப்

பழம் இவைகளை எடுத்து என் இடத்திலுள்ள தட்டில் வைத்துக்கொண்டு அவற்றை உண்டு காபியையும் அருந்திப் பசியைத் தீர்த்துக்கொண்டேன்.

பிறகு கப்பலின் மேல்தட்டில் போட்டிருந்த சாய்மான ரெட்டு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டேன். பாஷை தெரியாததால் வாய்ப்பூட்டு ; காதிற்கோ பொருள் விளங்காத சத்தம் ; கண்முன்னே நடமாடும் ஆண் பெண் அடங்கிய வெள்ளைக்கூட்டம். அவர்களுடைய குதூகலந்தான் என்ன ! என்ன சிரிப்பு, என்ன ஆனந்தம்! ஆணும் பெண்ணும் என்ன கை கோப்பு! கீச்சுக்கீச்சு என்று என்ன பேச்சு! என்ன ஓட்டம்! என்ன விளையாட்டு! இவற்றையெல்லாம் சற்று நேரம் விடாது கவனித்தேன். கவலையற்றுக் களிக்கூத்தாடும் மனித சமூகத்தைப் பார்த்தவுடனே என் ஆச்சரியத்திற்கு அளவில்லை. எதனால் இவ்வளவு உத்ஸாகம்? இரு பாலர்களும் ஒருவருடன் ஒருவர் பரிவு, சொந்தப் புருஷனாக இருந்தாலும், அன்னியனுடைய மனைவியாயிருந்தாலும் ஒருவருக்கொருவர் அன்னியோன்யமாகப் பழகுவது, கையோடு கைகோத்துக் கொண்டு நடக்கும் நடை, பகட்டான உடை, கப்பல் பிரயாணத்திற்கென மெல்லிய ரப்பர் ஜோடுகள், உடம்பை மூடியும் மூடாமலுமுள்ள பெண்டிரின் மெல்லிய பட்டாடைகள், ரவிக்கைகள், ஆண் மக்கள் கழுத்தில், மடித்துப் பால் போன்றுள்ள வெண்மையான காலர்கள், காலில் பளபளப்பான பூட்ஸ்கள், மடிப்புக் கலையாத கோட்டு, நிஜார் இவைகளையெல்லாம் பார்த்துப் பார்த்து மலைத்துக்கொண்டு பொழுது போவதே தெரியாமல் உட்கார்ந்திருந்தேன்.

மணி ஒன்பதரை ஆயிற்று. எல்லோரும் தடபுடலாகக் கீழே இறங்கினார்கள். காலைச் சாப்பாட்டு மணியைக் கேட்டுவிட்டுத்தான் இந்த ஓட்டம், நான் காபி சாப்பிட்டு ஒரு மணி நேரங்கூட ஆகவில்லை. மறுபடியும் சாப்பிடப் பசி எடுக்கவில்லை. மேஜையில் உணவு அருந்தத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். அதிலும் பல வெள்ளையர்களுடன் உட்கார்ந்து சாப்பிடும் முறையையும் தெரிந்துகொள்ள

வேண்டும். அன்னிய உணவு உண்டு வயிற்றிற்கும் பழக்கம் உண்டுபண்ணிக் கொள்ளவேண்டும். இவற்றை யெல்லாம் நினைத்து மற்றவர்களைப் போலவே நானும் உணவு அறைக்குச் சென்றேன். எனக்கு எதிரில் என்னைப் போன்ற நிறமுள்ள ஓர் இந்தியரைக் கண்டேன். என் இடப்புறத்தில் ஒரு ருஷ்யா தேசத்திய வெள்ளை யஹூதி வியாபாரி. இவர்களைத் தவிர மற்றையவர் ஆணும் பெண்ணுமாகப் பதினைந்து பேர்கள் பிரெஞ்சு தேசத்தினர். சில நிமிஷங்களுக்கு ஒரு தரம் ஒரு தட்டு நிறையப் பலவிதச் சூடான உணவுகளை வரிசை வரிசை யாக ஊழியர்கள் எடுத்து வருவதையும், எங்கள் ஒவ்வொருவர் முன்பாகவும் அச்சிடப்பட்டு வைத்திருக்கும் உணவுப் பட்டி யலின்படி வந்துகொண் டிருப்பதையும் கண்டேன். வேண்டிய வற்றைத் தேவையான அளவு அவரவர்கள் எடுத்துக் கொண் டவுடன், மற்றவர்களும் முறையே அவ்வாறு செய்வதையும், மேஜையைச் சுற்றிச் சுற்றிப் பதார்த்தங்களைச் சுமந்து வரிசை யாக வரும் ஊழியர்களையும் பார்த்தேன். எல்லோரும் உத் ஸாகமாகப் பேசிச் சிரித்து, கரண்டி, கத்தி, முள் இவைகளின் உதவியைக் கொண்டு உண்பதைக் கவனித்தேன். பட்டியலில் எழுதப்பட்டிருக்கும் உணவின் விவரம் எல்லாம் பிரெஞ்சுப் பாஷை. எனக்குப் பாஷை தெரியாததைப் பற்றிக்கூட அவ் வளவு கவலையில்லை. மாமிச உணவிற்கும், சைவ உணவிற்கும் வித்தியாசம் கண்டுபிடிக்க வேண்டுமே! யாரைக் கேட்பது? யார் எனக்கு வழி காண்பிப்பார்கள்? இதே கவலையில் போஜனக் காட்சியைக் கண்டு களித்தேனே தவிர, உண்டு களிக்கவில்லை. கடைசியாக வந்த 'பிஸ்கோத், பழம், காப்பி இவைகளைக்கொண்டு வயிற்றை ஒருவாறு நிரப்பினேன். மற்றவர்கள் உண்ணும் விதத்தையும் மேஜையின் முறை யையும் கூடியமட்டில் தெரிந்துகொண்டேன்.

எனக்கு எதிராக உட்கார்ந்திருந்த இந்தியரைக் கண்டு, அவருடன் பேச விரும்பி, ஒரு புன்முறுவலுடன் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தேன். ஆனால் அந்தப் பேர்வழி சற்றுப் பிகு வாகவே தமது மீசையை முறுக்கிவிட்டுக்கொண்டு, என்னை

அசட்டை செய்து பதில் கூடச் சொல்லாமல் இருந்தார். அவர் பிரெஞ்சு நன்றாகப் பேசுவதையும் பார்த்தேன்.

அவரை நான் அதோடு சும்மா விட்டுவிடவில்லை. ஒரு நாளைக்கு அரை மணி நேரம் வீதம் நான்கு தடவை எனக்கு முன்பாக மேஜையில் உட்கார்ந்தும், கப்பலில் மேலும் கீழும் போகும்பொழுதும், வரும்பொழுதும் சந்திக்கவேண்டிய அவசியம் இருக்கும் நம் நாட்டினரை எப்படி விட்டுவிடுவது? அன்றிரவு அவருடன் பேசிய பொழுது சில விவரங்கள் தெரிய வந்தன. அவருடைய ஊர் புதுச்சேரி. பிரெஞ்சு இந்தியக் குடிமக்களில் ஒருவர். பிரெஞ்சுப் படிப்பில் பி.ஏ. பரீக்ஷை கொடுத்தவர். கேவலம் பிரிட்டிஷ் இந்தியர்களைப் போலத் தாங்கள் அடிமை வாழ்வு வாழ்வதில்லை யென்று அவருக்குப் பெருமை உணர்ச்சி. புதுச்சேரி, குடியரசு நாடு. அதிலும் இந்த இளவயசிலேயே (அவருக்குச் சுமார் இருபத்தெட்டு வயசு இருக்கலாம்) அவருக்கு மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள கோல்டு கோஸ்டு (Gold Coast) பிரெஞ்சுக் கவர்னருக்கு அந்தரங்கக் காரியதரிசி பதவி கிடைத்து, அங்கு வேலையில் சேருவதற்காகப் பிரயாணம் செய்பவர். ஆங்கிலம் கொஞ்சம் தெரியும். பிரெஞ்சு பி.ஏ.க்கு இரண்டாவது பாஷையாக ஆங்கிலம் படித்த பழக்கம். ஆங்கிலத்தைக் காட்டிலும் தமிழில் பேசுவது அவருக்குச் சுலபமாக இருந்தது. இந்தச் சங்கதி தெரிந்த பிறகு நாங்கள் இருவரும் பாரிஸ் நகரம் போய்ச் சேரும் வரையில் தமிழில்தான் பேசி வந்தோம். அவருடைய பெயர் தோமாஸ் அருள். 'இந்தக் கப்பலில் பிரயாணம் செய்பவர்கள் இந்தோ சைனுவிலிருந்து தங்கள் தாய்நாட்டிற்குத் திரும்பும் சிறு வெள்ளை உத்தியோகஸ்தர்கள் என்றும், மேம்பட்ட படிப்புள்ளவர்கள் அல்லரென்றும், அவர்களிடமிருந்து அதிக நயமான நடவடிக்கையை எதிர்பார்க்கக்கூடாதெனவும்' அவரிடமிருந்து தெரிந்துகொண்டேன். என் பக்கத்தில் உட்கார்ந்திருந்த யஹூதி நண்பரிடந்தான் நான் பொழுது போக்குவது. நல்ல படிப்பாளி. வசீகரமுள்ள நடவடிக்கை. ஜாதிச் செருக்கு, நிறச்செருக்கு என்

பவை சற்றேனும் இல்லாதவர். இப்பொழுது வருஷங்கள் முப்பத்தைந்து கடந்தும் அவருடைய நட்பும் குணமும் என் மனத்தை விட்டு அகலவில்லை.

கப்பலிற் பிரயாணம் செய்வது சுகமா, வெறும் பொழுது போக்கா, நோய்வாய்ப்பட்டு மீண்டவர் சுகம் பெறும் ஒரு சாதனமா? எனக்கு நிச்சயமாகச் சொல்ல முடியாது. கல்யாணம் ஆகவேண்டிய இளைஞர்கள், சமீபத்தில் மணமுடிந்து அருவருப்பு ஏற்படக்கூடிய பருவம் வராத ஆண்களும் பெண்களும், மூப்பினால் உடல் தளர்ந்த வயோதிகர்கள் ஆகியவர்களுக்குத்தான் வெகு நாள் கப்பல் பிரயாணம் உத்ஸாகத்தையும் ஓய்வையும் அளிக்கும். அகண்டாகாரமான நீலக்கடலில் இரவு பகலாய், ஓயாது ஓடிக்கொண்டிருக்கும் ஒரு கொட்டாங்கச்சி போன்ற யந்திரக் கப்பலில், நோயற்ற ஒரு மனிதன் வெகுநாள் பிரயாணம் செய்யக்கூடாது. அதனால் ஒருவித அலுப்பும், வெறுப்புமே உண்டாகும். முதல் நாள் எல்லாம் புதுமையாக இருப்பதால் அதில் ஓர் உத்ஸாகம் பிறப்பது உண்மை. இரண்டு அல்லது மூன்று நாட்கள் சென்றால் 'ஓயாமல் ஓடும் இந்தக் கப்பல் எப்பொழுது நிலத்தைக் காணும்' என்ற பேரவா உண்டாகிறது. ஒரு நாளைக்கு மேலும் கீழுமாக எவ்வளவு தடவைதான் ஓடுவது? ஒரே மாதிரியாகச் சில விளையாட்டுக்களையே எவ்வளவுதரம் ஓயாது விளையாடுவது? எப்படி மூன்று நான்கு வேளை விதம் விதமான உணவுகளை இடைவிடாது புசிப்பது? எப்படிப் பார்த்தவர்களையே பார்த்துக் கொண்டு, பேசுவதையே பேசிக்கொண் டிருப்பது? இந்தத் தொல்லையோடு, பாஷையே தெரியாத ஒரு கூட்டத்தினரிடை, பழக்கம், வழக்கம், நிறம், ஒழுக்கம், உணவு எல்லாம் மாறுபட்ட ஓர் இனத்தினரிடையே அகப்பட்டுக்கொண்டால், பிரயாணம் உல்லாசமாக இருந்ததென்று எப்படிச் சொல்வது?

முதல் இரண்டு மூன்று நாட்களில் காலையிலும் மாலையிலும் கப்பலின் மேல்தட்டில் உட்கார்ந்துகொண்டு மனக் கோட்டை கட்டி, கனவு கண்டுகொண் டிருந்த பொழுது நிகழ்ந்த சம்பவங்கள் என்றும் மறக்கமுடியாதவை. கடல் நீர்

ஏன் ஆழ்ந்த கருநீலமாகத் தோன்றுகிறது? தண்ணீரைக் கையிலெடுத்தால் நீலமாகக் காணப் படவில்லையே! நீலம் ஆழத்தினால் உண்டானதா, ஆகாயத்தினால் உண்டானதா? மேலும் நீலம், கீழும் நீலம். எங்கும் கட்டுக்கடங்காத, எல்லையற்ற கருநீலம்; மனத்தால் காணக்கூடாத கடவுளின் நிறம் இதுதானோ? அதற்காகத்தான் கடவுளுக்கு நீல நிறத்தைக் கற்பனை செய்தார்களோ கவிஞர்? இவ்வாறெல்லாம் யோசனைகள் படர்ந்தன.

அந்திப்பொழுது வர வர, மறையும் ஜோதியான சூரியன் எதற்காக விநோதங்கள் செய்கிறான்! மறைவதுபோல ஒரு மாயை; நீரில் முழுகி விடுவதுபோலத் தோற்றம். அப்படி மறையும்பொழுது என் கண்ணால் கண்டு களிக்கக்கூடிய ஜோதி! தன்னுடைய ஜோதி மட்டுமா? தனது ஒளியை ஆகாயத்தில் விடுத்து, என்ன விநோத வர்ண விளையாட்டுகள்! கணத்திற்குக் கணம் மாறுதல். அந்த நிறங்களுக்குத்தான் ஓர் எல்லையுண்டோ? பத்தரை மாற்றுத் தங்கம் என்றால் அந்த ஒளிதானோ? உலக வாழ்வின் கற்பனைதானோ? மறையாதது போல் மறையும் பாவனை நமது ஜீவதத்துவமோ? விடியற் காலையில் அதே அலங்காரத்தோடு தண்ணீரினின்று வெளியே கிளம்பும் தோற்றம். இந்த இயற்கை அழகை உலகில் மலை உச்சியிலும் நடுக்கடலிலுள்ள கப்பலிலும் இருந்துதான் காணமுடியும்.

முதல் நாள் இந்தக் காட்சிகளை ஆனந்தத்துடன் கவனித்தேன். மறுநாள் ஆச்சரியத்துடன் வியந்தேன். மூன்றாம் நாள் அலுப்பில்லாமல் பார்த்தேன். நான்காம் நாள், 'இந்தச் சூரியனுக்கு வேறு என்ன வேலை? தினம் நடிப்பதுதான்; என்ற ஓய்ச்சல் வந்துவிட்டது. ஐந்தாவது நாள், சூரியனுடைய ஜால வித்தைகளைப் பார்ப்பதில் உத்ஸாகம் போய்விட்டது; அந்தப் பாழும் கப்பல் எப்பொழுது கரை சேரப்போகிறது என்ற ஏமாற்றம் ஆரம்பமாயிற்று.

தினம் 12 மணிக்குக் கப்பலில் சங்கு அலறும். கீழே ஸலூனுக்குப் (சாப்பாட்டு அறைக்கு) போனால் அங்கிருக்கும் படத்தில் இருபத்து நான்குமணிக்கு எவ்வளவு மைல்

கப்பல் ஓடியிருக்கிறது, எங்கே இருக்கிறது என்பதை ஒரு சிறிய வர்ணக்காகிதக் கொடியின் மூலம் காட்ட ஓர் அடையாளம் இருக்கும். இவைகளைப் பார்த்து ஓர் ஆறுதல் ஏற்படும். மேற்கே கப்பல் போய்க்கொண்டிருப்பதால், கடிகாரத்தைத் தினம் அரைமணி நேரம் தள்ளிவைக்கவேண்டும். அக் காலத்தில் மனிதவர்க்கத்தில் போர் நடை பெறுததால் சூரியனுடைய நடையை ஒத்துக் கடிகாரங்களும் ஓடிக்கொண்டிருந்தன. மணி மாறுதல், கப்பல் ஓடுதல், இன்னும் இந்தச் சிறைவாசம் எவ்வளவு நாட்கள் என்று கணக்கிடுதல், ஏதாகிலும் ஒரு கப்பல் தென்பட்டால் அது மறையும் வரையில் சிறிது நேரம் அதையே வெறும் கண்களாலும், பூதக்கண்ணாடிகளாலும் கவனிப்பது - இப்படியெல்லாம் பொழுது போக்குவதுதான் நான் கப்பலில் செய்த வேலைகள்.

கறுப்பு நண்பரான தமிழர் தோமாஸ் அருள், வெளுப்பு நண்பரான ஆங்கிலம் பேசும் ருஷிய யூதி - இவர்களைத் தவிர மற்ற மனிதர்கள் அந்தக் கப்பலில் இருந்ததும் இலலாததும் எனக்கு ஒன்றுதான். நேரத்தைக் கொலை செய்வதற்காக கப்பலின் மேல்தட்டில் நாற்காலியில் சாய்ந்து தூங்கியும் தூங்காமலும் கண்ட பகற் கனவுகளில் ஒன்று ஞாபகம் இருக்கிறது. நமது நாடு சுதந்தர நாடாக இருந்து, நமக்கும் கப்பல்கள் இருந்து அதை நாம் ஓட்டும் திறமையும் பெற்றிருக்கும் பொழுது, கப்பலிலுள்ள இந்தியர்களின் நடுவில் நமது நாட்டுப் பாஷை, பழக்க வழக்கம் தெரியாத வெள்ளையர் ஒருவர் வந்து அகப்பட்டுக்கொண்டால் நாம் எவ்விதம் அவரிடம் நடந்துகொள்வோம் என்கிற மனக்கோட்டை, என் எண்ணங்களைச் சொல்லி என் கனவின் ரகசியத்தை வெளியிட எனக்கு இஷ்டமில்லை.

ஆனால் கப்பலோட்டிகள், 'ஏன் ஐயா எங்கள் கப்பலில் ஏறினாய்? நாங்கள் உன்னைக் கூப்பிடவில்லையே!' என்று சொல்லலாம். 'மற்றவர்களைப்போலவே நானும் கையிலுள்ள பணத்தைக் கொட்டியதில்தான் என்னை ஏற்றினீர்கள், கப்பல் நடுக்கடலில் போய்க்கொண் டிருக்கும்பொழுது நான் வந்து

ஏறவில்லையே. எங்கள் துறைமுகத்தில் ஒரு நாள் தங்கி எங்கள் பொருளை ஏராளமாக ஏற்றிச் செல்வதனால்தான் நான் ஏறும்படி நேர்ந்தது' என்று நான் பதில் சொல்லுவேன். ஆனால் சாமான்கள் போட்ட இடத்தில் சும்மா கிடக்கும். நான் அப்படியா?

# கப்பலில் களியாட்டம்

மோான்ஸியர் தோமாஸ் அருள் அவர்களுடைய நட்புக் கிடைத்த பிறகு தினசரி சாப்பாட்டுமேஜையில் உட்கார்ந்தவுடன் வரும் பதார்த்தங்களின் விவரம் தெரிந்து கொண்டுதான் நான் சாப்பிட ஆரம்பிப்பது வழக்கம். மேஜைக்கு வரும் உணவு வகைகளில் இது மாமிச சம்பந்தமானது என்று வெளித் தோற்றத்திலிருந்துமட்டும் அறிய முடியவில்லை. அநேகமாய் முக்கால் வாசிக்குமேல் மாமிச சம்பந்தமானதாகவே இருக்கும். எனது பிரயாணம் முழுவதும் அரைப் பட்டினியாக இருந்தேன் என்பது உண்மை. என் உடலும் உருகிக்கொண்டே வந்தது. ஆனால் பலவீனமாக, தெம்பு குறைந்த உணர்ச்சி இல்லை. பிரயாணத்தின் புதுமை ஒரு புறம். இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழ்ச்சி அடைவது மற்றொரு புறம். புது மனிதர்களின் நடை, உடை, பாவனை, இவைகளைக் கவனித்துக்கொண்டு, உல்லாசப் பிரயாணம் செய்ததே மனத் தளர்ச்சி உண்டாகாமல் இருந்ததற்குக் காரணம்.

மனிதன் உடல் வளர்ப்பதற்காகத் தேவையான உணவு மிகவும் சொற்பம். அரசனாக இருந்தாலும், ஆண்டியாக இருந்தாலும் சற்றேறக் குறைய ஒரே அளவுதான் உண்ணக் கூடும். பொருள் உடையவன் பல வகைப்பட்ட உணவை அடிக்கடி சாப்பிட்ட போதிலும் அது நாவிற்கு மட்டிலும் ருசிப் பழக்கம் அதிகரிப்பதைத் தவிர வேறு குணம் இல்லை. உண்ணாவிரதம் இருப்பது மனிதர்களுக்கு ஏற்பட்ட பழக்கங்களில் ஒன்று. அது மதக் கோட்பாடு, அநுஷ்டானம் இவைகளையொட்டிக் கையாளப்பட்டு வருகின்றது. பட்டினி சுக வாழ்வு தரும் என்பதை இன்னும் உலகம் அறியவில்லை, வியாதியின் நிமித்தம் மருத்துவர்கள் உணவைக் குறைத்து

வைத்தியம் செய்வது எல்லோருக்கும் தெரிந்ததுதான். உடல் உழைப்பு அதிகமின்றி மூளை வேலை அதிகம் உள்ளவர்களுக்குக் குறைந்த உணவு தேக ஆரோக்கியத்தை நிலைநிறுத்துவதோடு, மற்ற நோய்கள் வராமலும் பாதுகாக்கும். நம் நாட்டில் சித்தயோகிகள் பல மாதங்கள் உணவு உண்ணாமலும் நீர் அருந்தாமலும் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். 'மனிதன் உணவில்லாமல் பத்து நாட்களுக்கு மேலாக இருக்க முடியாது' என்று மேல்நாட்டு வைத்திய நிபுணர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் இது தவறானது என்பதை அயர்லாந்தில் மாக்ஸ்வீனி என்பவரும் நம் நாட்டில் சிறைப்பட்டுச் சத்தியாக்கிரகம் செய்த ஜதிந்தாஸ் போன்ற பல இளைஞர்களும் மூன்று மாதம் வரையில் உயிருடன் இருந்து காண்பித்திருக்கிறார்கள். ஆனால் பட்டினியே நிரந்தர வாழ்க்கையாக உயிர் வாழும் ஏழைகளுக்குப் பட்டினிப் பிரசாரம் தேவை இல்லை. உணவு வேண்டும், மேலும் வேண்டுமென மன்றாடிக் கொண்டு, குற்றுயிரும், குறை உயிருமாக வாழ்நாட்களைக் கழிக்கும் கோடிக்கணக்கான நம் நாட்டு ஏழைகள் ஞாபகம் வரும்பொழுது, நமக்கு உணவில் உண்டாகும் உத்ஸாகம் அடியோடு தொலைந்துவிடுகிறது.

கப்பலில் சாப்பாட்டு முறையில் குடிப்பதற்குத் தண்ணீர் வைக்கும் வழக்கம் இல்லை, தேவையானால் தனியாகக் கேட்டு வாங்கிக்கொள்ளவேண்டும். அப்படித் தண்ணீர் கேட்பவர்களை மற்றவர்களும் கவனித்து, ஆச்சரியப்படுவதும் உண்டு. தண்ணீருக்குப் பதிலாக மேஜைகளில் கண்ணாடித் தம்ளர்களில் சிவப்பு ஒயினும், வெள்ளை ஒயினும் அடிக்கடி நிரப்பிக் கொண்டிருப்பார்கள். ஆண் பெண் அனைவரும் அதைத்தான் குடிப்பார்கள். ஆனால், அவை போதை கொடுப்பதில்லை. இருந்தபோதிலும் சுத்தத் தண்ணீரில் எனக்கு இருந்த ருசி அவைகளில் கிடைக்கவில்லை. மேல் நாடுகளில் உண்ணும் போதும், பிறகும், ஒயின், சாராயம், பீர், பிராந்தி முதலியவைகள் அருந்துவது வழக்கமானதால், அது பிசகென்று யாரும் கருதுவதில்லை. பிரெஞ்சுக்காரர்கள் நிறைந்த அந்தக் கப்பலில்

இந்த வழக்கம் எனக்குமட்டும் அதிசயமாக இருந்ததே தவிர மற்றவர்களுக்கு இல்லை. இந்த அருமையான பானங்களைத் தவிர்த்து, வெறும் தண்ணீர் கேட்டுக் குடிக்கும் என் செயல் மற்றவர்களுக்கு ஒருவிதத் திகைப்பை உண்டு பண்ணியது.

ஒரு நாள் இராச் சாப்பாட்டின் பொழுது நான் ஆச்சரியப் படுவதற்குரிய சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. பாதிச் சாப்பாட்டின் பொழுது ஒரு பெரிய வெள்ளித்தட்டில் தயாரித்த விசேஷ உணவு ஒன்றின்மேரில் இறந்த வான்கோழி ஒன்றை வைத் திருந்தது. ஆனால அதற்குக் கால்கள், வயிறு ஒன்றையும் காணவில்லை. அவைகளெல்லாம் கறி சமைப்பதற்குச் சென்று விட்டன. பார்ப்பதற்கு உயிருள்ளது போல, தலையும் முகமும் உயர்த்திவைத்து இறக்கைகளும் விரித்துவைக்கப்பட் டிருந்தன. இந்தத் தட்டைத் தலைமைச் சமையற்காரர், வெகு மமதையுடனும், புன்னகையுடனும் கையில் ஏந்திக்கொண்டு உணவு மேஜையின் மையத்தில் வந்து நின்றவுடனே எல்லோ ரும் கைதட்டி ஆரவாரித்தார்கள். பிறகு தட்டும் கோழி உருவ மும் ஒவ்வொருவருக்கும் முன்னால் கொண்டுவரப்பட்டன. புன் சிரிப்புச் சிரித்தவர்கள் சிலர்; தலையை ஆட்டி வந்தனம் அளித்துப் பேசுவது போலப் பாவனை செய்தவர்கள் சிலர். இவ்வாறு அரங்கேற்றப்பட்டு உள்ளே சென்ற பிறகு அதன் கறி, சாப்பிடுபவர்களின். தட்டில் பரிமாறப்பட்டது. இது கறி செய்தவர் திறத்தையும் கறியாகிய வான்கோழியின் உடற் சிறப்பையும் காட்டுவதாகும் என்பது என் அபிப்பிராயம். நடுக்கடலிலுங்கூட மிக்க உயர்தரமான கறிவகைகள் இந்தக் கப்பலில் தயாரிக்கப்படுவதற்கு இது ஓர் அத்தாட்சி.

இந்தச் சாப்பாட்டு நாடகம் மனிதவர்க்கத்திற்குப் புது மையன்று. நாமம் போடும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பெருத்த ஊரில் வளர்ந்த எனக்குப் புதிதல்ல. நல்ல ததீயாராதனை (பணம் கொடாத இனும் விருந்துகள்) இந்த ஊரில் அடிக்கடி நடக் கும். அப்பொழுது தலைமைப் பரிசாரகன், கம்பீரமாகக் கையில் மூக்குவெள்ளிச சட்டியில் சூடான வாசனையுள்ள அக்காரவடி சிலை எடுத்துக்கொண்டு எல்லோருக்கும் பரிமாறி நூற்றுக்

கணக்காக உண்பவர்களின் புகழ்ச்சியைக் காதாரக் கேட்டு உத்ஸாகமடைவது என் நினைவிற்கு வந்தது. பணங்கொடுத்துச் சாப்பிடுவோரின் புகழைப் பெறுவது இன்னும் இதைக் காட்டிலும் நியாயமெனத் தோன்றியது. ஸ்ரீரங்கம் அக்காரவடிசிலுக்குப் பதிலாகக் கப்பலில் வான்கோழிக் கறி! இதுதான் மாறுதலே தவிர வேறில்லை.

கப்பலில் சிறைப்பட்டிருக்கும் மக்கள் அலுத்துப்போகாத வண்ணம் பலவிதப் பொழுது போக்குகளைக் கப்பல் கம்பெனியார் ஏற்படுத்துவது வழக்கம். இந்தக் கப்பலிலும் இந்த ஏற்பாடுகள் நடந்துவந்தன. மூன்று நாளைக்கு ஒரு தரம் விசேஷச் சாப்பாடுகள், பகல் நேரத்தில் பந்து விளையாட்டுக்கள், பாண்டி ஆட்டம், சீட்டு, சதுரங்கம், மேஜைப் பந்தடி, கேரம் முதலியவைகளும் முதல் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு ஆட வசதிகள் உண்டு. பிரயாணம் முடிவதற்குள் ஏதாகிலும் ஒரு நாளைக்கு ஓர் உல்லாச இரவுத் திட்டமும் நடைபெறும். அதற்கு ஆட்ட இரவு (Dance Night) என்று பெயர். நான் ஐரோப்பியர்கள் நடத்தும் களிக்கூத்தை அன்றுவரையில் பார்த்ததில்லை. ஆட்டத்தன்று பகல் முழுதும் பெண்மக்கள் கப்பலின் மேல்தட்டிற்கும் கீழ்த்தட்டிற்கும் ஓடிக்கொண்டே இருந்தார்கள். கப்பலின் கீழ்த்தட்டில் பிரயாணிகளின் பெரிய பெட்டிகளும், கனமான இதர சாமான்களும் வைக்கப்பட்டிருக்கும். அவரவர்கள் பெட்டிகளைத் திறப்பதும், மூடுவதும், பலரகமான உடைகளை எடுத்துப் பரிசீலனை செய்து, அவற்றைப் பற்றிய சர்ச்சை முடிந்து மேலே வருவதும், பிறகு கீழே போவதுமாக இருந்தார்கள். சாயங்காலம் ஐந்து மணிக்குமேல் எல்லோரும் அவரவர் அறைகளில் புகுந்துகொண்டுவிட்டார்கள். இரவு 8½ மணிக்குச் சாப்பாட்டு மணி அடித்தவுடன் ஒவ்வொருவராகப் பலவித ரசாயனப் பொருள்களின் உதவி கொண்டு அலங்காரம் செய்துகொண்டு சாப்பாட்டு அறையில் புகுவதை வெகு ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தேன். இதில் ஆண்மக்கள் உடை கண்ணிற்குப் பகட்டாக, கட்டிடம் கட்டிப் புதிதாகச் சுண்ணும்புச் சாந்து பூசியதை ஒத்

திருந்தது. மார்பு பலகைபோல விறைப்பாகச் சலவை செய்யப் பட்ட ஷர்ட்டால் மூடப்பட்டு, கழுத்து இரண்டு அங்குல உயரத்திற்கு மேலான விறைப்பான வெள்ளைக் காலர்களால் மறைக்கப்பட்டு, குனியவும் மடிந்து உட்காரவும் முடியாவண்ணம், யந்திரங்களில் கணக்காக வெட்டப்பட்ட உருவங்கள் போல எனக்குத் தோன்றினர். நன்றாக மடித்து விறைப்பாக இருக்கும் கறுப்பு உடைகளால் மற்றப் பாகங்கள் முற்றும் மூடப்பட்டு, பளபளப்பன கறுப்புப் பூட்ஸும் காலில் அணியப் பட்டிருந்தன; குனிந்த முதுகுள்ளவன்கூட விறைப்பாகக் காணப்பட்டான் அந்த உடைக்குள். அதனை அணிந்திருந் தவர்கள் சுகத்தைப் பெற்றார்களோ சதாகாலமும் கைகால் விலங்கிட்ட கைதி, விலங்கின் கொடுமையைப் பழக்கத் தினால் மறந்து தன் கைகளாலேயே தன் விலங்குகளைச் சுத்தப் படுத்தி அவற்றை அணிகலமாக நினைத்து ஆனந்தமுறுவது போல அவர்களுக்கு இருந்ததோ எனக்குத் தெரியாது. என் னைப் பற்றிய மட்டில் அவர்களிடத்தில் அநுதாபந்தான் உண்டாயிற்று.

இயற்கையில் உண்டான உடலின் மேடு பள்ளங்களை நிரவி, கணக்குப்படி படிந்திருக்கும் தோற்றம் உண்டுபண்ண வும் உடலின் குற்றங்கள் பிறர் கண்ணிற்குப் புலப்படாதிருக் கவும் மறைக்கும் முறையில் உடை தயாரிக்கப்பட்டிருந்தது. ஆனால் இந்தக் கெடுபிடியான முறை பெண்மக்கள் உடையில் காணப்படவில்லை. உடலை எவ்வளவு குறைவாக மறைக்க முடி யுமோ அவ்வளவு மட்டில் மறைக்கப்பட்டிருந்தது. பார்ப்ப தற்கு மிகவும் அலக்ஷ்யமாக உடை பொருத்தப்பட்டதாகத் தோன்றிய போதிலும், உண்மையில் பெருங்கவலையும் பயிற் சியும் இருந்தால்தான் உடை அம்மாதிரி போட முடியும். உட லின் பல பாகங்களின் இயற்கை யழகை மறைப்பதாக உடை காணப்படினும், உண்மையில் பார்ப்பவர்கள் மனத்தைக் கவரும்வண்ணம் மறைக்கும் உடை அவர்களது உடலின் இயற்கை வனப்பை அதிகப்படுத்தியது. அழகை அதிகரிக்கும் பணி பல நேரமும், பல நாள் பழக்கமும் கொண்டிருப்பதில்

ஆச்சரியம் இல்லை. மாதர்களின் குறைந்த உடையும், ஆடவர்களின் நிறைந்த உடையும் விருந்து இரவின் கோலம் என்று நான் நினைத்தேன். குறைந்த உடையாகத் தோன்றினும் ஆடல் பாடல் இவைகளில் ஈடுபட்ட அந்த மாதர்கள் அவர்கள் தரித்த உடை அணுவளவேனும் பொருத்தப்பட்டிருந்த இடம் நழுவாமல், திறமையுடனும் யுக்தியுடனும் அணிந்திருந்தது வியக்கத்தக்கது. ஒவ்வோர் ஆணும் ஒவ்வொரு பெண்ணோடு கையைக் கோத்துக்கொண்டு, ஜோடி ஜோடியாகச் சாப்பாட்டறைக்குள் வரும் காட்சி மிகவும் அழகாக இருந்தது. போதிய பெண்கள் இல்லாதபொழுது ஆணுக்கு ஆண் கைகோத்துக்கொண்டு கடைசியாக வந்தார்கள்.

அன்றிரவு உணவு மேஜை புஷ்பங்களால் அலங்கரிக்கப் பெற்று வெகு சுத்தமாக இருந்தது. நான் சாதாரண உடை தரித்திருந்தபோதிலும் என்னை வேறிடத்திற்கு மாற்றவில்லை. அந்த அலங்காரக் கூட்டத்தின் நடுவில ஒரு திருஷ்டிப் பரிகாரம் போல நானும் வீற்றிருந்து இப்புதுமைகளைக் கவனித்து வந்தேன். பல வகைப்பட்ட உணவுகள் வரிசை வரிசையாக வந்துகொண்டிருந்தன. உணவைக்காட்டிலும், மதுபானங்கள் அதிகம். சாப்பாடு முடியும்வரையில் பலவித வாத்தியங்களின் பாடல்கள். சாப்பாடு முடிந்து பதினைந்து நிமிஷத்திற்குப் பிறகு களியாட்டம் (Dance). ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டு, வாத்தியங்களின் இசைக்குத் தகுந்தவாறு, குதித்தோ நடந்தோ சுற்றிச் சுற்றி வந்தார்கள். சற்று நேரம் இளைப்பாறுவது; தாக சாந்தி செய்துகொள்வது ; பிறகு ஜோடி மாற்றிக்கொள்வது ; மறுபடியும் குதிப்பதும், தாண்டுவதும். இம்மாதிரி சுமார் இரவு ஒரு மணிவரையில் நடந்தது. பிரயாணிகள் அநுபவித்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. மதுபானத்தின் உத்ஸாகம், ஆடிக் குதிப்பதில் உண்டாகும் குதூகலம், ஆணும்பெண்ணும் அணைந்து, புன்முறுவல் செய்து, காதோடு காது நெருங்கிப் பேசும் இன்ப ரகசியம் - எல்லாம் " ஓயாது ஓடும் கப்பல் பிரயாணத்தில் உண்டாகும் வெறுப்பைக் குறைத்தன.

கொளும்பை விட்டுப் புறப்பட்ட ஐந்தாம் நாள் காலையில் கிழக்கு ஆபிரிக்காக் கரையில் ஆங்கிலத் துறைமுகமாகிய ஏடனுக்கு எதிர்க்கரையிலுள்ள ஜிபூதி என்னும் துறைமுகத்தில் கப்பல் அரைநாள் தங்கியது. கப்பலை விட்டு இறங்கியவுடன் தோன்றிய உணர்ச்சியை எழுதுவது கடினம். வெகு நாட்களாகச் சிறையில் இருந்த கைதி திடீரென விடுதலை பெற்று வெளிவரும்பொழுது உண்டாகும் உணர்ச்சி எனக்கு இருந்தது. ஜிபூதி ஒரு சிறிய ஊர்; மிகவும் ஏழையான ஊர்போலத் தோற்றியது. பிரெஞ்சு அரசாங்க நிலயங்கள், சிறியனவாக இருந்தாலும், புதியனவாகக் கட்டப்பட்டு மிகவும் ஒழுங்காக இருந்தன. அந்த ஓர் இடத்தைத் தவிர மற்ற இடங்கள் எல்லாம் மிகவும் கேவலமாக இருந்தன. நமது தென்னிந்திய ரெயில்வேயைவிடச் சிறிய ரெயில் வண்டிகள், ஓடிக்கொண்டு, நிற்கும் ஸ்டேஷன்களைப் பார்த்தேன். அந்நாட்டுக் கறுப்பு மனிதர்களும் தனிப்பட்ட முறையில அழுக்கடைந்த வண்டிகளில் அடைபட்டுக் கிடந்ததையும் பார்த்தேன். என்னுடன் ருஷிய யவூதி நண்பரும் வந்தார். இருவருமாக மூன்றுமணி நேரம் சுற்றித் திரிந்தோம். அவ்வூர்ச் சுதேசிகளான கறுப்பு நீக்ரோவர்கள், பலவிதமான பாசிமணிகள், பலவித வர்ணமுள்ள கற்கள் முதலியவைகளை எங்களிடம் விற்பதற்காக வந்தார்கள். நம் நாட்டில் கிராமத்துச் சந்தைகளில், கோணிச் சாக்குப் பந்தல்களின் அடியில், பச்சைமணிகள், போலிப் பவழங்கள், கருமணிகள், வளையல்கள், சவரி மயிர்கள், கறுப்புக் கம்பளங்களில் விரிக்கப்பட்டிருப்பது என் ஞாபகத்திற்கு வந்தது. நான் வாங்கக்கூடிய பொருள் அங்கே ஒன்றும் இல்லை. ஆனால் என்கூட வந்த யவூதி சுமார் ஒரு மணி நேரம் வியாபாரம் செய்து கடைசியில் சில மணிகளையும், பல விதக் கற்களையும் ஓர் அட்டைப்பெட்டி நிறைய வாங்கிக்கொண்டார். இருவரும் கப்பலுக்குத் திரும்பினோம்.

பிற்பகல் கப்பல் செங்கடலில் பிரயாணமாயிற்று. அன்று காலையில் ஜிபூதியில் வாங்கின மணி, பச்சைக்கல் முதலியவைகளைப் பார்வையிட்டுப் பரிசீலனை செய்துகொண்டிருந்தார்

யஹூதி நண்பர். நானும் பக்கத்தில் அமர்ந்தவாறு அவர் செய்யும் பரீக்ஷைகளைக் கவனித்தேன். சற்றுநேரம் சென்றபிறகு. புன்னகையுடன், "இன்று காலை வேலை வீண் போகவில்லை, கல்கத்தாவிலிருந்து கெய்ரோ நகரம்வரையில் உள்ள எல்லாச் செலவுகளையும் (கப்பல், ரெயில், சாப்பாடு முதலியவை) இன்று இதில் சம்பாதித்துவிட்டேன்" என்றார். என் அறியாமையைக் கண்டு என்னைக் கேலி செய்வதற்காக அப்படிச் சொன்னாரோ என்று நானும் புன்சிரிப்புடன் அவர் முகத்தைப் பார்த்தேன். அதில் கேலிக்குறி ஒன்றும் காணவில்லை. அவர் சொல்வது உண்மை என்பது நன்கு புலப்பட்டது. 'இந்த வியாபாரத்தின் ரகசியம் என்ன' என்று கேட்டேன்.

"நான் இன்று காலையில் சுமார் மூன்று படி அளவு கொண்ட பலவித மணிகள், வர்ணக் கற்கள் முதலியன வாங்கினேன். அதற்கு நான் கொடுத்த விலை மிகவும் சொற்பம். விற்றவர்களுக்கு அதில் நல்ல குணவிசேஷமுள்ள சில கற்கள் கலந்திருந்தது தெரியாது. தொழிற் பழக்கத்தினால் இந்தக் கும்பலில் சில அருமையான விலையுயர்ந்த கற்கள் இருப்பதைத் தெரிந்துகொண்டு எல்லாவற்றையும் வாங்கிவிட்டேன். அதில் உயர்ந்தவற்றை இதோ பொறுக்கி வைத்திருக்கிறேன். இவைகளை லண்டன், பாரிஸ் முதலிய இடங்களுக்குக் கொண்டுபோய் விற்றால் சுமார் ஆயிரம் ரூபாய் வரையில் எனக்குக் கிடைக்கும்" என்றார்.

'ஆகா! பணம் அடிக்கும் வழியை இந்த யஹூதிகளிடம் அல்லவா கற்றுக்கொள்ள வேண்டும்!' என வியந்துகொண்டே அவர் தொழில் முறையைப்பற்றி மேல்மேலும் அவரிடம் கேட்டேன். 'என் வியாபாரம் அருமையான வேலைப்பாடுள்ள சமான்களை இந்தியா, சீனா முதலிய புராதன நாகரிகம் வாய்ந்த தேசங்களில் வாங்கி, ஐரோப்பிய நாடுகளிலும், அமெரிக்காவிலும் நல்ல லாபத்திற்கு விற்பதுதான்' என்றார். உடனே என்னைத் தமது அறைக்குக் கூட்டிக்கொண்டுபோய், தமது வியாபாரத்திற்காகக் கல்கத்தாவில் வாங்கின பெட்டியில் வைத்திருந்த ஒரு விக்கிரகத்தை எடுத்துக் காண்பித்தார். அது ஆனந்த

தாண்டவம் புரியும் நடனசபாபதியின் உருவம். சிற்பியின் கைத்திறம் தாண்டவமாடும் நிலையில், நடராஜாவை உருப்படுத்தியிருந்தது. அந்த உருவம் ஒரு முழம் உயரம்; பஞ்சலோகங்களினல் வார்க்கப்பட்டது. உயிரற்ற செம்பு, வெண்கலம், வெள்ளி முதலிய வற்றைக் கொண்டு, வடிவழகு கொண்டு, உல்லாசம் முகத்தினிடையே ததும்ப, ஆனந்தக் கூத்தாடும் நிலையில் அந்தச் சிலைக்கு எப்படி உயிரை உண்டாக்கி யிருந்தான் அந்தக் கலைஞன்! செய்தவன் யாரெனத் தெரியாது. எப்பொழுது செய்யப்பட்டது எனவும் அறிய முடியவில்லை. கல்கத்தா வியாபாரி ஒருவன் கையில் அகப்பட்டு நடராஜா கப்பலேறி, மேல் நாடுகளில் எவனுகிலும் ஒரு பெரிய பணக்காரன் வீட்டை அலங்கரிக்கப் போய்க்கொண் டிருக்கிறார்.

"என்ன விலை கொடுத்தீர்கள்?" என்றேன். "அதிகம் இல்லை. எண்ணூறு ரூபாய்களே" என்றார். "இதை என்ன விலைக்கு விற்கப்போகிறீர்கள்?" என்று கேட்டதும், "ஐயாயிரத்திலிருந்து பத்தாயிரம் ரூபாய் வரையில் சமயத்திற்கு ஏற்றபடி விற்கக்கூடும்" என்றார். உடனே பெட்டியை மூடிவிட்டு மறுபடியும் கப்பலின் மேல்தட்டில்போய் உட்கார்ந்துகொண்டோம். யஹூதி நண்பர் ஒரு கதைப் புத்தகத்தை வைத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்துவிட்டார்.

என் மனம் ஆழ்ந்த சிந்தனையில் இறங்கிவிட்டது. அடிமை நாட்டின் துயரங்கள் எல்லாம் ஒவ்வொன்றுக உருவெடுத்து என் மனக்கண்முன் கிளம்பின. நடராஜ மூர்த்தியின் தத்துவம், ஆனந்த தாண்டவத்தின் கருத்து, இவைகளைச் சிலை மூலமாக உருவெடுக்க வைத்த சிற்பியினது கற்பனையின் லக்ஷ்யம் - இவைகளை நினைத்தேன். காணமுடியாத ஒரு சக்தியை உருவத்திலல்லவா சிறைப்படுத்தியிருக்கிறன் கலைஞன்! லக்ஷக் கணக்காகச் செலவுசெய்து இவற்றைக் கோவிலில்வைத்துக் கொண்டாடும் மகிமை ஒருவாறு புலப்பட்டது. வறுமையால் இந்தக் கலை விநோதங்களை நாம் விற்றுவிடுகிறேமே? அருமை தெரிந்தவர்கள் எந்தக் கொடிய வறுமை வந்தாலும், இவற்றை விற்க முன்வருவார்களா? நாடு நமது ஆதிக்கத்தில் இருந்து நம்

செல்வங்களைக் காப்பாற்றும் திறன் நமக்கு இருந்தால் இவை கள் நம் நாட்டை விட்டு வெளியேற விட்டிருப்போமா? அடிமைத்தனத்தின் எல்லை எங்கேதான் போய் நிற்குமோ? நாடு இழந்தோம்; பலவிதச் செல்வங்களை இழந்தோம்; உலகத்திலே விலைமதிக்க முடியாத "கோகினூர்" என்னும் வைரம் நாட்டை விட்டு அகன்றது. சிற்பிகள் பிரமிக்கும் மயிலாசனம் போய் விட்டது. கலைக் களஞ்சியங்களான ஏட்டுச் சுவடிகள், ஏடுகள், பழைய புத்தகங்கள் எல்லாம் கட்டுக்கட்டாக வகையறியாத நம் நாட்டு மக்கள் கையினின்று நீங்கி இங்கிலாந்து, ஜர்மனி முதலிய நாடுகளுக்குச் சென்றுவிட்டன. இவைகளையெல்லாம் நினைந்து நினைந்து மனம் உருகி வாடினேன். செங்கடலில் மூன்று நாட்கள் பிரயாணம் செய்த பிறகு சூயஸ் கால்வாய்க்குள் நான்காவது நாள் காலையில் புகுந்தோம்.

இந்த வாய்க்கால் உண்டான கதை வெகு விசித்திரமானது; ஜஸ்ஸுப் என்னும் பிரெஞ்சுக்காரன் மூளையில் பிறந்த ஓர் அதிசயம்! பத்தாயிரம் மைல் கப்பல் பிரயாணத்தைப் பத்து மணி நேரத்திற்குள் செய்துமுடிக்க உதவும் மத்திய தரைக் கடலுக்கும் செங்கடலுக்கும் நடுவில் ஒரு பூமிப் பிணைப்பு; மணற் பாங்கான பாலைவனம்; எண்பத்துநான்கு மைல் அகலம் உள்ளது. இரண்டு கடல்களையும் ஒரு வாய்க்காலினால் சேர்த்து விட்டு, கப்பல்கள் ஓடும்படி செய்து விடக்கூடும் என்கிற ஞானம் உதயமாயிற்று, ஜஸ்ஸுப் மனத்தில். வெகு கஷ்டங்களுக்கு இடையே தன் யுக்தியை உருவாக்கினன். "இது கடைசியில் ஆபத்தில்தான் கொண்டுபோய் விடப் போகிறது. ஒரு கடல் மற்றொன்றுக்குள் போய்ப் பாய்ந்துவிடப் போகிறது. கடைசியில் மிஞ்சப்போவது அகன்ற பாலைவனந்தான்" என்று பல நிபுணர்கள் சோதிடம் கூறினார்கள். ஆனால் அம்மாதிரியான விபத்து ஒன்றும் ஏற்படவில்லை.

கால்வாய் வெட்டி முடிந்தது. ஐரோப்பாவிற்கும் இந்தியாவிற்கும் பிரயாணம் செய்யும் காலம், இரண்டு மாதங்களிலிருந்து இரண்டு வாரங்களாகக் குறுகியது. கப்பலின்

அடிப்பாகத்தை ஒட்டிய குறுகிய கால்வாய்; அதற்குள் பதினையாயிரம் டன் எடையுள்ள கப்பல் எப்படிச் செல்லும் என்று தோன்றிற்று. அதிக வேகம் போனால் அலை மோதி, வாய்க்கால் மண்ணால் தூர்ந்துவிடும். ஒரே கப்பல் போவதற்கு மட்டிலும் இடம் உண்டு. ஐந்து அல்லது பத்து மைல் தூரத்திற்கு அப்பால் கால்வாய் அகன்று எதிரே வரும் கப்பல்களுக்கு இடம் கொடுக்கும்.

சென்னையில் சிந்தாதிரிப்பேட்டைக் கடைத்தெருவில் டிராம் வண்டிகள் ஒடுவதுபோல், ஒதுங்கும் இடங்கள், அதற்கான முறை, ஒழுங்கு, இவைகளுக்கான அமைப்புகள், கைகாட்டிகள், இரவில் பச்சை சிவப்பு விளக்குகள் ஆகியவைகளும் காணப்பட்டன. கப்பல் போகும்பொழுது இரு புறமும் ஒரே மணல் பரப்பு. பெரிய ஊர் ஒன்றுமே இல்லை. தென்கரை ஒரமாகச் சூயஸ் நகரத்திற்கும், போர்ட் சையத் நகரத்திற்கும் ஓடிக்கொண்டிருக்கும் ரெயில் பாதை, கப்பல் மேல்தட்டிலிருந்து பார்க்கும்பொழுது கப்பல் மணலில் ஓடுவதுபோலத்தான் இருந்தது. இந்தக் கால்வாய்க்குச் சுங்க வரி ஏராளமாகக் கொடுக்கவேண்டும். ஐயாயிரம் முதல் பத்தாயிரம் ரூபாய் வரையில் கப்பலின் எடைக்குத் தகுந்தவாறு கொடுக்கவேண்டியிருக்கும் என்று தலைமைக் கப்பலோட்டி தெரிவித்தார். ஒரு நாள் முழுவதும் தரையில் பிரயாணம் செய்வதுபோலவே தோன்றிற்று. ஒரு தனி மனிதனின் செயலால் எவ்வளவு ஆண்டுகளாக மனிதவர்க்கம் நன்மை பெற்றுச் சுகமடைந்துவருகிறது! இம்மாதிரி மனிதர்கள் தெய்வப் பிறப்பு என்றால் அது உண்மையல்லவா?

# ஐரோப்பாவில் முதல் அநுபவங்கள்

கொழும்பை விட்டுப் புறப்பட்ட பதின்மூன்றும் நாள் காலையில் பிரான்ஸ் தேசத்துத் தென்கரையில் உள்ள பெரிய துறைமுகமான மார்ஸெயில்லைக் கப்பல் சேர்ந்தது. எனக்கு உண்டான ஆனந்தத்திற்கு அளவில்லை. ருஷ்ய யஹூதி நண்பர் போர்ட் சையத் துறைமுகத்தில் இருந்தபடியே எகிப்து தேசத் தலைநகரமாகிய கெய்ரோவுக்குப் போய்விட்டார். அங்கே சென்று பழங்காலத்து நாகரிகச் சின்னங்கள் எவற்றைச் சொற்ப விலையில் தட்டலாமென்று எண்ணிப் போய்விட்டாரோ என்னவோ, எனக்குத் தெரியாது! பணம் சம்பாதிப்பதிலும், வியாபாரத் துறையிலும் யஹூதிகள் உலகத்திலேயே பெயர் போனவர்கள். அவர்களுக்கென்று ஒரு தேசம் இல்லை. உலகத்தில் எங்கே வியாபாரம், கொடுக்கல் வாங்கல் நடக்குமோ அங்கே தலைமுறை தலைமுறையாக வேரூன்றி விடுகிறார்கள். அவர்கள் இல்லாத வியாபார ஸ்தலம் உலகில இல்லை. கலைத்துறையிலும், விஞ்ஞானத் துறையிலும், தங்கள் ஆராய்ச்சியால் மனித உலகத்திற்கே ஒப்பற்ற சேவை செய்திருக்கிறார்கள். பெரும்பாலும் ஆங்கில யஹூதிகளைத் தவிர மற்றவர்களுக்கு நிற வேற்றுமை, தற்புகழ்ச்சி, ஜாதிச் செருக்கு - இவை இலலை. ஜர்மன் தேசத்திற்குப் புகழும், பெயரும், செல்வமும் உண்டாக்கினவர்கள் யஹூதிகளே. நம் நாட்டிலும் முக்கிய நகரங்களில் வியாபாரத் துறையில் யஹூதிகளைப் பார்க்கலாம். இந்த யஹூதி வியாபாரியின் பிரயாண நட்பினால் அந்த ஜாதியாரிடம் என் மனத்தில் ஒரு நல்லெண்ணம் ஏற்பட்டது.

போர்ட் சையத்திலிருந்து மார்ஸெயில்ஸ் போகும் நான்கு நாட்களிலும் எனக்கு மோன்சியர் தோமஸ் அருள் ஒருவரே

பேச்சுத் துணைக்கு மிஞ்சியவர். கப்பலிலும், பிரான்ஸ் தேசத்து மார்ஸெயில்ஸ், பாரிஸ் நகரங்களிலும், எனக்கு வழிகாட்டி, விடுதிகளில் தங்கவும் பிறகு லண்டனுக்குப் போய்ச் சேரவும் அவர் செய்த உதவியை மறக்க முடியாது. வெகு நாட்களுக்குப் பிறகு அதே பெயருடையவர் பிரெஞ்சு இந்தியாவில் புதுச்சேரி, காரைக்கால் முதலிய இடங்களில் பெரும் பதவி ஏற்றிருந்ததை நான் பத்திரிகைமூலம் அறிந்தேன். அவர்தாம் என் கப்பல் நண்பரா என்பதை நான் அறிந்துகொள்ளமுடியவில்லை. பிரயாணங்களில் ஏற்படும் நட்பு அநேகமாகப் பிரயாணத்துடன் முடிவடைந்துவிடும். நன்றி மறப்பது தமிழனின் குணமல்ல. அந்த முறையில் நான் அவர் செய்த உதவிகளை என்றென்றும் மறக்கவில்லை. தமிழ்நாட்டினர், வேறு அரசாங்க ஆளுகைக்கு உட்பட்டபோதிலும் தமிழன் தமிழன்தானே? அப்படிப்பட்ட தமிழனைத் தமிழன் மறக்க முடியாது.

மார்ஸெயில்ஸ் துறைமுகம் மிகப் பெரியது. பெரிய கப்பல்களெல்லாம் கரையோரமாக வந்து நங்கூரம் பாய்ச்ச வசதிகள் உண்டு. தாமஸ் குக் கம்பெனியாரின் ஊழியர்கள் வந்து தங்கள் கம்பெனி மூலம், பிரயாணம் செய்பவர்களின் சாமான் முதலியவற்றை லண்டன் கொண்டுபோய்ச் சேர்க்கும் பொறுப்பை ஏற்றனர். நான் என் பெரிய பெட்டியை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு, கையில் ஒரு நாளைக்குத் தேவையான துண்டு துணிகளைச் சிறிய தோல் பெட்டியில் எடுத்துக்கொண்டேன். துறைமுகத்திற்குச் சமீபமாயுள்ள ஒரு சிறிய விடுதியில் மோன்ஸியர் தோமஸ் அருளும் நானும் காலை உணவு உண்டோம். பாரிஸ் நகருக்குச் செல்லும் வண்டி சாயங்காலம் ஏழு மணிக்குப் புறப்பட இருந்ததால், பகல் நேரத்தில் அந்த ஊரைச் சுற்றிப் பார்க்கலாமென்று எண்ணி அதை எவ்விதத்தில் சிக்கனமாக முடிக்கலாமென்று தோமஸ் அருளிடம் யோசனை செய்தேன். மோட்டார், குதிரைவண்டி இவைகளில் தனியாக ஊர் சுற்றிப் பார்ப்பதாக இருந்தால் செலவு ஏராளமாக ஆகும். ஒரு பகலுக்குள் எந்த இடத்தைப் பார்ப்பது? எவ்வளவு இடங்களைப் பார்க்க முடியும் என்பதை எண்ணி அன்று பிற்பகல் முழு

தும் குறைந்த செலவில் ஓடிக்கொண் டிருக்கும் எலெக்டிரிக் டிராம் வண்டியில் இருந்தபடியே ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடி வரையிலும் சுற்றிப் பார்த்தேன்.

ஐரோப்பிய நகரம் ஒன்றை அன்றுதான் முதல் முதலாகப் பார்த்தேன். அடுக்கடுக்காக அநேக பெரிய கட்டிடங்களைப் பார்த்தேன். நான் ஏறிச்சென்ற டிராம் வண்டி மிகவும் அசுத்தமாக இருந்தது. அக்காலத்திய சென்னை வண்டிகளைப்போல அமைக்கப்பட்டிருந்தாலும் அது அவற்றைக் காட்டிலும் அதிக அழுக்கடைந்தும், நடக்கும் இடங்களில் எரிந்த சிகரெட்டுத் துண்டுகள், நெருப்புக் குச்சிகள், எச்சில், கோழை, கிழிந்த காகிதங்கள், பழத்தோல்கள் ஆகியவை நிறைந்தும் இருந்தன. ஊரும் பார்ப்பதற்கு அழகாக இல்லை. ஒரு சமயம் டிராம் போகிற பாதைகளிலேயே பார்த்துக்கொண்டு சென்றதால், நல்ல அழகுள்ள இடங்களைப் பார்க்க முடியாமல் போயிருக்கலாம். இருந்த போதிலும் எனது முதல் எண்ணத்தில் இந்த ஐரோப்பிய நகரம் நான் எதிர்பார்த்திருந்த அளவு உயர்வாகத் தோன்றவில்லை. இப்பொழுது நகரம் மாறுபட்டிருக்கலாம். நான் முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு கண்டதைத்தான் எழுதுகிறேன்.

அன்றிரவு ரெயில் வண்டியில் உயர்தர வகுப்பில் பாரிஸுக்குப் பிரயாணமானேன். நான்மட்டும் தனியாக ஒரு வண்டியில் ஏறி அமர்ந்தேன். ரெயில் புறப்படுவதற்கு அரை மணி நேரம் இருந்தது. புறப்படுவதற்கு ஐந்து நிமிஷத்துக்கு முன்பு சுமார் இருபது வயதுள்ள ஒரு வெள்ளைச் சிறுமியும், முப்பது வயதுள்ள ஒரு வெள்ளையனும் அந்த வண்டியில் ஏறினார்கள். நான் கறுப்பனாக இருப்பதைக் கண்டு தயங்கவில்லை. எனக்குத் தோன்றியமட்டில் வேண்டுமென்றே நான் இருக்கும் வண்டியை நாடி வந்ததாகப் பிறகு அறிந்துகொண்டேன். நான் அவர்கள் நாட்டவன் அல்ல. அப்படி இருந்ததால்தான் அவர்களுக்கும் தயக்கம் இல்லாமல் இருந்தது. வண்டி மெயில் ஆனதால் நீண்ட நேரம் ஓடிய பிறகு வெகு சில ஸ்டேஷன்களில்தான் நின்றது.

வண்டி புறப்பட்டு அரைமணி நேரத்திற்குள்ளாக, நான் படுத்திருந்ததற்கு எதிர்க்கட்டிலில் உட்கார்ந்திருந்த இரு வெள்ளையர்களும் புருஷன் பெண்சாதி அல்ல என்பதை அவர்களுடைய லீலைகளினால் தெரிந்துகொண்டேன். காமநோயின் பயனாக அவர்கள் கொஞ்சிக் குலாவிச் சிரித்து விளையாடினார்கள். என் வண்டியில் இன்னொரு வெள்ளையன் இருந்தால் அவர்கள் அவ்விதம் செய்வார்களா என்பதுபற்றி நான் சொல்லமுடியாது. நான் அயலானாக இருந்ததால்தான் அவர்கள் கூச்சமில்லாமல் அவ்வாறு நடந்துகொண்டார்கள் என்பது என் எண்ணம். அந்தப் பெண் வேசியாக இருக்கக் கூடுமென்று என் மனத்தில் படவில்லை. அப்படி இருந்திருந்தால் ஓடும் ரெயில் வண்டியில் மற்றோர் ஆடவன் எதிரில் இம்மாதிரி கள்ளத்தனமாகச் சிற்றின்பச் செய்கைகளை நடத்த வேண்டிய அவா இராது. எனினும் ஒரு மணி நேரம் கண்மூடியிருந்தும் அடிக்கடி அவர்களைப் பார்க்கும் ஊனச்செயலை என்னால் தடுக்கமுடியவில்லை.

வண்டியில் விளக்கு அணைந்து ஒருவாறு இருட்டாக இருந்தபோதிலும், அவர்களுடைய செயலை நான் ஜாடையாகக் கண்ணைத் திறந்து பார்க்கும் பொழுதெல்லாம் கண்டேன். எனக்கு மனத்தில் கூச்சமும் வெட்கமும் உண்டாயின. அன்று பகல் நேரத்தில் அலைந்த களைப்பால் பாதி இரவிற்கு மேல் நான் தூங்கிவிட்டேன். நான் விடியற்காலம் விழித்த பொழுது அவர்களும் ஒருவர்மேல் ஒருவர் சாய்ந்துகொண்டு உறங்கிக்கொண்டிருந்தார்கள். காலை ஏழு மணிக்கு அந்த ஆண்மகனுடன் ஆங்கிலத்தில் பேச முற்பட்டபொழுது அவன் ஆங்கில வெள்ளையன் என்று அறிந்தேன். அந்தப் பெண் பிரான்ஸ் தேசத்தவள். அவளுடன் பேசும்பொழுது இந்த ஆங்கிலேயன் நல்ல பிரெஞ்சுப் பாஷையில் பேசுவதும், என்னுடன் ஆங்கிலத்தில் பேசுவதுமாக இருந்தான்.

"அவன் நல்ல படிப்பாளி; ஐ. ஸி. எஸ். என்ற அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தவன். எகிப்து தேசத்தில் ஆங்கில சாம்ராஜ்யத்திற்காக உழைப்பவன். நல்ல சம்பளம் உண்டு. கல

யாணமாகாதவன். அவசர ராஜீய அலுவலாக லண்டன் போய்க்கொண்டிருக்கிறான். இந்தப் பெண்ணுக்கும் அவனுக்கும் முன்னரே பழக்கம் உண்டு. பாரிஸ் நகரத்தில் தங்க முடியாமல் நேராக லண்டன் போவதால், மார்செயில்ஸ் துறைமுகத்தில வந்து இவனைச் சந்தித்து, இவனுடன் பாரிஸ் நகரம் வரையில் பிரயாண சுகத்தை நாடி வந்தவள்." இந்த விவரமெல்லாம் ஆங்கில ஐ. ஸி. எஸ். காரரிடமிருந்து தெரிந்துகொண்டேன். இது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் ஐரோப்பிய உலகத்தில் முதல் பிரயாணம் செய்பவன். தேசம் தெரியாது; பாஷை தெரியாது. சமூகப் பழக்கங்கள் தெரியா, திடீரெனக் கண்ட காட்சி ஆச்சரியத்தை உண்டு பண்ணியதே யொழிய வெறுப்பை உண்டாக்கவில்லை. வெள்ளை ஆண்பெண்களிடத்தில் கேவலமான எண்ணமும் உண்டாகவில்லை. பகல் பத்துமணிக்குப் பாரிஸ் சேர்ந்து அன்று பிற்பகல் மூன்று மணிக்கு லண்டன் பிரயாணமானேன்.

அன்றிரவு பதினொரு மணிக்கு லண்டன் போய்ச் சேர்ந்தேன். என் நண்பர் வ. வே. சு. ஐயர் என்னைச் சந்தித்தார். "என்ன, சௌந்தரம, உடம்பு இளைத்துக் கறுத்து அடையாளமே தெரியாமல் போய்விட்டாயே? சௌக்கியந்தானே?" என்று சொல்லிக்கொண்டு புன்னகையுடன் என்னை வரவேற்றார். "இரவு சாப்பாட்டு நேரம் கடந்து விட்டமையால் நான் தங்கியிருக்கும் வீட்டில் சாப்பாடு இல்லை. ஆகையால் இந்த ஸ்டேஷனிலே இருக்கும் ஓட்டலில் சாப்பிட்டுவிட்டுப் பிறகு போகலாம். உனக்கென்று தனியாக அரிசிச் சாதமும் பாலும் வைத்திருக்கும்படி சொல்லியிருக்கிறேன். நான் லண்டனுக்கு வந்தபொழுது கப்பலை விட்டு இறங்கியவுடன் அரிசிச் சோற்றுக்கு என்ன அவாவுடன் ஆத்திரப்பட்டுக் கேட்டேன் என்பது எனக்குத் தெரியுமாதலால், உனக்கும் அவ்வாறு அவா இருக்கும் என்று எண்ணியே நான் ஏற்பாடு செய்திருக்கிறேன். முதலில் கொஞ்சம் உணவு உண்டு பிறகு பேசலாம்" என்றார்.

"என் சாமான் ஒன்றும் வரவில்லையே. மார்செயில்ஸ்

துறைமுகத்தில் தாமஸ் குக் கம்பெனியார் வசம் ஒப்படைத்து வந்தேன். லண்டனில் உங்கள் விலாசமும் கொடுத்திருக்கிறேன்" என்று சொன்னவுடன், "நீ அதைப் பற்றிக் கவலைப் படவேண்டாம். நம்மூர் மாதிரி இல்லை. கொடுத்த சாமான்களில் ஒன்று தவறாமல் நாளைத்தினம் காலையில், நீ வீட்டில் இருந்தாலும் இல்லாவிட்டாலும் உன் அறையில் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கும்" என்றவுடன், இந்த ஏற்பாட்டைக் கண்டு வியந்தேன்.

ஐயர் தங்கியிருந்த விடுதிக்கு இரவு பன்னிரண்டு மணிக்குப் போய்ச்சேர்ந்தேன். வீட்டு எஜமானியின் மகள், சுமார் இருபத்திரண்டு வயதுள்ள ஆங்கிலச் சிறுமி கதவைத் திறந்து சிரித்த முகத்துடன் என்னை வரவேற்றாள். "நீங்கள் அரிசிச்சாதம் சாப்பிட விருப்பமுள்ளவர்களாக இருப்பீர்களெனத் தெரிந்து பாலும் சாதமும் வைத்திருக்கிறேன். சாப்பிடுகிறீர்களா?" என்றதும், அந்தப் பெண்ணின் பரிவு எனக்கு மகிழ்ச்சியை உண்டாக்கியது. எனக்கு வேறு அறை தயாரிக்கும் வரையில் ஐயருடைய அறையிலேயே இன்னொரு படுக்கை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நான் மார்ச்சு மாதக் கடைசியில் லண்டன் சேர்ந்தபோதிலும் இரவில் குளிர் அதிகமாகவே இருந்தது. இரவில் வெகு நேரம் ஐயருடன் பேசிய பிறகு உறங்கிவிட்டேன்.

எனது முதல் கவலை என் உணவைப் பற்றியது. பிறவிச் சைவமாக இருந்த எனக்குப் புலால் உண்பதில் பெரிய வெறுப்பு இருப்பது இயற்கை. ஐயர் என்போன்ற கஷ்டங்களுக்கு உள்ளாகிக் கடைசியாக ஆங்கிலேயர் உண்ணும் உணவைத் தாமும் உண்ணப் பழக்கம் செய்துகொண்டார். நானும் தாம் செய்தபடி செய்யவேண்டுமெனவும், இல்லாவிட்டால் பலவிதத் தொல்லைகளுக்கு ஆளாகவேண்டி யிருக்கு மெனவும் உபதேசித்தார். சைவ உணவு சாப்பிடும் ஆங்கிலேயர்கள் வெகு குறைவு. அதிலும் என்னை வீட்டில் வைத்துக் கொள்ள வெள்ளைச் சைவர்கள் சம்மதிக்கவேண்டும். லண்டன் நகரத்தில் சைவ உணவு இரண்டே ஓட்டல்களில்தான் கிடைக்கும். அதற்காகச் செலவும் அதிகமாகும்.

சைவ உணவைச் சித்தாந்தப்படுத்திப் பிரசாரம் செய்வதற்காக நான் இங்கிலாந்து செல்லவில்லை. வைத்தியப் படிப்புக்காகப் போனவன் அதில் கவனம் செலுத்தி, கூடிய சீக்கிரம் பயிலவேண்டியதைப் பயின்று தாய்நாடு திரும்பவேண்டியதை முக்கியமாகக் கொள்ளவேண்டியதே தவிர, சைவச் சாப்பாட்டிற்காக அலைந்து திரிந்து, பணத்தைச் செலவு செய்து கொண்டு காலம் கழிக்கக்கூடாதெனா முடிவு செய்தேன். முதலில் இரண்டு வாரங்களுக்கு மனத்திற்கு மிகவும் சங்கடமாக இருந்தது. பிறகு, 'மாமிச உணவு சாப்பிடுகிறோம்' என்கிற உணர்ச்சியே போய்விட்டது. மூன்று வருஷங்களுக்கு மேலாகப் புலால் உண்டபோதிலும், அதில் விருப்பம் உண்டாகவில்லை. அதைப் பின்பற்ற வேண்டிய தேவையும் இல்லை.

நான் தங்கியிருந்த வீடு ஆங்கில நடுத்தர வகுப்பினர் தங்கள் பிழைப்பிற்காக நடத்தும் விடுதி. அந்த வீட்டில தங்கி வாழ்வை நடத்திவருபவர்கள் எங்களிடமிருந்து பெற்றுக் கொள்ளும் பணத்தைக் கொண்டு தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றுவது தொழில். கூடியமட்டும் வாய் உபசாரங்களினாலும், தொண்டு செய்வதனாலும் எங்கள் மனத்தைத் திருப்திசெய்து எவ்வளவு ஊதியம் அதிகமாகக் கிடைக்கக் கூடுமோ அவ்வளவு பெற்று வருபவர்கள். இம்மாதிரிக் குடும்பங்கள் லண்டனில் ஏராளம். சில இடங்களில் இந்தியக் கறுப்பர்களைச் சேர்க்கமாட்டார்கள். சிலர் பிரத்தியேகமாகக் கறுப்பர்களைமட்டும் வைத்துக்கொண்டு வீட்டை நடத்துவார்கள்.

அநேகமாக ஆங்கிலேயர்களும், இந்தியக் கறுப்பர்களும் சேர்ந்து வசிக்கும் இடங்கள் வெகு சில. ஒரு வாரத்திற்கெல்லாம், நான் படிக்கவேண்டிய ஏற்பாடுகள், வேலை செய்ய வேண்டிய ஆஸ்பத்திரி, அதற்கான செலவு எல்லாவற்றையும் செய்து முடித்தேன். மறுநாள் சாப்பாட்டிற்குப் பிறகு ஐயர் என்னிடம் தனித்துப் பேச விரும்பியதன்பேரில் எங்கள் அறைக்குச் சென்றோம்.

"நான் பாரிஸ்டர் பரீக்ஷையில் தேர்ச்சிபெற்று வக்கீல்

தொழிலை விரிவாக ரங்கூனில் நடத்த எண்ணி இங்கே புறப்பட்டு வந்த விஷயம் உனக்கு நன்கு தெரியும். இங்கு வந்து இப்பொழுது ஒன்பது மாத காலம் ஆகிறது. பாரிஸ்டர் பரீக்ஷைக்கு முதல் அங்கமான ரோமன் சட்டத்தில், நான் முதல்வனாகத் தேறிவிட்டேன். இனி மற்றப் பாடங்களிலும் இம்மாதிரியே சிறப்பாகத் தேறிவிடுவேன். இதற்கு ஐயமில்லை. சென்ற மூன்று மாத காலமாக நான் விநாயக ஸாவர்க்கர் என்ற ஒரு பெரியாருடைய நட்புக் கொண்டுள்ளேன். அவரும் பாரிஸ்டர் பரீக்ஷைக்குப் படிக்க வந்திருக்கும் ஓர் இந்திய மாணவர். புத்திகூர்மையிலும், தேச பக்தியிலும் வாக்கு வன்மையிலும், படிப்பிலும் உயர்ந்த மேதாவி. அவருடைய சிநேகத்தினால் என் மனம் மாறுபாடு அடைந்திருக்கிறது. நமது நாடு அடிமைப்பட்ட நாடு என்ற உணர்ச்சி இங்கே வந்த பிறகுதான் எனக்கு நன்ருக விளங்குகிறது. நமது நாட்டின் தேவை தற்பொழுது பாரிஸ்டர்களும் டாக்டர்களும் அல்ல. எல்லாவற்றிற்கும் முன்பு நாடு சுதந்தரம் பெறச் செய்யவேண்டிய முயற்சிதான், அடிமை உணர்ச்சியுள்ள ஒவ்வோர் இந்தியனும் செய்யவேண்டிய வேலை. அதை இந்த நாட்டிலிருந்தே இப்பொழுதே செய்ய வேண்டுமெனத் தீர்மானித்திருக்கிறேன். அதற்காக ஸாவர்க்கர் தங்கியிருக்கும், 'இந்தியர் விடுதிக்கு' அவருடன் உழைக்கும் பொருட்டுச் செல்ல முடிவுசெய்திருக்கிறேன். ஆனல், நீ அங்கு வரவேண்டுமென நான் உன்னைக் கட்டாயப்படுத்தப் போவதில்லை. நான் இன்னும் ஒரு வாரத்தில் இந்த விடுதியை விட்டுப் போவதாக எண்ணியிருக்கிறேன். உனக்கு இஷ்டமிருந்தால் நீயும் வரலாம். இல்லாவிடில், நீ இங்கேனும் அல்லது உனக்கு இஷ்டப்பட்ட வேறு எந்த இடத்திலேனும் தங்கி, படிப்பை முடித்துக்கொண்டு ஊர் திரும்பலாம். இந்த ஒரு வாரத்திற்குள்ளாக உன் முடிவை எனக்குத் தெரிவித்தால் போதும்" என்று சொல்லி முடித்தார் ஐயர்.

அவருடைய பேச்சு எனக்கு மனக்கலக்கத்தை உண்டு பண்ணியது. எண்ணம் மேன்மையானதுதான். அதனுள் அடங்கிய தியாகம் அதைக்காட்டிலும் சிறந்தது. அதற்குப்

போதிய தேச பக்தி வேண்டுமே. பொருள் ஈட்டுவதற்கும், பெரிய வைத்திய நிபுணன் என்ற பெயர் வாங்குவதற்கும், ஒரு பெரிய சர்க்கார் ஐ. எம். எஸ். உத்தியோகம் கிடைத்தால் ஒரு கை பார்ப்பதற்கும் முயற்சி பண்ணலாமென்று மனக் கோட்டை கட்டிக்கொண் டிருந்த எனக்கு, ஐயரின் சீரிய சொற்கள் ஆழ்ந்த சிந்தனையைக் கிளப்பிவிட்டன. ஒரு வாரம் முழுதும் கவலை கொண்டு பல நண்பர்களைக் கண்டு கலந்து யோசனை செய்தேன். 'நாம் மிகவும் ஏழையாயிற்றே. நம்மை நம்பித் தாயும், தந்தையும், மனைவி மக்களும், நாம் திரும்பி வருமளவும் நம் வரவையே எதிர்நோக்கிக்கொண் டிருப்பார் களே. சர்க்கார் உத்தியோக அடிமைத் தனத்தில் ஈடுபட வேண்டாம். ஆனால் தொழில் செய்து பொருள் ஈட்டா விட் டால் நம்மைச் சார்ந்தவர்களின் கதி எப்படி ஆகுமோ? நாம் அவர்களுக்குச் செய்யவேண்டிய கடமையினின்றும் தவறுவது நியாயமா? தேசபக்தியின் காரணமாக எல்லாவற்றையும் துறந்துவிட முடியுமா?' என்றெல்லாம் என்மனம் குழம்பிக் கொண்டிருந்தது.

ஐயருடைய நட்பும், அவருடைய தூய எண்ணங்களும் என்னை ஒருவாறு வருத்தின. ஒரு வாரம் கடந்தபின், ஐயர் பதில் என்ன என்று கேட்கவே, நான் அவரிடம் சொல்லிய முடிவு இதுதான்: "நீங்கள் சொல்வது முற்றும் நியாயமே. ஆனால் அந்தப் பெருந் தியாகத்திலே நான் ஈடுபடச் சக்தியற்ற வனாக இருக்கிறேன். உங்கள் உபதேசத்தின் பலனாக நான் சர்க்கார் ஊழியம் புரிய எண்ணியிருந்த ஆசை ஒழிந்தது. தேசத்திற்குத் தொண்டுசெய்வது என் கடமையாயினும், எனக்கு உள்ள மற்றப் பொறுப்பை நான் தள்ளிவிட முடிய வில்லை. அதற்காக என்னை மன்னிக்கவேண்டும். எனினும் நானும் தங்களுடன் இந்தியர் விடுதிக்கு வர முடிவு செய்துவிட் டேன். நான் லண்டனுக்கு எதற்காக வந்தேனோ அந்தப் படிப்பை யாதொரு குறைவுமின்றி முடிப்பேன். அந்தப் படிப் பிற்கான நேரம் போக மற்ற நேரங்களிலெல்லாம் உங்க ளுடன் எனக்கும் கிடைக்கும் தேச ஊழியத்தைச் செய்யக் கூடும்."

இந்தியர் விடுதியில் குடியேறினாலே சர்க்கார் ஊழியம் கிடைக்காமல் போய்விடும், உளவுப் போலீஸ் அதிகாரிகளின் கண்காணிப்பிற்கும் ஆளாக வேண்டியிருக்கும் எனத் தெரிந்து கொண்டேன். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. அதற்கு ஐயரும் சம்மதப்படவே, இருவருமாக இந்தியர் விடுதியில் குடி புகுந்தோம்.

# எல்லாம் கடந்த அன்பு

"கறுப்பர் கறுப்பர்" (Blackie) என்று கூவும் சிறுவர்கள் கூட்டம், நான் லண்டன் தெருவில் நடந்து போகும் பொழுது என் மனத்திற்கு வேதனை உண்டு பண்ணும். நம் நாட்டு ஏழைச் சிறுவர்களைப்போலவே ஆங்கில ஏழை மக்களின் சிறுவர்கள் பெரும்பாலும் லண்டன் தெருக்களின் ஓரமாகக் கட்டப்பட்டிருக்கும் பாதைகளிலே பொழுது போக்கு வார்கள். கறுப்பிலும் பல ரகங்கள் இருப்பது அவர்கள் கண் ணுக்குப் புலப்படாது. ஒரு கறுப்பு மனிதன் நடந்துபோவதைக் கண்ணுற்றால், இளைஞர்கள், தொந்தரவு செய்ய வேண்டும் என்கிற எண்ணம் இல்லாமலே கூவுவது வழக்கம். இந்தியாவிலுள்ள பட்டணங்களில் வெள்ளைக்காரன் ஒருவன் போனால், நம் சிறுவர்கள் அவனை "வெள்ளையா, வெள்ளையா" என்று கூப்பிடுவதை நான் பார்த்ததில்லை. கூப்பிடுவதற்கு அவர்கள் பயப்படுவார்கள். ஒவ்வொரு வெள்ளையனும் நம் நாட்டில் ஒரு தேவதையைப்போல் அல்லவா கருதப் படு கிறான்? தமிழ்நாட்டில் வெள்ளையர்கள் எல்லோரும் "துரை மார்கள்." வட இந்தியாவில் அவர்கள் "ஸாகேப்" என்று சாமான்ய மக்களால் அழைக்கப்படுகிறார்கள். மேலும் வெள்ளை நிறத்துடன் தொப்பி போடும் எவனையும் "ஸாகேப்" என்று தான் நம் ஏழைகள் சொல்லுகிறார்கள். நம் நாட்டினரை, 'பாபு,' 'சேட்' என்றும் சொல்லுகிறார்கள். அடிமைப்பட்ட வர்களின் மனப்பான்மை இவ்விதம் நடைமுறையில் காட்சி யளிக்கிறது.

அதிகாரச் செருக்கு, செல்வச் செருக்கு, கல்விச் செருக்கு, கலைச் செருக்கு, இவைகள் காரணமாக வெள்ளை ஐரோப் பியர்களுக்குக் கறுப்பு மனிதர்களிடம் மதிப்புக் குறைவு. கறுப்பு மனிதனிடம் மாத்திரமல்ல; மஞ்சள் மனிதரான சீனக் காரர்கள், ஜப்பானியர்கள் நடுத்தர வெள்ளையர்களான துருக்

கர், பாரசீகர், எகிப்தியர், எல்லாரிடத்துமே மதிப்புக் குறைவு தான். எல்லா வெள்ளையர்களிடத்தும், அவர்களை அறியாமலே இந்த வெறுப்புக் காணப்படுகிறது. ஆண் மக்களைக் காட்டிலும், பெண் மக்களுக்கு வெறுப்பு அதிகம். கால வித்தியாசங்களினால் நாம் வெள்ளையர்களுக்குத் தற்சமயம் அடிமைப்பட்டிருப்பதனால் இந்த வெறுப்பிற்குக் காரணம் இருக்கிறது. நாம் பெருமையுடன் ஆங்கிலம் பயிலுகிறோம். வெள்ளையர் உடுத்தும் உடையையும், அவர்கள் பழக்க வழக்கங்களையும் பின்பற்றுகிறோம், அவர்களுடைய கலாசாலைகளுக்கும் மற்றத் தொழிற் சாலைகளுக்கும் ஆயிரக் கணக்காக நமது செல்வத்தைச் செலவு செய்துகொண்டு வலுவில் அவர்கள் நாடு சென்று, பலவிதத் தொல்லைகளையும் சகித்துக்கொண்டு கல்வி கற்றுப் பெருமையுடன் திரும்புகிறோம். அவர்களுடைய மேம் பதவியை நாமே அவர்களுக்கு ஞாபகமூட்டும் முறையில் நடந்து கொள்ளுகிறோம்.

பரிசோதித்துப் பார்க்குமளவில் நிற வேற்றுமை என்பது வெள்ளையர்களுடைய ரத்தத்திலேயே கலந்திருக்கிறது. என்று சொல்லவேண்டும். இது பொதுப்படையான குணம். ஆனால், இந்த விதிக்கு விலக்கான கருணையுடன் கூடிய வெள்ளையர்களும் இருக்கிறார்கள். 'நாமும் மனிதர்கள், நமக்கும் உணர்ச்சி உண்டு' என்பதான பகுத்தறிவுடன் கூடிய வெள்ளையர்களும் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் வெகு சிலரே. வெள்ளையர்களுள் வேரூன்றிய இந்தக் குணந்தான் நம் நாட்டினர் தாங்கள் குடியேறி யிருக்கும் இடங்களில் படும் தொல்லைக்கு அடிப்படையான காரணம். உயர்தர வாழ்வில் நமக்குப் பழக்கமில்லை என்பது தென்னாப்பிரிக்கா போன்ற நாடுகளில் உள்ள வெள்ளையர்களுடைய கட்சி. உயர்தர வாழ்வு என்பது பொருளற்ற ஒரு கோட்பாடு. மக்களின் மனப்பான்மையினாலா, கல்வியினாலா, புனித வாழ்வினாலா, உடையினாலா, மற்றத் தனிப்பட்ட எந்தச் சாதனத்தினால் உயர்தரம் உண்டாகிறது என்பதை ஒருவரும் சொல்லமுடியாது; நிரூபிக்கவும் முடியாது. இவையெல்லாம் சேர்ந்த ஒரு வாழ்க்கைத் திட்டம்

என்றாலோ இந்தியர்கள் மற்றவர்களுக்குக் குறைந்தவர்கள் அல்ல ஆகையால், வெள்ளையர்கள் கட்சிக்கு நிறச் செருக்கைத் தவிர வேறு பொருத்தமான காரணம் என் மனத்திற்குப் புலப் படவில்லை.

இந்த நிற வேற்றுமை, தெருவில் நடக்கும்பொழுதுதான் புலப்பட்டது என்பது இல்லை. வெள்ளையர்கள் நாட்டில் எங்கே சென்றாலும், மானமுள்ள எந்த இந்தியனுக்கும் இந்த வேற் றுமை புலப்படும். நம் நாட்டினரில் சிலருக்கு இந்த வேற்றுமை உணர்ச்சி புலப்படாமல் இருப்பதில் எனக்கு ஆச்சரியம் ஒன் றும் இல்லை. நம் நாடு இருக்கும் நிலையில் ஆச்சரியப்படக் கார ணமும் இல்லை. தங்கத்தையும் வெள்ளியையும் தண்ணீர் போலச் செலவிடும் செல்வத்தையுடைய கறுப்பு மனிதர்களுக் குக்கூட இந்த நிறபேதம் உறைக்கக்கூடிய நிகழ்ச்சிகள் அடிக் கடி இங்கிலாந்திலும் மற்ற வெள்ளையர் நாடுகளிலும் நிகழ்ந் திருக்கின்றன. இந்த இழிநிலை நம்மை விட்டு அகல ஒரே ஒரு வழிதான் உண்டு: அரசியல் சுதந்தரம் அடைந்து அதைக் காப்பாற்றும் சக்தி பெறுவதே.

ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் போன்ற சர்வகலாசாலைகளில் படிக்கும் இந்தியர்களுக்கும், இடவசதி, போஜன வசதி முதலி யவைகளில் நிறவேற்றுமை இல்லை. லண்டன் போன்ற இடங் களில் கறுப்பு மனிதர்களுக்கு இட வசதிகள் கிடைப்பது கஷ் டம். அதிலும் வெள்ளையர்கள் அடங்கிய விடுதிகளில் இடம் இருந்தாலும் கிடைக்காது. கறுப்பன் ஒருவனைச் சேர்த்துக் கொண்டால், மற்ற வெள்ளையர்கள் வெளியேற, அதனால் தன் பிழைப்பிற்கு மோசம் வந்து விடுமோ என்கிற பயம் விடுதி எஜமானிக்கு உண்டு.

நான் படித்த 'மிடில்ஸெக்ஸ்' ஆஸ்பத்திரியில் (Middlesex Hospital) டாக்டர் லாங் என்னும் ஒரு கண் வைத்திய நிபுணர் இருந்தார். அவருடைய நிறத்துவேஷ உணர்ச்சிக்கு அளவே இல்லை. என்னுடன் மூன்று இந்தியர்கள் வைத்தியப் படிப்பிற் காக அந்த மெடிகல் காலேஜில் இருந்தார்கள். ஆஸ்பத்திரியில் பாடம் சொல்லிக்கொடுக்கும் முறையில், கேள்விகள் கேட்பதி

லும், விடை அளிப்பதிலும் போதனை நடைபெறும். இதை வினவிடைப் பயிற்சி என்றே சொல்லலாம். அவரிடம் இருந்த மூன்று மாதங்களில் கறுப்பர்களாகிய எங்களை ஒரு வினு அவர் கேட்டதில்லை. நாங்களே வலுவில் சந்தேகங்களைக் கிளப்பினுலும் பதிலே சொல்லமாட்டார். எங்கள் பக்கம் திரும்பும்பொழுதெல்லாம் முகத்தைச் சுளித்துக்கொள்வார். எங்களை அவருடைய பரம விரோதியாக நினைத்துவந்தார் என்பது என் அபிப்பிராயம்.

ஆனுல் அதே ஆஸ்பத்திரியில் பெரிய சஸ்திர வைத்திய நிபுணராக (Senior Surgeon) விளங்கிய ஸர் ஆல்பர்ட் பியர்ஸ் கோல்டு (Sir Alfred Pearce Gould) என்பவர் ஓர் உயர்ந்த மேதாவி. ஆருயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள அன்னிய நாட்டிற்கு வந்து வருஷக்கணக்காகப் பயிற்சி பெறும் நாங்கள் தம்முடைய தனிப்பட்ட அன்பிற்குப் பாத்திரமானவர்களென்று அடிக்கடி சொல்லியும் நடைமுறையில் காட்டியும் வருவார். அவரும் ஓர் ஆங்கிலேயரே. மன்னர் அரண்மனையில் பழகும் உத்தியோகம் உள்ளவர். வருஷத்திற்கு ஒரு முறை எங்களைத் தம்முடைய வீட்டுக்கு அழைத்து விருந்தளித்து, தம் மனைவி மக்களுடன் பழக்கம் செய்வித்து, எங்கள் க்ஷேம லாபங்களையும் விசாரிப்பார்.

ஒரு சமயம் மதனலால் டிங்ரா என்னும் இளைஞன் ஸர் கர்ஸன் வைலி என்பவரைக் கைத்துப்பாக்கியால் திடீரென்று சுட்டுக் கொலைசெய்துவிட்டான். விசாரணை செய்யப்பட்டு, அவன் தூக்கில் இடப்பட்டான். இதைப் பற்றுக்கோடாக வைத்துக்கொண்டு, இந்திய அரசியல் பிரச்னைகளைப்பற்றி ஆங்கிலப் பத்திரிகைகளில் விவாதம் நடைபெறும். காங்கிரஸ் வேண்டும் திட்டங்களைப் பற்றிக்கூட 'லண்டன் டைம்ஸ்' போன்ற பத்திரிகைகளில் விமரிசனம் எழுதப்படும். படித்த பெரிய டாக்டரான ஸர் ஆல்பிரட் பியர்ஸ் கோல்டுக்குக்கூட இந்திய ராஜீயப் பிரச்னை தெளிவுபடுவதில்லை. ஆங்கிலேயர் நமது நாட்டினரின் நன்மைக்காகவே தங்கள் நாட்டை விட்டு

இந்தியாவில் வெகு கஷ்டப்பட்டுக்கொண்டு உழைக்கிறார் களென்பது ஆங்கிலப் பொதுமக்கள் எண்ணம்.

ஒரு நாள் அவர், "என்ன ராஜன், இந்தியாவில் உங்களுக்கு என்ன கஷ்டம்? நாங்கள் உங்களுக்காக அரும்பாடு படு கிறோமே! நீங்கள் கேட்பது இன்னது என்று எனக்குப் புரிய வில்லையே. சுருக்கமாக நான் அறிந்துகொள்ளக் கூடிய பதி லாக உன்னால் சொல்ல முடியுமா? எதற்காக இந்திய மாணுக் கர்கள் இங்கு வந்து எங்களுடைய பெரிய மனிதர்களைச் சுட வேண்டும்?" என்று கேட்டார். அவரிடத்தில் 'மிதான கோஷ் டியார் இது கேட்கிறார்கள், தேசீயக் கட்சியார் இது கேட் கிறார்கள்' என்றால், அவருக்கு ஒன்றுமே புரிந்திருக்காது. ஆகையால் சுருக்கமாக அவர் கேட்டதற்கு ஒரு பதில் கேள்வி நான் கேட்டேன்: "திருஷ்டாந்தமாக ஜர்மானியார் இங்கிலாந் தில் அரசியல் ஆதிக்கம் பெற்று இந்நாட்டு மக்களை அடிமைப் படுத்தி அடக்கி ஆண்டு, ஜாதிச் சண்டை மதப் பூசல்கள் இல் லாமல் ஆட்சி புரிந்தால் உங்கள் மனம் எப்படி இருக்கும்? உங்கள் நாட்டு இளைஞர்கள் மனம் எப்படி இருக்கும்?" என்று. உடனே, "இது ஒருகாலும் முடியாது. நாங்கள் ஒரு விநாடிகூடச் சும்மா இருக்கமாட்டோம்" என்று பதில் கொடுத்தார். "இதுதான் இந்தியாவின் போராட்டமும்" என்றேன். உடனே அவருக்கு இந்திய அரசியல் போராட்டத் தின் தத்துவம் தெளிவாயிற்று.

தனிப்பட்ட ஓர் இந்தியன் தனிப்பட்ட ஓர் ஆங்கி லேயனுக்கு எவ்விதத்திலும் குறைந்தவனல்ல என்பது என் அபிப்பிராயம். கல்வி கற்பதிலும், தொழில் பழகுவதிலும், தைரியத்திலும், விடாமுயற்சியிலும், ஆளும் திறமையிலும், நாம் உலகத்தில் எவருடனும் சமமாக நின்று நமது திறமையைக் காட்ட முடியும்; காட்டிக்கொண்டு வருகிறோம். ஆனால் அடிப் படையான சமூகக்கட்டு, அரசியல் உணர்ச்சி, தேசபக்தி இவை களில் நாம் ஆங்கிலேயர்களுக்குமுன் நிற்க முடியாது. ஜாதிப் பிரிவினை, மதப் பிரிவினை, சுயநலம் பேணும் இழிகுணங்கள் முதலியவை நமது சமூகத்தைப் பிடித்து ஆட்டுகின்றன. அந்நி

யர்களுக்கு நாம் அடிமைப்பட்டதற்கு இவைகள் தாம் காரணம். இன்றைக்கு நம் வாழ்விற்கு இக்குணங்கள் தாம் காரணம். ஆங்கிலேயர்கள் சகிப்புத் தன்மை உடையவர்கள். அமைதியுடன் நடக்கும் திறமை அவர்களுக்கு உண்டு; விடா முயற்சியும், பிடிவாதமும் அதிகம். அதி நுட்பமான வேதாந்த விசாரணை, அதன்பின் அபிப்பிராயம், கொள்கை வித்தியாசங்கள், அதன் காரணமான பிரிவினைகள், போராட்டங்கள்—இவைகளின் கொடுமைகள் அவர்கள் சமூகத்தைக் குலைத்து விடவில்லை. காணக் கூடாத மறு உலகத்தை நாடி, உயிர்வாழும் இந்த உலகத்தைத் துறக்க யத்தனிக்கும் மனப்பான்மை ஆங்கில ஜாதியாரிடம் இல்லை.

சுமார் ஒரு வஷத்திற்கு மேலாக 'இந்தியர் விடுதி'யில் இருந்துகொண்டு என் தொழில்படிப்பில் கவனம் செலுத்தி வந்தேன். ஒரு நாள்கூட ஓய்வென்பதே இல்லை. ஐயர், ஸாவர்க்கர் முதலியோர் 'ஓய்வு எதற்காக?' என்று வாதிப்பார்கள். 'படிப்பு, பரீக்ஷைகளில் முதன்மையாக இருக்க வேண்டும்' என்ற எண்ணத்துடன் உழைத்து, எஞ்சிய நேரங்களில் தேசப் பணி செய்துவந்த எனக்கு, ஓய்வு அவசியம் எனத் தோன்றியது. கோடைக்கால விடுமுறையில் தென் இங்கிலாந்தில் கடற்கரை ஓரமாக உள்ள அழகிய சிறிய ஊராகிய போர்ன்மத் (Bournemouth) என்ற இடத்துக்குச் சென்றேன். நான் தங்கியிருந்த விடுதியில் சுமார் இருபது பேர்கள் என்னைப் போலவே கோடைக்கால விடுமுறைக்காக இங்கிலாந்தின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்தார்கள். எல்லோரும் ஆங்கிலேயர்கள். அங்கே சென்ற இரண்டு நாட்களுக்கெல்லாம் என் பக்கத்து அறையில் தங்கியிருந்த பெண்மணியின் குரல் எனது அறைக்கு முன்பாக இரவு ஒரு மணிக்குக் கேட்டதும், விழித்துக் கதவைத் திறந்து பார்த்தேன். சாப்பாட்டு மேஜையில் எனக்கு எதிரில் உட்கார்ந்துகொண்டிருந்த கட்டழகிதான் அந்தப் பெண்மணி. திடீரென்று தன் புருஷனுக்கு முதுகு வலி கண்டு அவஸ்தைப் படுவதாகச் சொல்லி நான் வைத்தியனானபடியால் அவரைப் பார்த்து உதவி

செய்ய முடியுமா என்று வெகு உருக்கத்துடனும் விநயத்துடனும் கேட்டாள். நானும் உடனே பக்கத்து அறைக்குள் சென்று அந்த அம்மாளின் கணவரைப் பரிசோதித்து வேண்டியவற்றைச் செய்து அந்த அம்மாளுக்குப் பயம் நீங்கும் முறையில் தைரியமூட்டி, பிறகு வந்து படுத்தேன்.

மறுநாள் காலையில் அவர் குணமடைந்தார். அன்று முதல் அந்தத் தம்பதிகளிடம் நட்பு வளர ஆரம்பித்தது. அந்த அம்மாளுக்கு வயசு இருபத்துமூன்று. நல்ல அழகுள்ளவள். பேச்சு வன்மையும், உலக ஞானமும் படைத்தவள். அவள் புருஷனுக்கு வயசு இருபத்தாறு. அவ்வளவு படிப்பாளி அல்ல. எனினும் குணத்திலும், அடக்கத்திலும் தம் மனைவிக்குக் குறைந்தவரல்ல. இருவருடைய அன்பிற்கும் அடிப்படையான காரணம் சங்கீதம். புருஷன் வாய்ப்பாட்டில் சிறந்தவர்; தொனியுடன் பாடக்கூடியவர். அவர் மனைவி பியானோ வாசிப்பதில் மிகவும் கெட்டிக்காரி. இல்லற வாழ்க்கை ஆரம்பித்து ஐந்து வருஷங்களாகியும், மக்கட்பேறு ஒன்றும் இல்லை. இந்த அம்மையின் தகப்பனார் மேற்கு இங்கிலாந்தில் ஒரு பிரபல வியாபாரி. அவருக்கு அந்த அம்மாள் ஒரே மகள். தம் மருமகனைத் தம்மிடத்திலேயே வேலைக்கு வைத்துக்கொண்டிருந்தார். இந்த அம்மாள் கணவருக்கு வியாபார விஷயமாக ஊர் ஊராகச் சென்று தங்களுடைய சாமான்களை விற்பதற்கு ஆர்டர் பெறுவது வேலை. மாதத்திற்குச் சுமார் இருபது நாட்கள் வெளியூர் சென்று வரவேண்டும். இவர் ஊரில் இல்லாத காலத்தில் இவர் மனைவி தன் தாயின் வீட்டில் தங்கியிருப்பாள். பாட்டிலுள்ள ஞானத்தினால், லண்டனில் காட்டப்படும் புதிய சினிமாப் படங்கள், நாடகங்கள், இசை அரங்குகள் இவைகளில் பாடப்படும் பாட்டுக்களைப்பற்றி மேற்கு இங்கிலாந்துப் பத்திரிக்கைகளுக்கு விமரிசனம் எழுதும் வேலை இந்த அம்மாளுக்குக் கிடைத்தது. ஊதியத்தை நினைத்து வேலை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. எனினும் பாட்டிலுள்ள அன்பினால் இந்த வேலையை ஏற்றுக்கொண்டு செய்துவந்தாள்.

இதற்காகத் தன் புருஷன் ஊரில் இல்லாத காலங்களில் அடிக்கடி லண்டனுக்கு வரவேண்டிய அவசியம் உண்டு,

இந்த விவரங்கள் எல்லாம் நான் அவர்களுடன் போர்ன் மத்தில் ஒரே வீட்டில் தங்கிய ஒரு மாதத்திற்குள் தெரிந்து கொண்டேன். தன் கணவருக்குச் செய்த உதவிக்காக அந்த அம்மாள் தன் நன்றியைப் பலவிதமாகக் காண்பித்தாள். அங்கே தங்கியிருந்த நாட்களில் அந்த அம்மாளின் புருஷர் நான்குமுறை பக்கத்தில் இருக்கும் ஊர்களுக்கு வியாபாரத்திற் காக, ஒவ்வொரு தடவையும் மூன்று நாளைக்கு மேலாகச் சென்றிருந்தார். போகும்பொழுது தம் மனைவியை நான் கவனித்துக்கொள்ள வேண்டுமென என்னிடம் வற்புறுத்திச் சென்றார். அநேகமாக அந்த விடுமுறை நாட்கள் முழுவதையும் அந்த அம்மாளுடன் செலவழித்தேன். என் உடன்பிறந்தவர்களிடம் இருக்கக்கூடிய நட்பு உண்டாயிற்று. நான் லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன்பு இந்தத் தம்பதிகளிடம் விடை பெற்றுக் கொண்டேன். அப்பொழுது அந்த அம்மாளின் புருஷர் என்னிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தார்: "டாக்டர் ராஜன், என் மனைவி அடிக்கடி தனியாக லண்டனுக்கு வர வேண்டி இருக்கிறது. எனக்கு லண்டனில் நண்பர்கள் யாரும் இல்லை. இவள் திரும்பி வரும்வரையில் என் மனம் கவலை கொள்ளுகிறது. தயவு செய்து தாங்கள் சிரமத்தைப் பாராது அவளுக்குத் தேவையான துணை, உதவி முதலியவை செய்தால் நான் மிக்க நன்றியுள்ளவனாக இருப்பேன்" என்றார். நான் அவ்விதமே செய்ய வாக்குறுதி கொடுத்துவிட்டு லண்டன் திரும்பினேன்.

அன்று முதல் இந்தக் குடும்பத்தினரின் நட்பினால் ஆங்கிலேயர்களுடன் நெருங்கிப் பழகும் முறை, அவர்கள் நடை முறை, நாகரிகம், சமூக வாழ்வு, அவ்வூர் ஏழைகளின் சுக துக்கங்கள், எல்லாவற்றையும் அறிந்துகொள்ள முடிந்தது. ஒவ்வொரு விடுமுறை நாளிலும் நான் அவர்களுடைய வீட்டிற்குச் சென்றுவிடுவேன். கிறிஸ்துமஸ் பண்டிகை, புது வருஷப் பிறப்பு இவைகளுக்கு என்னை வற்புறுத்தித் தங்கள் வீட்டிற்கு

வரும்படி செய்வார்கள். அடிக்கடி தின்பண்டங்கள் செய்து லண்டனுக்கு அனுப்புவார்கள். எல்லா விதத்திலும் என் வீட்டார்கள் எவ்விதம் அன்புகொண் டிருப்பார்களோ அவ் விதமே என்னை நடத்தினார்கள்.

வருஷந்தோறும் அக்டோபர் மாதம் முதல் தேதி யன்று எங்கள் மெடிகல் காலேஜ் பரிசளிப்பு விழா நடைபெறும். எனது இரண்டு வருஷப் படிப்பு முடிந்ததும் பரீக்ஷைகளில் நான் முதல்வனாகத் தேறினேன். அந்தச் சங்கதி இந்தக் குடும்பத்தாருக்கும் தெரியும். காலஞ்சென்ற லார்டு கிச்னர் பிரபு தலைமை வகித்துப் பரிசளித்தார். இந்தியன் ஒருவன் அந்தக் காலேஜில் முதன்மையான இரண்டு பரிசுகள் பெறுவது அது தான் முதல் தடவை. 'நான் தனியாக இருக்கிறேன், என் பெருமையைத் தாங்களும் பகிர்ந்துகொள்ள வேண்டும்; என இக் குடும்பத்தினர் அன்றைத் தினம் லண்டனுக்கு வந்து பரிசளிப்பு விழாவில் கலந்துகொண்டார்கள். நான் மேடையில் ஏறிப் பரிசு வாங்கித் திரும்பும் காலையில் என் சினேகிதியான இள நங்கை என்னை அந்தச் சபையில் பாதி வழியில் எல்லோருடைய கவனத்தையும் கவரும் வண்ணமாகக் கைகுலுக்கி, என் பரிசுகளைத் தான் வாங்கிக்கொண்டு என் கையைப் பெருமையுடன் பிடித்துக்கொண்டு சென்றாள்.

என்னை இவ்விதம் கொண்டாடிய பெண்மணியையும் அவள் நடந்துகொண்ட விதத்தையும் கண்டு என் நண்பர்களுக்கு வியப்பு உண்டாயிற்று. "என்ன ராஜன், இந்தக் கட்டழகியை எங்கிருந்து பிடித்தாய்? நீ நல்ல அதிருஷ்டசாலி; இந்தியாவுக்குத் திரும்பும்பொழுது இவளை அடித்துக் கொண்டு போய்விடுவாய்!" என்று மறுநாள் அவர்கள் கேலி செய்தார்கள். "அவள் மணம் முடிந்தவள்; அவள் இங்கிலாந்தை விட்டுப் போக அவள் கணவன் இணங்க மாட்டான். அந்தப் பயம் உங்களுக்கு வேண்டியதில்லை." என்று நான் சொன்னவுடன் அவர்களுக்கு உண்மை விளங்கியது. இந்தக் குடும்பத்தாரின் அன்பையும் ஆதரவையும் நான் ஒருகாலும் மறக்கமுடியாது.

நான் சீமையை விட்டுப் புறப்பட்டபொழுது ஸௌதாம் டன் (Southampton) துறைமுகத்தில் கப்பல் ஏறினேன். லண்டனிலிருந்து என்னோடு வந்து, ஸௌதாம்டனில் ஒரு நாள் தங்கி, மறு நாள் என்னைக் கப்பலேற்றிச் சென்றாள், அந்த ஆங்கிலப்பெண். கப்பல் புறப்படுவதற்கு முன்னால் அவளை அறியாமல் கண்ணில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. கடைசியாக ஒரு வார்த்தை என் காதில் ரகசியமாகச் சொன் னாள்; "ராஜன், உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது; குழந்தைகளும் இருக்கின்றன. எனக்கும் மணம் முடிந்து அன் பிற்குரிய கணவனைப் பெற்றிருக்கிறேன். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் நடந்திராவிட்டால் நான் உங்களைப் பின் பற்றியே வந்திருப்பேன்" என்று சொல்லிவிட்டு மறைந் தாள்.

என்னிடத்தில் எதைக் கண்டு இம்மாது அன்பு கொண் டாள் என்பது எனக்கே விளங்கவில்லை. நிறத்திலோ கறுப்பு. என் அழகை நான் சொல்லவேண்டியதில்லை. அம்மை வடுக்கள் நிறைந்த முகம். செல்வமற்ற ஓர் ஏழை. நான் அப்பெண்மணி யின் அன்பிற்கும் அநுதாபத்திற்கும் பாத்திரமானேன். வேறு ஜாதி, வேறு மதம், வேறு நிறம், வேறு பழக்க வழக்கங்கள் இவற்றையெல்லாம் கடந்தது அன்பு! அதன் சக்தியையும் தோற்றத்தையும் யாரால் சித்திரிக்க முடியும்?

# திரும்பி வந்தேன்

மூன்று முழு வருஷங்களை இங்கிலாந்தில் கழித்தேன். நான் சம்பாதித்திருந்த பணம், என் நண்பர் எனக்கு அளித்த நன்கொடை, எல்லாவற்றையும் செலவழித்து விட்டேன். எனது வாழ்க்கை தொடங்கிய காலத்தில் நான் இருந்த வறுமை நிலையைத் திரும்பவும் எய்தினேன். கப்பலில் மூன்றும் வகுப்புப் பிரயாணத்திற்காக வேண்டிய தொகைமட்டிலும் பாக்கி இருந்தது. அதைக் கொண்டு திருச்சி சேரும் வரையில் தேவையான கப்பல் சீட்டு, ரெயில் சீட்டு இவைகளை வாங்கினேன். நமது தாய்நாடு திரும்பினேன். இவ்வளவு செலவில் நான் பெற்ற பயன் என்ன?

வைத்தியப் படிப்பிற்கான பரீக்ஷைகளில் தேறினேன். முதல்தரமாகவே தேறினேன். பரிசுகள் பெற்றேன். கற்றதைக் கசடறக் கற்றேன். அதனால் பரம ஏழையாகி விட்டேன். வீடு புகுந்ததும் மனைவியும் குழந்தைகளும் 'என்ன சம்பாதித்து வந்தாய்?' என்று கேட்டால், அவர்களுக்குத் தெரியும்வண்ணம் நான் என்ன பதில் சொல்வது என்பதே என் பிரயாண நாட்களில் என் கவலை.

நான் திரும்பும் பொழுது ஏறியது ஜெர்மன் கப்பல். மூன்றாவது வகுப்பிற்குக் குறைந்த கட்டணமும் சுமாரான வசதியும் இருந்தன. அதிக வேகம் போகாவிட்டாலும், பல ஊர்களில், பல துறைமுகங்களில் தங்கி மெள்ள மெள்ளப் பல நாட்கள் பிரயாணம் செய்தேன். பல ஊர்களைப் பார்ப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. சாப்பாடு படுக்கை முதலியவை கப்பலிலேயே. பல முக்கியமான துறைமுகங்களில் இரண்டு மூன்று நாட்களுக்குக் கப்பல் தங்கிற்று. அப்பொழுதெல்லாம், பகலில் அந்த அந்த ஊர்களைச் சுற்றிப் பார்த்தேன். அல்ஜீரியா, ஜினோவா, ரோம், நேபிள்ஸ், சூயஸ் முதலிய

இடங்களிலுள்ள விநோதங்களைக் கண்டேன். இந்தியக் கரை நெருங்க நெருங்க மனக்கவலையே அதிகமாயிற்று.

என்னுடன் லண்டனில் இந்தியர் விடுதியில் இருந்த நண்பர்களில ஒருவர் தூக்கில் இடப்பட்டு இறந்துவிட்டார். ஒருவர் தீவாந்தர தண்டனை பெற்று, அந்தமான் தீவுகளுக்குக் கொண்டுபோகப்பட்டார். ஒருவர் ஆங்கில அதிகாரிகளின் கையில் சிக்காமல், தம்மைத் தாமே நாடு கடத்திக்கொண்டு பிரான்ஸ் தேசம் போய்விட்டார். மற்றும் ஒருவர் தம் தோழர்களைக் காட்டிக்கொடுத்து இந்தியச் சிற்றரசு சர்க்காரிடம் ஊதியம் பெற்றுவிட்டார். இந்த விபத்துக்களுக்கெல்லாம் தப்பி, ஊர் வரக்கூடிய நிலைமை எனக்குத்தான் இருந்தது. ஆங்கிலப் பெரியார் ஒருவருடைய அரிய நட்பும், ஓர் ஆங்கிலச் சிறுமியின் அன்பும், வைத்தியப் பட்டமும் பரிசுகளும், தாய் நாட்டிடம் வற்றாத பக்தியும், மனத்தை வருத்தும் அடிமைத் தளையின் உணர்ச்சியும், வறுமை நிலையும் நான் பெற்ற லாபங்கள். இவைகளோடு இந்தியப் போலீஸ் அதிகாரிகள் நம்மை என்ன செய்ய எண்ணியிருக்கிறார்களோ என்கிற கவலையும் மனத்தைவிட்டு அகலவில்லை.

சுமார் இருபத்தெட்டு நாள் பிரயாணம் செய்த பிறகு கொளும்பு மார்க்கமாகத் தூத்துக்குடித் துறைமுகத்தில் ஒரு நாள் காலை நேரத்தில் வந்து இறங்கினேன். என்னை எதிர்கொண்டு அழைத்தவர்கள் ஒரு கூட்டம் உளவுப் போலீஸ் அதிகாரிகள். என்னை எவ்வளவோ கேவலமாகச் சோதனை செய்தார்கள் என்ற கதையை விவரிக்க எனக்கு மனம் இல்லை. எழுதுவதற்குக்கூடக் கூசுகிறது. என் உடைகளைக் கழற்றி, வாய், தொண்டை, மலத்துவாரம்முதல் சோதனை செய்து நான் கொண்டுவந்த புத்தகங்கள், நோட்டுப் புத்தகங்கள், கடிதங்கள், படங்கள் எல்லாவற்றையும் ஆளுக்கு ஒன்றாக எடுத்துக்கொண்டு என்ன குதூகலத்துடன் பக்கம் பக்கமாகப் பரிசீலனை செய்தார்கள்! இந்தக் கேவல நிலையில் என் மனம் பட்டபாடு சொல்லிமுடியாது. கோபம் வந்தது; பயன் என்ன?

என்னைப் பரிசீலனை செய்வதற்காக, போட்மெயில் வண்டியை ஒரு மணிநேரம் தாமதிக்க வைத்தார்கள். பிறகு ரெயிலில் ஏறவிட்டார்கள் ஆனால் இவர்கள் தொல்லை இதனோடு ஒழியவில்லை. அன்றைத்தினம் ஏற்பட்ட போலீஸ் கண்காணிப்பு நாற்பது வருஷங்கள் ஆனபிறகுகூட இன்னும் நீங்கி விட்டதோ என்கிற நிச்சயம் எனக்கு இல்லை. பிறகு ஒரு சமயம் எனக்கு இறங்கும் இடத்தில் அதிகாரிகளால் என்ன சங்கடம் நேரிடுமோ என்கிற பயம், என் மனைவியின் மனத்தை விட்டு அகலவில்லை. ஆனால் அவளால் என்ன செய்யமுடியும்? தன் உடன்பிறந்தவனுடன் மன்றாடி, தன்னிடம் உள்ள ஒரு சிறிய தங்க நகையை விற்று, ரெயில் செலவிற்குப் பணத்தை அவரிடம் கொடுத்து, என்னைக் காணும்படி தூத்துக்குடித் துறைமுகத்திற்கு அனுப்பியிருந்தாள்.

அன்றைத் தினம் போட்மெயில் புறப்படுவதற்கு நேரமானதால், அவர் வரும் வண்டி மணியாச்சியில் தடைப்பட்டு நிறுத்தப்பட்டுவிட்டது. மணியாச்சி ஸ்டேஷனில் அவர் என்னைச் சந்தித்து என்னுடன் திருச்சிக்குப் பிரயாணமானார். பி. ஏ. பரீக்ஷை தேறினவராக இருப்பினும் அரசியல் விஷயங்களில் அவருக்குச் சிரத்தை இல்லை. மனிதன் தன் வயிற்றுப் பிழைப்பைப் பாழ்படுத்திக்கொண்டு, அரசியலில் தலையிடுவது முறையல்ல என்பது அவரது எண்ணம். மேலும், நல்ல வருவாயை விட்டு, மக்களையும், மனைவியையும் பரிதபிக்க விட்டு, கையிலிருந்த பணத்தை யெல்லாம் தொலைத்துவிட்டு, ஒரு பெரிய உத்தியோகத்தையோ பதவியையோ சம்பாதித்துக் கொள்ளாமல் வெறுங்கையுடன் திரும்பி வரும் என்னைப் பற்றி அவர் எவ்விதம் பெருமை கொள்ளக்கூடும்?

அன்று பகல் பிரயாணத்தில் பெரும்பாகம் அவர் என்னுடைய நிலைமையைப் பற்றியும், கஷ்டங்களைப்பற்றியும் செய்த பிரசங்கம் என் மனத்தை ஒருவாறு கலக்கியது. "நீர் பரீக்ஷை கொடுத்துவிட்டு வந்து என்ன பலன்? கையில் இருந்த காசெல்லாம் தொலைந்து போய்விட்டது. மூன்று பெண் குழந்தை

களும் மனைவியும் பரிதவித்துக்கொண் டிருக்கிறார்கள் ஊரிலோ வைத்தியர்களுக்குக் குறைவில்லை. அவர்களுக்கு யார் பணம் கொடுக்கிறார்கள்? சர்க்கார் ஆஸ்பத்திரியில் இருந்தால் மாதம் ஏதாகிலும் நூறு ஐம்பது சம்பளம் கிடைக்கும். அதுவும் உமக்கு இல்லை. நம் பந்துக்கள் எல்லோருமே ஒருமுகமாக உம்மை ஜாதியை விட்டுத் தள்ளி விட்டார்கள். நீர் வந்தவுடன் தங்குவதற்கு ஒரு வீடு வேண்டு மென்று தேடினபொழுது ஒருவரும் கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட்டார்கள். என் தமக்கையை (என் மனைவியை) நீ புருஷனிடம் போகக்கூடாது என்று வீட்டிலிருக்கும் பாட்டி உத்தரவு போட்டாள். அதை அவள் கேட்காமல் தனக்குத் தெரிந்த செல்வம் வாய்ந்த ஒரு சிநேகிதியிடம், ஊருக்கு வெளியே இருக்கும் பங்களா ஒன்றை வாங்கிக்கொண்டு அங்கே வந்து பிள்ளைகளுடன் தங்கியிருக்கிறாள். நீர் ஊருக்கு வந்தாலும் அங்கேதான் வந்து தங்கவேண்டும். அப்பொழுதே சீமைக்குப் போகவேண்டாமென்று நாங்கள் எல்லோரும் வற்புறுத்தினோம். ஒரே பிடிவாதமாகப் போய்விட்டீர். இனி இந்த ஊரில் என்ன செய்யமுடியும்?" என்று அழுத கண் ணும் சிந்திய மூக்குமாகப் பிரலாபித்தார்.

இந்த வரவேற்புக்குச் சிரிப்பதா அழுவதா என்று எனக்குப் புரியவில்லை. இரவு சுமார் பத்து மணிக்கு, வீடு வந்துசேர்ந்தேன். என்னை ஆதரித்துக் காப்பாற்றிய ரங்கூன் பசுபதி ஐயரும், என் தகப்பனாரும் என்னைத் திருச்சி ஜங்ஷன் ஸ்டேஷனில் வரவேற்றார்கள். என் தாயையும் உடன் பிறந்தோர்களையும் கண்டு பேசிவிட்டு, ஊருக்கு வெளியே பங்களா அமர்த்திக்கொண்டு மக்களுடன் காத்துக் கொண்டிருக்கும் என் மனைவியைக் கண்டேன். வறுமையின் கொடுமையாலும், கணவனைப் பிரிந்த வாட்டத்தாலும், உடல் வற்றிச் சோர்வடைந்திருந்தாள், அவள். தீர்க்க முடியாத ஒரு நோயின் சின்னங்களும் வைத்தியனான என் கண்ணுக்குப் புலப்பட்டன. இளவயசுள்ள மக்களுக்கு இந்தக் கஷ்டங்களை அறியக்கூடிய சக்தி இல்லை. நான் அவர்களுக்

சென்று சொணர்ந்த வெகுமதிகளைக் குதூகலத்துடன் பெற்று மகிழ்ச்சி அடைந்தார்கள்.

என் சுற்றத்தார், உறவினர், பெற்றோர்கள் உட்பட யாரும் என்னைத் தங்கள் வீட்டிற்கு அழைக்கவோ நான் தங்கியிருக்கும் இடம் வந்து என்னுடன் உண்டு களிக்கவோ மனம் துணியவில்லை. எங்கே தங்களையும் ஜாதியை விட்டு ஊரார் நீக்கிவிடுவார்களோ என்ற பயம். வந்து பார்த்துப் பேசிப் போவதோடு நின்றுவிட்டார்கள். எனக்கும் இன்னது செய்வதென்று விளங்கவில்லை. இந்த நிலையில் ஸ்ரீரங்கத்தில் செல்வராகவும், அரசியல் போராட்டங்களில் பொதுமக்கள் சார்பாக ஊக்கம் பாராட்டி, அதிகார வர்க்கத்தின் கொடுமைக்கு ஆளான இளைஞர்களுக்குப் பேருதவி புரிபவராகவும் இருந்த ரங்கஸ்வாமி ஐயங்காரிடம் என்னைப் பசுபதி ஐயர் கூட்டிச் சென்றார். நான் ஸ்ரீரங்கம் வாசியாக அதே ஊரில் வளர்ந்தவனாக இருந்தாலும், ரங்கஸ்வாமி ஐயங்காரின் நட்புக்குப் பாத்திரனாகவில்லை. நான் பரம ஏழை; அவருடன் சமமாகப் பழகக் கூடிய நிலை அற்றவன். நான் சீமையில் இருந்த பொழுது என்னைப்பற்றி ஊரில் பல வதந்திகள் கிளம்பின. அப்பொழுது, நான் யாரென்று தெரிந்துகொண் டிருந்தார். பசுபதிஐயர் அப்பொழுது திருச்சியில் இருந்தார். அவர் மூலம், இந்தியா விடுதியின் தேசப் பணியைத் தெரிந்துகொண் டிருந்தார். புதுவையில் தங்கியிருக்கும் அரவிந்த யோகிக்குத் துணை புரிந்து உதவியவர். தாராள சிந்தனையுடன் நுட்பமான புத்தியும் உடையவர். ஆங்கிலப் படிப்பு மெட்ரிகுலேஷனோடு நின்றுவிட்டது. ஆனால் தேச பக்தி அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது.

இந்தத் தேசீய மனப்பான்மை அவருக்கு எப்படி வந்ததென்பது எனக்குத் தெரியாது. சென்னையில் அக்காலத்தில் 'வந்தே மாதரம் கூட்டத்தார்' என்று பெயர்பெற்ற கவி சுப்பிரமணிய பாரதியார், சுப்பிரமணிய சிவம், வ.உ. சிதம்பரம் பிள்ளை, வ. ரா. முதலியவர்களுக்கு வேண்டும்பொழுது தம்மால் இயன்ற உதவியை ரகசியமாகச் செய்துவந்தார். தம்மிடம் வருகிற

வாகளை வரவேற்கும் முறையிலேயே அவர்களுடைய உள்ளத்தைக் கொள்ளைகொண்டுவிடுவது அவருடைய அபூர்வமான இயற்கை. வயசில் சிறுவராக இருந்தபோதிலும் முகமலர்ச்சி உள்ளவர். அவருடன் பழகுவது ஆனந்தத்தைக் கொடுக்கும். அரசியல் துறையில் தீவிர அபிப்பிராயங்களை உடையவர்.

முதல் நாள் அவரைக் கண்டதும், 'இவருடைய நட்பினால் என் சகல கஷ்டங்களையும் கடந்துவிடலாம்' என்கிற எண்ணம் என் மனத்தில உதித்தது. பிறகு தினசரி அனேகமாக அவரைக் காண்பதும், அவருடன உறவு கொண்டாடுவதும், வெகு நேரம் உத்ஸாகப் பேச்சு வார்த்தைகள் ஆடுவதும் எனக்குப் பொழுதுபோக்காக ஆகிவிட்டன. இப்படிப் பத்து நாட்கள் கழிந்தன. சீமைக்குப் போய்வந்த அதிர்ச்சியும் ஊரில் அடங்கிவிட்டது. வயிற்றுப் பிழைப்பின் கவலையும் அதிகரித்து வந்தது. சர்க்கார் உத்தியோகத்துக்குப் போகக்கூடாதென்பது என் முடிவு. எங்காகிலும் தொழில் செய்யவேண்டுமே?

ரங்கஸ்வாமி ஐயங்காரின் நட்பினால் ஸ்ரீரங்கத்திலேயே வேரூன்றலாம் என்றுலோ, அதற்கு அவர், இடங்கொடுக்கவில்லை. "ஏன் அவசரப்படுகிறீர்கள்? கொஞ்ச நாட்கள் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். உங்களுக்குத் தகுந்த வரவேற்பு அளிக்கவேண்டும். மற்றவற்றைப் பிறகு யோசித்துக்கொள்ளலாம்" என்று சொன்னார். வரவேற்பும் வெகு ஆடம்பரமாகவே நடந்தது. எல்லாம் ரங்கஸ்வாமி ஐயங்கார் செலவிலேயே நடந்தது. நண்பர் பசுபதி ஐயரும் கூடவே இருந்தார். ரங்கஸவாமி ஐயங்காரின் பரிவாரங்களில் ஒருவராக இருந்த திருப்பயணம் வ. ராமஸ்வாமி ஐயங்காரும்(வ. ரா.)எனக்குத் தோழரானார்.

தேநீர் விருந்து நடந்தது. தெருப் பலகாரக் கடைகளில் பகிரங்கமாக வாங்கி உண்ணும் நண்பர்கள் என்னுடன் உட்கார்ந்து விருந்துண்டார்கள். பசுபதிஐயர், வ. ரா. முதலியோரும் பங்குகொண்டார்கள். ஆனால் என் போஷகராகவும் தேசபக்தராகவும் விருந்தளித்த ரங்கஸ்வாமி ஐயங்கார்மட்டும் இந்த விருந்தில் வீற்றிருந்தபோதிலும், விருந்து உண்ணவில்லை. பொதுப்படையாக, 'விருந்துகளிலும் மற்றவர்கள்

வீட்டிலும் சாப்பிடும் வழக்கம் இல்லை' என்று சொல்லிவிட்டார். எனக்குமட்டும் அவர் ஸ்ரீரங்கத்தில் இருக்கும் பெருவாரியான வைதிகவைஷ்ணவர்களுடைய கட்டுப்பாட்டை மீறத் துணியாத காரணத்தினால்தான் இம்மாதிரி நடந்துகொண்டார் என்பது முடிவு. என் உள்ளக் கிடக்கையை அவருக்கும் வெளிப்படையாகவே தெரிவித்தேன். அம்மாதிரியான பயம் தமக்கு இல்லை என்று அவர் சாதித்தார். இதைப் பரீக்ஷை செய்துவிடவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

"நம்முடைய நட்புக்கு அறிகுறியாகத் தாங்கள் என் வீட்டிற்கு வந்து என்னுடன் உணவு அருந்தவேண்டும். நம் நண்பர் பசுபதி ஐயரும், வ. ரா. முதலியவர்களும் வருகிறார்கள்" என்று சொல்லி அழைத்தேன். "உடன் உண்பது போன்ற முறை நட்பிற்கு ஓர் அறிகுறியா என்பது எனக்கு விளங்கவில்லை. இருந்தபோதிலும் எனக்கு உங்களுடன் சாப்பிடயாதோர் ஆட்சேபமும் இல்லை என்பதை வற்புறுத்துவதற்காகவாவது நான் வருகிறேன். என்றைக்கு உங்களுக்கு இஷ்டமோ அன்றைக்கு வருகிறேன்" என்று உடன்பட்டார்.

குறிப்பிட்ட தினத்தில் சாயங்காலம் அவரை அழைத்துவர அவர் வீட்டிற்குச் சென்றேன். விளக்கேற்றிய பிறகு தமக்கென்று தம் வீட்டிலே சமைத்திருந்த இரவு உணவைக் கொண்டுவரச் செய்து உண்ட பிறகு தம் சமையற்காரனைக் கூப்பிட்டு, "நான் இரவு வருவதற்கு நேரமாகும்; எனக்காக யாரும் காத்திருக்க வேண்டாம்" என்று சொல்லி, தாம் என்னுடைய வீட்டில் சாப்பிடப் போகும் நிகழ்ச்சியை வீட்டில் யாருக்கும் தெரிவிக்காமல் என்னுடன் தமது வண்டியில் ஏறிப் புறப்பட்டார். அன்று திருவானைக்காவலில் பஞ்சப் பிராகார உத்ஸவம். "சுவாமி புறப்பட்டுப் பவனி வருவதைப் பார்த்துவிட்டு, பிறகு தங்கள் பங்களாவிற்குப் போகலாம்" என்றார். அப்படியே அங்கே சென்றோம். இரவு பதினொரு மணி வரையில் மேளக்கச்சேரி கேட்டுவிட்டு, நடு நிசிக்கு என் வீட்டிற்கு வந்து, செய்து ஆறிப்போன சில பதார்த்தங்களைச் சாப்பிட்டுப் போனார்.

எதற்காக அவர் இவ்வளவு பயந்துகொண்டு தமது உள்ளக் கிடக்கையை ரகசியமாகத் தெரிவித்தார் என்பது எனக்குப் புலப்படவில்லை. 'பொது அபிப்பிராயத்தை வெளிப் படையாக உடைத்து எறிய அவர் மனத்திற்குத் திடனில்லை' என்று உணர்ந்தேன். ஸ்ரீரங்கத்தில் வைதிகர்களுடைய முறை யற்ற கட்டுப்பாட்டைத் தளர்த்திவிட எனக்குப் பேருதவியாக இருக்கும் இந்தத் தேச பக்தருடைய ஆதரவு பரிபூர்ணமாகக் கிடைத்துவிட்டதென்று மனக் கோட்டை கட்டிவந்த என்னை அவருடைய சாகசம் திடுக்கிடச் செய்தது. ஆனால் அவரிடம் எனக்கு வருத்தம் ஒன்றும் இல்லை. வைதிகர்களுக்குக் காப்பாள ராகவும் சீர்திருத்தக்காரருடைய வெறுப்பிற்கு ஆளாகாமல் அரசியல் வாதிகளில் அதி தீவிர வாதியாகவும் நடந்துகொள்ள அவர் முயன்றார். அதில் எவ்வளவு தூரம் அவருக்குப் பெரு மையும் பெயரும் அதிகரித்தன என்று என்னால் சொல்ல முடி யாது. என்னைப் பற்றிய மட்டில் என் வாழ்க்கையை நடத்த அவர்பேரில் கொண்டிருந்த அளவில்லாத நம்பிக்கை ஆட்டம் கொடுத்துவிட்டது.

ஸ்ரீரங்கத்தில் வைதிக கோஷ்டிகளுக்குத் தலைவர்களாகவும், சாஸ்திரம், வேதம் முதலியவைகளைக் கற்ற பண்டிதர்களில் முக்கியமானவர்களாகவும், இருந்த சிலரைக் கண்டு பேசினேன். அவர்கள் யோசனைசெய்து முடிவாக எனக்குக் கொடுத்த தீர்ப்பு இதுதான்: "பிராம்மணர்கள் சமுத்திரத்தைத் தாண்டக் கூடாது. அது சாஸ்திர விரோதம். அதற்குப் பிராயச்சித் தமும் விதிக்கப்படவில்லை. நீங்கள் சீமைக்குப் போகும் பொழுது எங்கள் சம்மதத்துடன் போகவில்லை. நீங்கள் பிராம் மண்யத்தை இழந்துவிட்டீர்கள். இனி, பிராம்மண சமூகத் தில் இடம் தேடுவது முடியாத காரியம். உங்கள் பெற்றோர்கள், உறவினர், நண்பர் யாராகிலும், உங்களுடன் உறவாடிக் கலந்துகொண்டால் அவர்களையும் ஜாதிப் பிரஷ்டம் செய்து விடுவோம். உங்கள் பேரில் எங்களுக்குக் கோபமில்லை. நீங்கள் செய்த காரியத்திற்குச் சாஸ்திரம் இடம் கொடுக்கவில்லையே! நாங்கள் என்ன செய்வது?"

'சமூக வாழ்விற்கும், வயிற்றுப் பிழைப்பிற்கும் வழியில்லாத ஊரில் நாம் என்ன செய்வது? தொழில் தொடங்கிய ரங்கூனையே நாடிச் செல்வோம்' என்ற முடிவிற்கு வந்தேன். அதற்கான உதவியைத் திரும்பவும் பசுபதி ஐயரிடமே பெற்று, மனைவி மக்களுடன் கப்பலேறி ரங்கூன் போய்ச் சேர்ந்து, விட்ட தொழிலைத் திரும்பவும் பற்றிக்கொண்டேன்,

எதிர்பாராதபடி வருவாய் வரத்தொடங்கியது. என் சிமைப் படிப்பின் திறமையால் வந்ததோ என் அதிருஷ்டத்தால் வந்ததோ, நான் சொல்லமுடியாது. மூன்று வருஷங்களுக்கு முன்பு எனக்குக் கிடைத்த வருவாயைக் காட்டிலும் நான்கு மடங்கு அதிகம் கிடைத்துவந்தது. கையில் ஏராளமான பணம் வரவே, என் மகளுக்கு மணம் முடிக்கவேண்டுமென்று என் மனைவி வற்புறுத்தத் துவக்கிவிட்டாள். மகளுக்கு வயது பன்னிரண்டுதான். பள்ளியில் அவள் தன் வயசுக்குத் தகுந்த வகுப்பில் படித்து வந்தாள். இந்த வயதில மணம் முடிக்க எனக்கு இஷ்டம் இல்லை. ஆனால் தீராத நோயின் காரணமாக வருந்தி வாடி வரும் என் மனைவிக்கு, தான் இறக்கும் முன்பு ஒரு மகளுக்காகிலும் மணம் முடித்துப் பார்க்க வேண்டும் என்று அவா. ஆகையால், இரண்டாம் முறை ரங்கூன் சென்ற இரண்டு வருஷங்களில மணமகன் தேடுவதற்காகக் குடும்பத்துடன் திரும்பவும் ஸ்ரீரங்கம் வந்தேன்.

# வைதிகக் கோட்டை

நான் சீமைக்குப் படிக்கப்போய்த் திரும்பிய தொல்லைகள் என்னை அடிக்கடி வாட்டின. சிறிய வங்காளாக் குடாக்கடல் தாண்டிப் பர்மாவிற்குச் சென்று அங்கே பலவிதமான துறைகளில் உழைத்து ஊதியம் பெற்று வயிறு வளர்த்து வந்த வைதிகச் சிந்தனை கொண்ட லௌகிகப் பிராம்மணர்களில் சிலருக்கு நான் தங்களைக் காட்டிலும் அதிக தூரம் பல நாட்கள் கடல் கடந்ததால் பெரிய குற்றம் செய்தவனாகத் தோன்றியது. ஆனாலும் ரங்கூனில் வசித்துவந்த பெருவாரியான பிராம்மணர்கள் என்னை அங்கீகரித்துத் தங்களுள் ஒருவனாகவே கருதினார்கள். அறுபத்து நான்கு வருடங்கள் கழித்து உலக அநுபவம் அதிகரித்து அதனால் என் எண்ணங்கள் பக்குவம் அடைந்திருக்கும் இக்காலத்தில்கூட, வைதிகர்களின் கூட்டமும், அவர்கள் நடத்திவரும் சமூக அமைப்பும், அதற்கு உண்டான சடங்குகளும் என் மனத்தை அக்காலத்தில் ஏன் அவ்வாறு பற்றிக்கொண்டன என்பதற்குத் தெளிவான காரணங்கள் எனக்குப் புலப்படவில்லை.

வைதிக அநுஷ்டானங்களைக் கைப்பற்றிய குடும்பத்தில் பிறந்து, வைதிகர்கள் அடங்கிய வைஷ்ணவ க்ஷேத்திரத்தில் இளமையில் வளர்ந்து, கோயில் முறைகளை அக்காலத்தில் ஊன்றிப் பார்த்துவந்தது, பிறகு வைதிக அநுஷ்டானத்தைப் பின்பற்றிய குடும்பத்திலே பிறந்த மனைவியை அடைந்தது, இந்திய தேசீய உணர்ச்சிக்கு வைதிகக் கொள்கைகள் அடிப்படை என்பதான எண்ணம், நாட்டில் நடந்துவரும் ஜாதி உயர்வு தாழ்வு புராதனக் கலைகள் நாகரிகம் இவைகளைப் புறக்கணித்தால் நாட்டிற்கு இழிவு ஏற்படுமோ என்கிற பயம், இவைகள் எல்லாம் ஒருவாறு என் மனத்தை வாட்டியது உண்டு. என் தாய் தகப்பனார், உற்றார் உறவினர், உள்ளூர்ச் சிநேகிதர்கள்,

எல்லாரோடும் ஒருமித்து என்னை ஜாதியிலிருந்து விலக்கிய வைதிகர்களிடம் பயம்.

என் பெண்களுக்குச் சரியான வரன் என் ஜாதியில் கிட்டாமல் போய்விடுமோ என்கிற அறிவீனமான என் எண்ணமும் இதற்குக் காரணமாக இருக்கலாம். என் பெரிய மகளுக்கு ஏற்ற கணவனைச் சம்பாதிக்கும் முறையில் எவ்வித இடையூற்றையும் தாண்டிவிடலாம். ஆனால் வைதிக கோஷ்டியாரால் ஸ்ரீரங்கத்தில் ஏற்படுத்தப்பட்ட விலக்கைத் தாண்டுவது எப்படி என்பது என் கவலை. பரம்பரையாக எங்கள் கூட்டத்திற்கு ஆசாரியனும், வைதிக விஷயங்களில் சாஸ்திரோக்த அதிகாரியுமான அஹோபில மடம் ஜீயர் சுவாமிகள் வைதிகர்களுடைய விலக்கை ஆதரித்தார்கள். அதனால் பெரும் கூட்டமான என் பங்காளிகளும் என்னை ஆதரிக்க மறுத்தார்கள். இதனிடையில் என் மகளுக்கு வரன் தேடி, ஸ்ரீரங்கத்தில் கல்யாணம் நடைபெற வேண்டியதாக இருந்தது. பெரிய மனிதராகிய என் நண்பர் கொடியாலம் ரங்கஸ்வாமி ஐயங்காரும் வெளிப்படையாக என்னை ஆதரிக்க முன்வரவில்லை. என் பெற்றோர்களும் என்னை அனுகவில்லை. இது மட்டுமன்று; வரன் தேடும் என் முயற்சிக்கு இடையூறாகவே இருந்தார்கள். மகள் கல்யாணத்தை எண்ணிக் கையில் இரண்டு வருஷங்களில் ரங்கூனில் சேகரித்து வந்த தொகை நாலாயிரத்திற்குமேல் இல்லை. இந்த மூலதனத்தைக் கொண்டு நல்ல வரன் சம்பாதிக்கவேண்டும். வைதிகக் கோட்டையின் கொடுமையை ஒருவாறு தளர்த்தவேண்டும். இரண்டும் செய்துவிடலாம் என்று தீர்மானித்தேன். எனக்கு உதவியாக இருந்தது சொல்ப திரவியந்தான். எனினும் என் பழைய பள்ளிக்கூட ஆசிரியரும், உறவினரும், ஸ்ரீரங்கம் உயர்தரப் பள்ளிக்கூட ஸ்தாபகருமான காலஞ்சென்ற வீரராகவ ஐயங்காருடைய முயற்சி எனக்கு ஒப்பற்ற துணையாக இருந்தது.

ஸ்ரீரங்கத்தில் வைஷ்ணவர்களுக்குள் எப்பொழுதும் இரண்டு கட்சிகள் உண்டு. அவைகளில் வெளிப்படையான பேதம் நாமத்தில்தான்: கொண்டிநாமம் போடுகிறவர்கள் வட

கலையார் என்றும், கொண்டி வளைவிற்கு அடிப்பாகத்தில் மூக்கில் வெள்ளை நாமத்தை இழுத்துப் போடுகிறவர்கள் தென்கலையார்கள் என்றும் சொல்லப்படுவார்கள். அவர்களுக்குள் ஏன் சதாகாலமும் சண்டை சச்சரவுகள் ஓயாது நடந்துவருகின்றன என்பதற்குரிய காரணம் எனக்குப் புரிந்ததே இல்லை. தென்கலையார்களுக்கும் வடகலையார்களுக்கும் உடன் உண்பது, உடுப்பது, கொள்வினை, கொடுப்பினை ஒன்றிலும் வித்தியாசமே இல்லை. ஒருவருக்கு மற்றக் கலையார்களில் பங்காளிகளும் உண்டு; சொந்தக்காரர்களும், மாமன் மைத்துனன், உறவினர்களும் உண்டு.

குரு சிஷ்ய பாவத்தில் தென்கலை ஆசாரியர்களுக்கு வடகலைச் சீடர்கள் உண்டு. வடகலை ஆசாரியர்களுக்குத் தென்கலைச் சீடர்களும் உண்டு. வடமொழியாகிய ஸம்ஸ்கிருதத்திலும், தென்மொழியாகிய தமிழிலும் இரு கூட்டத்தாருக்கும் பயிற்சியும் பாண்டித்தியமும் உண்டு. வடகலையார்களுக்கு வடமொழியிலும். தென்கலையார்களுக்குத் தமிழிலும் அதிகப் பயிற்சி என்று சொல்லுவது உண்டு. மற்றச் சடங்குகள் சமூகக் கட்டுப்பாடுகள், ஆசார விவகாரங்கள் இவைகளில் மாறுபாடுகள் இரா. விஷ்ணு தேவாலயங்களில் பரம்பரையாக அதிகமான பாத்தியமும் ஊழியமும் தென்கலையாருக்கு உண்டு. வடகலையாருக்கு அவ்வளவு இல்லை. ஆனால் இரு கலையாரும் வேத பாராயணம் செய்வதும், பிரபந்தங்களைப் பாடுவதும் வழக்கமாக உள்ளன. வைஷ்ணவ ஆசாரிய பரம்பரையில் இருகலையார்களும் இருந்திருக்கிறார்கள்.

இவ்வளவு ஒற்றுமை இருந்தும் ஸ்ரீரங்கம், காஞ்சீபுரம் போன்ற பெரிய விஷ்ணு க்ஷேத்திரங்களில் இரு கூட்டத்தினருக்கும் விவாதம், ஓயாமல், கோர்ட்டு நடவடிக்கைகள், கிரிமினல் வழக்குகள், சிவில் வழக்குகள், எல்லாக் கோர்ட்டுகளிலும். சென்னை ஹைகோர்ட்டில் இன்னும் விவகாரங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. வக்கீல்களுக்கு இதனால் நல்ல வருமானம். கோர்ட்டுகளுக்கு வேலையும் வருமானமும். கட்சிக்காரர்கள், பொய்ச்சாட்சிகள், வழக்கு நடத்துவதற்குப் பொது

நிதி, இவைகளுக்கும் குறைவே இல்லை. வைஷ்ணவ மதமோ கொள்கையோ, இந்து மதமோ ஆசாரமோ, இன்னதென்று கனவு காண்பதுகூட இல்லாத நீதிபதிகளிடத்தில் தீர்ப்புப் பெறுவார்கள். முஸ்லிம், கிறிஸ்துவ நீதிபதிகளிடத்து நியாயம் கோருவதற்கும் பின்வாங்கமாட்டார்கள். இந்தக் கோஷ்டிச் சண்டைகளில் பெரும்பாலோர் பழையகாலத்து மடிசஞ்சிகள். உலகம் இத்தகையது என்ற அறிவே இல்லாதவர்கள். ஆனால் படித்துப் புதுநாகரிகம் அறிந்த லௌகிகர்களும் இந்தச் சண்டையில் பங்கெடுத்துக் கொள்வார்கள். தேசீய இயக்கம், சமூக அமைப்புமாறுதல், காலத்தின் போக்கு, அரசியல் ஞானம் இவை இவர்களில் பலருக்கு இல்லை. ஒருவர் மற்றொருவர் கொட்டத்தை அடக்குவதிலேயே முக்திபெற முயற்சி. இந்தச் சச்சரவிற்கு அளவே இல்லை!

இருகலையார்களும் நான் சீமைக்குப்போன குற்றத்தை நீக்க உடன்படவில்லை. இந்தச் சண்டையில் வடகலையாருடைய பொதுநிதி மிகக் கேவலம் அடைந்திருந்தது. கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலோர் கோர்ட்டு நடவடிக்கைகளுக்குப் பொதுவிலும், தனிப்பட்ட முறையிலும் கடன்பட்டிருந்தார்கள். கடன் தொல்லையை அவர்களால் சமாளிக்க முடியவில்லை.

இந்தச் சமயத்தில்தான் வீரராகவ ஐயங்கார் தலையிட்டு ஒரு வழி ஏற்படும்படி வேலை செய்தார். கோஷ்டியருடைய அமைச்சரைப் பிடித்து அவர்மூலம் என் குற்றத்திற்குப் பிராயச்சித்தமே இல்லை எனச் சொல்லியவர்களிடம் என்னை ஜாதியில் சேர்ப்பதற்கான சில முறைகளைக் கற்பனைசெய்தார். அதற்கு உரிய நிபந்தனைகள் பின்வருமாறு:—

(1) வடகலைக் கோஷ்டியாருடைய பொதுநிதிக்கு ரூபாய் ஐந்நூறு நான் நன்கொடையாகக் கொடுத்துவிட வேண்டும்.

(2) இன்னும் ஐந்நூறு எனக்குப் பிராயச்சித்தம் செய்யும் முறையை வகுத்து அதன்படி நடத்திவைத்துப் பாடு படுபவர்களுக்கு இனாமாகக் கொடுக்கவேண்டியது.

(3) நான்கு வைதிகப் பிராம்மணர்களுடன் அகண்ட காவேரிக் கரையில், நான் பிறந்தது முதலாகச் செய்த சகல பாபங்களுக்கும் பரிகாரமாக என் மனைவியுடன் நான் புனர் உபநயனம் முதற்கொண்டு எல்லாம் செய்துகொள்ள வேண்டியது.

(4) சேதுவிற்குச் சென்று அந்த நால்வருடன் மூன்று நாள் தங்கி முப்பத்தாறு முறை சமுத்திரத்தில் ஸ்நானம் செய்து நன்கொடைகள் வழங்குவது.

(5) இவ்விதம் நான் சுத்தமான பிறகு என் மகள் கல்யாணத்திற்கு வைதிகக் கோஷ்டியார்கள் வந்து மணச்சடங்குகளை நடத்திவைப்பது.

(6) என் வீட்டில் உண்ண இஷ்டமில்லாத கோஷ்டியார்களை நான் வற்புறுத்தக் கூடாது.

(7) என் வீட்டில் வந்து உண்டு கலந்துகொள்ளும் என் பந்துக்களையும் சினேகிதர்களையும் ஜாதியைவிட்டு நீக்கி உபத்திரவிக்கக்கூடாது.

இவ்வளவு நிபந்தனைகளுடன் நான் என் ஜாதியாருடன் சேர்ந்திருக்க ஏற்பாடு நடந்தது. நான் இம்மாதிரியெல்லாம் செலவுசெய்து வைதிகக் கோட்டைக்குள் புகுந்துகொள்ள வேண்டுமென என் மகளை மணந்துகொள்ளும் மருமகனுவது அவரைச் சேர்ந்தவர்களாவது விரும்பவில்லை. ஸ்ரீரங்க வாசிகளாகிய என் பெற்றோர்களையும் மற்றச் சுற்றத்தாரையும் என் மகளின் திருமணத்தில் கலந்துகொண்டதற்காக உபத்திரவிக்கக்கூடாது என்றதை எண்ணியே செய்தேன். இவ்வளவு அவமானத்திற்கும் கேவலத்திற்கும் என்னை உட்படுத்திக்கொண்டு வைதிக கோஷ்டியாரை அநுகூலமாக்கின பிறகுங்கூட என் நண்பர் ரங்கஸ்வாமி ஐயங்காரை வெளிப்படையாக என் வீட்டில் நடந்த திருமணத்தில் உணவு உண்ணச் சம்மதிக்கச் செய்ய முடியவில்லை. எனினும் அவர் கல்யாண வைபவங்களில் கூட இருந்து சகல உதவியும் புரிந்தது மட்டும் அல்லாமல், அவருடைய செல்வாக்கு முழுமையையும் உபயோகித்துக் கல்யாணத்தைச் சகல விமரிசைகளுடனும் நடத்திவைத்தார்.

வைதிகர்கள் கூட்டத்தில் எனக்குப் பிராயச்சித்தம் நடந்ததைப் பற்றி மாறுபட்ட அபிப்பிராயமும் உண்டு. வேதம் படித்துச் சாஸ்திரம் அறிந்து மேதாவிகள் என்று சொல்லப்பட்டவர்கள் இந்தக் கோஷ்டியாருடைய செய்கையைக் கண்டித்தார்கள். 'சாஸ்திர சம்மதம் இல்லாத ஒரு முறையைப் பணம் பிடுங்குவதற்காக இவர்கள் உபயோகித்து விட்டார்கள்' என்பது அவர்களுடைய முறையீடு. என் மகளின் கல்யாணத்திற்கு என் பெற்றோர்கள் வந்து கலந்துகொள்ளவில்லை. என்னைச் சேர்ந்த பந்துக்களில் வெகு சிலரே வந்தார்கள். என் தாய் தகப்பனுர் வராததற்கு வைதிகம் காரணம் அல்ல. என் மனைவியின் மீது ஏற்பட்ட பொறாமையே அவர்களை வரவொட்டாமல் தடுத்தது. போதாததற்கு என் தகப்பனுர், "என்ன கல்யாணம் செய்துவிட்டான்! காசை ஓட்டாஞ்சல்லி மாதிரி வாரி இறைத்தான். அதற்காக நாலு பேர் வந்து கூடினுர்கள்? எங்களைச் சேர்ந்தவர்கள் யார் வந்தார்கள்" என்று சொல்லித் தம் அருவருப்பை வெளியிட்டார்.

நான் ஸ்ரீரங்கம் விட்டுக் கிளம்பியதும் அவ்வூர் வைதிக உலகம் போர்க்களமாகிவிட்டது. என் வீட்டிற்கு வந்த வைதிகர்களை மற்றவர்கள் நிராகரிக்கத் தொடங்கினுர்கள். மணம் நடந்தபொழுது 'பிரம்மாவாக' இருந்த ஒரு வைதிகருக்கு 'லண்டன் பிரம்மா' என்ற பட்டம் சூட்டப்பட்டது. நல்ல சமையல் செய்யும் திறன் படைத்துத் தலைமைச் சமையற்காரராகக் கல்யாணத்தில் வேலை செய்தவருக்கு 'லண்டன் சுந்தரம்' என்ற பெயரும் கிடைத்தது. தங்கள் வைதிகப் பிழைப்பு எங்கே போய்விடுமோ என்று பயந்த சிலர், மறு பிராயச்சித்தம் செய்துகொண்டு தாங்கள் பெற்ற பெரும் ஊதியத்தை மற்றவர்களுடன் பங்கிட்டுக்கொண்டவுடன் புனிதர்களானுர்கள். இந்தச் 'சோற்றுப் பானைப் புயல்' சில நாட்கள் அந்த ஊரில் நடந்து ஓய்ந்துவிட்டது. இது ஓய்ந்ததற்கு நான் அவ்வூரை விட்டுக் கிளம்பியதே முக்கிய காரணம்.

ஸ்ரீரங்கத்தில் நாமச் சண்டையும், கோஷ்டிச் சண்டையும் கோர்ட்டு விவகாரங்களும் இன்னும் குறையாமல் பரிமளித்துக் கொண்டிருக்கின்றன. என் ஆசாரியராகிய அகோபில மடம் ஜீயர் ஸ்வாமிகள் இன்னும் என்னை அவர் அடியார்களுள் ஒருவனுகக் கருதவில்லை. சென்னை மந்திரி சபையில் பதவி வகித்த பொழுது ஸ்ரீ ஜீயர் சுவாமிகள் என் பதவியை வர வேற்று என்னை மீண்டும் சிஷ்யனுக வரிக்க இசைந்தார். ஆனல் நான் சீடனுக இருக்க இஷ்டப்படவில்லை. மேலும் ஹரி ஜன சேவாசங்கத்தின் தமிழ்நாட்டு வேலைக்குத் தலைவனுகவும் நின்று நம் கோயில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிட ராஜாஜியுடன் உழைத்த என்னை வைதிக சமூகம் மன்னிக்க முடியாது. உண்மையான வைதிக ஜனசமூகம் நெறி தவறி வாழ்வை நடத்துவதால் பலவீனப்பட்டிருப்பது எல்லோரும் அறிந்த விஷயம். அதை மேலும் கேவலப்படுத்தவும் எனக்கு விருப் பம் இல்லை.

மகளுக்குக் கல்யாணம் இனிது நடந்தேறியது. அதனல் கடன்படவேண்டியும் இருந்தது. கர்ப்பவதியும் நோயுற்றவளு மான மனைவியுடனும் மக்களுடனும் ரங்கூனுக்குத் திரும்பிப் போய்ச்சேர்ந்தேன். நோயின் காரணமாகக் கர்ப்பத்தை வளர விடாது இருக்கவேண்டுமென நினைத்தேன். ஆனல் என் மனைவி அதற்கு இடங்கொடுக்கவில்லை. "மூன்று பெண்மக்களைப் பெற்றிருக்கிறேன். எனக்கு இந்தக் கர்ப்பம் ஆணுக இருக்க வேண்டும் என்கிற ஆசை; அதன் நிமித்தம் உயிர் போனபோதி லும் பாதகம் இல்லை" என்று ஒரே பிடியாக மறுத்துவிட்டாள். ஆசைக்குத் தகுந்த வண்ணம் காலத்தில் ஆண்மகவை ஈன்ருள். அதனல் அவள் அடைந்த ஆனந்தம் அளவிட முடியாது. குழந்தை பிறந்த இருபத்தேழாம் நாள் தாய் இறந்தாள் மூன்று மகளும் ஓர் ஆண் சிசுவும்! ஆதரிக்க யாருமில் லாமல் நான் தவித்தேன். ஏராளமான வருவாயையுடைய தொழிலை நடத்துவதா வீட்டு வேலைகளைக் கவனிப்பதா! இந்தச் சங்கடத்தில் நெடுநாள் ரங்கூனில் காலந்தள்ள முடியாது என்ற முடிவிற்கு வந்துவிட்டேன்.

ஸ்ரீரங்கம் திரும்பிவந்தால் தொழிலை நடத்தத் தேவையான மூல தனத்தில் ஒரு பகுதியைக் கடனாக அளித்து உதவுவதாகக் கொடியாலம் ரங்கஸ்வாமி ஐயங்கார் உறுதி கூறினார். ரங்கூனில் நடத்திவந்த வைத்தியத் தொழிலை என் கூட்டாளியான ஒரு டாக்டருக்கு விற்றுக் கடன் முதலியவைகளை எல்லாம் தீர்த்துக்கொண்டு, கையில் அறுநூறு ரூபாயுடனும் நான்கு மக்களுடனும் ஸ்ரீரங்கதுக்கு 1914 - ஆம் வருஷம் வந்து சேர்ந்தேன்.

மனைவி இறந்தது துக்கத்தை உண்டாக்கிய போதிலும், மனத்தில் துன்பம் உண்டாகவில்லை. தீராத நோயின் வாய்ப்பட்டுப் படமுடியாத கஷ்டங்களை அநுபவித்துவந்த அவள் சாவின்மூலம் விடுதலை அடைந்தது மேல எனத் தோன்றியது. ஆனால் என் மக்களுக்குத் தாயில்லாத துயரம் மனத்தில் குடி கொண்டது. எல்லோரும் இள வயசினராகையால் அவர்களது அறியாமையே அவர்களுக்கு ஒரு காப்பாக இருந்தது. என் பெற்றோர்கள், பாட்டிமார்கள் எல்லோரும் நான் மறு மணம் புரிந்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்தத் தொடங்கிவிட்டார்கள்! "உனக்கு என்ன, வயசு முப்பத்திரண்டு கூட ஆகவில்லையே; சின்னஞ்சிறு வயசு. தாய் தகப்பன் இருவரும் திடத்துடன் இருந்துகொண் டிருக்கிறார்கள். நாளை அவர்கள் காலமாகி விட்டால் அவர்களுக்கு உத்தரக் கிரியைகள் செய்யவேண்டியது, முதல் பிறந்தவனான உன் கடமை. பெண் சாதி இல்லாமல் அவைகளைச் செய்யச் சாஸ்திரம் இடம் கொடுக்காது. அவர்களை எண்ணியாவது நீ உடனே மறு விவாகம் செய்துகொள்ளவேண்டும். உனக்குத் தேவையான பெண்ணைப் பொறுக்கி எடுக்க நான் எவ்வளவு பெண்களை வேண்டுமானாலும் கொண்டுவருகிறேன்" என்றார் என் தாயைப்பெற்ற பாட்டி.

ரங்கூனில் இருந்தபொழுது பொருளீட்டித் தொழில் செய்யும் நேரம் போக எஞ்சியிருந்த சில நேரத்தில் 'ராமகிருஷ்ண சங்கம், என்று ராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஸ்வாமி விவேகானந்தர் இவர்களால் கல்கத்தாவில் நிறுவப்

பட்டுப் பல துறைகளிலும் சமூகத் தொண்டு ஆற்றிவரும் ஸ்தா பனத்திற்குக் கிளையாக, நானும் என் நண்பர்களில் சிலருமாகச் சேர்ந்து ஒரு சங்கத்தைத் தொடங்கினோம். ராமகிருஷ்ண பரமஹம்ஸரும், ஸ்வாமி விவேகானந்தரும் இயற்றி வெளியிட்ட நூல்களை வாரம் ஒருமுறை படித்துப் பரி சீலனை செய்வது, சமூக சேவை செய்யும் துறைகளில் மக்களின் ஓய்வு நேரங்களை ஈடுபடுத்துவது, ஆகியவைகளை மேற்கொண்டு திருப்திகரமாகவே மூன்று நான்கு வருஷங்கள் வேலை செய்து வந்தேன். 'சமூக சேவை செய்யவேண்டும்; அதிலும் பலனை எதிர்பாராமல் செய்யவேண்டும், - 'நிஷ்காம்ய கர்மம்' என்று சொல்லும் பணியைச் செய்யவேண்டும், - என்கிற ஆவல் உள் ளத்தில் இருந்தபோதிலும் மனைவி மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்தே தீரவேண்டும் என்கிற கவலை காரணமாகத் துறவு மனப்பான்மை ஏற்படவில்லை. படைத்தவன் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கைக் குறைவு தான் இதற்குக் காரணம். மனைவியை இழந்து ஸ்ரீரங்கம் வந்த காலத்திலும், கல்கத்தா, சென்னை முதலிய இடங்களி லுள்ள ராமகிருஷ்ண மடங்களில் சேர்ந்து துறவியாக உழைப்பதென்ற எண்ணம் அடிக்கடி என் மனத்தில் எழுந்து வற்புறுத்தியது.

ஆனால், தாயற்ற மக்களை என்ன செய்வதென்று மனம் தெளியவில்லை. கல்யாணம் ஆகியும், புருஷன் வீட்டிற்குப் போகத் தகுந்த வயசு வராத மகள் ஒருத்தி, கல்யாணம் செய்ய வேண்டியிருக்கும் மக்கள் இருவர், உயிருக்கு மன்றாடிக்கொண் டிருக்கும் ஒரு சிசு இவர்களை யார் பொறுப்பில் விடுவது? இந்தப் பொறுப்பை யார் ஏற்பார்கள்? பத்து வருஷங்களுக்கு முன்பாக வயிற்றுப் பிழைப்பிற்காகப் பர்மா சென்ற நான், ஐரோப்பிய உலகம் முழுவதும் ஒருவாறு சுற்றித் திரிந்து, கடைசியாக அதே ஏழையான நிலையில் ஊர் திரும்பினேன். பண ஆதரவும் செல்வாக்கும் இல்லாத என் மக்களை வளர்க்க யார் முன்வருவார்கள்? என் தாய் தந்தையர் பொருள் அற்றவர்கள். என் மனைவியின் தாயும் அப்படியே.

நான் ஏதாகிலும் சில ஆயிரங்கள் அவர்கள் கையில் கொடுத்து விட்டு, என் மக்களை ஆதரிக்கும் பொறுப்பை அவர்களிடம் ஒப்படைத்தால் ஒரு சமயம் என் செய்கை முறையாக இருக்கும். அப்படி இல்லாததால் நானே தாயும் தந்தையுமாகி அவர்களை வளர்க்கவேண்டிய கடமை என்னைச் சார்ந்து விட்டது. மறு மனைவி, மறு மக்கள் எல்லாவற்றையும் உண்டுபண்ணிக்கொண்டு பொறுப்பை அதிகப் படுத்திக் கொண்டு போவதைக்காட்டிலும் இருப்பவர்களை ஆதரித்து என் கடமையைச் செலுத்த எண்ணினேன்.

ஸ்ரீரங்கம் வந்த சில மாதங்களில் என் மனைவி விட்டுப் போன ஆண் சிசுவும் மறித்துவிட்டது. என் பெற்றோர்கள் என்னையும் என் மக்களையும் ஆதரிக்க முன்வந்தார்கள். ஸ்ரீரங்கத்தில் எனக்குப் பிராயச்சித்தம் செய்துவைத்த வைதிகக் கோஷ்டியாருக்கு அளவற்ற மகிழ்ச்சி. தாங்கள் என் நிமித்தம் பட்ட பாடுகளுக்கெல்லாம் இனி நேரிலேயே நான் வந்து அவர்களுக்கு உதவி புரியமுடியும் என அவர்களுக்கு ஒரு சந்தோஷம். அவர்களை மற்ற வைதிகர்களின் தொல்லையினின்று காக்கவேண்டி என்னை அறியாமலே நானும் அவர்களுக்குப் பக்கபலமான ஒரு லௌகிக வைதிகனாக மாறி விட்டேன். எது செய்தாலும், செய்யாவிட்டாலும், தினசரி நாமம் போடுவதில் மட்டும் தவறுவதில்லை. தலையில் உச்சிக் குடுமி வைத்துக்கொண்டேன். என்னைச் சார்ந்த கோஷ்டியார் செய்யும் திருவிழாக்களிலும் ஆசார்ய வைபவங்களிலும் பெரும் பங்கு எடுத்துக்கொண்டு உழைத்தேன். சீமைக்குப் போய் விட்டு வந்த நான் இவ்வளவு வைதிக சிரத்தை காட்டியதால் அவர்களுக்கு என்னிடம் மனமார நல்லெண்ணமும் உண்டாகத் தொடங்கியது.

*

# லண்டன் தேசிகர்

ஸ்ரீரங்கம் வைதிகர்களுடன் கலந்து அவர்களுக்கு ஏற்ற பணி செய்து அவர்களது உள்ளத்தை நாட்டின் நிலைமைக்குத் தக்கவாறு மாற்றிவிடலாம் என்கிற எண்ணத்துடன் உழைக்க முயன்றேன். இது என்னால் முடியுமா என்பதை நான் சீர்தூக்கிப் பார்க்கவில்லை. ஆட்சி முறையில் மாறுபாடுகள், அரசாங்கத்தில் மாறுபாடுகள், சமூக அமைப்புக்களில் மாறுபாடுகள் இவைகளுள் ஒன்றிலும் தங்கள் புராதனப் பழக்க வழக்கங்களை மாற்றமுடியாத நிலைமையில் இருப்பவர்களை என்போன்ற ஒருவன் திருத்திவிட முடியுமா? இது வீணான வேலை அல்லவா? வைதிக கோஷ்டியில் ஒருவனாக விளங்க எவ்விதத்திலும் எனக்கு யோக்கியதை இல்லாமல் இருக்க, இவ்வேலையை நான் மேற்கொள்ளுவது எவ்வளவுமட்டில் பொருந்தும் என்பதைப் பற்றியும் சிந்தனை செய்யவில்லை. பெரிய மேதாவிகளாலும், சாஸ்திரங்களில் பயிற்சி பெற்று நவீன நாகரிகப் போக்கின் தன்மையை ஒருவாறு அறிந்து உயர்தர வாழ்வு நடத்தும் மகான்களாலும் முடியாத ஒரு வேலையை யாதொரு சாதனமும் இல்லாத நான் தொடங்கியது, எனது அசட்டுத் தைரியத்தையே காட்டுகிறது.

வைதிக கோஷ்டியாரை, அதாவது என் வீட்டிற்கு வந்து நான் செய்ய வேண்டியதாகச் சொல்லும் எண்ணற்ற வைதிகச் சடங்குகளை நடத்திவைக்கும் வைதிகர்களை அன்புடனும் பக்தியுடனும் உள்ளங் குளிர வரவேற்பதை முதற்படியாகக் கொண்டேன். வழக்கம்போல அவர்களுக்குக் கிடைக்கும் ஊதியத்தைப் பல துறைகளிலும் இருமடங்கு, மும்மடங்கு அதிகமாக்கி அவர்களுக்கு வழங்கினேன். வைதிகச் சடங்குகளின் உட்கருத்தை ஊன்றிப் படித்து அறிந்துகொள்ளக்கூடிய பயிற்சியும் ஞானமும் எனக்கு இல்லை. எனினும் என் மனத்திற்கு

ஏற்ற உண்மை உணர்ச்சியுடன் என்றால் இயன்ற அளவு பின் பற்றினேன். இருப்பவர்களுக்கான சடங்குகள், இறந்தவர் களுக்கான சடங்குகள் இவற்றில் ஒன்றும் குறையாமல் செய் தேன். பரம பாகவதர்களாக அவர்களைப் பாவித்து, விழுந்து விழுந்து நமஸ்கரித்து, என்னிடம் பெரிய மனசு பண்ணி, என் வீட்டை நாடி வந்து நான் கொடுக்கும் அற்பப் பொருளைக் கரு ணையுடன் பெற்றுக்கொண்டது எனது பாக்கியம் என மனமார எண்ணித் தொண்டாற்றினேன். ஆனால் என் உணர்ச்சியின் எதிரொலி அவர்கள் உள்ளத்தில் எப்படி இருந்தது என நான் சொல்லமுடியாது. அவர்களில் பெரும்பாலோர் நான் பெரிய குற்றவாளியாகி இருப்பதாகவும், என்னைக் கடைத் தேற்றுவிக்கும் பொருட்டுக் கோஷ்டியார் சிலருடைய கேவலமான அபிப்பிராயத்திற்கும் தங்களை உட்படுத்திக் கொண்டு என்னிடம் கருணை காட்டுவதாகவுமே எனக்குத் தோன்றியது. பொருளால் அமைந்த வன்மை ஒன்றினால் மட்டும் அவர்களை என்னிடம் தருவிக்கக்கூடிய நிலையில் இருந்தேனே ஒழிய நான் காட்டிய மனிதத் தன்மை அவர்க ளுடைய மனத்தைக் கவரவில்லை.

வைதிகர்களில் பெரும்பாலோர் பரம ஏழைகள். வேத ஞானமும் ஒழுக்கமும் அவர்களுக்கு இல்லை. சடங்குகள் நடத்திவைக்கும் முறைகளை மட்டுமே அவர்கள் கற்றிருந் தார்கள்; ஆங்கிலப் படிப்புப் படிக்க இயலாத காரணத்தால் வேறு தொழில்முறை நடத்தமுடியாமல போய் விட்டதென வருந்துபவர்கள். வேத சாஸ்திரம் படித்த சிலருங்கூடத் தங் கள் வறுமையினால் வைதிகச் சடங்கு செய்விப்பவர்களாக இந் தக் கோஷ்டியில் சேர்ந்துள்ளார்கள். வைதிக சமூகத்தா ரிடையே இவர்களுக்குத் தனி மதிப்பு உண்டு. இக் கூட்டத் தாருடைய நன்மதிப்பால் எனது தொழிலுக்கு ஆதரவு இல்லை. வைத்தியத் தொழிலைப் பொருளீட்டுவதற்கான வழி யாக மேற்கொண்ட எனக்கு அந்த ஏழைப் பிராமணர்களு டைய ஆதரவு அவசியம் இல்லை. அவர்களுக்கு நான் செய்த தொண்டு பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்த்ததல்ல.

ஒரே கலையைச் சேர்ந்த வடகலை கோஷ்டியாருக்குள்ளும் ஒற்றுமை இல்லை. இகழ்ச்சி, பொருமை, அகம்பாவம், பேராசை, வறுமை இவைகள்தாம் இதற்கு மூலகாரணம்.

"தூப்புல் வேதாந்த தேசிகனே இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்பதுதான் வடகலை வைதிக கோஷ்டியாருடைய கடைசி வாழ்த்து. பூதவுடலை நீத்து ஆறு நூற்றாண்டுகளாயினுங்கூட, அவர் இன்னும் ஒரு நூற்றாண்டு இருக்க வேண்டுமென்பது பிரார்த்தனை. அப்பெரியார் வடகலைக் கோஷ்டியாருக்கென விட்டுப்போன செல்வத்தைக் காப்பாற்றவேண்டிய கடமையை ஞாபகப்படுத்திக் கொள்வதற்கான முறையீடு இது. தூப்புல் வேதாந்த தேசிகர்என்பவர் யார்? எத்தகையவர்? அவர் வைத்துவிட்டுப்போன நிதி என்ன? இவற்றைத் தமிழ் நாட்டினர் அனைவரும் அறிந்துகொள்வது நலம். அவரைப்பற்றி எழுத எனக்கு என்ன உரிமை? தமிழன் என்னும் ஒன்றேதான். வட கலையார்கள் வருஷந்தோறும் வெகு சிரமப்பட்டு நன்கொடை வசூலித்து அவருடைய திரு நக்ஷத்திரத்தையொட்டி முன்போ பின்போ வேதாந்ததேசிகன் விக்கிரகத்திற்குப் பிரம்மோத்ஸவம் நடத்தி வருகிறார்கள். சிறு வயசு முதல் இந்த வைபவத்தை நேரில் கண்டு அநுபவித்திருக்கிறேன். சிறு வயசில் இலவசப் பிரசாதங்களின் காரணமாக இந்த உத்ஸவம் மறக்கமுடியாமல் இருந்தது. பகுத்தறிவு உண்டான பிறகு உத்ஸவத்தின் நோக்கத்தையும் மூல புருஷருடைய மகிமையையும் அதற்காக நான் ஏற்கவேண்டிய பொறுப்பையும் ஒருவாறு தெரிந்துகொண்டேன்.

வேதாந்ததேசிகனைப் பற்றி எழுத எவ்விதத்திலும் எனக்கு யோக்கியதை இல்லை. அவர் எழுதியுள்ள கிரந்தங்களைப் படித்து அறிந்துகொள்ள ஆற்றல் இருப்பினும் பயிற்சி இல்லை. பெரும்பாலான நூல்கள் வடமொழியில் உள்ளன. தட்டித் தடவி வடமொழி எழுத்துக்களைப் படிக்கமட்டும் கற்றுக்கொண்டேனே தவிர வேறு தெரியாது. தமிழிலும் அப்பெரியார் எழுதியிருக்கும் நூல்களைப் படிக்கப் போதிய

திறமை என்பால் இல்லை. ஆனால் அறிந்தமட்டில் அந்த நூல் களைப் படிக்காமல் காலம் கடந்துவிட்டதே என்ற துயரம் மாத்திரம் உண்டு. எனது சிற்றறிவிற்கு ஏற்ற மட்டில் தமிழர் களுக்கு அவரை அறிமுகம் செய்துவைக்க வேண்டுமென்ற ஆவலே இதற்குக் காரணம். மேலும் ஸ்ரீரங்கத்தில் நான் செய்த வைதிகத் தொண்டில் 'தேசிக கைங்கர்ய' மும் ஒன்று. கோஷ்டியாருடைய மூல தெய்வத்தின் வைபவத்தைப் பாமர முறையில் தெரிந்துகொண்டு இதை எழுதுகிறேன்.

காஞ்சீபுரத்திற்குச் சமீபத்தில் உள்ளது தூப்புல் என்ற கிராமம்; தற்சமயம் சின்னக் காஞ்சிக்கும் பெரிய காஞ்சிக்கும் போகும் பாதையில் முனிஸிபல் எல்லைக்குள் அடங்கிய ஒரு பகுதியாக விளங்குகிறது. அறுநூறு வருஷங்களுக்கு முன்பு வைதிக வைஷ்ணவ குடும்பத்தில் வரதாசாரியார் என்ற பெய ருடன் வேதாந்ததேசிகர் அவதரித்தார். கல்வி கேள்விகளில் மிகத் திறமையுடன் பயிற்சிபெற்று ஒப்பற்ற புலவராக விளங்கினார். கல்விச் செல்வத்தைக் காட்டிலும் மேலான பதவி உலகத்தில் மனிதனுக்கு இல்லை என்பதன் உண்மையைக் கடைப்பிடித்து வறுமையை மகிழ்ச்சியுடனும் பெருமையுட னும் மேற்கொண்டு புனித வாழ்வெய்திய புண்ணிய சீலர் அவர். நாதப் பிரும்மத்தை அவர் உபாசித்ததாகவும், சந்திர கிரி மலையில் கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் வெங்கடா சலபதியின் கண்டாமணியின் அவதாரமெனவும் அவரை வழி படுபவர்கள் கூறுகிறார்கள். அவருக்கு, 'கவிதார்க்கிக கேஸரி' என்ற பட்டப் பெயரும் உண்டு. கவித்திறனிலும் தர்க்கத்திலும் அவரை வெல்லக் கூடியவர்கள் அக்காலத்தில் யாரும் இல்லை. 'ராமாநுஜ மதம் எல்லாவற்றிலும் சிறந்தது' என்று கூறி எந்த மதத்தினராயினும் அவர்களுடன் வாதாடி அதன் பெரு மையை நிரூபிக்க வல்லமை யுடையவர். வட மொழியில் எவ் வளவு தேர்ச்சியோ அவ்வளவு தேர்ச்சி தென்மொழியிலும உண்டு. தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாள நடை யிலும் நல்ல விற்பனர். தினந்தோறும் தமது குடித்தனத் திற்கு வேண்டிய அரிசியைப் பிச்சை எடுத்து உண்டுவந்தார்

நடைமுறையில் 'தேசிக விருத்தி' என்றால் பிச்சை எடுப்பது என்ற பரிபாஷை அவர் காலத்தில்தான் உண்டாயிற்று.

ஒரு சமயம் விஜயநகர ஸம்ஸ்தானத்தில் அரண்மனை வித்துவானாக இருக்கவேண்டுமென அந்த மன்னனிடமிருந்து வேண்டுகோள் வந்தது. ஊதியம் பெற்றுத் தமது கல்வியை விற்று உணவு சம்பாதிக்க அவர் மறுத்தார். 'என் கையில் பிச்சையெடுக்கும் பாத்திரம் இருக்கும்வரையிலும் எந்த மன்னனுக்கும் வணங்கமுடியாது' என்று சொல்லிவிட்டாராம். நூறு வயசுக்கு மேலாக அவர் ஜீவித்திருந்தார். நூறு கிரந்தங்களுக்கு மேலாக எழுதியிருக்கிறார். தமிழில் பல நூல்களை இயற்றியிருக்கிறார். முக்கியமாக ஸ்ரீ ராமாநுஜ தத்துவத்தை விளக்கி எழுதியுள்ளது பெருமையாகக் கொண்டாடப்படுகிறது. நாடகம், வசனம், சுலோகம் எல்லாவற்றிலும் தமது கருத்தை வெளியிட்டிருக்கிறார். ஜாலவித்தைமுதல் எல்லா விதமான சாஸ்திரங்களிலும் பூரணப் பயிற்சி பெற்றிருந்தார். இது காரணமாக, 'சர்வ தந்திர சுதந்தரர்' என்ற பட்டப் பெயரும் பெற்றார்; அவர் உருவத்தில் சிறியவர்; கீர்த்தியிலோ அளவிலாப் பெரியார். ஒப்பற்ற சீலர். எங்கெங்கு ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தை விளக்கிக் காட்டவேண்டுமோ, அதன் பெருமையைப் பற்றி வாதாட வேண்டுமோ அங்கங்கெல்லாம் சென்று தமது வித்தையைக் கொண்டு வெற்றியை நிலைநிறுத்தித் தமது ஆயுள் முழுவதும் சமூகத் தொண்டு செய்து அரிய நூல்களை இயற்றியவர்.

வெகு காலம் மஞ்சள் குப்பத்திற்கு அடுத்த கெடில நதிக் கரையிலுள்ள திருவஹீந்திரபுரம் என்னும் ஊரில் தங்கியிருந்தார். அவருக்கு ஏராளமான சீடர்கள் தமிழ் நாடு முழுவதும் உண்டு. ஸ்ரீரங்கத்திலும் அதிக காலம் தங்கி வைஷ்ணவ சித்தாந்தத்தின் மகிமையை எடுத்துரைத்து, சைவ சமண வாதிகளோடு வாதாடி ஜயம் பெற்றார். வைஷ்ணவ பரம்பரையில் ஆசாரியர்களின் கோஷ்டியில் கடைசி ஸ்தானத்தை வகித்தார். அவரது பெருமையை எண்ணிக் கோயிலில் தீர்த்த மரியாதைகளை அவருக்கு முதலில் வழங்க யத்தனித்தார்கள். அதைப்

பெற்றுக்கொள்ள மறுத்து அடியார்கள் எல்லோருக்கும் மரியாதைகள் வழங்கிய பிறகே தமக்குக் கடைசியாக மரியாதை வழங்கவேண்டுமென்று விரும்பினார். அவருடைய அடக்கத்திற்கு இதைக்காட்டிலும் சிறந்த அடையாளம் தேவையில்லை. அல்லாவுத்தீன் கில்ஜி என்னும் முகம்திய தளகர்த்தன் ஸ்ரீரங்கத்தின்மீது படையெடுத்துக் கோவிலைக் கொள்ளையடித்த காலத்தில் கோவிலுக்குள் தேசிகர் இருந்ததாகவும் பகலில் பிணக் குவியல்களுக்குள் தமது குட்டைச் சரீரத்தை மறைத்துக்கொண்டு இரவில் கொள்ளிடம் தாண்டி வடகரை சென்று தப்பினதாகவும் சொல்லுவார்கள்.

தேசிகரின் மகிமையும் அவர் செய்த சாகசங்களின் சரித்திரமும் பல. அவற்றையெல்லாம் இங்கே விரித்துக் கூற இடமில்லை. வைஷ்ணவ சமயத்திற்குப் பெரும் தொண்டாற்றி, எளிய வாழ்வு நடத்திச் சமூக சேவைக்காகத் தமது வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர் அவர். வடகலை வைஷ்ணவர்களால் பரம ஆசாரியராகக் கொண்டாடப்பட்டுப் பல தென்னிந்திய வைஷ்ணவ க்ஷேத்திரங்களில் தற்காலம் அர்ச்சாவதாரமாகக் கொண்டாடப்பட்டுக் கோவில்கொண்டு எழுந்தருளியிருக்கிறார். மேம்பாடுடைய அம்மகானின் ஞாபகச் சின்னமாகக் கோவில்களில் அவர் விக்கிரகத்தைப் பூஜித்துத் தேசிகத் தொண்டர்களாகி அவருடைய பெருமைகளையும், கிரந்தங்களையும் அடிக்கடி பாராயணம் செய்யும் தற்கால வைஷ்ணவர்களைப் பார்க்கும்பொழுது மனம் நடுங்குகின்றது. அவர் கிரந்தங்களைப் படித்தறிந்த மேதாவிகள் தெனநாட்டில் சிலர் இருக்கின்றனர். பெரும்பான்மையான இத்தொண்டர்கள் நாமம் போடுவதில் மட்டுமே தேசிக சித்தாந்தத்தைப் பரப்பிவருகிறார்கள்.

ஸ்ரீரங்கம் தேசிகர் கோவில் சண்டை எளிதில் மறக்கமுடியாதது. ஸ்ரீவைஷ்ணவர்களென்று பெருமைகொள்ளும் வடகலையார்களுக்கும் தென்கலையார்களுக்கும் நடைபெறும் பிரிட்டிஷ் அரசாங்கக் கோர்ட்டு யுத்தங்கள் தேசிகர் சந்நிதி இருக்கும் இடங்களிலெல்லாம் நடந்துவருகின்றன. சுமார் எழுபது வருஷங்களுக்கு மேலாக ஸ்ரீரங்கம் கோவிலில் எழுந்தருளி

யிருக்கும் தேசிகர், சர்க்கார் அடக்குமுறைச் சட்டப்படி தம் திருமாளிகைக்குள் சிறைவாசம் செய்துவருகிறார். சர்க்கார் கோர்ட்டு உத்தரவுப்படி, தேசிகர் புறப்பாடு கலகத்திற்கு இடமாக இருப்பதால், நிறுத்தப்பட் டிருக்கிறது. உத்ஸ வங்கள், ஸேவாகாலம், சாத்துமுறை எல்லாம் தேசிகர்கோவில் கர்ப்பக் கிரகத்துக்குள்ளும், அந்த வாசற் படிக்கு அருகிலும் நடைபெறும். இவ்வளவு காலமாகச் சிறைப்பட்டிருந்த தேசிகரைப் பன்முறை வெளியே கொண் டுவர வடகலையார்கள் முயன்றும் பயன்படவில்லை. கோர்ட்டில் உருவாகக் கூடிய நியாயம் கிடைக்காமையால் ஸ்ரீரங்கம் வடகலை யார்கள் வழக்கின் போக்கை மாற்றினார்கள். ஸ்ரீரங்கம் முனி ஸிபாலிடியின் எல்லைக்குள் இருக்கும் தெருக்கள் பொதுவா னவையா என்ற பிரச்னையைக் கிளப்பி, 'பொதுவானவையே' என்று தீர்ப்புப் பெற்றார்கள். ஆனால் தெருக்களுக்கு உள்ளடங் கிய கோவில் பிராகாரத்தில் நான்காவது மதிலுக்கு உட்புறம் இருக்கும் தேசிகர் எவ்விதம் வெளிவருவது? இந்தத் தடை உத்தரவைத் தாண்டுவதற்காக வடகலைக் கோஷ்டியார்கள் ஸ்ரீரங்கம் சித்திரை வீதியில் ஒரு புதிய தேசிகரை உண்டு டண்ணி, ஒரு வீட்டை விலைக்கு வாங்கி அதைச் சிறியதொரு கோவிலாக மாற்றி, தேசிகன் திருநக்ஷத்திரத்தை ஒட்டிய சில நாட்களில் திருவுலாக்காட்சி நடத்திப் பிரசாதங்கள் விநியோகித்துக் கொண்டாடினார்கள். இதில் பிசகு ஒன்றும் இல்லை. ஆனால் ஊரில் தேசிகர்கள் இருவர் ஆனார்கள்; சிறைப் பட்ட தேசிகர் ஒருவர்; தெருவில் இருக்கும் தேசிகர் ஒருவராக. உள்ளும்புறமும் திருவிழாக்கள் கொண்டாடப் பெற்றனர்.

வடகலைச் சமூகத்தினர் ஒரு தேசிகருக்குப் பதிலாக இரு தேசிகரைப் பரிபாலிக்க வேண்டியதாயிற்று. பெரும்பாலான வடகலைக் கோஷ்டியார்கள் வெளித்தேசிகரை ஆதரித்தார்கள். சிறுபான்மையான அதிவைதிக கோஷ்டியார் உள்தேசிகரை வழிபட்டார்கள். ஸ்ரீரங்கம் ஒரு புண்ணிய பூமி. அங்கே தங்கள் பூத உடலை விடுத்துச் சமாதிபெற எண்ணியுள்ள சில வடகலைச் சந்நியாசிகள் ஸ்ரீரங்கத்தில் கொள்ளிடக்கரை ஓர

மாக ஆசிரமங்களைக் கட்டிக்கொண்டு வசித்துவந்தார்கள். அவர்களில் ஒரு சாரார் வெளித் தேசிகருக்கும், மற்றொரு சாரார் உள்தேசிகருக்கும் பக்தர்களானார்கள்.

நான் ஸ்ரீரங்கத்தில் வசிக்க வந்தவுடன் எனக்குப் பிராயச்சித்தம் செய்துவைத்த கோஷ்டியார் எந்தத் தேசிகரை ஆதரித்தார்களோ அந்த வெளித்தேசிகருக்கு என்னால் இயன்ற கைங்கரியத்தைச் செய்துவந்தேன். என்னுடன் சேர்ந்த வைதிக வைஷ்ணவர்கள் இது தங்களுக்குச் செய்த நன்மதிப்பென்று பாராட்டி வந்தார்கள். இது அநிவைதிக கோஷ்டியாருக்குப் பிடிக்கவில்லை. இதுகாறும் வெளித்தேசிகர் என்ற பெயருடன் விளங்கின தேசிகருக்கு "லண்டன் தேசிகர்" என்ற புனை பெயரும் என் மூலம் கிடைத்துவிட்டது.

இப்படி இருக்கும்பொழுது 'வெளித்தேசிகர் மகத்துவம் என்னால் குறைந்துபோகிறது' என்கிற எண்ணத்தினாலோ தேசிகர் தர்மத்தை விரிவாக மக்களுக்கு உணர்த்த எண்ணியோ, வடகலைச் சந்நியாசி ஒருவர் இன்னும் ஒரு தேசிகரை உற்பத்தி பண்ணி உள்திருவீதியில் ஒரு வீடு வாங்கி அதைக் கோவிலாக மாற்றி, அங்கே திருவிழாக்கள் நடத்த ஆரம்பித்துவிட்டார். ஒரே ஊரில் மூன்று தேசிகர் கோவில்கள் ஆயின. இதைப்போன்ற விபரீத சம்பவம் மூளையுள்ள ஒரு சமூகத்தில் உண்டாகுமா என்று ஆச்சரியப்படவேண்டாம். ஒரு தேசிகரின் பூசை நிமித்தமாகவாவது தேசிகர் காண்பித்த வாழ்வைப் பின்பற்றுபவர்கள் சமூகத்தில் உண்டாகவில்லை. என்றும் சண்டை, சச்சரவு, பொறாமை, இவை காரணமாகத் தேசிகர் கோவில்கள் ஒன்றுக்கு மூன்றாகப் பெருகிவிட்டன. ஸ்ரீரங்கம் வடகலைச் சமூகத்தினரின் நிலையைச் சுட்டிக்காட்டும் ஸ்தாபனங்களாக இன்றும் இவைகள் இருந்து வருகின்றன. லண்டன் என்கிறபெயர்கூடத்தெரியாத மூவர், நான் லண்டன்போன காரணத்தினால் லண்டன் பட்டம் பெற்றுவிட்டார்கள். ஒருவர் சமையல் செய்த லண்டன் சுந்தரம். மற்றொருவர் என் மகள் கல்யாண வைபவத்தில் பிரம்மாவாக இருந்த லண்டன் பிரம்மா, மூன்றாமவர் வெளித்தேசிகர் என்கிற லண்டன்

தேசிகர். இவர்கள் சேர்க்கையால் 'நான் லண்டன் போயிருந்தேன்' என்கிற உணர்ச்சிகூட எனக்கு இல்லாமல் போய் விட்டது.

இரு கலையினர்களையும் ஒன்று சேர்த்துவிட வேண்டுமென்கிற ஒரு மடமையான எண்ணம் என் மனத்தில் உதித்தது, அதை ஒரு சங்கத்தின் மூலமாக நடத்தலாமென எண்ணினேன். அதற்காக எனது பக்கத்து வீட்டிலுள்ள உத்ஸாகமுள்ள ரெயில்வே குமாஸ்தாவான ஒரு தென்கலை நண்பரின் உதவியைக்கொண்டு 'ஸ்ரீரங்கம் பாரதீய வைஷ்ணவ சபா' என்று ஒரு சங்கம் பதிவு செய்து அதன் மூலம் அடிக்கடி பொதுப்படையான வைஷ்ணவ மத உபதேசங்களைச் செய்வித்து, வித்வத் சபைகளைக் கூட்டிப் பண்டிதர்களுக்குச் சம்மானம் முதலியவை வழங்கி அவர்களுள் ஒற்றுமை ஏற்படுத்த முயன்றேன். வெகு பாடுபட்டு இரண்டு வருஷங்கள் அந்த முயற்சி நன்ருகவே நடந்துவந்தது. ஆனல் அதன்மூலம் நான் எதிர்பார்த்த பலன் ஒன்றுமே கிட்டவில்லை. இதற்குக் காரணம் சிலவற்றை அறிந்துகொண்டேன்: இரு கலையார்களிலும், வைதிகர்களென்று பெயர் பூண்டு நாமம் தரித்து, சாஸ்திரத்தின் பெயரைச் சொல்லிச் சில சடங்குகளை நிறைவேற்றி வயிற்றுப் பிழைப்பு நடத்துபவர்களே பெரும்பாலானவர்கள். சாஸ்திரப் பயிற்சி, வேதப் படிப்பு ஒன்றுமே அறியாதவர்கள் பெரும்பான்மையோர். இவர்களே இரு கலையார்களுள்ளும் சண்டை போடுவதும், தேசிகர் சண்டைகளை நடத்துவதும், தனிப்பட்ட நபர்களின் பேரில் விலக்குகளைக் கற்பனை செய்வதும், சதாகாலமும் 'மதம் கெட்டுவிட்டது' என்ற கூக்குரலைக் கிளப்பித் தொல்லை கொடுப்பவர்களும் ஆவார்கள் என்பது தெளிவாயிற்று. இவர்கள் மத்தியில் நான் செய்துவந்த முயற்சி எக்காலத்திலும் பயன்படமாட்டாது. படித்த சில வைதிகர்கள், சம்மானம் பெறுவது ஒன்றில்மாத்திரம் தங்கள் கவனத்தைச் செலுத்தி வந்தார்கள். அதிதீவிர வைதிகர்கள் என்னை ஆதரிக்க முன்வராததுடன் மறைமுகமாகக் குறைகளைச் சொல்லியும் வந்

தார்கள். இரண்டு வருஷ முயற்சிக்குப் பிறகு மனமுடைந்து நான் மேற்கொண்ட தொண்டு நின்றுவிட்டது. நிறுத்தியதற்காக யாரும் வருந்தவில்லை. மேற்கொண்டு நடத்தவேண்டுமென வற்புறுத்துவதற்கும் யாரும் இல்லை. நமது வைதிக சமூகம் எந்த நிலையில் இருக்கிறது என்பதற்கு என் அநுபவங்களே அத்தாட்சி. அவர்களுக்குத் தொண்டு செய்யப் போதிய சக்தி என்னிடம் இல்லை என்பது எனக்கு நன்கு புலனாயிற்று. அது முதல் எனது வைதிக சிரத்தை நாளடைவில் குன்றி விட்டது.

# காலத்தின் போக்கு

வைதிகக் கோட்டையை உடைக்கும் முயற்சியை நான் நிறுத்தவில்லை. எனது தொழிலும் எனக்கு இம் முயற்சியில் பலன் கொடுத்தது. வறுமை யுற்றவர்களுக்கு இலவசமாக வைத்தியம் செய்துவந்தேன். பலனை எதிர்பாராமல் நான் ஏழைகளுக்கு உழைத்ததால் என் பெயர் மக்களிடத்தில் அதிவேகமாகப் பரவியது. சில ஏழைகளுக்குச் செய்த உதவி பல தனவான்களை என்னிடம் கொணர்ந்தது. என் தொழிலும் வெகு வேகமாக விரிவுற்றது; வருவாயும் அதிகரித்தது. சர்க்கார் அதிகாரிகளும், ஜில்லா உத்தியோகஸ்தர்களும், பல்வேறு மதத்தினர்களும் என் உதவியை நாடினார்கள். அதனால் ஜன சமுதாயத்தில் ஒரு செல்வாக்கு உண்டாயிற்று. உள்ளூர்க் கட்சிச் சண்டைகளுக்கு எனது அபிப்பிராயத்தையும் எனது சக்தியையும் பயன்படுத்த வைதிகர்கள் முன்வந்தார்கள். ஆனால் எனது சமரச நிலையை அவர்கள் ஆதரிக்கவில்லை.

அஹோபில மடமே வடகலை வைஷ்ணவர்களில் பெரும்பாலோருக்குக் குரு பீடம். அஹோபிலம் என்பது கர்நூல் ஜில்லாவில் நல்லமலை என்ற ஒரு மலைத்தொடரின் தென்பகுதியில் இருக்கிறது. ஆழ்வார்களால் பாடப்பெற்ற புனித க்ஷேத்திரம் அது. மலைக்கு மூன்று மைலுக்கு மேலிருக்கும் காட்டில் பெரிய அஹோபிலம் இருக்கிறது; அடிவாரக் காட்டில் சின்ன அஹோபிலம் இருக்கிறது. இரண்டு கோவில்களும் மிகப் பெரியன. எந்தக் காலத்தில் எந்த அரசர்கள் இப்பெரிய கோவில்களையும், இவற்றினுள் அடங்கியிருக்கும் சிற்பங்களையும் உண்டாக்கினார்கள் என்பதைப் பற்றிய விவரம் எனக்குத் தெரியாது. ஒரு சமயம் விஜயநகர சமஸ்தானம் உச்சநிலையை அடைந்திருந்த காலத்தில் உண்டானதாக இருக்கலாமென நினைக்கிறேன். இப்பெரிய

காடுகளிலும், மலைகளிலும் நரசிம்மப் பெருமாளுக்காக மகத்தான பெரிய கோயில்களைக் கட்டினவர்களுடைய எண்ணம் யாதாக இருக்கக்கூடும் என்னும் சிந்தனை எனக்குத் தோன்றியதுண்டு.

அறநிலயங்களுக்குப் பொறுப்பாளியான மந்திரிப் பதவியை வகித்தபொழுது அகோபிலக்காட்டில் ஒரு நாள் இரவு தங்கியிருந்தேன். என்னுடன் எனக்கு வழிகாட்டியாக வந்திருந்த காட்டிலாகாத் தலைமை அதிகாரி என் கூடாரத்தில் ஒரு புறம் குளிர்காய்ச்சலுடன் போராடிக்கொண்டிருந்தார். வைத்தியன் என்ற முறையில் அவர் நோயைப்பற்றி விசாரித்தேன். "இந்தக் காட்டில் நாங்கள் வருஷம் முழுவதும் அலைந்து திரிந்துகொண்டிருக்கிறோம். ஓர் இரவு தங்கினால் போதும். உடனே இந்தப் பாழும் காய்ச்சல் வந்துவிடும். மூன்று வருஷங்களுக்குமேல் இந்தக் காடுகளில் வேலை செய்ய முடியாது. தீராத காய்ச்சல்கட்டி வயிற்றில் உண்டாகிவிடும். காட்டிலாகாவில் உள்ளவர்கள் படும் அவதிகளில் இதுவும் ஒன்று" என்று மிகுந்த துயரத்துடன் சொன்னார். எனினும் அக்காட்டில் வசிக்கும் செஞ்சு ஜாதியார் எப்படி அங்கே வசிக்கிறார்கள் என்ற எண்ணம் என் மனத்தில் உதித்தது. அதைப் பற்றி அவரைக் கேட்டேன். "தலைமுறை தலைமுறையாக அவர்கள் இக்காட்டிலேயே புலி, கரடி, பாம்பு, சிறுத்தை இவைகளின் நடுவே வாழ்வை நடத்திவருகிறார்கள். மலைக் கொசு கடித்துப் பழக்கமாகி, இறந்தவர்கள் போக மிகுதியிருக்கிறவர்கள் இந்த நோயால் அதிகம் பாதிக்கப்படுவதில்லை. அவர்களுடைய குழந்தைகளுக்கெல்லாம் வயிற்றில் காய்ச்சல் கட்டி இருக்கும். இவைகளுக்குத் தப்பிப் பிழைத்துவிட்டால் அவர்களுக்கு இந்த நோயினின்றும் ஒரு காப்பு ஏற்பட்டுவிடுகிறது" என்றார்.

இந்தக்காட்டு ஜாதியார்களுக்காகவா இங்கே நடுக்காட்டில் இறைவன் கோயில்கொண்டு நரசிம்மமாகக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கிறான்? அதுவும் கேவலமான கோயிலா? எவ்வளவு லக்ஷம் ரூபாய் செலவழித்திருக்கவேண்டும்! எவ்வளவு

லக்ஷம் உயிர்கள் தியாகம் செய்து இத்திருப்பணியில் ஈடுபட்டிருக்கவேண்டும்! இந்த இரண்டு கோயில்களையும் கண்டு, தரிசனம் செய்து பக்தியின் மேலீட்டினால் மனமாரப் பாடின ஆழ்வார்கள் அங்கே கண்ட காட்சி என்ன? பெரிய ஊர்களைக் காணவில்லை; காட்டைத்தான் பார்த்தார்கள். மக்களைக் காணவில்லை; கோயிலைத்தான் தரிசித்தார்கள். கோயில் உண்டான காலத்தில் அந்த இடம் ஒரு பெரு நகரமாக இருந்திருக்கலாமா என்ற சந்தேகம் என் மனத்தில் எழுந்தது. அன்றிரவு எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. என்னுடன் வந்திருந்த சர்க்கார்ச் சேவகனுக்கு விடியற்காலத்தில் குளிரும் காய்ச்சலும் கண்டுவிட்டன. சென்னை வந்து இரண்டு மாதம் காயலாக இருந்து நொந்து போனான்.

அந்தக் கோவில்களுக்குப் பூஜை, நைவேத்தியம் செய்வதற்குத் தெலுங்கு வைஷ்ணவர்கள் பரம்பரையாக இருக்கிறார்கள். அவர்களைப் பார்த்தால் அவர்களும் செஞ்சு ஜாதியாரைப்போல எனக்குக் காணப்பட்டார்கள். அவர்கள் காய்ச்சலினால் அவதிப்படும் காலத்துக் காட்டுச் செஞ்சுக்கள் தாம் பூசை செய்யவேண்டி நேரிடும். அப்பூசைகளையும் நரசிம்ம மூர்த்தி அங்கீகாரம் செய்துகொண்டு வருகிறார். நரசிம்ம ஜயந்தி நடைபெறுங்காலத்தில் ஆயிரக்கணக்கான செஞ்சுக்கள், நல்லமலையின் பல பாகங்களிலிருந்து இக்காடுகளில் கூடித் திருவிழாக்கள் நடத்துகிறார்கள். இக்கோயில்களுக்கு இன்றைக்கும் நிர்வாகிகள் எங்களுக்கு ஆசாரியராக இருக்கும் அகோபில மடம் சுவாமிகள். சுவாமிகள் தம்முடைய தலைமை ஸ்தானமாகிற அகோபிலத்தில் வசிப்பதில்லை ஆனால் அகோபிலத்தில் அர்ச்சாவதாரமாகக் கோயில்கொண்டிருக்கும் எம்பெருமானை - உத்ஸவ மூர்த்தியை - த் தம்முடன்கூட எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, 'ராமர் இருந்த இடமெல்லாம் அயோத்தி' என்று சொல்வதுபோல், 'லக்ஷ்மீநரசிம்மன் இருக்குமிடமெல்லாம் அகோபிலம்' என்று சொல்லும் முறையில் சஞ்சாரம் செய்துவருகிறார்கள். அகோபிலமும் லக்ஷ்மீ நரசிம்ம சுவாமியின் மூர்த்தியும் தமிழ் நாட்டில் சஞ்சரித்துக்

கொண்டிருக்கும் சந்நியாசியிடம் எப்படி வந்தன என்பதை வெளியிடும் சரித்திரம் ஒன்று உண்டு.

பதினைருவது நூற்றாண்டில் மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த மேல்கோட்டை அல்லது திருநாராயணபுரம் என்னும் க்ஷேத்திரத்தில் ஒரு வைதிக குலத்தில் பிறந்து, வேத அத்தியயனம் சாஸ்திரப் பயிற்சி, இவைகளுக்குரிய ஒழுக்கம், சீலம் இவை நிறைந்த ஒரு வைஷ்ணவப் பிரம்மசாரி இருந்தார். ஒரு நாள் இரவில் அவருடைய கனவில் நரசிம்மமூர்த்தி பிரசன்னமானார். 'நான் அஹோபிலம் காட்டில் பூஜை நைவேத்தியம் இல்லாமல் இருந்து வருகிறேன். நீ அங்கே வந்து என் பூஜைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு லக்ஷ்மீநரசிம்மனுடன் சஞ்சாரம் செய்து, வைஷ்ணவ மதத்தைப் பிரசாரம் செய்ய வேண்டும்' என்று சொன்னதாக அறிந்து, அஹோபிலம் அடைந்தார். அங்கே பூஜையை ஏற்று, நரசிம்ம சுவாமியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு பல இடங்களில் வைஷ்ணவ மதத்தைப் பிரசாரம் செய்தார். அவருடைய பெயர் சடகோபன். குருபரம்பரையில், "ஆதிவண் சடகோப யதீந்திர மகாதேசிகன்" என்பது அவர் பெயர். தென்னிந்திய வைஷ்ணவர்கள் பலர் அவருக்குச் சீடர்களானார்கள். பல இடங்களில் மடமும் சொத்துக்களும் ஏற்பட்டன. தென்கலை, வடகலை இரு திறத்தார்களிலும் சீடர்கள் சேர்ந்தனர். இப்பொழுது அந்த யதி பீடத்தில் அமர்ந்திருப்பவர் நாற்பத்து நான்காம் பட்டம். வருஷம் ஒன்றுக்கு லக்ஷத்திற்கு மேலாகச் சொத்துக்கள் மூலம் வரும்படி உண்டு. இப்பொழுது இருக்கும் சந்நியாசியும், அவருக்கு முன்பு இருந்த பீடாதிபதிகளும் நல்ல படிப்பாளிகள்; சீலமும் ஒழுக்கமும் நிறைந்தவர்கள்; நவீன நாகரிக உணர்ச்சியே இல்லாதவர்கள்; லக்ஷ்மீநரசிம்மன் பூஜை ஒன்றையே பிரதானமாகக் கருதுபவர்கள். இவர்களுடன் சஞ்சரிக்கும் விக்கிரகம் அஹோபிலம் கோவிலைச் சேர்ந்தது.

நான் போய்த் தரிசிக்கும் காலையில் அந்தக் கோயிலில் உத்ஸவ மூர்த்தி இல்லை. அழகிய சிங்கர் என்ற பட்டப் பெயர் பூண்ட அஹோபில மடம் சுவாமிகளோடு சஞ்சாரத்திற்காக

எழுந்தருளிவிட்டபடியால் மூலமூர்த்திமட்டும் காட்சி கொடுத்துக்கொண்டிருந்தார். உத்ஸவமூர்த்தி இல்லாதது தங்கள் மனத்திற்கு வருத்தமாக இருக்கிறதெனவும், அந்த மூர்த்தி இல்லாததால் மலைகளில மழை குறைந்துவிட்டதெனவும் நான் கண்ட செஞ்சுக்கள் என்னிடம் முறையிட்டார்கள். அகோபில மடம் சுவாமிகள் சஞ்சாரம் செய்துகொண்டிருக்கிறார். இப்பொழுது இருக்கும் சுவாமிகளுக்கு இரண்டு தலைமுறைக்கு முன்பாகத் திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த காரைக்குறிச்சி என்னும் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெரியார் பீடாதிபதியாக இருந்தார். அவர் ஸ்ரீரங்கம் வந்து பெரிய பெருமாளைத் தரிசிக்கவேண்டுமென ஆவல்கொண்டு எழுந்தருளினார். ஸ்ரீரங்கத்தில் அகோபில மடம் பெரியதாகக் கட்டப்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் பல தோட்டங்கள், நிலங்கள் முதலிய சொத்துக்கள் உண்டு. ஒரு காலத்தில் என் பாட்டனாரும், சிறிது காலம் என் தகப்பனாரும் அகோபில மடம் ஏஜெண்டுகளாக வேலை பார்த்து இவற்றைப் பார்வையிட்டு வந்திருக்கிறார்கள்.

இந்த மடாதிபதிகளுக்கு அவரவர்கள் பீடத்திற்குத் தகுந்தபடி ஹிந்து சம்ஸ்தானங்களிலும் தேவாலயங்களிலும் மரியாதைகள் நடத்துவது வழக்கம். வைஷ்ணவ ஸ்தலங்களுக்குள் மிகப் பெரியதும் புராதனமானதுமான ஸ்ரீரங்கம் அகில இந்திய வைஷ்ணவர்களுக்கெல்லாம் ஒரு புனித க்ஷேத்திரம். எந்த மடாதிபதியும், முக்கியமாக வைஷ்ணவ மடாதிபதிகள், தங்கள் ஜீவிய காலத்திற்குள் ஒரு முறையாகிலும் வந்து ஸ்ரீரங்கநாதனைச் சேவிக்காமல் இருக்கமாட்டார்கள். அவர்கள் வரும் காலத்தில் அவர்களுக்கென்று கோவிலில் ஒரு தனி மரியாதை நடத்துவார்கள். அரசர்களுக்கு ஏற்பட்டிருக்கும் மரியாதையைக் காட்டிலும் மடாதிபதிகளான சந்நியாசிகளுக்கு நடத்தும் மரியாதை உயர்ந்தது. அகோபில மடம் சுவாமிகள் வடகலைச் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீரங்கம் கோவில் தென்கலையாருடையது என்பது அந்தக் கலையாருடைய கட்சி. ஆகையால் வடகலை நாமம் போட்ட சின்னங்

கள், யானை, குடை, எடுபிடி சாமான்கள் - இவைகளுடன் ஸ்ரீரங்கத்திற்குள்ளேயே நுழையக்கூடாது என்பது தென் கலையாருடைய கட்சி. அதைப் பின்பற்றி ஓர் ஆங்கில ஜில்லா கலெக்டர் நூறு வருஷங்களுக்கு முன்பாக ஸ்ரீரங்கம் தென் கலையார்களுடையது எனவும், வடகலையார்கள் யாதொரு பாத்தியமும் கொண்டாடக்கூடாது எனவும் ஒரு தடை உத்தரவு பிறப்பித்திருந்தார். அதுதான் தென்கலையாருடைய உரிமைக்கு மூல சாசனம்.

நான் ஸ்ரீரங்கத்தில் இருந்தபொழுது அஹோபில மடம் சுவாமிகள் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளினார். பல வருஷங்களாக நடத்திய கோர்ட்டு நடவடிக்கைமூலம் ஸ்ரீரங்கம் வீதிகள் பொதுத்தெருக்களென்று தீர்ப்பு உண்டான பிறகு சுவாமிகள் தம் மடத்திற்கு வருவதற்கு ஏற்பட்டிருந்த தடை நீங்கிவிட்டது. ஸ்ரீரங்கத்திற்கு வந்தும் தமக்குள்ள மரியாதைகளுடன் ஸ்ரீரங்கநாதனுடைய தரிசனம் கிடைக்காமற் போனால் அந்த ஊருக்குள் வந்துதான் என்ன பயன் என்பது சுவாமிகளுக்கு அபிப்பிராயம். வடகலைக் கோஷ்டியார்கள் என்னிடம் வந்து எப்பாடு பட்டாகிலும் சுவாமிகளுக்குத் தகுந்தபடி சேவை செய்ய ஏற்பாடு செய்யவேண்டுமென்று சொன்னார்கள். அப்படிச் செய்தால் வடகலைக் கோஷ்டியாருக்கும் மடத்திற்கும் பெருமையும், எனக்கு வைதிக சமூகத்தில் நன்மதிப்பும் உண்டாகுமென வற்புறுத்தியதன் பேரில் எனது செல்வாக்கை உபயோகப்படுத்த இசைந்தேன். ஜில்லா ஸப் ஜட்ஜ் உத்தரவின்பேரில், போலீஸ் பாதுகாப்புடன் நடக்க வேண்டிய மூன்று நாள் மரியாதைகளும் நடந்தன. நானும் உடனிருந்து கலவரம் இல்லாமல் நடத்திவைத்தேன். மூன்றாவது நாள் மரியாதை நடந்த பிற்பகல் சென்னை ஹைகோர்ட்டிலிருந்து ஒரு தடை உத்தரவைத் தென்கலையார் பெற்றார்கள். அதற்குள்ளாக மரியாதைகள் நடந்துவிட்டன. ஸ்ரீரங்கத்திலும் யாதொரு புரட்சியும் உண்டாகித் தடைப் பட்டதாகக் காணப்படவில்லை.

அஹோபில மடம் ஜீயர் சுவாமிகள் இரண்டு மாத காலம்

அந்த ஊரிலேயே தங்கியிருந்தார். சிஷ்ய கோடிகள் எல்லோரும் வரவேற்றுக் கைங்கர்யம் செய்தார்கள். நான் மடத்துச் சீடனாக இருந்து இவ்வளவு உதவி செய்தும், சுவாமிகள் என்னைத் தம்மிடம் வருமாறு கூறவோ என் உபசாரங்களைப் பெற விரும்பவோ இல்லை. என் தகப்பனாரைச் சுவாமிகளுக்கு நன்றாகத் தெரியும். என் தகப்பனார் அவரிடம் இரண்டு மூன்று தடவை சென்று, ஆசாரியன் என்கிற முறையில் தமக்குப் 'பரந்யாஸம்' (சரணாகதி) செய்துவைக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். பரந்யாஸம் அல்லது சரணாகதி, அதிருஷ்டம் என்கிறது வைஷ்ணவர்களுக்குள் ஒரு தத்துவம். இதன் அடிப்படையான கொள்கை நான் அறிந்தமட்டில் இதுதான்: "சாமான்ய மனிதன் குருவின்றி மோக்ஷத்தை அடைய முடியாது. அவனைக் கை தூக்கி விடுவதற்குக் குரு ஒருவரால்தான் முடியும். குருவும் தாமாக ஒன்றும் செய்யமுடியாது. பகவானாக விளங்கும் ஸ்ரீமந் நாராயணனிடத்துத் தம் சீடனைக் காண்பித்து, "இந்த ஜீவாத்மா விடுதலை கோருகிறது. அதற்காக என்னை வந்து அடைந்து வழிதேடுகிறது. நான் தங்களிடம் அதைக் கொணர்ந்திருக்கிறேன். திருவருள் புரிய வேண்டும்" என்று பிரார்த்திப்பார். இதனால் ஸ்ரீமந் நாராயணன் கருணை கூர்ந்து வைகுண்டத்தில் இந்த ஜீவனுக்கு இடம் கொடுக்க இசைந்துவிடுகிறான். இது வைஷ்ணவர்களுக்கு உண்டான மோக்ஷ சாதனம். சீடன் பரிபக்குவமடைந்து, நல்ல சீலனாகவும், வருணாசிரம தர்மத்தைக் கடைப்பிடித்து வாழ்க்கை நடத்துபவனாகவும் இருந்து குருகடாக்ஷத்திற்குப் பாத்திரனாகும்படி நடந்து, கடைசியில் இந்த அதிருஷ்டப் பதவியைப் பெறவேண்டும். இந்தச் சீடனுக்கு உய்யும்வழி பெற யோக்கியதை உண்டு, இல்லை என்பதற்குக் குருவே முடிவான அதிகாரி. அவர் என்ன நிபந்தனைப் பிரகாரம் நடக்க வேண்டுமென்று சொல்லுகிறாரோ அப்படியே நடந்து, பிறகு அவரது அநுக்கிரகத்தைப் பெறவேண்டும். இந்த மோக்ஷ சாம்ராஜ்யத்திற்கு ஆண், பெண் இருவரும் தகுதி உடையவர்கள். பாபியான சீடனைப் பகவானுக்குச் சிபாரிசு செய்தால் அந்தச் சீடனுடைய பாவங்கள் எல்லாம் குருவைச் சேரும். ஆகை

யால் உத்கிருஷ்டமான மனிதனுக்குத்தான் இந்த வழியை
குரு காண்பிக்கவேண்டும். மனிதப் பிறவி எடுத்த வைஷ்ண
வருக்கு இதைக்காட்டிலும் உயர்ந்த பதவி இல்லை.

ஆனால் நடைமுறை வேறு. பரந்யாஸம் செய்துகொள்ள
பிரியப்படுபவர்கள் முதல் நாளே வைதிக சின்னங்களோ
மடத்துச் சுவாமிகள் முன்னிலையில் சென்று இடைவிடா
சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துகொண் டிருக்கவேண்டும்
சுவாமிகளின் கவனத்தைப் பெற்று அவர் போதுமென்று சொ
லிய பிறகு நமஸ்காரத்தை நிறுத்திக்கொண்டு, பரந்யாஸ
ஆகவேண்டுமென்று பிரார்த்தனை செய்யவேண்டும். இத
காகக் குறைந்த தொகை பத்து ரூபாய் மடத்திற்குச் செலுத்
வேண்டும். கணக்குப் பிள்ளையிடம் பணம் செலுத்தி உத்தர
பெற்ற மறுநாள் காலையில், சுவாமிகள் லக்ஷ்மீநரசிம்மனுக்
ஆராதனம் செய்யும் வேளையில் கோஷ்டியில் காத்திருந்
பிறகு சுவாமிகளிடத்துச் சென்று தன்னந்தனியே அவருடன்
இருந்து உபதேசத்தைப் பெற்று, அதற்குப் பிறகு ஆசாரி
னைத் திருப்திப்படுத்தும் விதமாக நடந்துகொள்ளவேண்டு
பொருள் கொடுக்கக்கூடியவர்கள் குருவின் மனம் குளிரு
படி பொருள் கொடுக்கவேண்டும். மடத்துச் செலவுகளை ஒ
நாளோ தங்களால் எவ்வளவு நாட்கள் முடியுமே
அவ்வளவு நாட்களோ ஏற்றுக்கொள்ளவேண்டும். லக்ஷ
நரசிம்மனுக்கு உத்ஸவங்கள் செய்விக்கவேண்டும். ஒன்றுக்கு
செயல் இல்லாதவர்கள் அன்றைத்தினம் மடத்தில் இனமாக
சாப்பிட்டுவிட்டு ஆசாரியரின் அநுக்கிரகத்தைப் பெற்று
போகவேண்டும்.

ஆதி காலத்தில் நியமம், நிஷ்டை, ஆசாரம், ஒழுக்க
வைஷ்ணவ பத்ததி இவைகளைப் பின்பற்றி வந்தபோ
நடந்த முறை வேறு. தற்சமயம் இது ஒரு சடங்கா
வியாபார முறையில் நடந்துவருகிறது. நல்லவர்கள், கெட்டவ
கள், ஒழுங்கீனர்கள், போக்கிரிகள் எல்லோருக்கும் பரந்யாஸ
நடக்கிறது. இதற்குப் பழி, காலத்தின் பேரில் : 'காலம் க
யுகம் அல்லவா? இவ்வளவு மட்டுமாவது ஆசாரியனிடத்தி

வர வேண்டும், அதிருஷ்டம் பெற வேண்டும் என்று ஓர் எண்ணம் இருப்பதே மேல். 'இதை வைத்துக்கொண்டு வைஷ்ணவ மதத்தைக் காப்பாற்றினால் போதாதா?' என்பதுதான் சுவாமிகளின் எண்ணம்; மேலும் பெரும்பாலான சீடர்களின் நன்மதிப்பைப் பெறவேண்டுமென்கிற ஆவல். முக்கியமாகத் தனவந்தர்கள், சர்க்கார் உத்தியோகத்தில் பெரிய பதவிகளை வகிக்கும் சீடர்கள், மடத்தின் சக்தியைத் தாங்கள் பங்கிட்டுக் கொள்ளும் முறையில் மடத்திற்கு உழைக்கும் ஏழை வைதிகர்கள் என்கிற நாமதாரிகள் இவர்களுடைய ஆதிக்கத்தில் மடமும் ஆசார்யனும் நடக்கவேண்டிய காலமாக இருக்கிறது.

ஆகையால் என் தகப்பனார் கோரியபடி பரங்யாஸம் செய்தால் தமக்கு ஆதரவாக இருப்பவர்கள் என்ன சொல்வார்களோ என்கிற பயம் சுவாமிகளின் மனத்தில் உண்டாயிற்று. ஆகையால் பரங்யாஸம் செய்வதற்கு முன்பாக, "நீர் சேதுஸ்நானம் செய்துவிட்டு வாரும். பிறகு பரங்யாஸம் செய்துவைப்பதைப்பற்றி யோசனை செய்வோம்" என்று உத்தரவு கிடைத்தது. என் தகப்பனார் முன்கோபி. தாம் ஸ்ரீரங்கம் மடத்து ஏஜெண்டாக இருந்தகாலத்தில் இப்பொழுது சந்நியாஸியாக இருப்பவர் மடத்தில் பூஜை செய்பவராக அமர்ந்திருந்தார். இன்று சுவாமியாகப் பீடத்தில் அமர்ந்து தம் கோரிக்கைக்கு ஒரு விதி ஏற்படுத்துகிறார் என்று அவருக்குக் கோபம் உண்டாயிற்று. அதை அடக்கமுடியாமல் அவரிடத்தில் கடுமையான பேச்சுகளைப் பேசிவிட்டார். "ஓய்! உம்மை எனக்குத் தெரியாதா? இன்று ஆசாரியராகிவிட்டீர். ஆராதனம் பண்ணிக்கொண்டிருந்த ஐமாச்சாரியார்தானே நீர்? நான் என்ன பாவம் செய்ததற்காக எனக்குச் சேதுஸ்நானம் விதிக்கிறீர்? நான் இருமுறை இதற்கு முன்பாகச் சேதுஸ்நானம் செய்திருக்கிறேன். கங்கை, யமுனை, சிந்து முதலிய புனித தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்திருக்கிறேன். இமயமலை முதல் கன்னியாகுமரி வரையில் எல்லா க்ஷேத்திரங்களுக்கும் சென்று தரிசித்திருக்கிறேன். தினந்தோறும் வைதிக கர்மங்களை விடாமல் செய்துவருகிறேன். எவ்விதத்

திலும் என் வாழ்வில் குறை சொல்வதற்கு இடமில்லை. என்னைக் காட்டிலும் பலவிதப் பாவங்களைச் செய்து வருபவர்களுக்கெல்லாம் நிபந்தனையின்றிப் பரங்யாஸம் செய்துவைத்து வருகிறீர்கள். நான் ஏதோ மகாபாதகம் செய்தவன்போல எனக்கு விதி ஏற்படுத்துகிறீர்கள். இது என்ன நியாயம்?" என்று கூச்சலிட்டார். அதற்குச் சுவாமிகள் மனவருத்தத்துடன், "சேஷையங்காரே, நீர் பாவம் செய்தவரல்ல என்பது எனக்குத் தெரியும் ஆனாலும், 'சீமைக்குப் போய்விட்டு வந்த மகனோடு வாழ்ந்து வருகிறீர்' என்கிற அபவாதம் உமக்கு இந்த ஊரில் இருக்கிறது. அதை மீறி உமக்குப் பரங்யாஸம் செய்விக்க எண்ணிச் சேதுஸ்நானம் செய்ய விதிக்கிறேன்" என்று பதிலளித்தார்.

"சரி, சுவாமி. சீமைக்குச் சென்று திரும்பிய என் மகன் உதவியினால்தானே. நீங்கள் இந்த ஊருக்கு வந்து நூறு வருஷங்களாகப் பெறாத மரியாதைகளையெல்லாம் கோயிலில் பெற்று இன்று மடத்தில் எழுந்தருளியிருக்கிறீர்கள். இது என் மகனுடைய செல்வாக்கினால் உங்களுக்கு நடந்தது. அவன் தங்களிடத்துப் பரங்யாஸம் கோரவில்லை. நான் என் மகனிடத்தில் வசிக்காமல் எங்கே போவது? என் மகன் துன்மார்க்கமான செயல் ஒன்றிலும் ஈடுபட்டவன் அல்ல. அவனுடன் தங்குவது பாவமென நீங்கள் கருதினால் பரங்யாஸம் ஆனபிறகும் நான் அவன்கூடத்தானே இருக்கவேண்டும்? ஆகையால் பரங்யாஸம் எனக்குத் தேவை இல்லை" என்று சொல்லிவிட்டு நடந்த சங்கதிகளை என்னிடம் தெரிவித்தார். எனக்கு மனம் திடுக்கிட்டது. யார்பேரில் குறை கூறுவதென்பது எனக்கு விளங்கவில்லை. வேண்டுமென்று தேடிச்சென்று, ஆசாரியரிடம் கோபித்துக்கொண்டு வந்துவிட்ட தகப்பனார்மேல் வருத்தப்படுவதா; ஆசாரியருடைய கதியற்ற தன்மையைப் பற்றி வருந்துவதா? சரி, இனியாகிலும் இம்மாதிரியான தொல்லைகளில் மாட்டிக்கொள்ளாமல் காலத்தைக் கடத்துவதென்று தீர்மானித்து, என் தகப்பனாரிடம் அவர் நடந்துகொண்டது சரியல்ல என்று மரியாதையுடன் சொன்னேன்.

அதற்காக அவர் என்னைக் கோபிக்கவில்லை. மோக்ஷத்திற்குச் சீட்டுப் பெறுவதைக்காட்டிலும், என்னுடன் வசிப்பது மேல் என எண்ணிய தந்தையின் உள்ளத்தை நான் போற்றாமல் என்ன செய்வது? 'இவரல்லவோ என் அருமைத் தந்தை!' என அவரிடம் பக்தியும் மதிப்பும் அதிகம் கொண்டேன். 'இன்று முதல் அகோபில மடத்திற்கும் எனக்கும் உள்ள குரு சிஷ்யத் தொடர்பு முறிந்தது' என மனத்தில் உறுதிகொண்டேன். இதற்காக வைஷ்ணவ மதத்தைக் கோபிப்பதா? வைஷ்ணவ சமூகத்தாரிடம் உள்ள பக்தியை வெறுப்பதா? ஆசாரியன் போக்கைப்பற்றிக் குறைகூறுவதா?

இது நடந்து சில வருஷங்களுக்குப்பின் அகோபில மடம் ஜீயர் பரமபதம் எய்தினர். அவர் ஸ்தானத்திற்கு அவரைப் போலவே படித் வேதவிற்பன்னரும், நல்லொழுக்கம், சீலம், உயரிய வாழ்வு இவை உடையவரும், செல்வருமான திருநெல்வேலி வீரவநல்லூர்க் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெரியார் எழுந்தருளினர். பரம வைதிகர்; உலகப் போக்கைப்பற்றி ஒன்றும் அறியாதவர். எனினும் மடத்தை நன்கு பரிபாலித்துவந்தார். அவர் தேச சஞ்சாரம் செய்யும் முறையில் ஸ்ரீரங்கத்திற்கு வந்து கோவிலில் தரிசனம் செய்ய முற்பட்டார். உடனே பழைய சண்டைகள் கிளம்பிவிட்டன. கோர்ட்டு விவகாரம், தடை உத்தரவு எல்லாம் முறையே அடுத்தடுத்து ஏற்படவே ஸ்ரீரங்கம் புக விரும்பாமல் திருச்சிக்குப் பத்து மைல் மேற்கே அகண்ட காவேரியின் தென்கரையிலுள்ள திருப்பராய்த்துறை என்ற கிராமத்தில் அவர் வசித்துவந்தார். எவ்விதத்திலாயினும் ஸ்ரீரங்கம் சென்று கோவிலில் தரிசனம் செய்துவிடவேண்டும் என்கிற அவா அவர் மனத்தில் குடிகொண்டது. ஸ்ரீரங்கம் வைதிக கோஷ்டியார் இந்தத் தடவை என்னை அண்டவில்லை. முன்பிருந்த சந்நியாசி என்னையும் என் தகப்பனரையும் நடத்திய விதம் அவர்கள் ஞாபகத்தில் இருந்ததால் ஒதுங்கி நின்று கோர்ட்டு நடவடிக்கைகளை நடத்திவந்தார்கள். கிட்டத்தட்ட இரண்டு வருஷம் திருப்பராய்த்துறையில் இந்தச் சுவாமி தங்கியிருந்தார். 144 தடையுத்தரவைத் தாண்டிய

பாடில்லை. இதற்குள்ளாக வக்கீல்களும், கட்சிக்காரர்களும், ஸ்ரீரங்கம் கோஷ்டியார்களுமாகச் சுமார் பத்தாயிரம் ரூபாய் வரையில் செலவு செய்துவிட்டார்கள். சுவாமிகளுக்கு மனத்தில் கவலை அதிகரித்தது. 'தடை உத்தரவைத் தாண்டப் பத்தாயிரம் செலவானால் இனி நமது உரிமையைப் பெற எவ்வளவு செலவாகும்?' என்று சிந்தித்தார். லக்ஷ்மீநரசிம்மன் சொத்தை உபயோகமற்ற விவகாரங்களில் செலவழிப்பதில் அவருக்குப் பிரியமில்லை. கடைசியாக, மடத்தின் முக்கியக் காரியஸ்தரை என்னிடம் அனுப்பித் தம்மை வந்து பார்க்கும்படி சொல்லியனுப்பினார். நான் இதில் தலையிட விரும்பவில்லை. இரண்டு மாதங்கள் கழிந்தன. இன்னொருமுறையும் தாம் என்னைப் பார்க்க வேண்டும் என்பதாகத் தம் கைப்படவே எழுதி அனுப்பினார். நான் இம்முறை அவரிடம் சென்று, நிலையை அவரோடு பரிசீலனை செய்து, முடிவாக விவகாரத்தை வளர்க்கக் கூடாதென்று வற்புறுத்தி, எதிர்க் கட்சியாருடன் சமரசமாக ஏற்பாடு செய்யவேண்டிய அவசியத்தை, எடுத்துக் காண்பித்து அதற்கான முயற்சியைச் செய்வதாக முடிவு செய்தேன்.

ஸர் டி. தேசிகாசாரியாருடன் கலந்து சமரச ஏற்பாடுகள் செய்ய நடவடிக்கைகள் நடந்தன. ஸ்ரீரங்கத்தில் தென்கலையார்களுக்குள் செல்வாக்குள்ளவரும், கோவில தர்மகர்த்தாவுமான சிங்கமையங்காருடன் சமரச ஏற்பாடுகளைச் செய்து, இனி ஸ்ரீரங்கத்திற்கு ஹிந்து மதத்தைச் சேர்ந்த மடாதிபதிகள் தரிசனத்திற்கு வரும்பொழுது எல்லோருக்கும் ஒரே விதமான மரியாதை வழங்கவேண்டுமென்று இரு கட்சியாரும் ஒப்புக் கொள்ளக் கூடிய முறையில் கோர்ட்டில் ஒரு தீர்ப்புக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தோம். அதன்படி கோர்ட்டுத் தீர்ப்பும் கிடைத்தது. அகோபில மடம் சுவாமிகள் ஸ்ரீரங்கம் எழுந்தருளி, தகுந்த மரியாதைகளைப் பெற்றுத் தம் வாழ்நாட்களை ஸ்ரீரங்கத்திலேயே கழித்து, அந்தப் புண்ணிய பூமியிலேயே தம் பூத உடலை நீக்க உறுதிகொண்டு, கொள்ளிடக் கரையிலுள்ள கோவிலில் தங்கிவிட்டார்.

எனக்கும் அவர்களுக்கும் நட்பு அதிகரித்தது. என் வீட்

டிற்கு எழுந்தருளி என் பாத சமர்ப்பணையை ஏற்றுக்கொண்டு, லக்ஷ்மீநரசிம்ம ஸ்வாமியின் உத்ஸவாதிகள் எல்லாம் நடத்தி என்னைக் கௌரவித்தார். மடத்திலிருக்கும் வைத்தியர், மருந்து கொடுத்ததன் மூலமாகச் சுவாமிகள் கடுமையான நோய் வாய்ப்பட்டார். என்னிடம் சிகிச்சை செய்துகொள்ள உடன் பட்டார். சாஸ்திரீய முறையில், அவருடைய ஆசாரத்திற் கும் ஆசிரம தர்மத்திற்கும் குறைவு வாராத முறையில் மருந்து உண்டார். ஒரு நாள் இரவு நோய் அதிகரித்துக் கவலைக்கு இட மான நிலை ஏற்பட்டது. தமக்குப் பின் யாராகிலும் ஒருவரை இந்தப் பீடத்திற்கு ஏற்பாடு செய்யாமல் பிராணனை விட்டால் மறுபடி கோர்ட்டு விவகாரங்கள் உண்டாகி, மடத்துச் சொத்து விரயமாகிவிடுமே என்று பயந்தார். அன்றிரவு நானும் சுவாமிகளோடு இருந்தேன். அவருடைய இஷ்டப்படி அவருக்கு அடுத்தபடி வரவேண்டியவருக்குக் காஷாயம் முதலியன கொடுத்து விடியற்காலையில் அவருக்கு இளவரசுப் பட்டமும் சூட்டப்பட்டது. சர்க்கார் ரிஜிஸ்திரார் முன்னிலையில் தக்க சாட்சிகளை வைத்துக்கொண்டு இந்த நியமனம் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. இந்தப் பட்டம் தங்களுக்குக் கிடைக்கு மென மனோராஜ்யம் செய்துகொண்டிருந்த பலர் ஏமாந்து விட்டார்கள். சட்டப்படி வேலை நடந்துவிட்டது.

அன்றுமுதல் சுவாமியின் நோய் குணமடையவே, அவர் திரு நாட்டிற்கு (வைகுண்டத்துக்கு) எழுந்தருளவில்லை. மேலும் பத்துவருஷகாலம் உயிரோடிருந்தார். ஸ்ரீரங்கத்திலேயே இரண்டு சந்நியாசிகளாக மடத்தில் இருந்துவந்தனர். மூன்று வருஷங்களுக்கு முன்பாகத்தான் அவர் மறைந்தார். இளவர சாக இருந்த சுவாமிகள் வெகுநாள் காத்திருந்து கடைசியாகப் பட்டம் பெற்றார். இவரும் பெரிய வேத விற்பன்னர், சீலர், பரம வைதிகர், வைஷ்ணவ தத்துவத்தில் நிபுணர். பழைய முறைகளை விட்டு அணுவேனும் மாறுதல் செய்ய இடங் கொடுக்கமாட்டார். சமீபத்தில் மதுராந்தகத்தில் ஓர் இலவச சம்ஸ்கிருதக் கல்லூரி ஏற்படுத்தியிருக்கிறார். என் நண்பராக இருந்த சுவாமி என் தாயாருக்குப் பரந்யாஸம் செய்து

வைத்தார். தகப்பனார் விரும்பிக் கிடைக்காத பாக்கியம் என் தாயாருக்குக் கிடைத்தது.

1932- ஆம் வருஷத்தில் மகாத்மா காந்தி ஹரிஜன இயக்கம் தொடங்கினார். தமிழ் மாகாணத்தில் ஹரிஜன இயக்கத்திற்கு நான் தலைவனாக இருக்கவேண்டுமென ஸ்ரீ ராஜாஜி கொடுத்த உத்தரவின்படி அப்பதவியை நான் ஏற்றேன். தீண்டாமையை ஒழிப்பது, கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடுவது, ஹரிஜன நிதி சேர்ப்பது முதலிய முயற்சிகளில் ஈடுபட்டேன். நான் ஏற்றுச் செய்துவந்த தொண்டு என் நண்பராகிய அகோபில மடம் சுவாமிகளுக்குப் பிடிக்கவில்லை. அதைப்பற்றித் தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தது தவிர அவர் ஒன்றும் செய்யவில்லை. ஆனால் அன்றுமுதல் எனக்கும் அவருக்கும் உள்ள சிநேகம் குறைந்துவிட்டது. என் பேரப்பிள்ளைக்கு உபநயனம் செய்ய முயன்றபொழுது, வைதிகர்களைக்கொண்டு எவ்வளவு இடையூறு செய்யமுடியுமோ அவ்வளவும் செய்தார். என் வீட்டில் நடக்கும் வைதிக கர்மங்களுக்குக் கோஷ்டியாரும் மற்றவரும் வராமல் தடைசெய்துவிட்டார். நான் இந்திய சட்ட சபைக்கு அங்கத்தினனாக இருக்க விரும்பித் தேர்தல் நடந்த காலத்தில், ஆஸ்திக வைதிகர்கள் எல்லோரும் ஐதராபாத் ராஜாபகதூர் கிருஷ்ணமாசாரியருக்கு வாக்குக் கொடுக்கவேண்டுமென்று சீடர்களுக்கு அறிவித்தார். மடத்து ஊழியர்கள் எல்லோரும் வாக்கு எடுக்கும் தினத்தன்று ஸ்ரீரங்கத்தில் எனக்கு விரோதமாக வேலை செய்தார்கள். இந்தச் சம்பவங்களுக்குப் பிறகுதான் மிகுந்திருந்த வைதிகப் பற்றும் என்னைவிட்டு ஒழிந்தது. பொருள் புரியாத சடங்குகள், உயிரில்லாத பல அநுஷ்டானங்கள், பரிகசிக்கக் கூடிய பழக்க வழக்கங்கள் முதலியவற்றைக் கைவிட்டேன்.

நான் செய்ய யத்தனித்தது என்னால் முடியாத வேலை. செய்யக்கூடும் என்ற குருட்டு நம்பிக்கையாலும், முரட்டுத் தைரியத்தாலும் செய்தேன்; நல்ல புத்திமதி ஏற்பட்டது. என்னால் முடியாத வேலையைக் காலம் செய்துவருகிறதை நான் தினந்தோறும் கண்கூடாகக் கண்டுவருகிறேன். என்னுடைய

அறிவீனத்தைத் தவிர வேறு யாரை நொந்துகொள்வது? என் எண்ணங்களுக்கும் முயற்சிக்கும் எனது இளம்பிராயத்தில் என் மனத்தில் வேரூன்றிய சில நிகழ்ச்சிகள்தாம் காரணம். வைதிக குலத்தில் பிறந்தது, வைதிகக் கோட்டையான ஸ்ரீரங்கத்தில் வளர்ந்தது, வளரும் வயசில் கோயில் முறைகளை ஊன்றிக் கவனித்து வந்தது, என் பெற்றோர்களின் மனப்பான்மை, இவைகள் மூலம் சில எண்ணங்கள் என் மனத்தில் குடிகொண்டு, ஆங்கிலப் படிப்பில் ஈடுபட்டும், ஐரோப்பா முதலிய நாடுகளில் வருஷக்கணக்காகச் செலவழித்தும், என்னை விட்டு அகலவில்லை. கடைசியாக நான் அநுபவித்த நிகழ்ச்சிகளால் பல வருஷங்கள் கடந்தபிறகுதான் வைதிகப்பற்று மறைந்தது.

கனம் ஸ்ரீநிவாச சாஸ்திரிகள் நமது மாகாணத்திலும் அகில இந்தியாவிலும் போற்றத் தக்க ஒரு பெரியார்; சீர்திருத்தக்காரர் என்று பெயர் பெற்றவர்; ருதுமதி விவாகம் சட்டபூர்வமாகவேண்டுமெனப் பாடுபட்டவர்; உலகம் முழுவதும் நல்ல அந்தஸ்துடன் பெரிய பதவி வகித்துச் சுற்றிப் பார்த்தவர். இப்படிப்பட்ட ஒரு மகான் ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேச மசோதா சட்டமாக இருந்தபொழுது சென்னை மேல் சட்டசபையில் வெகு உருக்கமாகப் பேசி அதை எதிர்த்தார். அவருடைய அரிய மொழிகள் என் மனத்தை விட்டு அகலவில்லை. "நாம் நாட்டை இழந்தோம். அரசியல் துறையில் தாழ்வை அடைந்தோம். நமக்குள்ள செல்வம் எல்லாம் மகரிஷிகளால் அளிக்கப்பட்ட கலைகள். அக்கலைகளுக்கு அறிகுறியாக எஞ்சியிருப்பவர்கள் நம் நாட்டிலுள்ள ஏழை வைதிகர்கள். அவர்கள் மனம் புண்படும்படியான மசோதா இது. இதை நான் அங்கீகரிக்க முடியாது" என்று மிகுந்த சோகத்துடன் பேச்சை முடித்தார். அதற்கு ராஜாஜியின் பதிலும் அதே முறையில்தான் இருந்தது: "நம் மூதாதைகளாகிய மகரிஷிகளுடைய பெயரையும் புகழையும் நிலைநிறுத்தவேண்டியது நமது கடமை. மனித சமூகத்தைப் பிளவுபடுத்தி, ஒரே மதத்தைச் சேர்ந்த, குற்றமற்ற பெரும் பகுதியினரைப் பிறவிக் குற்றமென்ற கற்பனையால் ஒதுக்கிவைத்துப் பகவானைத் தரிசிக்க அவர்களுக்கு உரிமை

இல்லை என்று ஒரு காலத்திலும் ரிஷிகள் சொல்லியிருக்க மாட்டார்கள், சொல்லவும் இல்லை. அப்பெரியார்களின் நற்பெயர் ஓங்கவேண்டியே இந்த மசோதாவை நான் கொணர்ந்துள்ளேன்'' என்று பதில் அளித்தார். மசோதா சட்டமாயிற்று; மூன்று தமிழ் ஜில்லாக்களில் அநுஷ்டானத்திற்கும் வந்துவிட்டது. ஹிந்து மன்னராகிய திருவாங்கூர் மகாராஜா தீண்டாமையைத் தம் சம்ஸ்தானத்தை விட்டு அறவே ஒழித்து அழியாப் புகழ் அடைந்துவிட்டார். இது காலத்தின் போக்கு; மக்களின் பெருமை.

# பழைய காங்கிரஸும் காந்தியும்

"என்ன டாக்டர், காங்கிரஸுக்குப் பிரதிநிதிகள் தேர்தல் செய்து பட்டியல் அனுப்பும்படி கடிதம் வந்திருக்கிறது. கூட்டம் போடத் தேதியும் நேரமும் குறிப்பிட்டு விளம்பரம் செய்தேன். என்னைத் தவிர வேறு ஒரு பிராணிகூடக் கூட்டத்திற்கு வரவில்லை. இப்படி இருக்கும் இந்த ஊரிலிருந்து காங்கிரஸுக்குப் பிரதிநிதிகளை எப்படி அனுப்பமுடியும்? உங்களுக்குப் பிரதிநிதிப் பத்திரம் கொடுக்கிறேன். நீங்களாவது போய்வாருங்கள்" என்று புகையிலையை அடக்கிக்கொண்டிருக்கும் வாயில் எச்சில் ததும்பப் புன்சிரிப்புடன், ஸ்ரீமான் ராதாகிருஷ்ணையர் ஒரு நாள் சாயங்காலம் தெருவில் போய்க்கொண்டிருந்த என்னிடம் சொன்னார். ராதாகிருஷ்ணையர் ஒரு பி. ஏ. பி. எல்.; அவர் ஒரு வக்கீல் என்றுசொல்லத் தேவையில்லை. தாழ்ந்த குரலில் பேச அவருக்குத் தெரியாது; வசீகரமுள்ளவர். திருச்சி ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்குச் செயலாளர். அதற்கு அறிகுறியாகக் காங்கிரஸின் சொத்து என்று சொல்லக்கூடிய ஒரே ஒரு நோட்டுப்புத்தகத்தைக் கையில் தாங்கிச் சாயங்கால நேரத்தில் திருச்சி டவுன்ஹாலை நோக்கிப் போய்க்கொண்டிருப்பார்.

பெயரளவில் காங்கிரஸ் கமிட்டியென்று அந்தப் புத்தகத்தில் சில நண்பர்களின் பெயர்கள் வரைந்திருக்கும். வருஷத்திற்கு ஒரு முறை பிரதிநிதிகள் அனுப்பக் கூட்டிய கூட்டமும், தேதியும், பிரசன்னமாகாத சில பிரதிநிதிகளைப் பொறுக்கி எடுத்த ஜாப்தா ஒன்றும் அதில் காணப்படும். நான் முதல் முதலாக இந்தக் கிரந்தத்தைப் பரிசீலனை செய்தது 1914 - ஆம் வருஷத்தில்தான். அப்பொழுது காங்கிரஸ் சபை

நிதானக் கட்சியாருடைய ஆதிக்கத்தில் இருந்தது. அவர்கள் கொள்கைக்கு உடன்பட்டவர்களே பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுக் காங்கிரஸுக்குச் சென்று நடவடிக்கைகளில் கலந்துகொள்ளலாம். பிரதிநிதிகளாகச் செல்வதற்கு முன்பு உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்துச் செய்த பிறகுதான் கூட்டத்தில் கலந்துகொள்ள அநுமதிக்கப்படுவார்கள். இந்த நிலையில் நானும் ஓர் உறுதிமொழிப் பத்திரம் ராதாகிருஷ்ணையரிடமிருந்து பெற்று, சென்னையில் நடக்கவிருந்த அவ்வருஷத்திய காங்கிரஸுக்குப் போக முடிவுசெய்தேன்.

நிதானக் கோஷ்டியாருடைய அரசியல் கோட்பாடுகளை அறவே வெறுக்கும் மனப் பான்மையுடைய நான், உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட இசைந்தது என் கொள்கைக்குக் குறைவே எனினும், காங்கிரஸில் சேர்ந்து அதை என் மனத்திலுள்ள தேச விடுதலைக்கான சுதந்தரம் பெறும் கட்சியாக மாற்றவேண்டும் என்பதற்காகவே அப்படிச் செய்தேன்.

என் போன்றவர்கள் அநேகர் பிரதிநிதிகளாக வரவும் இசைந்தார்கள். ஆனால் அந்தக் காலத்தில் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டு வருஷம் ஒருமுறை காங்கிரஸ் நடக்கும் இடங்களுக்குப் போவதைத் தவிர வேறு அரசியல் தொண்டு ஒன்றும் இராது. காங்கிரஸிலும் பேச்சு வன்மை ஒன்றேதான் பலருக்குப் புகழும் பெருமையும் அளித்தது. நல்ல சொற்பொழிவாளர்கள் பேசுவதை எதிர்பார்த்துக் கூட்டம் காத்துக்கொண் டிருக்கும். நல்ல பிரசங்கிகளே தேசீயத் தலைவர்களாக விளங்கினார்கள். கேட்பவர் மனம் குளிர நல்ல ஆங்கிலத்தில் அழுத்தம் திருத்தமாகப் பேசுபவர்கள், பெரிய தொகைகளை நன்கொடையாக அளித்தவர்கள், ஹைக்கோர்ட் ஜட்ஜ்கள், பெரிய சர்க்கார் அதிகாரிகள் இவர்கள் காங்கிரஸ் மேடையில் அமர்ந்து காட்சி கொடுத்த காலம் அது. சென்னைக்குப் பல காரணங்களையொட்டி மக்கள் திரள் திரளாக டிசம்பர் மாதக் கடைசியில் கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களில் வந்து கூடினார்கள். பலர் சென்னையிலேயே பிரதிநிதிகளாகச் சேர்ந்து கொண்டார்கள்.

கல்கத்தாவில் ஸொலிஸிட்டர் (வக்கீல்) வேலையில் ஈடுபட்டிருந்த பூபேந்திரநாத் வசு தலைமை வகித்தார். நடை, உடை, பாவனை, பேச்சு எல்லாம் ஆங்கில மயம். அவர் ஆங்கிலப் பிரசங்கம் மிகவும் அருமையாக இருந்தது. தீர்மானங்கள் எல்லாம் ஆங்கிலத்தில்தான். தலைவரின் கருணையினாலும், தயவாலும் இரண்டொரு தமிழ்ப் பிரசங்கங்களுக்கும் இடம் கிடைத்தது. தொண்டர் படைத்தலைவரின் தயவால் எனக்குப் பேச்சைக் கேட்கக்கூடிய தூரத்தில் இடம் கிடைத்தது.

அந்தக் காலத்தில் ஒலிபெருக்கி முதலிய வசதிகள் கண்டு பிடிக்கப்படவில்லை. நன்றாக உரக்கக் கதறக் கூடியவர்களின் பிரசங்கந்தான் கவனிக்கும்படி இருந்தது. "இன்று பிற்பகல் சுரேந்திரநாத் பேசுவார்" என்று விளம்பரம் செய்தால் அதற்காகக் கூட்டம் அதிகமாக வரும். எல்லாம் பேச்சுப் போட்டிக் களஞ்சியமாக விளங்கியது. தீர்மானங்கள் வழக்கம் போல் எல்லாவிதமான கோரிக்கைகளுடனும், ராஜபக்திப் பிரமாணத்துடனும் பேசி நிறைவேற்றப்பட்டன. காங்கிரஸ் நடவடிக்கைகள் ஒவ்வொரு பத்திரிகையிலும் அதனதன் போக்கிற்குத் தகுந்தபடி பிரசுரமாகி, ஒரு வாரத்திற்குப் படிப்பவர்களின் சிந்தனைக்கு உணவு கொடுத்தன.

இந்தக் காங்கிரஸ் நடவடிக்கைகளைக் கவனித்தபிறகு இதனால் பொதுமக்களுக்கும் தேசத்திற்கும் அதிக நலன் ஏற்படுமென்று எனக்குத் தோன்றவில்லை. அடிமைப்பட்டிருக்கும் ஒரு கூட்டத்தாருக்கு இன்றியமையாத சிற்சில சங்கடங்களை விளம்பரப்படுத்தவும், அதிகார வர்க்கத்தினர் மனத்தில் நம் நாட்டினரிடத்துத் தங்களுக்கு இருக்கும் செல்வாக்கை ஒருவாறு வலியுறுத்தவும்மட்டும் இது பயன்பட்டதாகவே எனக்குத் தோன்றியது. காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தவர்களில் பலர் அரசாங்கத்தாரிடம் பெரிய பதவிகளைப் பெற்றார்கள். அப் பதவிகளுக்கு அவர்கள் உரியவர்களல்லர் என்று சொல்ல முடியாது. நம் சமூகத்தினரிடையில் நன்மதிப்பும் செல்வாக்கும் பெற்றவர்களே காங்கிரஸ் தலைவர்களாக அக் காலத்

தில் மதிக்கப்பட்டார்கள். அது மாத்திரம் அல்ல. சர்க்காரிடத்தில் களங்கமற்ற பக்தியும் மதிப்பும் இருந்தவர்தாம் இந்தப் பதவிக்கு விரும்பி எடுக்கப்பட்டார்கள். சர்க்காரிடத்து இவர்களுக்கு மதிப்பு எவ்வளவு அதிகமாக இருந்ததோ அதற்குத் தகுந்தபடி காங்கிரஸ் தீர்மானங்களும் நல்ல செல்வாக்குடையனவாக இருக்கும் என்னும் எண்ணமும் காங்கிரஸை நடத்துபவர்களின் மனத்தில் குடிகொண்டிருந்தது. மக்களைத் தட்டி எழுப்பி, அவர்கள் உள்ளத்தில் உறங்கிக் கிடக்கும் தேசிய உணர்ச்சியைத் தேச விடுதலையின் சார்பாகக் கிளப்பி உருப்படுத்தக்கூடிய சக்தி காங்கிரஸுக்கு அப்பொழுது இல்லை. முறையிடும் துறையிலே, அதிகாரிகளுடைய மனம் நோகாமல், நியாயத்தைப் பக்குவமாக எடுத்து உணர்த்தி வாதாடும் தோரணையைக் கைப்பற்றி வந்தது காங்கிரஸ். ஆங்கிலம் படித்தவர்களைத் தவிர மற்றவர்கள் இந்த நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதற்கு முடியாமல் போய்விட்டது. காங்கிரஸில் சேர்ந்தவர்களில் பெரும்பாலோர் வழக்கறிஞர்களாகத் தொழில் நடத்தும் வக்கீல்கள். ஆங்கிலத்தில் பேசும் திறன் அவர்களுக்குத் தொழில்முறையில் ஏற்பட்டுவிட்டதால், காங்கிரஸ் நடவடிக்கைகளிலும், கோர்ட்டு நடவடிக்கைகளைப் போலவே விவாதித்து முடிவு கட்ட அந்த அநுபவம் அவர்களுக்கு உதவியாக இருந்தது. மேலும் அந்தக் காலத்தில் வக்கீல் தொழில் சர்க்காருக்கு அடிமைப்பட்டு, ஓர் எஜமானனுடைய நன்மதிப்புக்கு ஈடுபட்டு நடத்தும் தொழிலாகக் கருதப்படவில்லை. தேச சேவைக்கு உரிய சுதந்தரம் பொருந்திய தொழிலென்றே எல்லோரும் அதைப் போற்றிவந்தார்கள். ஆனால் இந்த எண்ணம் இன்று முற்றும் மறைந்துவிட்டது. அதிகாரிகளோடு போர் புரியும் முறையில் காந்திஜி சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கியவுடன் வக்கீல் தொழிலின் அடிமைத்தனம் வெட்டவெளிச்சமாகிவிட்டது. சுதந்தர இயக்கம் வலுவடையவே வக்கீல்களின் தொகை காங்கிரஸ் இயக்கத்தில் மெலிவடைந்தது. வழக்கறிஞர்களாக இருந்தாலும், நீதிமன்றங்களைத் துறந்து ஏழை மக்களுக்காகத் தொண்டாற்றிய பெரியோர்களே காங்கிரஸ் இயக்கத்தை நடத்த முன் வரும்படியாயிற்று.

சென்னையில் நான் கண்ட முதல் காங்கிரஸ் எனக்கு ஏமாற்றத்தை அளித்தது. இதற்கு என் மனப்பான்மையே காரணம். தீவிர அரசியல் வாதியாக, புரட்சிகளை உண்டாக்கி, மக்களை ஒருமித்து எழும்படி செய்து அந்நியர்களை நாட்டை விட்டு ஓட்டிச் சுதந்தரம் அடையவேண்டும் என்ற கட்சியில் சீமையில் இருக்கும்போது ஈடுபட்ட எனக்கு இந்த முடிவு ஏற்பட்டது ஆச்சரியமல்ல. ஆனால் நாட்டின் நிலைமையைக் கருதாது, ஒரு சிறிய கொள்கையைமட்டும் சிந்தித்து, மனக் கோட்டை கட்டி வருந்துவதில் பயனில்லை. 'இதற்கு வேண்டிய தியாகத்தை நான்மட்டும் செய்தால் போதாது' என்ற ஓர் எண்ணம் எனக்கு உண்டு. உண்மையில் எனக்குள்ள பயங்கொள்ளித் தனத்தினால்தான் இந்த மனோபாவம் உண்டாயிற்று. சுதந்தரம் வேண்டுமென்றால் உயிரையும் தியாகம் செய்து அதைப் பெற வேண்டும். 'தியாகம் செய்யும்பொழுது நான் ஒருவன் மட்டும் செய்தால் காரியம் சித்தி பெறுமா?' என்று எண்ணுவது கோழைத்தனம். காந்தியடிகள் அடிக்கடி சொல்லுவதுபோல ஒவ்வொருவனும் தான் விரும்பும் பொருளை அடையச் சகல விதமான தியாகத்தையும் செய்யவேண்டும். தன்னைப் பொருத்த மட்டும் தனது பரிபூரணத் தியாகமே தனக்கு விடுதலை அளிக்கும் என்கிற தத்துவத்தின் உண்மை ஒப்பற்ற ஒரு வீரன் மனத்தில்தான் உதிக்கும். போரில் ஈடுபடும் ஒவ்வொரு வீரனும், 'நான் ஒருவன்மட்டும் இறந்தால் ஜயம் கிடைக்குமா?' என்று நினைத்தால் யுத்தத்தின் முடிவு எப்படியாகும் என்பதை நாம் எளிதில் அறிந்துகொள்ளலாம். எந்தக் கிளர்ச்சியும் ஒரே காலத்தில் எல்லோர் மனத்திலும் உதயமாவதில்லை. புத்தி கூர்மையும் உணர்ச்சியும் பொருந்திய ஒருவன் மனத்தில் தோன்றும் புனித எண்ணங்களே பெருவெள்ளமாக மாறி, மனித சமூகத்தைப் புரட்டி அமைக்கும். அந்த மனிதனது தியாகத்தின் பலனாகவே பலர் தியாகம் செய்ய முன் வருகிறார்கள். ஆற்றைக் கடந்து அக்கரை சேர விரும்பும் ஒவ்வொருவரும், தண்ணீரைக் கண்டு மயங்கி, நீந்த முற்படாவிட்டால் தண்ணீரை எப்படித் தாண்டுவது? அதுபோன்றனவே உலக விவகாரங்களும்.

உலகப் பற்று எல்லா மானிடர்களுக்கும் இயற்கை. இந்தப் பற்றுதல் பலவிதமாக உலாவுகிறது. உயிரின்மேல் பற்றுதல் எல்லோருக்கும் உண்டு. இது குடும்ப வாழ்க்கையின் மூலம், சமூகத் தொடர்பு மூலம், தேசபக்தியின் மூலம் விரிவடைகிறது. அப்படி விரிவடையும்பொழுது படிப்படியாகச் சுயநலம் குறைந்து தியாக உணர்ச்சி மேலிடுகிறது. ஒரு தனி மனிதன் தன் ஆத்மா முக்தி பெறும்பொருட்டுச் சர்வ சங்க பரித்தியாகம் செய்கிறுன். பற்றுக் குறையக் குறைய, அவனது கோரிக்கை ஈடேறுகிறது. தன் தனி ஆத்மாவின் நலத்துக்கே இவ்விதத் தியாகம் வேண்டியிருந்தால், ஒரு நாட்டின் விடுதலைக்கு எவ்வளவு அரும்பெரும் தியாகங்கள் செய்யவேண்டும்! அதிலும் சோனி, சப்பை, குருடு, நொண்டியாக இல்லாமல், மனத்திடமும், அஞ்சா நெஞ்சமும் உடையவராகி, தியாகத்தின் நிமித்தம் தம் உயிரை உள்ளங்கையில் ஏந்தி, பலி கொடுக்கப் போட்டி போடும் வீரர்கள் பலர் வேண்டும். அப்படியிருக்க என் போன்றவர்கள் கோடிக்கணக்காக இருந்தும் என்ன பயன்? நமது சக்திக்கு ஏற்ற பலன்தான் நமக்குக் கிடைக்கும்.

உலகெலாம் சுற்றித் திரிந்து தமிழ் நாட்டுக்கு நான் திரும்பியதும் வைதிகப்போர் தொடங்கிவிட்டேன். அதிலும் நிதானமாகவே போர் புரிய முயன்றேன். முயற்சி பலிக்கவில்லை. சமூகத்தை விட்டு வெளியேறுவது சுலபமாகத் தோன்றியது. அப்படிச் செய்வதனுல் சமூகம் முன்னேறுது. அதனுள் இருந்து நாளடைவில் இடைவிடாது போராடிச் சற்றுத் தாமதமாகவே சிறிது பலன் உண்டானதாக நினைக்க இடம் ஏற்பட்டது. இவைபோன்ற எண்ணங்களே அரசியலிலும் என் மனத்தில் குடிகொண்டன. எனினும் என்னுடைய செய்கையே எனக்குப் பிடிக்கவில்லை.

1914 - ஆம் வருஷத்தில் காந்திஜி சென்னைக்கு வந்தார். தென் ஆப்பிரிகாவில், ஜெர்மனியுடன் நடந்த மகாயுத்தத்தில் ஆங்கில அரசாங்கத்திற்கு உதவி புரிந்தார். காயம் பட்டவர்களுக்கு உடன் உதவி செய்யும் இந்தியப் படையொன்று திரட்டி, அதில் தாமும் பங்கெடுத்து உதவி, இங்கிலாந்துக்குச்

சென்றார். அங்கே நோய்வாய்ப் பட்டுப் படையில் சேர முடியாமல், அங்கிருக்கும் டாக்டர்கள் அபிப்பிராயத்திற்கு இணங்க, அந்தக் குளிர் தேசத்தை விட்டு இந்தியா வந்து சேர்ந்தார். உடல்நிலை குணமடைந்தவுடன் தம் அரசியல் குருவாகிய கோபாலகிருஷ்ணகோகலேயின் ஸ்தாபனமாகிய 'இந்திய ஊழியர்கள் சங்க' த்திற்குச் சென்று பார்வையிட்டு விவரம் தெரிந்தவுடன், அந்த ஊழியத்தின் நிபந்தனைகளுக்கும் தம் மனப்பான்மைக்கும் நீக்க முடியாத அடிப்படையான மாறுபாடுகள் இருக்கக் கண்டு, அதில் சேராமல் தமது விருப்பத்துக்கும் தத்துவங்களுக்கும் இடையூறு இல்லாமல் வேலை செய்ய ஒரு தனி ஸ்தாபனம் நிறுவ முடிவுசெய்து இந்தியாவின் பல பாகங்களையும் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டார். இந்தச் சுற்றுப் பிரயாணத்தின்பொழுது அவர் தம் மனைவியோடு சென்னை வந்துசேர்ந்தார். அப்பொழுது அவர் 'மகாத்மா' ஆகவில்லை. தென் ஆப்பிரிகாவில் சத்தியாக்கிரகம் செய்து, தலைவர் ஸ்மட்ஸ் துரையுடன் அங்கே குடியேறியுள்ள இந்தியர் விஷயமாக உடன்படிக்கை செய்துகொண்ட தேச பக்தர் அவர் என்பது, அயல் நாட்டில் உள்ள இந்தியரின் விஷயங்களைக் கவனித்து வரும் சிலருக்கே தெரியும். நாட்டுப் பொதுமக்களுக்கு அவரைப்பற்றி ஒன்றுமே தெரியாது. சென்னையில் அவரை அறிந்த நண்பர்கள் வெகு சிலர். அவர்களுள் ஸ்ரீமான் ஜி. ஏ நடேசன் காந்திஜிக்கு நண்பர், அப்போது சேலத்தில் வக்கீலாக இருந்த சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியாரைப் பெயரளவில் கடிதப்போக்கு வரத்து மூலம் காந்திஜிக்குத் தெரியும். சென்னையில் ஜி. ஏ. நடேசன் வீட்டில் காந்திஜி தங்குவதாக ஏற்பாடு ஆகியிருந்தது. நடேசனும் அவருடைய நண்பர்கள் சிலரும், பத்திரிகை நிருபர்கள் சிலரும் சென்னை ஸெண்ட்ரல் ஸ்டேஷனில் அவரை வரவேற்பதற்காகச் சென்றிருந்தனர். ஆங்கில உடை தரித்து, உயர்தரவகுப்பு வண்டிகளில் பிரயாணம் செய்யக்கூடிய பெரிய மனிதர் என்ற உணர்ச்சியினால், இச்சிறிய வரவேற்புக் கூட்டம் முதல் வகுப்பு, இரண்டாம் வகுப்பு வண்டிகள் நிற்கவேண்டிய இடத்தில் பிளாட்பாரத்தில் மாலையும் கையுமாகக் காத்திருந்தது. வண்டி வந்து

ின்றதும் அவர்கள் ஏமாற்றம் அடைந்தார்கள். காந்திஜியைக் ாணவில்லை. ஆகையால் வண்டிகளிலிருந்து இறங்கும் பிர ாணிகளை உற்றுக் கவனிக்க அங்கும் இங்கும் ஓடினார்கள். டைசியாக மூன்றாவது வகுப்பில் அடைந்துகிடந்த பிரயா ிகளுடன், மூட்டையும் முடிச்சுமாக, தாமும் தம் கஸ்தூரி ாயும் இறங்கியதைக் கண்டு முதலில் திடுக்கிட்டார்கள். ிறகு வியப்படைந்தார்கள். தமது இனிய சிரித்த முகத்து டன் காந்திஜி அவர்களுடன் சற்று நேரம் பேசிவிட்டு, நடே னுடைய காரில் வீடு சேர்ந்தார். ஆங்கில உடை இல்லை. அசல் குஜராத்திப் பனியா தலைப்பாகை, பொத்தானில்லாத ாடாக் கட்டி முடியும் பழைய காலத்து ஜிப்பா ஒன்று, அரை யில் கச்சம்வைத்துக் கட்டிய வேஷ்டி, யக்ஞோபவீதமாக அணிந்திருக்கும் யோகவேஷ்டி இவற்றுடன் காட்சி அளித் தார். தம் சாமான்களை அவரும் அவர் மனைவியுமாக எடுத்துக் கொண்டு கூலிகளின் உதவியில்லாமலே வண்டியேறினார். அன்று சாயங்காலம் சென்னைப் பத்திரிகைகளில் காந்திஜி வந்து இறங்கின விநோதம் பிரசுரிக்கப்பட்டிருந்தது.

அன்று பிற்பகல் நான் ஜீ. ஏ. நடேசன் வீட்டில் காந்தி ஜியைச் சந்தித்தேன். அவருக்கு என்னை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. லண்டன் நிகழ்ச்சிகளை ஞாபகப் படுத் தவே பிறகு அறிந்துகொண்டார். "நான் இனிமேல் தென் ஆப்பிரிகா போகப்போகிறதில்லை, தாய் நாட்டின் விடுதலை யின்பொருட்டு உழைக்க எண்ணி வந்துவிட்டேன். சத்தியாக் கிரக தத்துவத்தைக் கடைப்பிடித்து என் வாழ்நாளை நடத்து வதையும், என் அஹிம்சா முறைகளை நம் நாட்டினருக்குப் பரப்புவதையும் என் பணியாகக் கொண்டிருக்கிறேன். அக மதாபாத் நகருக்கு அருகிலுள்ள ஸபர்மதி நதிக் கரையில் ஆசிரமம் நிறுவித்தர ஒரு நண்பர் இசைந்திருக்கிறார். அங்கே சென்று தங்குவதற்கு முன்பாக இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்துவர எண்ணி வந்திருக்கிறேன். உனக்கு என்னுடன் உழைக்கப் பிரியம் இருந்தால், என்னோடு ஆசிரமத்தில் வந்து தங்கி வேலை செய்யலாம்" என்றார். எனக்கு இருக்கும் கஷ்

டங்களை அவருக்கு எடுத்துச் சொன்னேன். "தாயை இழந்த மூன்று மக்கள் பாதுகாப்போரின்றி இருக்கிருர்கள். அவர்கள் பால் எனக்குள்ள கடமையைச் செய்யவேண்டும். அதற்குப் பணம் தேவை. ஆகையால் தொழில் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. எனினும் தாங்கள் நாட்டின் பணியேற்று வேலை செய்யும் காலத்தில் நானும் சேர விரும்பினுல் அப்பொழுது எவ்விதமான தியாகத்துக்கும் நான் முன் வருகிறேன்" என்றேன். எனது உறுதிமொழியை அன்புடன் ஏற்றுக்கொண்டு எனக்கு விடை அளித்தார். அன்று சாயங்காலம் சென்னைப் பிஷப் தலைமையின் கீழ் ஒய். எம். ஸி. ஏ.க் கட்டிடத்தில் தென் ஆப்பிரிக இந்தியர் நிலையைப்பற்றி இவர் ஒரு பிரசங்கம் செய்தார். பிறகு அகமதாபாத் திரும்பி விட்டார். சென்னையைப் பற்றியமட்டில் காந்திஜி விஜயம் ஒரு சிறிய தினசரிச் சம்பவமாகவே இருந்தது.

# தமிழிலே பேசுதல்

காங்கிரஸ் மகாநாட்டிற்கு வருஷந்தோறும் ஏன் போக வேண்டும்? அதிகச் செலவு செய்துகொண்டு, தொழிலையும் நிறுத்திவிட்டு, நல்ல குளிர்காலத்தில் இந்தியாவின பல பாகங்களில் நடைபெறும் காங்கிரஸிற்கு நான் தவருது போய்வந்துகொண் டிருந்தேன். எனக்கு இருக்கும் தேசபக்தி உணர்ச்சியைப் பிறர் அறியக்கூடிய வகையில் இந்தப் பிரயாணத்தின் மூலந்தான் அக்காலத்தில் காண்பிக்க முடிந்தது என்பது என் அபிப்பிராயம். பல நண்பர்களை ஒரே சமயத்தில் சந்திப்பது, நமது நாட்டின் பல பாகங்களையும் சுற்றிப் பார்ப்பது, புண்ணிய தீர்த்தங்களில் நீராடிக் களிப்புறுவது, புராதனக் கலைச் சின்னங்களைக் கண்டு நாட்டின் பண்டைப் பெருமையை ஒருவாறு ஊகிப்பது இவைகளை எலலாம் வருஷத்திற்கு ஒரு முறை பல்வேறு இடங்களில் சென்று அறிந்துகொள்வதற்கு எனக்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம் என நான் எண்ணினேன். 1919-ஆம் வருஷம் வரையில் காங்கிரஸ் வேலை ஓர் உல்லாசப் பிரயாணமாக இருந்தது. நான் யாருடைய பிரதிநிதி? 'நான் ஓட்டுச் செய்யும் அபிப்பிராயத்தை எவ்வளவு பேர்கள் எங்கள் ஊரில் ஆதரிக்கிருர்கள்' என்ற கேள்வி அக்காலத்தில் எழவில்லை. என்னை, 'நீ ஏன் இப்படிப்பட்ட தீர்மானத்தைப் பிரதிநிதி என்ற முறையில் ஆதரித்தாய்' என்று கேட்பவர்களும் இல்லை. ஒருவரும் கேட்காதவரையில் எல்லோருடைய சார்பாகவும் என் இஷ்டம்போலத் தீர்மானங்களை ஆதரித்துக் கையைத் தூக்கியோ பேசியோ காங்கிரஸில் என் ஓட்டைப் பதிவு செய்துவந்தேன்.

காங்கிரஸில் தலையிட்டு வேலை செய்பவன் என்கிற முறையில் பொதுக்கூட்டங்களில் பேசவேண்டும் என்கிற ஆர்வம் உண்டாயிற்று. சீமைக்குப் போய்த் திரும்பிய ஒரு மகிமை

அக்காலத்தில் அதிகம். தமிழ்நாட்டில் என்னைப்போல வெளி நாடுகளுக்குச் சென்று திரும்பியவர் வெகு சிலர். பள்ளி மாணவர்கள் பிரசங்கங்கள் கேட்பதில் இப்பொழுதுபோலவே அப்பொழுதும் விருப்பமுள்ளவர்களாகவே இருந்தார்கள். எனக்கு எப். ஏ. வகுப்பில் உபாத்தியாயரும் அச்சமயம் அர்ச். சூசையப்பர் (St. Joseph's) கல்லூரித் தலைவருமான பெட்ராம் பாதிரியார் (Fr. Bertram) என்னிடத்தில் தனி யான அன்பு பாராட்டினுர். கல்லூரி மாணவர் சங்கத்தில் நான் பேசவேண்டுமென என்னை நேரில் கண்டு கூப்பிட்டார். "எனக்கு என்ன தனி மகிமை இப்பொழுது வந்துவிட்டது? நான் தங்கள் வகுப்பில் கடைசிப் பெஞ்சைக் குத்தகை எடுத் திருந்தவன்தானே?" என்று பணிவுடன் அவரிடம் பதில் சொல்லியபொழுது, "உன்னைப் போலத் தென்னிந்தியாவி லிருந்து லண்டன் சென்று சிறப்பாகப் பரீக்ஷைகளில் தேர்ச்சி பெற்றுத் திரும்பியவர் யார் இருக்கிருர் என்று நீயே சொல்லு. ஒருவரும் இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆகையால் உனக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு என்பதனுல்தான் மாணவர்கள் உன்னை விரும்புகிருர்கள். நீ வந்து பேசவே வேண்டும்" என்று பதி லளித்தார் பெட்ராம் சாமியார். கூட்டத்திற்கு அவரே தலைமை வகிப்பதாகவும் கூறினுர். இந்தக் கூட்டத்தில்தான் நான் முதல் முதலாகப் பேச ஆரம்பித்தேன். பேச்சு ஆங்கிலத் தில்தான் என்று நான் சொல்லவேண்டியதில்லை. சபைக்கூச்சம் என்பது என்ன என்பது முதலில் சபைகளில் பேசுவோர்களுக் கெல்லாம் நன்கு தெரியும்.

அந்தக் கூச்சம் எனக்கும் நிறைய இருந்தது. அதைத் தீர்ப்பதற்காகவும், கல்லூரி மாத வெளியீட்டில் என் பேச்சுப் பிரசுரமாவதை எண்ணியும் எனது சொற்பொழிவை எழுதி முடித்தேன். உளறிக்கொட்டாமல் கூடியமட்டில் நிதானமா கவே படித்து அன்று அரங்கேற்றிவிட்டேன். ஆனுல் சிறுவயசு முதல் அசட்டுத் துணிச்சல் அதிகமென்று பெயர் பெற்ற நான் எனது குணத்தை என் முதல் சொற்பொழிவிலும் காண்பித்து விட்டேன். நான் பேசும் இடத்தையும், அந்த ஸ்தாபனத்தை

நிர்வகித்து நடத்திவரும் கூட்டத்தாருடைய மனப் பான்மையையும் முற்றும் மறந்துவிட்டேன். மேல்நாடுகளில் கண்டவற்றில் எடுத்துரைக்கக்கூடிய விஷயங்கள் பல இருப்பினும், அன்று அவைகளை மறந்துவிட்டு, அந்நாட்டினருக்கு இருக்கும் மதப் பற்று எவ்வளவு என்பதைப் பற்றியும், கிறிஸ்துவ மதத்தின் உண்மைத் தத்துவங்கள் நடைமுறையில் அவர்களால் பின்பற்றப் படாததைப் பற்றியும் கட்டுரையை எழுதிப் படித்து முடித்துவிட்டேன். அர்ச் சூசையப்பர் கல்லூரிப் பாதிரிமார்கள் தன்னலமற்ற தியாகிகள். கிறிஸதுவ மதத்தின் பிடிப்பினால் தங்கள் நாட்டைத் துறந்து, உற்றார் உறவினர்களை விட்டு இறக்கும்வரையில் நமது நாட்டில் நம் மக்களுக்குக் கிறிஸ்துவ மதபோதனை செய்வதைத் தங்கள் வாழ்நாளின் கடமையாகக் கருதி, தீக்ஷை பெற்றவர்கள். அவர்கள் ஆதரவில் நடக்கும் கல்லூரி மாணவர்களிடையே எனது சொற்பொழிவு பொருத்தமற்றது. உண்மையைச் சொன்னதாக நான் நினைத்த போதிலும், என் ஆசிரியர்களாகிய பாதிரிமார்களுக்கு அது உகந்ததாக இல்லை. கடைசியாகப் பேசின பெட்ராம் சாமியார் தம்மால் இயன்ற அளவு என் கட்டுரைக்கு மாறான அபிப் பிராயத்தை வெளியிட்டார்.

அர்ச். சூசையப்பர் கல்லூரியிடத்து எனக்கு அளவற்ற பிரேமை. பாதிரிமார்களின் தன்னலமற்ற தியாகம் என் மனத்தைச் சிறுவயது முதல் கவர்ந்தது. நான்காவது வகுப்பு முதல் எப். ஏ. வகுப்பு முடிய, சுமார் பன்னிரண்டு வருஷ காலம் நான் வேறு பள்ளியில் படித்ததில்லை. இப்பொழுது நடைபெறும் பள்ளிக்கூடங்களினாலும், ஆசிரியர்களாலும் மாணவர்கள் மனத்தில் தீவிர நல்லெண்ணங்கள் உதிக்கக் கூடுமானால் என் மனத்தில் உதித்த நல்லெண்ணங்கள் அந்தப் பேராசிரியர்களையே பொறுத்தது. இன்றும் அப்பெரியார்களை என் மனம் நாடி நிற்கிறது. எனது சொற்பொழிவால் அவர்களுடைய மனம் துன்புறவில்லை என்பது எனக்கு நிச்சயம். ஏனெனில் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகும் அவர்களுடைய நட்பும் நல்லெண்ணமும் என்பால் குறைவடையாதது மட்டு

மல்லாமல் மேன்மேலும் பெருகி வளர்ந்துவந்திருக்கின்றன. 1915-16-ஆம் வருஷங்களில்தான் நான் தமிழில் பேசும் பழக்கம் சற்றுப் பெற்றேன். சிவாஜி மகாராஜாவின் பிறப்பு விழாவை முதல் முதலில திருச்சியில் ஏற்பாடு செய்தேன். அன்று நடந்த பொதுக்கூட்டம் எனக்கு எதிர்பாராத ஊக்கத்தையும் தன்னம்பிக்கையையும் அளித்தது.

அன்று பிற்பகல் அதி உக்கிரமான வெயில். நான் சீமையில் இருந்தபொழுது அதிகச் செலவில் தைத்து உபயோகித்துவந்த என் உடைகள் பெட்டியில் பல மாதங்களாகத் தூங்கிக்கொண் டிருந்தன. அன்றைத்தினம் முக்கியச் சொற்பொழிவாளராக என்னைத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். பொதுக்கூட்டத்தில் நான் தமிழில் பேசப்போகிறேன் என்று விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. எனக்குத் தாய் மொழியில் சொற்பொழிவு ஆற்றும் திறன் உண்டென்று எனக்கே தெரியாது. அன்றைவரையில் ஆங்கிலத்தில்தான் சொற்பொழிவு ஆற்றிவந்தேன். அந்நிய பாஷையில் பேசியதாலேயே பொதுக் கூட்டங்களுக்கு மக்கள் அதிகம் வருவதில்லை. ஊக்கமற்று ஆங்கிலம் பயின்று வாழ்வு நடத்தும் சிலரும், துடியான சில மாணவர்களுமே வருவது வழக்கம். ஆனால் அன்றைத் தினம் நான் எதிர்பாராதபடி திருச்சி டவுன்ஹால் கட்டிடத்தில் கூட்டம் நிரம்பியிருந்தது. பெட்டியில் தூங்கின குளிர்காலத்து ஆங்கில உடைகளை நவீன முறையில் தரித்து, வெயிலின் கடுமையும் கூட்டத்தின் நெருக்கமும் ஒருங்கே சேர, உடைகளுக்கிடையில் வெதும்பிக்கொண்டு என் சொற்பொழிவை வீட்டில்பேசும் தமிழில் ஆரம்பித்தேன். பேசப் பேச என்னை அறியாமலே எனக்கு ஓர் ஆர்வம் உண்டாயிற்று. ஜன நெருக்கம் அந்த ஹால் கொள்ளவில்லை. கூட்டம் அதிகரிக்கவே, வெளியேயுள்ள மைதானத்திற்குப் பிரசங்க மேடையை மாற்றவேண்டியதாயிற்று.

சுமார் ஒரு மணி நேரத்துக்கு அதிகமாகவே பேசினேன். அன்றைத் தினம் கூடியிருந்தவர்களிடம் இரண்டு எண்ணங்கள் உண்டாயின: ஒன்று, சீமைக்குச் சென்று

திரும்பிய தமிழன் ஒருவன் தாய்மொழியில் தன் உணர்ச்சியைப் பிறர் அறியச் சொல்லக்கூடும் என்பது; இரண்டாவது: சிவாஜி மகாராஜாவின் தீரச் செயல்களும் நாட்டைக் காப்பாற்ற முன் வந்த அவர் சுதந்தர சரித்திரத்தின் பகுதியும். அன்று என்னைப் புகழாதார் இல்லை. ஆனால் அதன்காரணமாக எனது மண்டை வீக்கமுற்றதென்று சொல்லமுடியாது. அரைகுறை யாக, பண்டிதத் தமிழ் முறைகளுக்குப் பொருந்தாததாக இருந்தாலும் மக்கள் அறியக்கூடிய முறையில் சொற் பொழி வாளர் உள்ளத்தில் ததும்பும் உணர்ச்சி கேட்போர் மனத்தில் தாக்கும்படியாகப் பேச்சு இருந்தால், அதுவே பிரசங்க மேடைகளுக்குத் தேவை என்பதை என் உள்ளம் எனக்கு நன்கு விளக்கிற்று. பன் முறை சிறை செல்ல நேர்ந்து, சிறை யிலும் தனிக்காவல் வைக்கப்பட்ட எனக்குத் தமிழ்மொழிப் பயிற்சியைப் பல நூல்களிலிருந்து பெறச் சந்தர்ப்பங் கள் கிடைத்தன. எனினும் நான் தமிழில் அதிக வன்மை பெற்றவ னாகவில்லை என்பதும் எனக்கு நன்கு தெரியும். அன்று முதல் அரசியல் சம்பந்தமான பல நிகழ்ச்சிகளும் நமது தாய் மொழியில் பொதுமேடைகளில் அடிபடத் தலைப்பட்டன. ஆனால் நான் தமிழில் பேசும் முறையில் பள்ளி மாணவர்களின் ஆதரவைப் பெறவில்லை. ஆங்கிலம் பேசிக் கேட்பதி லேயே அவர்களுக்கு மோகம். தஞ்சாவூர் ஜில்லா மாணவர்கள் சங்கம் ஒன்று திருச்சியில் அக்காலத்தில் இருந்தது ஒரே கல் லூரியில் படிக்கும் மாணவர்களிடத்தில் - தமிழர்களிடத்தில், பல ஜில்லாக்களினின்றும் வந்திருந்தபோதிலும் - தனிச் சங்கங் கள் எதற்காக இருக்கவேண்டும் என்பதன் காரணம் எனக்கு விளங்கவில்லை; சங்கத்தின் அங்கத்தினர்களுக்கும் விளங்க வில்லை. அது சில காலங்களில் திடீரெனப் பரவி மறையும் தொத்துநோய் போன்றதென நினைக்கிறேன். பெரிய கல்லூரி கள் இருக்கும் நகரங்களிலெல்லாம் இம்மாதிரியான சங்கங்கள் நிலவிவந்தன. நல்ல வேளையாக இப்பொழுது அந்தச் சில்லறைச் சங்கங்கள் மறைந்துவிட்டன.

தஞ்சாவூர் ஜில்லா மாணவர் சங்கத்தின் 'ஆதரவில் நான் பேசவும் என் நண்பர் திவான்பகதூர் ராமஸ்வாமி சாஸ்திரி

கள் தலைமை வகிக்கவும் நேரிட்டது. அப்பொழுது எனக்குத் தமிழ் வெறி அதிகரித்திருந்த காலம். அந்தக் கூட்டத்தில் கேட்போர்களின் ஆதரவையும், தலைவருடைய உத்தரவையும் கோராமலே நான் தமிழில் பேச ஆரம்பித்துவிட்டேன். மாணவர்களிடம் திகைப்பும், சற்று வெறுப்பும் காணப்பட்டன. அதைப் பொருட்படுத்தாமல் என் பிரசங்கத்தை முடித்தேன். அது கூட்டத்தாருடைய மனத்தைக் கவர்ந்ததென்பதே எனது நம்பிக்கை.

தலைமை வகித்த சாஸ்திரியார் ஆங்கிலத்தில் நீண்ட நேரம் சொற்பொழிவு நிகழ்த்தினார் அன்றைத்தினம்முதல் மாணவர் சங்கத்தார் என்னை அழைப்பதே இல்லை. அடிமைப் படிப்பிற்கு இதைவிட வேறு அறிகுறி ஒன்றும் தேவை இல்லை. நல்ல வேளையாக இதற்கு விமோசனம் இல்லாமல் போய்விடவில்லை. ஆங்கில அரசாங்கம் நூற்றைம்பது வருஷ காலம் ஆட்சி புரிந்திடினும் ஆங்கிலம்கற்றவர்கள் தொகை மிகக் குறைவு; தென்னிந்தியாவிலும் வங்காளத்திலும் சற்று அதிகமாக இருக்கலாம். மொத்தத்தில் நமது ஜனத்தொகையில நூற்றுக்கு இரண்டு சதவிகிதத்திற்குமேல் ஆங்கிலம் தெரிந்தவர்கள் இல்லை; இனி இருக்கவும் முடியாது. தேசிய உணர்ச்சி நாளடைவில் வளர்ந்துவருகிறது, தாய்மொழியிடத்து அன்பும் பெருகிவருகிறது. இனி, பாஷை - அடிமைத்தனம் வளர்வதற்கு இடமில்லை. அந்நிய நாட்டுக் கலைகளைத் தமிழ் மொழியில் சேர்க்கும் முயற்சியும், அதற்குரிய ஆதரவும் தமிழ்மக்களிடத்துத் தோன்றத் தலைப்பட்டுவிட்டன. இனி விடுதலையைப் பற்றிப் பயமில்லை. தமிழ்த் தாய் தனது ஈனத்தனத்திலிருந்து விடுதலை அடைந்துவருகிறாள்.

தமிழில் பேசாத சிறுமை மாணவர்களோடு நின்றுவிடவில்லை. தமிழ் மாகாண அரசியல் மகாநாடுகளிலும் இந்தக் கோரமான நிகழ்ச்சி பரவியிருந்தது. நடவடிக்கைகள் எல்லாம் ஆங்கில மயம். இது எந்தத் தெய்வத்திற்குப் பிரீதியோ எனக்குத் தெரியவில்லை. அரசாங்கத்துக்கு இது தேவையில்லை. நாம் பேசுவதில் உரமும் ஊக்கமும் இருந்தால் அரசாங்கத்தார்

தேடிவந்து நாம் சொல்வதை எழுதிக்கொண்டு போவார்கள். சாரமற்ற இலக்கண ஆங்கிலத்தை நம்மவர்கள் பேசுவதை யாரும் கவனியார்கள் என்பதைச் சமீபத்தில் ஸர் ஆர். கே. ஷண்முகம்செட்டியார் அமெரிக்கா சென்று திரும்பியபோது செய்த பிரசங்கத்தின்மூலம் நாம் நன்கு தெரிந்துகொள்ளலாம். சொல்லில் உண்மையும், பேச்சில் வன்மையும் இருந்து, நாட்டினருக்குத் தங்கள் சுயமரியாதையையும் சுதந்தரத்தையும் காப்பாற்றத் திறமையும் இருந்தால், நமது மொழியை உலகமே ஊன்றிக் கவனிக்கும். இல்லையேல் நமது பேச்சு வெறும் சத்தமேதவிர வேறில்லை.

மாகாண மகாநாடுகளில் நான்கு தமிழர்கள் ஆங்கிலத்தில் பேசிய பிறகு ஐந்தாவதாகத் தமிழில் பேசுபவருக்குத் தயவாக உத்தரவு கொடுப்பது அந்தக் கால வழக்கம். எனினும் அந்த மகாநாடுகளிலும் நான் தமிழிலேயே பேசிவந்தேன். என் பேச்சைக் கேட்ட ஆங்கிலவாதிகளில் யாரும் என்னை அவமதிக்கவோ குறைகூறவோ முன்வரவில்லை. தலைவர் உரை, தீர்மானங்களின் நடை இவை தமிழில் இருக்கவேண்டுமென நான் முயன்றும் பயன்படவில்லை. நாளடைவில் பொதுமக்கள் உணர்ச்சி அதிகரிக்க அதிகரிக்க அரசியல் கூட்டங்களின் நடைமுறையில் தாய்மொழிக்கு உரிய இடம் கிடைத்துவிட்டது. ஆங்கிலத்திற்கு உள்ள மகிமை அதிகார வர்க்கத்தின் செலவாக்கைப் பொறுத்தது. இன்றும் அதிகாரவர்க்கத்தின் சக்தி குன்றாமல் வளர்ந்துவருகிறது. ஆகையால் ஆங்கிலத்தின் மகிமை அவ்விதமே வளர்ந்துவந்தாலும், பொதுமக்களிடத்து அதற்கு இடமில்லை; கல்லூரிகளிலும் கோர்ட்டுகளிலும் மாத்திரமே அதற்கு இடம். தேசீய வளர்ச்சிக்குத் தாய்மொழியின் வளப்பம் ஓர் அளவுகோலாகும்.

# கலிகால அயோத்தி

1916-ஆம் ஆண்டு காங்கிரஸ் லக்னோவில் நடந்தது. நாட்டில் உண்டாயிருந்த அரசியல் கட்சிப்பிரிவினைகள் ஒழிந்து ஒற்றுமை உணர்ச்சி உதயமாகிய காலம் அது. முஸ்லிம் லீகினரும், காங்கிரஸ்காரர்களும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டு, அந்த ஊரில் கூடினார்கள். இரண்டாயிரம் பிரதிநிதிகளுக்கு மேலாக வந்திருந்தார்கள். அந்தக் காலத்தில் அவ்வளவு பிரதிநிதிகள் கூடியிருந்தது ஒரு பெருமையாகக் கருதப்பட்டது. தென்னிந்தியாவிலிருந்து வரும் பிரதிநிதிகளின் சாப்பாட்டுச் சௌகரியத்திற்காக சென்னையிலிருந்து ஒரு கூட்டம் சமையற்காரர்கள் வந்திருந்தார்கள். காங்கிரஸ் நான்கு நாட்கள் நடந்தது காங்கிரஸ் லீக் ஒப்பந்தம் நிறைவேறியது. பால கங்காதர திலகர் பிரசன்னமாயிருந்து நடவடிக்கைகளில் பங்கெடுத்துக்கொண்டார். மகாத்மா காந்தியும் காங்கிரஸ் பொதுக்கூட்டத்தில் வீற்றிருந்தாரே தவிர விஷயாலோசனைக் கமிட்டியிலாவது, மற்ற நடவடிக்கைகளிலாவது கலந்துகொள்ளவில்லை. அவருக்கென்று சாசுவதமான ஒரு தீர்மானம் உண்டு. நாட்டில் ஹிந்துஸ்தானி தேசிய பாஷையாகப் பரவவேண்டும் என்பதே அந்தத் தீர்மானம். அந்தத் தீர்மானத்தை ஒரே வார்த்தையில் பேசிவிட்டு உட்கார்ந்துவிடுவார்.

காந்தி, திலகர் இருவரும் காங்கிரஸ் மண்டபத்தின் வெளிப்புறங்களில் வரும்பொழுதெல்லாம்திரண்ட கூட்டம் அவ்விருவரையும் பின்பற்றி வரும். காங்கிரஸ் பந்தலில் அவர்கள் நுழையும்பொழுதும் வெளிவரும்பொழுதும் ஆரவாரங்கள் கிளம்பும். இதில் திலகர் காரணமாகத்தான் அதிகக் கூட்டமும் ஆரவாரமும் இருக்கும். பொது மக்கள் வேறு யாரையும் ஆரவாரித்து வரவேற்கவில்லை. இது அவர்களுள்

சிலருக்குப் பொருமையாகவும் மற்றும் சிலருக்குக் கேலியாகவும் பேச இடமளித்தது. ஆனால் இச்சிறுமைக் குணம் பொதுமக்களிடம் காணப்படவில்லை.

ஸர் ஜேம்ஸ் மெஸ்டன் அப்பொழுது ஐக்கிய மாகாண கவர்னராக இருந்தார். காங்கிரஸ் நடக்கும் இடங்களில் கவர்னரை மகாநாட்டிற்கு அழைப்பது அக்கால வழக்கம். சில சமயங்களில் அவர்களும் அழைப்பை ஏற்று விஜயம் செய்வதும் உண்டு. காங்கிரஸ் சபை கூடிய இரண்டாம் நாள் அவர் அங்கே விஜயம் செய்தார். காங்கிரஸ் தலைவர் அவரை வரவேற்றுப் பேசினார். அதற்குத் தகுந்த பதில் அவர் அளித்தார். வரவேற்பைப் பெற்றுக்கொண்டு உடனே அவர் திரும்பவில்லை. சற்று நேரம் அமர்ந்து நடவடிக்கைகளைக் கவனித்தார்.

முன்பு இரண்டொரு சமயங்களில் கவர்னர்கள் பிரசன்னமாயிருந்தபொழுது அவர்களுக்கெனத் தனிமுறையில் ராஜ பக்திப் பிரமாணம் செய்யும் தீர்மானம் ஒன்றை நிகழ்த்துவது வழக்கம். தேர்ந்த பேச்சாளர்களைக் கொண்டு அந்தத் தீர்மானத்தைப் பேசி நிறைவேற்றி வைப்பார்கள். மற்ற நடவடிக்கைகள், நிகழ்ச்சிமுறைகள் இவைகளையெல்லாம் ஒதுக்கி வைத்துவிட்டு இந்த ராஜ விசுவாச நாடகம் நடைபெறும். இந்தத் தடவை அந்த முறை பின்பற்றப்படவில்லை. ‘ இந்தியர்களுக்கும் ஆயுதங்கள் வைத்துக்கொள்ள உரிமை வேண்டும் ; அதுவும் இங்கிலாந்தில் எவ்விதம் நடக்கிறதோ அவ்விதம் இந்தியாவிலும் நடைபெறவேண்டும் ’ என்கிற தீர்மானத்தைப்பற்றிப் பேச்சு நடந்துகொண்டிருந்தது. அந்தத் தீர்மானத்தை ஆதரிக்கவேண்டிய பொறுப்பு என்னுடையதாக இருந்தது. பெயர்பெற்ற பேச்சாளர்களுக்குத்தான் தீர்மானங்களில் பேச இடம் கிடைக்கும். அதிலும் விஷய ஆலோசனைக் கமிட்டியில் அங்கத்தினராக இருக்க வேண்டும். அல்லது அப்படிப்பட்ட அங்கத்தினர்களால் பலமாகச் சிபாரிசு செய்யப்பட்ட பிரதிநிதியாக இருக்க வேண்டும்; அப்பொழுதுதான் என்போன்ற பேர் ஊர்

தெரியாத பேர்வழிகளுக்குக் காங்கிரஸ்மேடையில் பேச இடம் கிடைக்கும். மிகவும் பிரயத்தனம் செய்த சென்னை மாகாணக் கமிட்டியாரின் தயவினால் நான் ஆலோசனைக் கமிட்டிக்குள் புகுந்துவிட்டேன். இந்தத் தீர்மானம் காங்கிரஸில் புதிதாக வந்ததல்ல; பழைய பசலிகளில் பாடப்பட்ட பல்லவி தான்.

விஷய ஆலோசனைக் கமிட்டியில் இந்தத் தீர்மானத்தைப் பரிசீலனை செய்தபொழுது, அங்கிருந்தவர்களில் ஒருவருக்கும் சீமையில் ஆயுதம் பெறும் முறை இன்னதென்பது தெரியவில்லை உடனே நான் எழுந்து, "அந்த முறை எனக்குத் தெரியும். ஏழு ஷில்லிங்குகை போலீஸ்டாபீசுகளில் செலுத்திப் பெயரைப் பதிவுசெய்துகொள்ளவேண்டும்; அந்த ரசீதை ஆயுதங்கள் விற்கும் கடைகளில் காட்டினால் தேவையானவற்றைப் பெற்றுக்கொள்ளலாம். இந்த முறையில்தான் நான் லண்டனில் இருந்தபொழுது ரிவால்வர் வைத்திருந்தேன்" என்றேன். பிரமுகர்கள் எல்லோரும் சற்று என்னை உற்று நோக்கி, "இந்தத் தீர்மானத்தைப்பற்றி நீர் பேச முடியுமா?" என்று வினவ, நானும் அதற்கு ஒப்புக்கொள்ளவே மகாநாட்டில் பேச வாய்ப்பு ஏற்பட்டது. ஆனால் 'கனம்பொருந்திய மன்னர் பிரானின் பிரதிநிதியாகிய மாகாணக் கவர்னர் முன்னிலையில் பேச இவனுக்குத் துணிச்சல் இருக்குமா' என்று பலருக்கு என்னைப் பற்றிச் சந்தேகம் உண்டாயிற்று. முதல் முதலாகக் காங்கிரஸ் மகாசபையில் பேசும் சந்தர்ப்பம் அன்றுதான் கிடைத்தது சுமார் பதினைந்து நிமிஷங்கள் பேசினேன். 'ஒரு அநாமதேயப் பேர்வழி நன்கு பேசினான்; முறையாகவும் பேசினான்' என்பது தான் கேட்டவர்கள் அன்றைத் தினம் சொல்லியது. எனது மகிழ்ச்சிக்கு அளவில்லை. கவர்னர்முன்னிலையில் பேசியதுதான் என் மகிழ்ச்சிக்குக் காரணம். அன்றைத் தினமே தேசத் தலைவர்களுள் என்னையும் ஒரு குட்டித்தலைவனாக எண்ணி மகிழ்ந்தேன்.

காங்கிரஸ் முடிந்தவுடன் என் நண்பர்கள் இருவருடன் அயோத்தி யாத்திரை சென்றேன். ஹிந்துஸ்தானி எனக்குக்

கொஞ்சம் ஹிந்துஸ்தானி பேசத் தெரியும்; எனக்குத் தெரிந்தவர்களோ சிநேகிதர்களோ ஒருவரும் இல்லை. எனினும் யாத்திரையினுடைய பெருமையும் பலனும் அதில்தான் அடங்கியிருக்கின்றன. முன் பின் தெரியாத ஓர் இடத்திற்கு, அந்தத் தேச பாஷை தெரியாமல் திடீரெனப் புறப்பட்டுப் போவதிலுள்ள உணர்ச்சியைப்போல வேறு எதுவும் இல்லை. தெரிந்தவர்கள் வந்து வரவேற்க, உடனே தயாராக இருக்கும் வண்டிகளில் ஏறிக் குறிப்பிட்ட இடம் சென்று உபசரிக்கப் பட்டு, ஊர் விநோதங்கள் காண்பிக்கப்பட்டுத் திரும்புவதைக் காட்டிலும், நாமாகவே உதவியில்லாமல் சென்று, வண்டி பிடித்து, தங்குமிடம் தேடி, பண்டாக்கள் கையில் சிக்கிக் கொண்டு, கடைகளில் நமக்குத் தேவையானவற்றைக் கிடைப்பவைகளில் பொறுக்கி எடுத்து, விலை கொடுத்து, முக்கியமான இடங்களைத் தேடித் திரிந்து பார்த்து வரும் அநுபவம் இணையற்றது.

நான் அயோத்தியைப் பற்றிப் படித்தும் கேட்டும் இருந்தேன். அது புராணங்களில் சொல்லப்பட்ட துவாபர யுகத்து அயோத்தி; கம்ப ராமாயணத்திலும், வால்மீகி ராமாயணத்திலும் சொல்லப்பட்ட அயோத்தி. யாது காரணத்தினாலோ என் மனத்திலிருந்த அயோத்தி கால தேச அரசியல் மாறுபாடுகளின் காரணத்தினாலாவது, கலியுக நிகழ்ச்சிகளினாலாவது வேறு விதமாக மாறவில்லை. ராமன் அரசு புரிந்த அயோத்தியைப் பார்க்கவேண்டிய ஆசைதான் என் மனத்தைத் தூண்டி இந்த யாத்திரைக்கு இழுத்தது. லக்னோவிலிருந்து சுமார் ஆறு மணி நேரம் ரெயில் பிரயாணம் செய்து அயோத்தி சேர்ந்தேன். பகல் பத்து மணி இருக்கலாம். ரெயில்வே ஸ்டேஷன் மிகச் சிறியதாக இருந்தது; தென்னிந்திய ரெயில்வேயின் சில்லறை ஸ்டேஷனைப்போல இருந்தது. என் மனம் திடுக்கிட்டுவிட்டது. 'அயோத்தி ரெயில்வே ஸ்டேஷன் இப்படியா இருக்கவேண்டும்? ராமர் ஆண்ட அயோத்தி என்பதற்காகவாவது சற்று உன்னதமான கட்டிடத்துடன் இருக்கக்கூடாதா? புழுதி அடைந்து தங்க நிழலில்லாமல், வறுமை மண்டிக் கிடக்கிறதே' என்ற

துயரம். ஸ்டேஷனை விட்டு வெளியே போனால் ஒரு வண்டி கூட இல்லை. வண்டிகள் எனச் சொல்லிக்கொள் வதற்கு வெட்கி மாடு கட்டிய இரண்டொரு சாதனங்கள் இரு சக்கரங்களுடன் நின்றன. அதில் சாமான்களைப் போட்டுக் கொண்டு நடந்தோம்.

எங்கே போவது? யாத்திரை ஸ்தலங்களில் காணப்படும் பண்டாக்கள் கூட அங்கே தென்படவில்லை. நாங்கள் மதராஸி கள் என்று தெரிந்ததும் வண்டிக்காரன் தானாகவே நாங்கள் தங்கக்கூடிய ஓரிடத்துக்குக் கொண்டுபோய் விடுவதாக வண் டியைக் கடுகிநடத்தினான். ஊரெல்லாம் குப்பையும் கூளமும்; ஸ்டேஷனிலிருந்து போகும் இருபுறமும் துர் நாற்றம்; சிறு குடிசைகளில் ஈக்கள் மொய்த்துக்கொண்டிருக்கும் சிற்றுண்டி, விற்பதற்காக வைக்கப்பட்டிருந்தது. அதைக் குரங்குகள் தின்றுவிடாமல் ஓட்டுவதற்காக ஒரு குச்சியை வைத்துக் கொண்டு அழுக்கடைந்து கறேலென்றுள்ள துணியைக் கட்டிக் கொண்டு, உச்சந் தலையில் அதைக்காட்டிலும் அழுக்கடைந்த ஒரு குல்லாயைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கும் கடைக் காரர்கள் காட்சியளித்தார்கள். அங்கும் இங்கும் தெருவெல் லாம் நம்முடைய ஊர்களில் திரியும் நாய்களைப்போலக் குரங்குகள், வீடுகளிலிருந்து எறியப்படும் எச்சில் இலைகளைத் தின்பதற்கு ஒன்றோடு ஒன்று அடித்துச் சண்டை போட்டு ஆரவாரித்துக்கொண்டிருந்தன. ராமர் ஆண்ட அயோத்தி என்பதற்காக ஒரே ஓர் அடையாளந்தான் நான் கண்டேன் : குரங்குகள், ஆனால் ராமாயணத்தில் சொல்லப் பட்ட குரங்குகள் அல்ல. அசல் நாட்டுப்புறத்துக் குரங்குகள்! அந்த ஊரில் குரங்குகளை ஒருவரும் அடித்துத் துன்புறுத்து வதில்லை என்று நான் கேள்விப்பட்டேன். அவை பட்டினியால் படும் துயரத்தைக் கண்டால் ராமதூதர்களும் ராம சேனையு மாக விளங்கிய துவாபரயுகத்துக் குரங்குகளின் சந்ததியார் கள் என்று சொல்வதற்கு வால் ஒன்றுதான் அடையாளம்.

பல சந்துகள் தாண்டி, நமது தமிழ் நாட்டுக் குக்கிராமத் தில் கட்டப்பட்டிருக்கும் கோவிலைப்போன்ற ஒரு கட்டிடத்

தின் முன்பாக வண்டி போய் நின்றது. 'மதராஸி ராம மந்திரம் இதுதான்' என்று வண்டிக்காரன் சொன்னதும், என்னுடன் வந்த நண்பரில் ஒருவர் உள்ளே சென்று சிறிது நேரம் கழித்து வயது முதிர்ந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவ அம்மையாருடன் வந்து எங்களை அம்மையாருக்கு அறிமுகப்படுத்தினார். கலியுக அயோத்தியில் ஒவ்வொரு வீட்டிலும் ராமர் சிலைகளோ, படங்களோ பூஜிக்கப்பட்டு வருகின்றன என்று தெரிந்து கொண்டேன். நாங்கள் இறங்கின ராம மந்திரம் சென்னைத் திருவல்லிக்கேணியில் வசித்துவந்த யோகி பார்த்தசாரதி ஐயங்காருடையது.

சென்னையில் யோகி பார்த்தசாரதி ஐயங்காருக்கு ஒரு நாள் இரவில் ஒரு கனவு தோன்றிற்று. 'நான் சேதுக்கரைக்குச் சமீபமாயுள்ள நவபாஷாணத்தில் பலகாலமாகச் சீதையுடனும் தம்பி லக்ஷ்மணனுடனும் பூமிக்குள் புதைந்து கிடக்கிறேன் நீ என்னை வந்து எடுத்து அயோத்தி சேர்த்துவிடவேண்டும்' என்று கனவில் ஸ்ரீராமன் சொன்னதாக நம்பி, நவபாஷாணம் சென்று கனவில் குறிப்பிட்ட இடத்தில் தோண்டிப்பார்க்க, ராமர், லக்ஷ்மணர், சீதை ஆகிய விக்கிரகங்கள் கிடைத்தன. அம்மூர்த்திகளை அயோத்திக்கு எடுத்துச் சென்று அங்கே நிலம் தேடி, ஒரு சிறிய கோவிலைத் தமிழ்நாட்டுக் கட்டிட அமைப்பில் கட்டி, அங்கே தாமும் தம் மனைவியுமாக இருந்து ஸ்ரீராமனுக்குப் பூஜை நைவேத்தியங்கள் செய்து காலங்கழித்துவந்தார். அவர் காலமானபிறகு அவர் மனைவியார் அந்தத் திருப்பணியைக் கணவர் சொற்படி ஏற்று நடத்திவந்தார். அந்த அம்மையாரைத்தான் நான் அன்று கண்டேன். மேலே சொல்லிய வரலாற்றை அந்த அம்மையாரே எனக்குச் சொன்னார். சென்னையிலிருந்து வருபவர்கள் தங்குவதற்கு ஒரு விடுதியும் அந்த ராமமந்திரத்தில் கட்டப்பட்டுவந்தது.

சாமான்களைக் கோவிலில் வைத்துவிட்டு ஸரயு நதிக்கு ஸ்நானத்திற்குச் சென்றோம். ராமர் காலத்தைப்போலவே இன்றைக்கும் உயிரோடு விளங்கும் ஜீவநதி ஸரயூ. அயோத்திக் கரையோரமெல்லாம் கருங்கல் படிக்கட்டுகள் தண்ணீருக்குள்

ஊடுருவிக் கட்டப்பட்டிருந்தன; படிக்கட்டுகளின்மேல் பெரிய மாளிகைகள். மணற் பரப்பும் தண்ணீர்ப் பரப்பும் என் மனத்தைக் கவர்ந்தன. அடிமைப்பட்ட ஹிந்துக்களால் ராமரின் அயோத்தியைக் காப்பாற்ற முடியவில்லை. ஆனால் இமயவதியும் கங்காதேவியுமாகச் சேர்ந்து யுகங்கள் கடப்பினும் பொலிவு குன்றாது துவாபரயுகத்து அயோத்தியின் சின்னமாகிய ஸரயுவைக் காப்பாற்றிவருகிறார்கள். அந்த நதியின் அழகும் என் ராம பக்தியும் அன்று ஒருங்கே கூடின. அடங்காத மகிழ்ச்சி அடைந்தேன். காலையில் உண்டான சோகம் மறைந்துவிட்டது. ஸரயு நதிக்கரையில் பத்து மைலுக்கு அப்பால் பரதன் வசித்த நந்திக்கிராம ஆசிரமம் இருக்கிறதென்று கேள்விப்பட்டேன். ஸரயு தரிசனமும் ஸ்நானமும் எனக்குப் போதுமானவை. ராமன் மறைந்த ஸரயுவின் புனித நீரில் மூழ்கி எழுந்த உணர்ச்சி என் ஆயுளுக்கும் போதுமானது.

ராமமந்திரம் வந்து சேர்ந்ததும் நவபாஷாண ராமனைத் தரிசிக்க உட்சென்றோம். நம் தென்னாட்டுக் கோயில்களில் உள்ளது போன்ற சிலை உருவம்; ஸ்ரீ ராமனாலும் ரகுவம்சத்தாராலும் ஆராதிக்கப் பெற்ற ஸ்ரீ ரங்கநாதனுடைய சயனத் திருக்கோலத்தையும் அந்தக் கோயிலில் கண்டேன். அர்ச்சனை முதலானவைகள் செய்து வெளிவந்தோம். கோவிலுக்கு வெளிப்புறத்தில் நான் விட்டுவந்த ஜோடுகளில் ஒன்றைக் காணவில்லை. அங்கும் இங்கும் தேடிப் பார்த்த பொழுது ஒரு குரங்கு அதைத் தூக்கிக்கொண்டுபோய்க் கோவிலின கர்ப்பக்கிருகத்தின் ஸ்தூபியின் மீது மாட்டி வைத்துவிட்டு வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தது. எவ்வளவு பயமுறுத்தியும் பயன் இல்லை. கடைசியாகக் கோவில் சொந்தக்காரரான அம்மையார் வந்து பார்த்தார். "நீங்கள் ஒன்றும் கவலைப்படாதீர்கள். ஜோட்டை அந்தக் குரங்கே இப்பொழுது திருப்பிக் கொண்டுவந்து கொடுக்கும்படி செய்கிறேன்" என்று சொல்லி, வீட்டிற்குள் சென்று பானையில் சேகரித்து வைத்திருந்த நிலக்கடலையில் ஒரு பிடி எடுத்து வந்து வீசியவுடன் குரங்கு ஜோட்டை விட்டு

எறிந்துவிட்டுக் கடலையைப் பொறுக்க ஓடிவிட்டது. "கோவிலுக்கு வந்தவர்கள் தமக்கு ஏதாகிலும் தின்பதற்குப் போடாவிட்டால் இவ்வூர்க் குரங்குகள் இப்படித்தான் செய்வது வழக்கம்" என்று அந்த அம்மையார் சொன்னார். இது அயோத்திக் குரங்கின் சுபாவமோ அம்மையாரின் ராமபக்தியின் விசேஷமோ எனக்குத் தெரியாது.

அன்று பிற்பகல் ஊரைச் சுற்றிப் பார்ப்பதற்காகச் சென்றேன். ஒரு பெரிய கோட்டையையும் அதனுள் அழகாக அமைக்கப் பெற்ற அரண்மனையையும் பார்த்தேன்; அயோத்தி ராஜாவின் அரண்மனை என்று சொன்னார்கள். ஆனால் அவர் அரசு புரியும் மன்னராகத் தோன்றவில்லை. ஒருகால் ராஜ்யம் இல்லாமலே ராஜா பட்டம் பெற்ற ஜமீன்தாராக இருக்கலாம் என்பது எனது அபிப்பிராயம். விசாரிக்கப் புகுந்தால் தாம் நேராகவே சூரிய வமிசத்தில் பிறந்த ஸ்ரீராமபிரானுடைய சந்ததி என்றே சொல்லுவார்கள். இதற்கு அடையாளமாக அரண்மனையில் அநேக இடங்களில ராம லக்ஷ்மணர் சிலைகள் வைத்துப் பூஜிக்கப்பட்டு வருவது ஒன்றைத் தவிர வேறு சின்னங்கள் காணப்படவில்லை. ஸ்ரீ வால்மீகி முனிவர் எழுதிய ராமாயணம் வெறும் மனக்கோட்டையா சரித்திர பூர்வமான உண்மையா என்பதை இப்பொழுது நிர்ணயிக்கத் தேவையில்லை. 'ராமன் ஆண்ட அயோத்தியா இது?' என்பதை எதற்காக நிரூபணம் செய்யவேண்டும்?

ஸரயு நதி பிரம்மாண்டமாக அழியாது ஓடிக்கொண்டிருப்பது கண் கண்ட உண்மை. ராமநாமமும் குரங்குகளும் இன்னும் உயிருடன் விளங்கிக்கொண்டிருக்கின்றன. சத்தியவாக்கிய பரிபாலனம், ஏகபத்தினி விரதம், பதிபக்தி, சகோதர பாவம், கொடுங்கோன்மையின் முடிவு எல்லாம் துவாபரயுகத்திற்கும் கலியுகத்திற்கும் ஒன்றேதான். உண்மைக்குக் காலம் ஏது? மனிதன் பகுத்தறிவு படைத்து உண்மையைக் கடைப்பிடித்து, உயர்வாழ்வு எய்தும் முறைக்குக் காலமும் உண்டோ? ராமாயணம் அழிவில்லாத கிரந்தம். அதை எரித்துவிட்டால் அது அழிந்துவிடுமென்று சிலர்

கூக்குரல் கிளப்புகிறார்கள். ராமாயணத்திற்குக் காரணம் ராமனா, சீதையா, ராவணனா என்று யாரால் முடிவாகக் கூற முடியும்? ராமன் இருந்தால் ராவணனும் இருந்தே தீருவான். பெயர்கள் மாறலாமே தவிர மனித இயல்பு மாறுவதில்லை. உலகப் போக்கின் உண்மையை உணர்த்தும் நிகழ்ச்சிகள் எந்த யுகத்திலும் நித்தியமானவை; ராமாயணமும் அத்தகையதே.

அயோத்தியில் அவசியம் தரிசிக்கவேண்டிய இடம் ராம ஜனன ஸ்தானம் என்று கேள்விப்பட்டு அன்று பிற்பகல் அங்கே சென்றேன் தசரத சக்கரவர்த்தி அரண்மனையில் ராமன் அவதாரம் செய்த ஸ்தலத்தைத் தரிசிக்க வேண்டியது எனது கடமை என நினைத்து, அந்த மனபாவத்துடன் சென்றேன். ஊருக்கு வெளியே சுமார் ஒரு மைல் தூரம் சென்றதும் ஒரு மசூதி தென்பட்டது. அதைக் கடந்து சென்று அதன் பின்புறத்தில் பத்தடிச் சதுரமுள்ள ஒரு சிறு கட்டிடத்தைப் பார்த்தேன். அந்த அறையின் தளம் பூமி மட்டத்திற்குக் கீழே இறக்கிக் கட்டப்பட்டு, இருள் மண்டிக் கிடந்தது. ஒரு சிறிய வெளிச்சம் மினுக்கு மினுக்கென்று எரிந்துகொண்டிருந்தது. இரண்டு பூசாரிகள் தாங்கள் வைத்துக்கொண்டிருந்த பித்தளைத் தட்டில் காசுகள் போடும்படி, வருபவர்களை வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள். இந்த அற்பமான இருட்டு அறையிலா தசரத சக்கரவர்த்தியின் மனைவி ராமனை ஈன்றெடுத்து வளர்த்திருப்பாள்? பார்ப்பவர் நகைக்கும்படியான ஓர் இடத்தில், 'துவாபர யுகத்தில் ராமன் பிறந்தான்' என்று கலியுகத்தில் பிறந்த ஒருவன் காண்பித்தால் இதைப்பற்றி என்ன நினைக்கிறது? என்னை அறியாமலே என் கண்களில் நீர் ததும்பியது. இது என்ன கோரம்! என்ன மதியீனம்! இதையும் ராமன் பிறந்த இடமென்று ஓர் அறிவிலி சொல்ல அதையும் நம்பி, இது உண்மையாகவே இருக்கலாமென மூட பக்தியின் மேலீட்டால் வழிபடும் மக்களைக் கண்டு சிரிப்பதா அழுவதா? ஒவ்வொரு நூற்றாண்டிலும் நமது நாட்டில், நமது மதத்தில் பிறந்து வளர்ந்துவந்த நம் சகோ

தரர்களைக் கோடிக்கணக்காக வேறு மதத்திற்குப் புகச் செய்து இழந்தோம். இழந்தது மட்டுமல்லாமல், அவர்களே நம் கோயில்களையும், புண்ணிய க்ஷேத்திரங்களையும், தெய்வங்களையும் ஹதம் செய்ய நாம் பயந்து வாளா இருந்துவந்திருக்கிறோம். வட இந்தியாவில் எங்கே சென்று பார்த்தாலும், நம் புனித ஸ்தலங்கள் இடிக்கப்பட்டு, பாழாக்கப்பட்டு, அந்த இடத்திலேயே மசூதிகள் கட்டப்பட்டு, வேண்டாமென்று விலக்கிய சில இடங்களில் திரும்பவும் நாம் சிறு கோயில்களைக் கட்டிக்கொண்டு நம் குடியை அழித்த மூடக் கொள்கைகளையே விடாது பின்பற்றி வந்துகொண்டிருக்கிறோம். படையெடுத்து வந்த அந்நிய நாட்டு முஸ்லிம்கள் நூற்றில் ஒருவருக்குமேல் இருக்கமாட்டார்கள். தொண்ணூற்றொன்பது பேர்கள் பயத்தினாலும் அடிமைப் புத்தியினாலும் மதம் மாறிய நம் சகோதரர்களே. இவ்வளவு கொடுமைக்கு ஆளாகியும், நாம் அவர்கள்மேல் துவேஷம் கொள்ளாமல் கூடியமட்டும் சேர்ந்து வாழ்ந்துவருகிறோம்.

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை நாட்டிற்கு அவசியம். அதற்காக எவ்வளவு விட்டுக்கொடுக்கமுடியுமோ அவ்வளவு விட்டுக்கொடுக்கவேண்டியதும் நமது கடமை. இருந்தபோதிலும் நம் நாட்டினர் அநுபவித்திருக்கும் இன்னல்களையும் அவமானங்களையும் பார்க்கும்பொழுது மனம் வாடாமல் இருக்க முடியாது. இவ்வித எண்ணத்தில் அன்று முழுவதும் வாடி வருந்தினேன். அயோத்தி ஸ்தல யாத்திரையின் மனக் கொதிப்பு அடங்க வெகு நாட்களாயின. இன்றைக்கும் நினைத்தால் மனம் துன்புறுகிறது. மகா உன்னதமான கொள்கைகளையும், தத்துவத்தையும், தயையையும், கருணையையும் அடிப்படையாகக் கொண்ட ஹிந்து மதம் எவ்விதம் இந்தக் கேவலமான நிலையை அடைந்தது? அரசியல் அடிமைத் தனத்தினாலா சமூக ஆசாரக் குருட்டுப் பழக்கங்களினாலா? எதனால் இப்படி ஏற்பட்டது? இரண்டும் காரணமாக இருக்கலாம் என்பது என் எண்ணம். அயோத்தி சென்று திரும்பியது முதல் ஸ்தல யாத்திரையின் மோகம் ஒருவாறு குறைந்துவிட்டது.

# காங்கிரஸ் விஜயம்

ஜில்லா அரசியல் மகாநாடு கூட்டவேண்டும். என்று சென்னைக் காங்கிரஸ் கமிட்டியார் ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள்; 1917-ஆம் வருஷம் என்பது எனது ஞாபகம். இதற்கு முன் நான்கு தடவை திருச்சிராப்பள்ளியில்தான் ஜில்லா மகாநாடு நடைபெற்றது. வழக்கம்போல ஊர்வலங்கள், விருந்துச் சாப்பாடுகள், சில செல்வருடைய நன்கொடை, காங்கிரஸ் சார்பாகச் சற்று உழைத்துத் தம் வக்கீல் தொழிலை விரிவாக நடத்த எண்ணம் கொண்ட இளைஞர்களுடைய உழைப்பு, அழுத்தம் திருத்தமான பேச்சாளர்கள் சிலருடைய பிரசங்கங்கள் இவைகளே அரசியல் மகாநாட்டின் நிகழ்ச்சிகள். கூட்டத்திற்கு வந்தவர்கள் எல்லோரும் பிரதிநிதிகள். வரவேற்புக் கமிட்டித் தலைவர் நல்ல செல்வாக்குடையவராகவே இருப்பார். அம்மாதிரி ஒருவரைக் கண்டுபிடித்து, அவரைப் பொறுப்பு ஏற்றுக்கொள்ளும்படி செய்துவிட்டால், மகாநாடு பாதி நிறைவேறிவிட்டதாகவே நிச்சயித்துவிடலாம். வருஷந்தோறும் திருச்சியில் நடப்பதைக் காட்டிலும் ஜில்லாவிலுள்ள மற்றப் பாகங்களிலும் நடத்துவது அதிகப் பயன் அளிக்கக்கூடுமென முடிவு செய்து, அதற்கென ஓர் ஊரையும், வரவேற்க ஒரு தலைவரையும் கண்டுபிடித்தோம்.

திருச்சியிலிருந்து முப்பது மைலுக்கு வடமேற்கில் காவிரி வடகரையில் தொட்டியம் கிராமத்தில் அவ்வூர்ப் பிரபல மிராசுதாரும் சேலம் ஜில்லாவிலுள்ள மின்னும்பள்ளி ஜமீன்தாருமான முத்துவேதாசலரெட்டியாரை வரவேற்புக் கமிட்டித் தலைவராக நாங்கள் கேட்டுக்கொண்டோம். அவரும் இசைந்து, மகாநாட்டைத் தொட்டியத்தில் நடத்துவதாக முடிவுசெய்தார். காலம் சென்ற மதுரை பாரிஸ்டரும், தீவிர தேசபக்தருமான ஜார்ஜ் ஜோஸெப் தலைமை வகிக்கவும் ஏற்

பாடு செய்தோம். மகாநாடு நடைபெறுவதற்கான வேலைகளை நாங்களும் ரெட்டியாருடன் சேர்ந்து செய்வதாகச் சொல்லி யிருந்தோம். ஆனால் எங்கள் ஒத்துழைப்பு அவருக்கு அதிகம் தேவையில்லை. தொட்டியத்தில் அவருக்குள்ள செல்வாக்கைக் காட்டிலும் நாங்கள் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை. ஆகை யால் ரெட்டியாரவர்களே தமது சொந்தப் பொறுப்பில் எல்லா வேலைகளையும் வெகு விமரிசையாகவும் அழகாகவும் தமது அந்தஸ்திற்கு ஏற்றபடி செய்துவிட்டார். ஒருவேளை வரவேற் புக் கமிட்டியார் இந்தச் செலவுகளை ஏற்க நேருமோ என்ற பயம் எனக்கு ஒருவாறு உண்டாயிற்று. ஆனால் அவர் செலவு செய்த தோரணையில் அதை யாரும் பகிர்ந்துகொண்டு செய்யக் கூடிய முறையில் இல்லாததால் அதைப்பற்றி யாதோர் ஆட் சேபமும் எழுப்ப இடமில்லாமல் போயிற்று. பணத்தை லக்ஷியம் செய்யாமலே செலவு நடந்தது. அம்மாதிரி ஏற்பாடு களை நான் அதற்குமுன் கண்டதில்லை; அதற்குப்பிறகும் காணவில்லை. ஏன் அவ்வளவு செலவு செய்தார் என்பதற்கு என்றால் காரணம் கூற முடியாது. தமது அந்தஸ்திற்கு ஏற்ற முறையில் இருக்கவேண்டும் என்பதுதான் காரணமாக இருக்கவேண்டும். இவ்வளவு ஏற்பாடு செய்து நடத்தும் மகாநாட்டிற்கு ஏராளமான கூட்டம் வராமலோ தகுந்த தலைவர்கள் வராமலோ இருந்துவிட்டால், ரெட்டியாருக்குத் திருப்தி உண்டாகாது. அதற்காக என்னால் இயன்ற அளவு நண்பர்களையும் அரசியல் துறையில் பங்கெடுத்துக்கொள்ளும் தலைவர்களையும், திருச்சி, சேலம் என்னும் இரண்டு ஜில்லாக் களிலிருந்தும் வரும்படி மன்றாடிக் கடிதங்கள் அனுப்பினேன். சேலத்திலிருந்து ராஜாஜி, வரதராஜுலு நாயுடு, சுப்பராயர், சேஷையங்கார் முதலியோர்கள் வந்திருந்து ஊக்கம் அளிக்கக் கூடிய பிரசங்கங்கள் செய்தார்கள். அதனால் மகாநாடு நன்கு சோபித்தது.

திருச்சியில் இருக்கும் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த ஒரு கூட்டத்தார் இந்த மகாநாட்டிற்கு விரோதமான பிரசாரம் நடத்துவதற்காகத் தொட்டியம் வந்து தினசரி சாயங்கால

வேளைகளில் ரெட்டியார் வீட்டிற்கு எதிரிலுள்ள பொட்டலில் பொதுக்கூட்டங்கள் கூட்டி, ஜமீன்தாரையும் அவருடைய நண்பர்களையும்பற்றி வசை புராணங்கள் மும்முரமாக நடத்தினார்கள். அவர்கள் முயற்சி, பலன் பெறுவிடினும், பலருக்கு மனச் சங்கடத்தை உண்டாக்கியது. அந்தப் பிரசாரத்தை எதிர்க்கவேண்டி நாங்களும் பொதுக் கூட்டங்கள் நடத்தி அவர்களுக்குத் தகுந்த பதில் சொல்லிவந்தோம். மகாநாட்டின் கடைசி நாளன்று இரவில் ஒரு பெரிய விருந்தும் அதற்குப்பிறகு பத்மாஸனிபாய் அவர்களது ஹரிகதா காலக்ஷேபமும் நடந்தன.

பிரதிநிதிகளும் மற்றவர்களும் தங்குவதற்காக வாய்க்கால் ஓரமாகக் குளிர்ந்த தென்னந்தோப்பில கொட்டகை போடப்பட்டு அவர்களுடைய சாமான்களும் பெட்டிகளும் அங்கே வைக்கப்பட்டிருந்தன. டாக்டர் வரதராஜுலு நாயுடுவின் வாலண்டியர் என்று சொல்லிக்கொண்டிருந்த அப்ஸலோம் என்றவன் அன்றிரவு எல்லோரும் கதைகேட்கப் போயிருந்த சமயம் பார்த்து, சேலம் வக்கீல் சுப்பராயர் பெட்டியிலிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் களவாடின சமயம், வக்கீல் சேஷையங்கார் திடீரென்று அங்கே வந்தவர் அதைக் கண்டு கூச்சல் போட்டார். அந்தச் சத்தத்தைக் கேட்டு ஒரு கூட்டம் ஓடி வந்து, அப்ஸலோமை அடித்துவிட்டார்கள். யார் அடித்தார்கள், ஏன் அடித்தார்கள் என்ற விவரம் தெரியு முன்னரே கூட்டம் கலைந்துவிட்டது அப்ஸலோமும் ஓடிவிட்டான். மறுநாள் காலையில் மகாநாட்டிற்கு வந்தவர்கள் ஊர் திரும்பிவிட்டார்கள். நாங்களும் திருச்சி திரும்பிவிட்டோம்.

ஆனால் தொட்டியத்தில் தங்கியிருந்த ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் அப்ஸலோமைத் தட்டிக்கொடுத்துப் பக்கத்தில் முசிரியில் இருந்த ஸப் மாஜிஸ்டிரேட் டி. சி. ராமநாத முதலியாரிடம் கிரிமினல் பிராது கொடுத்துவிட்டார்கள். ராமநாத முதலியாரே இதில் ஊக்கம் காட்டிப் பிராது கொடுக்கச் சொன்னதாகவும் கேள்விப்பட்டேன். சேலம் வக்கீல்கள் சுப்பராயர், சேஷையங்கார் இவர்களின் பேரில் தாவா. ஆனால்

மகாநாட்டுத் தலைவர் பாரிஸ்டர் ஜார்ஜ் ஜோஸப், ஹரிகதா காலக்ஷேபம் செய்ய வந்திருந்த பத்மாஸனிபாய் இவர்களை மனுதார் பக்கம் சாட்சியாகப் போட்டிருந்தார்கள். ராமநாத முதலியார் இந்த நால்வருக்கும் சம்மன் அனுப்பித் தம் கோர்ட்டில் ஆஜராகும்படி உத்தரவிட்டுவிட்டார். ஒரே தடவையில் விசாரணை நடத்தவில்லை. சாக்குப் போக்குச் சொல்லிப் பல தடவை, பல இடங்களில் முகாம் செய்து ஆங்காங்கு எல்லோரையும் அலைய வைத்தார். பாரிஸ்டர் ஜோஸப் தமது வேலையின் நிமித்தம் தமது பொறுப்பை நடத்த வேண்டியிருந்ததால், இந்தத் தாவாவைப் பற்றித் தமக்கு ஒன்றும் தெரியாதென்று சொல்லி மறுசம்மன் தமக்கு அனுப்பக்கூடாது என்று விலகிக்கொண்டார். மறுமுறை பத்மாஸனிபாய் வரமுடியவில்லை என்று சொல்லிவிட்டார். இந்த மப்மாஜிஸ்டிரேட் முறையைக் குறைகூறி வேறு அதிகாரிக்கு வழக்கை மாற்றவேண்டும் என்று கோரியதன் பேரில் முசிறி ஸப்டிவிஷனல மாஜிஸ்டிரேட்டுக்கு வழக்கு மாற்றப்பட்டு, இரண்டு தவணைகளில் விசாரணை நடந்து தள்ளுபடி ஆயிற்று. மனுச்செய்துகொண்டு வழக்கு நடத்திய அப்ஸலோம் பாதி நடவடிக்கையிலேயே மறைந்துவிட்டார். ஜஸ்டிஸ் கட்சியை ஆதரிக்கும் ஒரு வக்கீல்மட்டுமே வழக்கை விடாது நடத்தினர். சேலம் வக்கீல் பி. வி. நரஸிம்மையர், வக்கீல் சுப்பராயருக்கும் சேஷையங்காருக்குமாக வழக்கை நடத்தினர்.

இந்தத் தொல்லை ஒழிவதற்குக் கிட்டத்தட்ட ஒரு வருஷம் சென்றது. தொட்டியம் மகாநாட்டிற்குப் பின்பு நடந்த இந்த நிகழ்ச்சி எளிதில் மறக்கக்கூடியதன்று. காங்கிரஸில் ஊக்கம் காட்டி ஆதரித்துவந்த மின்னும் பள்ளி ஜமீன்தார் ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்து அதன் நிர்வாகக் கமிட்டியின் துணைத் தலைவராகவும், ஜில்லா ஜஸ்டிஸ் கட்சியின் தலைவராகவும் பதவிவகித்துக் காங்கிரஸை நிராகரிக்கவும் தொடங்கிவிட்டார். காங்கிரசும் பிரசங்க மேடைமோகம், தீர்மான யுத்தம், இவைகளைத் தாண்டி,

நாட்டின் ஏழைமக்களுக்குத் தேசீய உணர்ச்சியை உண்டாக்கத் தலைப்பட்டு, சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை முதலிய கடும்பாதைகளில் இறங்கிவிட்டது. சிறைவாசம், சொத்துப் பறிமுதல், போலீஸ் தடியடி இவைகள் தேசீய இயக்கத்தின் வெகுமதிகள். இதில் சுகவாசிகளுக்கு இடம் இல்லை.

இந்த வருஷத்தில்தான் முதல் முதலாகக் காங்கிரஸ் வேலைகள் உருவெடுக்க ஆரம்பித்தன. காங்கிரஸ் அரசியல் திட்டம் தயாரிக்கப்பட்டுக் காந்திஜியின் யோசனையின் பேரில் கிராமந்தோறும் சென்று இந்தத் திட்டத்தை விரிவாக மக்களுக்கு எடுத்துரைத்துக் கையெழுத்து வாங்கும் முயற்சி நடைபெற்றது. ஆனால் இதைப்போன்ற கடுமையான வேலை இருக்கமுடியாது. கிராமங்களில காங்கிரஸின் பெயரும் வேலைகளும் ஒருவருக்கும் தெரியா. அரசியல் அமைப்புத் திட்டம்பற்றி அவர்களிடம் பேசுவதற்குமுன்பாக 'அரசியல் என்பதன் நோக்கம், அரசை யார் நடத்துகிறார்கள், எதற்காகப் புதியதிட்டம்' என்பனவற்றையெல்லாம் கிராமவாசிகள் மனத்தில் தெளிவாக அறிவுறுத்துவதற்குச் சுமார் ஒரு வாரம் பிரசங்கம் செய்யவேண்டி வந்தது பிறகு நாங்கள் கொண்டு வந்திருந்த திட்டத்தில் கையெழுத்திடும்படி கேட்டபொழுது பிரசங்கம் செய்வதைக்காட்டிலும் அந்த வேலை கடினமாகி விட்டது. முக்கால்வாசிப் பேர்களுக்குக் கையெழுத்திடத் தெரியாது. தெரிந்தவர்களிடமிருந்து, 'கையெழுத்து எதற்கு? நீங்கள்தாம் விஷயத்தைச் சொல்லிவிட்டீர்களே. நீங்களே எங்கள் பெயர்களை எழுதிக்கொள்ளுங்கள்' என்ற பதில் வந்தது. கையெழுத்திட்டால் அதனின்றும் என்ன கேடு விளையுமோ என்ற பயம் வேறு. "கிராம அதிகாரிகள் என்ன சொல்வார்களோ? ஒரு சமயம் போலீஸ்காரன் வந்து தொல்லை செய்வானோ? நீங்கள் இன்றைக்குக் கையெழுத்து வாங்கிக்கொண்டு போய்விடுகிறீர்கள். நாளைத்தினம் அதனால் எங்களுக்குக் கஷ்டம் உண்டானால் நாங்கள் என்ன செய்வது?" என்ற ஆட்சேபங்கள் கிளம்பும். இவற்றிற்கெல்லாம் சமாதானம் சொல்லி ஒரு கிராமத்தில் சிலரிடமாவது

கையெழுத்து வாங்கிப் புறப்படக் குறைந்தது ஒரு நாளாவது வேண்டியிருந்தது.

இவ்விதம் ஜில்லா முழுவதும் கையெழுத்து வாங்க எவ்வளவு நாட்கள் ஆகும்? எவ்வளவு பணச் செலவு, எவ்வளவு ஆள் செலவு' எவ்வளவுபேர்களுடைய அபிமானம், நல்லெண்ணம், ஊக்கம், தைரியம், இவையெல்லாம் திரட்ட வேண்டிய பொறுப்பு என்ற விஷயங்களை ஒருவாறு அறிய முடிந்தது. காங்கிரஸ் கமிட்டியில் ஒரு பைசாக்கூட இல்லை. கையெழுத்து வாங்கும்படி உத்தரவும் அச்சிட்ட பாரங்களும் வந்துவிட்டன. மற்ற வேலைகளுக்குப் பணம் திரட்டுவது அவ்வளவு சுலபமாக முடியவில்லை. மேலும் நான் என் தொழிலையும் நடத்திக் கொண்டு பணம் திரட்டுவது லாபகரமாக இல்லை. யாசகம் செய்வதற்குச் செலவாகும் நேரத்தை எனது தொழிலிலே செலவு செய்து அதனின்று நான் பெறும் ஊதியத்தைப் பொது வேலைக்குச் செலவு செய்வது இதனினும் லாபகரமாகத் தோன்றியது. நகரங்களில் செலவாக்கு உள்ளவர்கள் கிராமங்களில் போனால் வேலை செய்வது சுலபமாக இருக்கிறது. தொண்டர்களை அனுப்பினால் கையெழுத்து வாங்குவது கஷ்டமாக இருக்கிறது. தொழில்முறையில் அநேகம் கிராமவாசிகளிடம் தொடர்பு ஏற்பட்டதனால், நான் நேரில் சென்று விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கையெழுத்து வாங்குவது சுலபமாக இருந்தது. பணச் செலவு, தொழில் நடத்தப் போதிய நேரம் இல்லாததால் ஏற்படும் நஷ்டம், தொண்டர்களுக்குப் பயிற்சி கொடுப்பதற்கான முயற்சி இவ்வளவும் ஒருங்கே சேர்ந்து கொண்டுவிட்டன. ஆனால் கிராமங்கள்தோறும் சென்று நாட்டின் நிலைமையை விளக்கிப் பொதுமக்கள் மனத்தில் சுதந்தர உணர்ச்சிக்கு விதை போடவும், காங்கிரஸின் வேலைகளை விளக்கிக் காட்டவும் இதைப்போன்ற சந்தர்ப்பம் இது வரையில் ஏற்படவில்லை. காந்தியடிகள் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் ஈடுபட்டதன் முதல்விளைவு இதுதான். ஆங்கிலம் அதிகம் படித்தவர்கள் கிராமவாசிகளிடம் 'அரசியல் விஷயமாகப் பேசுவதற்கு முன்வரவில்லை. அங்க ஆங்கிலப் படிப்பு

அறியாத இளைஞர்கள், தேசபக்தியின் மேலிட்டால் அரசியல் முறைகளைச் சற்றுத் தெரிந்துகொண்டு சொற்ப ஊதியத்தைக்கொண்டு கிராமங்தோறும் சென்று உழைத்துவந்தார்கள். ஆங்காங்கே காங்கிரஸ் சபைகள் ஏற்படுத்தி ஒவ்வொரு கிராமத்திலும் பொறுப்புள்ள ஒருவரைத் திட்டம்செய்து அவர்கள் மூலம் கையெழுத்து வாங்கும் வேலையும் நடைபெற்றது.

# காங்கிரஸ் அபிமானம்

முன்கோபம் உணர்ச்சியின் மிகுதியால் உண்டாவதா? அப்படியும் இருக்கலாம் என்று தோன்றுகிறது. எனக்கு முன்கோபம் அதிகம். உலகத்தில் ஒரு சம்பவம் நேரிட்டால் சிலர் அதன் காரணமாக அதிக மனவேதனை அடைகிறார்கள். மற்றும் சிலருக்கு அதனால் யாதோர் உணர்ச்சியும் உண்டாவதே இல்லை. சில பயங்கரமான, கொடூரமான நிகழ்ச்சிகள்கூட அவர்கள் மனத்தை வாட்டுவதில்லை. ஏதாகிலும் ஒரு காரணத்தால் கோபம் பொங்கி எழும்பொழுது வாயில் வந்ததை உளறிக் கொட்டிவிடுவேன். அதன் காரணமாகப் பிறகு மனத்தில் ஏற்படும் வாட்டமும் துன்பமும் அளவிட முடியா. 'ஏன் அப்படிப் பேசினேம், அதனால் என்ன பலன் கிடைத்தது?' என்று யோசனை செய்யும்பொழுது, 'கோபித்தது பிசகு' என்று எனக்குத் தோன்றும். ஆனால் இந்த அறிவு மறுமுறை கோபம் வரும்பொழுது மனத்தில் இருப்பதில்லை. முன்போலவே உளறிக்கொட்டிவிடுவேன். இது இயல்பா கர்ம பலனா என்பது எனக்குத் தெரியாது. ஆயுள் முழுவதும் முயன்றும் முன்கோபத்தை முற்றும் அடக்க என்னால் முடியவில்லை.

ஜெனரல் டையர் என்னும் ஓர் ஆங்கில வெறியன், நிரபராதியான ஆண் பெண் குழந்தைகள் அடங்கிய ஒரு கூட்டத்தை எச்சரிக்கைகூடச் செய்யாமல் ஒரு சதுக்கத்தில் அடைபட்டிருக்கும்பொழுது பஞ்சாபிலுள்ள அமிர்தஸரஸில் 1919 - ஆம் வருஷம் சுட்டுக் கொலைசெய்துவிட்டான். இந்தக் கோரக் கொலை செய்த குற்றவாளி மற்ற எந்த நாட்டிலும் உயிருடன் தப்பியிருக்கமாட்டான். ஆனால் நம் நாட்டிலோ, விசாரணை செய்த நீதிபதிகள் அது யோசனைக் குறைவான ஒரு செய்கை என்று சொன்னார்களே தவிர, வேறு ஒரு குற்றமுப

சாட்டவில்லை. இங்கிலாந்தில் இருக்கும் பார்லிமெண்ட் சபை அங்கத்தினர்கள் கூடி இந்தக் கொலைகாரனுக்குக் கல்வைத்து இழைத்த பட்டாக்கத்தி ஒன்று, அவனுடைய தீரச்செயலுக்காக வெகுமதி அளித்துக் கொண்டாடினார்கள்.

இந்தக் கோரக் கொலைபுரிந்த இடத்திற்குப் பக்கத்திலுள்ள ஒரு தெருவில் நம் மக்கள் மனிதனைப் போல நடந்து செல்லக் கூடாதெனவும், கை கால்களை ஊன்றிக்கொண்டு, வயிற்றினால் நகர்ந்துசெல்லவேண்டும் எனவும் அதிகாரிகள் ஓர் உத்தரவு பிறப்பித்தார்கள். அதிகாரத்திற்கு அஞ்சி நடக்க வேண்டும் என்ற கற்பனையை நம் மனத்தில் புகட்டுவதற்காக இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. மூளை கெட்டு அதிகாரப் பித்துப் பிடித்த ஓர் உத்தியோகஸ்தன் இந்த உத்தரவைப் பிறப்பித்தான். ஆனால் அதற்கும் கீழ்ப்படிந்து வயிற்றினால் நகர்ந்துசென்ற மனிதர்களை நாம் என்னவென்று சொல்வது! ஆங்கில அரசாங்கத்தின் இந்திய சேனையில் பெரும்பாலோர் பஞ்சாபிகள். இந்த யுத்த சேவையினால் அந்த மாகாணத்திற்கு ஒரு தனிச் சலுகை அரசாங்கத்தினிடம் உண்டு. யுத்த களத்தில் உயிரைத் துறக்கத் துணிந்தவர்கள் அடங்கிய மாகாணத்தில்தான் உத்தரவிற்குப் பயந்து, வயிற்றினால் நகரும் மனிதர்களும் இருந்தார்கள். பஞ்சாபிகளின் தீரத்தை எப்படி மதிப்பிடுவதென எனக்கு விளங்கவில்லை.

●

இந்தக் கோர நிகழ்ச்சிகளைப் பற்றி விசாரித்த இந்தியக் கமிஷன் அறிக்கையைப் படித்தவுடன் என் மனம் படாத பாடு பட்டது. வெகு நாட்களுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. இதற்கு நிவர்த்தி தேடும் முறையில் மனம் அல்லல்பட்டது. 'வலிமை இழந்து, ஆயுதங்கள் பறிக்கப்பட்டு, அடிமை வாழ்வில் ஆனந்தமுற்று இருக்கும் கூட்டத்தாருக்கு இந்தக் கதி ஏற்படுவதுதான் உலக இயல்பா? அநீதியை அடக்க உலகத்தில் வேறு முறை இல்லையா?' இதுவே எனது எண்ணம். அந்தக் காலத்தில் காந்திஜீ சத்தியாக்கிரக இயக்கத்தின் நெறியையும் தத்துவத்தையும் சக்தியையும் விளக்கி வந்தார். 'உலகத்திற்கும், முக்கியமாக ஒடுக்கப்பட்டவர்களின் விடு

தலைக்கும் ஒப்பற்ற ஒரு முறை இது' எனப் பறைசாற்றினார். அதைக் கேட்டு என் மனம் சற்று ஆறுதலடைந்தது. ஏப்ரல் மாதம் ஆறும் தேதி இந்திய சகாப்தத்தில் மறக்க முடியாத ஒரு சுப தினம். அன்று சத்தியாக்கிரக உதயம். 'அஹிம்சா பரமோ தர்ம:' என்று சொல்லும் அன்பு நெறி புதிய ஊக்கம் பெற்ற திருநாள். உறங்கிக் கனவு கண்டு கொண்டிருக்கும் மக்களைத் தட்டி எழுப்பிய உணர்ச்சி தோன்றிய நாள். ஜடப்பொருளெனத் தோன்றிய கல் கம்பத்தில அடி விழுந்தவுடன் நரசிங்கம் பீறிக் கிளம்பி அநீதியின் வயிற்றைக் கிழித்து, ரத்தத்தை உறிஞ்சி உலக பாரத்தை நீக்கியதுபோன்ற நாள் இது. உபவாசம், வேலை நிறுத்தம், கடை அடைப்பு, ஊர்வலம், பொதுக் கூட்டங்கள் இவை அன்றைத்தினம் நாடெங்கும் நடந்தன. சில இடங்களில் கூட்டம் நியதியை மறைந்து, உண்மையைப் புறக்கணித்து வெறியின் மிகுதியால் கொடுஞ்செயலும் செய்தது. இந்தச் சம்பவங்கள் ஓர் இடத்தில்தான் நடந்தன எனினும் அஹிம்சா முறைக்கு இது ஒரு மாசு என்பதில் சந்தேகம் இல்லை.

அன்றைத்தினம் முதல் நாட்டின் விடுதலைக்குத் தியாகம் அவசியம் என்ற உணர்ச்சி என் உள்ளத்தில் உதித்தது. காங்கிரஸ் இயக்கம் உல்லாசப்பிரயாணம் அல்ல; புண்ணிய நதிகளில் புண்ணிய ஸ்நானம் செய்யும்சந்தர்ப்பமும் அல்ல; உண்டு களிக்கும் கூட்டமும் அல்ல; இருப்பதா இறப்பதா என்ற போராட்டத்தின் அறிகுறி! பிரசங்கம், அதன் பெருமை, அதில் மகிழ்ச்சி, இவைகள் அன்றுமுதல் குறைய ஆரம்பமாயின. வேலைத்திட்டம் வகுக்கவும், அந்தத் திட்டப்படி நடந்தேறிய வேலைகளைச் சீர் தூக்கிப் பார்க்கவும், அதன்பேரில் புதிய திட்டங்கள் வகுக்கவும் அதற்குவேண்டிய சக்தியைத் திரட்டவும் காங்கிரஸ் ஏற்பாடு செய்தது. அரசியல் விடுதலை என்பது ஆண் பெண் இரு வகுப்பாருக்கும், இந்நாட்டில் அடிமை வாழ்வில் ஈடுபட்டுக் கிடக்கும் எல்லா மதத்தினருக்கும் பொருத்தமான வேலை என்ற உணர்ச்சி வலுவடைந்தது. வயிற்றுப் பசியைத் தீர்ப்பதற்கு எனக்கும், என்னைச் சார்ந்தவர்களுக்கும்

தொழில்மூலம் உழைக்கவேண்டிய நேரம் போக, மற்ற நேரம் நாட்டுப் பணிக்குச் சேரவேண்டுமென நினைத்தேன். அந்த எண்ணப்படி உழைக்கவும் தொடங்கினேன். நாளடைவில் காங்கிரஸ் வேலையில் அதிகப் பற்று உண்டாகித் தொழில் நேரத்தில் பெரும் பாகத்தை என்னை அறியாமலே விட்டு விடவும் நேர்ந்தது.

1919-ஆம் வருஷத்தில் பஞ்சாபில் அமிர்தஸரஸ் நகரத்தில் காங்கிரஸ் நடந்தது. ஜலியான்வாலா சவுக்கத்தில், படுகொலை நடந்த புண்ணிய க்ஷேத்திரத்தில் ஹிந்து முஸ்லிம் சீக்கியர் சமூகத்தினர் ஒருங்கே கூடித் தியாகத்தில் ஈடுபட்டு, உயிர் துறந்த இடம். இந்த யாத்திரை என்னால் செய்ய முடியாமல் போய்விட்டது. ரணவைத்தியம் செய்வதில் நற்பெயரும் அதற்கு ஏற்ற பொருளும் எனக்கு ஏராளமாகக் கிடைத்தன. ஆனால் தொழிலில் ஆபத்து இல்லாமல் இல்லை. சஸ்திர சிகிச்சை செய்யும் ரணவைத்தியனுக்கு ஓரளவு ஆபத்து எப்பொழுதும் உண்டு. பேர்போன அநேக ரணவைத்தியர்கள் உயிரை இழக்கவும் நேர்ந்திருக்கிறது. ஒரு நோயாளிக்குச் சஸ்திர சிகிச்சை செய்யும்பொழுது என்னை அறியாமல் ரணத்தை மூடித் தைக்கும ஊசி எனது விரலில் பாயவே, அதன்மூலம் விஷக் கிருமிகள் எனது ரத்தத்தில் ஏறி. நான் கடுநோய்க்கு உள்ளாகி, காலஞ்சென்ற டாக்டர் நடுங்காடி அவர்களால் இருமுறை ஆபரேஷன் செய்யப்பட்டு இரண்டு மாதங்களுக்கு மேல் உயிருக்கு மன்றாடும்படி ஏற்பட்டுவிட்டது. அதனால் அமிர்தஸரஸ் காங்கிரஸுக்குப் போகமுடியவில்லை. அதன் நடவடிக்கைகளைப் பத்திரிகை மூலம் படித்து அறிந்து ஒருவாறு எனது வேட்கையைத் தீர்த்துக்கொண்டேன்.

கல்கத்தா காங்கிரஸ், நாகபுரி காங்கிரஸ், கிலாபத் கிளர்ச்சி, சுயராஜ்யத் தீர்மானம், ஒத்துழையாமை எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வந்துகொண்டிருந்தன. மனம் தொழிலில் ஈடுபடவில்லை. அடிக்கடி பல ஊர்களுக்குச் செல்லுவதும், கட்டைவண்டிகளில் கைராட்டையை வைத்துக்கொண்டு கிராமம் கிராமமாக இரவுபகலாகப் பிரயாணம் செய்வதும், நிர்

மாணத் திட்டங்களை விளக்கிக் காட்டுவதும், ஆங்காங்கே காங்கிரஸ் சபைகள் நிறுவுவதும், தமிழ்நாட்டின் மூலை முடுக்குகள் எல்லாம் சுற்றித் திரிவதுமாக இந்த வேலைகளிலேயே காலம் கழிந்துவந்தது. பணவருவாய் நின்றதைப் பற்றிய கவலையே இல்லை. என்னை நம்பி இருப்போரைப் பற்றியும் கவலை கொள்ளவில்லை. தொழிலைப்பற்றிய சிந்தனையே இல்லை, மனத்தில் அடக்கமுடியாத ஓர் ஆர்வம்; களைப்பு என்பதே தெரியவில்லை; சுற்றித் திரிவதில் அளவில்லாத மகிழ்ச்சி. வெறி பிடித்தவனைப்போலவே உலக மறதி. "ஒரே வருஷத்தில் சுயராஜ்யம்" என்ற வேகம் என்னைத் தூக்கிச் சென்றது. பல நண்பர்களும், சுற்றத்தார்களும் எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது என்றே நினைத்தார்கள். "பயனற்ற வேலையில பித்துப் பிடித்துவிட்டது' என்பதே அவர்கள் முடிவு.

ஆனால் இம்மாதிரிப் பைத்தியம் பிடித்தவர்கள் தமிழ்நாட்டில் பலர் அப்பொழுது இருந்தார்கள், ராஜாஜி, ஈ. வே. ராமசாமி நாயகர், வைத்தியர் வரதராஜுலு நாயுடு, மௌல்வி சையத் முர்த்துசா ஸாஹேப் முதலிய பலர் என்னைப்போலவே அலைந்து திரிந்துகொண் டிருந்தார்கள். இந்தப் பைத்தியக்காரர்களின் பேச்சைக் கேட்கவும் இவர்களை வரவேற்கவும் ஆயிரக்கணக்கான மக்கள் ஆங்காங்கே கூடினார்கள். இந்தப் புதுமைப் பித்தர்களைத் தமிழ்நாடு கொண்டாடியது. எங்கள் பைத்தியம் எங்களுடன் சேர்ந்து வேலை செய்தவர்கள் எல்லோருக்கும் பிடித்துவிட்டது. தமிழ்நாடு முழுவதும் ஒரே கிளர்ச்சிமயமாக இருந்தது.

கதர் உடுத்துவதில் ஒரு மகிழ்ச்சி உண்டாயிற்று. அது முரட்டுத் துணி. வெகு நயமான மெல்லிய உடைகளைத் தரித்தவர்களாகிய நாங்கள், எவ்வளவு பெருமையுடன் நான்கு முழத் துண்டுகளையும், பருத்தி விதை நீங்காத அரைக்கைச் சொக்காய்களையும் அணிந்துகொண்டோம்! அவை உடம்பில் உறுத்துவனவாகவே தோன்றவில்லை. ஒரு கோடிக் காங்கிரஸ அங்கத்தினர்கள் சேர்க்கவேண்டும்; திலகர் சுயராஜ்ய நிதிக்கு ஒரு கோடி ரூபாய் சேர்க்கவேண்டும்; ஒரு கோடி கைராட்டைகள் ஓட

வேண்டும்; இவ்வளவும் சில மாதங்களில, அடுத்த காங்கிரஸ் நடப்பதற்குள், முடித்துக் கணக்குக் கொடுக்கவேண்டும். காங்கிரஸ வேலையைத் தானதர்மமாகப் பெரிய மனிதர் வேலையாக நடத்த முடியவில்லை. நாலணுச் சந்தாவில் ஒரு பகுதி, திலகர் சுயராஜ்ய நிதியில் ஒரு பகுதி, இவைகளைக் கொண்டு சொற்பச் சம்பளத்தில் காங்கிரஸ் ஊழியர்களை வைக்கவேண்டி யிருந்தது. அவர்களுக்குத் தகுந்த பயிற்சி கொடுத்துப் பிரசாரகர்களாகச் செய்து கிராமந்தோறும் அனுப்பினோம். பள்ளி மாணவர்களைப் படிப்பை நிறுத்திவிட்டுத் தேசத்தொண்டில் ஈடுபடும்படி அழைத்தோம். பெரும்பான்மையோர் பள்ளியை விட்டு வெளிவரமுடியவில்லை. படிப்பைவிட்டு வெளிவந்தவர்களுக்கு ராட்டைப் பயிற்சி, நூல் நூற்றல், துணி நெய்தல், பொதுக்கூட்டங்களில் பேசும் திறமை முதலியவைகளுக்காக ஒரு பயிற்சிச்சாலை நிறுவி அதில் பத்து மாணவர்களைச் சேர்த்துச் சமையல் முதல் சகல வேலைகளும் அவர்களே செய்து கொள்ளப் பயிற்சி அளித்தேன். இவ்வளவும் என் செலவிலே நடந்தது. பணம் செலவழிந்ததில் உத்ஸாகந்தான் ஏற்பட்டது.

அந்த வேகத்தில் உழைத்தவர்களில் அநேகர் மகத்தான தியாகங்களுக்கு உட்பட்டு இன்றும் மிகவும் கஷ்டமான தேசத் தொண்டிலும் சிறையிலும் வாடிக்கொண்டும், நிர்மாண வேலைகளில் தங்களது ஆயுள் நாட்களைச் செலவிட்டுக்கொண்டும் வருகிறார்கள். ஏகாதிபத்தியத்தை நிலைநாட்டவும், எளியோரை அடக்கி ஆளவும் நடக்கும் யுத்தம் என்று சொல்லப்படும் கோரக் கொலைகளுக்கு லக்ஷக்கணக்கான மக்கள் பலியிடப்படும் பொழுது, நமது நாட்டின் விடுதலைக்கான தேசத்தொண்டில் தம் நாட்களைச் செலவிடக்கூடிய மக்கள் எவ்வளவு பேர் தேவை என்பதை நாம் ஒருவாறு ஊகிக்க முடியும். சுதந்தரம் ஒருவர் கொடுத்து ஒருவர் வாங்கிக்கொள்ளும் பொருள் அல்ல. நாமே சம்பாதித்துக் காப்பாற்றவேண்டிய பெரிய சக்தி. அதைத் திரட்டுவதற்கு வேண்டிய பலத்தை நாம் சேமித்தாலொழியச் சுயராஜ்யம் நிலைக்காது. நாட்டின் விடுதலைக்குத்

தியாகம் அவசியம். வெறும் பேச்சும், கக்ஷிகளும் போதா. சுயநலப் பற்றுக் குறைந்து, பொது நன்மை உணர்ச்சி அதிகரிக்க வேண்டும். அந்நிய ஆட்சியில் சுயநலம் வளரும். அது வளர்ச்சி பெறுவதற்கான முறைகளும் சாதனங்களும் ஏராளமாகச் சுலபத்தில் கிடைக்கும். அடிமை வாழ்வில் துன்புறும் நாடுகளில் ஒவ்வோர் அரசியல் அமைப்பும் பொதுமக்களின் சக்தியின் வேர்களை அறுத்துவிடுவதாகவே இருக்கும்.

நம் நாட்டுக் கிராமங்களில் சமுதாய வாழ்வு நிலை குலைந்து விட்டது. கிராமப் பொறுப்பானது தனி மனிதனிடத்தில் ஒப்படைக்கப்பட்டது. வரி வசூலிப்பதில் தங்கு தடை இல்லாமல், சமுதாயம், கோர்ட்டு இவைகளின் ஆதிக்கத்திற்கு உள்ளாகாமல், அதிகாரிக்குமேல் அதிகாரி என்ற பரம்பரையில் அரசாங்கம் நடைபெற்று வருவதால், கிராமங்களில் பொதுஜன வாழ்க்கை, ஊழியம், பொறுப்பு எல்லாம் மறைந்து விட்டன. 'கிராம நலம் என்பது கிராமத்தார் ஒவ்வொருவருடைய பொறுப்பும் ஆகும்' என்ற உணர்ச்சி மறைந்துபோய், எல்லாவற்றிற்கும் கிராமமுனிசீப், கணக்கன் இவர்களை எதிர்பார்க்கவேண்டி வந்தது. கிராம வசூலை, அதிகாரிகள் விரும்பிய படி நடத்திவந்ததால் மற்ற விஷயங்கள் கேட்பார் இல்லாமல் போய்விட்டன. இதன் பயனாகச் சமுதாய உணர்ச்சி மறைந்து போய், அகப்பட்டமட்டில் அவனவன் தன் யுக்திக்கும் நிலைமைக்கும் தகுந்தவாறு சுயநலத்தை விருத்திசெய்வதே முக்கிய தர்மமாக மாறிவிட்டது. மேலும் அக்கிரமம் செய்பவர்களும், 'காலப்போக்கு, கலிகாலம்' என்று சொல்லிக்கொண்டே இழிகுணம் பெருகி, அதிகாரத்திற்குப் பயப்படும் அடிமைகள் ஆகி விட்டார்கள். 'ஊரில் பெரிய மனிதன் யார்?' என்றால அதிகாரிகளிடத்துச் செல்வாக்கு உள்ளவனே என்ற வழக்கம் பரவிற்று. அந்த அதிகாரியின் செல்வாக்கைப் பெறுவதில போட்டியும் பொறாமையும் அதிகரித்து, நாடு கேவலப்பட்டிருக்கிற உணர்ச்சியே அடியோடு மறந்துபோய்விட்டது.

கிராமந்தோறும் பிரசாரம் செய்யும்பொழுது இந்தச் சில்லறைத் தேவதைகளாகிற கிராம அதிகாரிகளின் சக்தி ஒருவாறு

எங்களுக்குத் தெரியவந்தது. தண்டோரா மூலம் ஒரு பொதுக் கூட்டம் போடவேண்டும் என்றால், கிராம அதிகாரியின் தயவு முதலில் வேண்டும். பல இடங்களில் கிராம அதிகாரிகள் விரோதமாக இல்லாவிட்டாலும், நாளைத்தினம் கூட்டம் கூடின விவரம் தாசில்தாருக்கோ போலீஸ் 'ஏட்டுக்கோ' தெரிய வந்தால் தம் வேலையின் கதி என்ன ஆகும் என்பதில் திகிலடைந்து, தம்மால் இயன்ற அளவு கூட்டம் நடக்காமல் இருப்பதற்கு முயல்வது வழக்கம். கிராமக் காங்கிரஸ் கமிட்டிகள் நிறுவுவதில் பல கஷ்டங்கள் ஏற்பட்டன. ஒரு நாள் திருச்சி ஜில்லா, ஜமீன் உடையார் பாளையத்தில் சாயங்காலம் ஏழு மணிக்குக் கூட்டம் போடுவதாக ஏற்பாடு செய்யக் கடிதம் எழுதிவிட்டு, அங்கே போய்ச்சேர்ந்தோம். கூட்டம் போடுவதற்குத் தண்டோராப் போட முனிசிப்தார் சம்மதிக்கவில்லை எனவும், ஜமீன்தார் உத்தரவு வேண்டும் எனவும் எங்கள் ஊழியர் தெரிவித்தார். இந்த உத்தரவுகளைச் சம்பாதிப்பது சுலபமான வேலை அல்ல. முனிசிப்தாரைக் கண்டாலும் ஜமீன்தாரைக் காணமுடியாது. எனினும் கூட்டத்திற்குப் பொது மக்கள் வர ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்களா என்பதைத் தெரிந்துகொள்வதற்காக வீடு வீடாகச் சென்று விசாரித்தோம். எல்லோரும் வருவதற்குச் சம்மதப்பட்டார்கள். இரவு பத்து மணிக்கு அவ்வூர்க் கோயிலுக்குமுன்பாக உள்ள மைதானத்தில் கூட்டம் ஆரம்பமாயிற்று. இரண்டொரு அரிகேன் லாந்தல்களையும் ஓர் ஓட்டை மேஜையையும் ஒடிந்த நாற்காலியையும் வைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தோம். சுமார் இரண்டாயிரம் ஜனங்களுக்கு மேலாகக் கூடியிருந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு, "அங்கே, கூட்டம் நடத்தக் கூடாதென்று ஜமீன்தாரவர்கள் உத்தரவு போட்டிருக்கிறார்கள்" என்று ஒருவர் ஆக்ஷேபித்தார். "நீர் யார்?" என்று கேட்டதற்கு, "நான் கோயில் மணியகாரர்" என்றார். "நீங்கள் கூடியிருக்கும் இடம் கோவிலைச் சேர்ந்தது. ஜமீன்தார் உத்தரவின்றி இங்கே கூடக்கூடாது" என்றவுடன், "கூட்டத்தைக் கலைக்க முடியாது. கூட்டம் கூட்டக்கூடாது என்பதாக எழுத்துமூலம் ஜமீன்தாரிடமிருந்து உத்தரவு வாங்கிவாரும்" என்று பதில்

சொல்லிவிட்டுப் பிரசங்கத்தை மேற்கொண்டு நடத்தினோம். உத்தரவு வாங்கப் போன பேர்வழி திரும்பவே இல்லை. நடு நிசிக்குக் கூட்டம் வெகு உத்ஸாகத்துடன் முடிவடைந்தது. அன்று முதல் அங்கே காங்கிரஸ் கமிட்டி நிறுவப்பட்டு இன்றும் நன்கு நடை பெற்று வருகிறது.

உடையார்பாளையம ஜமீன்தார் வம்சம் வெகு புராதனமானது. அவர்கள் பழைய காலத்துப் பழக்க வழக்கங்களில் தோய்ந்து கிடப்பவர்கள். அவர்களுக்கு, 'ஸம்ஸ்தானாதிபதி' என்ற பட்டப் பெயர் உண்டு. வரி வசூலிப்பதில் தீரர்கள். பக்கத்திலுள்ள சர்க்கார் நிலங்களுக்கு ஒரு ரூபாய் தீர்வை என்றால் இவர்களுடைய ஜமீன் நிலங்களுக்கு ஆறு அல்லது எட்டு ரூபாய்க்குக் குறைவான தீர்வை இராது. வரிகொடுக்க மாட்டாமல் அநேக நிலங்கள் தரிசாக இருக்கும். அப்படிச் சாகுபடி செய்யப்பட்டாலும் தீர்வை பாக்கியாகவே இருக்கும். ஜமீன் தீர்வை சம்பந்தமான விவகாரங்களைத் தீர்ப்பதற்கே அந்த டிவிஷன் டிப்டி கலெக்டருக்கு வேலை சரியாக இருக்கும். அரசாங்கத்தினிடத்துப் பக்திபூண்டு, அவர்களைத் திருப்தி செய்விப்பது ஜமீன்தார் அவர்களுடைய குலதர்மம். உடையார்பாளையம் ஜமீனைப் பிற்போக்கான நிகழ்ச்சிகளுக்கு இடமாகச் சொல்வது இந்த ஜில்லாவில் வழக்கம். ஜமீன்தார்களுக்கு ஆங்கிலம் தெரியாது. தெரியாமல் இருப்பதற்காகவே தற்காப்புச் செய்துகொள்ளும் குடும்பத்தினர். நவீன நாகரிகம் என்பது அந்தப் பிரதேசத்தில் காலடி வைக்கமுடியாது. அதிகாரிகள் வந்தால் சோடசோபசாரம் நடக்கும். யானை, மேளம், தாளம், விருந்துகள் எல்லாம் நடக்கும். ஜமீன்தார்கள் ஏழைக் குடிகளைக் கறந்து பிழிவதில் சமர்த்தர்கள். பழைய ஜமீன்தார்கள் தங்கள் பொருளைக் காப்பாற்றுவதற்காக, இரவு முழுதும் கச்சேரி நடத்திப் பகலில் தூங்குவார்கள் என்று கதைகள் சொல்வது உண்டு. ஜமீன்தாரை நேரில் கண்டு பேசுவது அதிகாரிகளல்லாத மற்றவர்களுக்கு முடியாது. குடிகளும் ஜமீன்தாரைப் பார்க்க முடியாது. ஜமீன் அரண்மனை வாசலில் போலீஸ்காரன் போன்ற போலி உடையுடன் காவலாளிகள் காத்திருப்பார்கள். ஜமீன்

தாரைப் பார்க்கவும் பேசவும் முடியாமல் இருப்பதால் குடிகளுக்கு ஜமீன்தார்மேல் வெகு ஆத்திரம். ஜமீன்தாருக்குக் குடிகளிடத்தில் வந்து பேசுவதற்குப் பயம். அநேகமாய் அரண்மனையிலேயே அடைபட்டுக் கிடப்பார். தகுந்த பந்தோபஸ்தின்றி வெளிக்கிளம்பமாட்டார்.

காங்கிரஸ் ஸ்தாபனம் நிறுவியதும் குடிகள் இந்த ஸ்தாபனத்தின் மூலமாகத் தங்களுக்கு இருக்கும் குறைகளைத் திருச்சிக் கலெக்டர் அவர்களுக்கும் வேறு அதிகாரிகளுக்கும் தெரிவித்தார்கள். அவதிப்படும் மக்களுக்கு ஒருவாறு நீதி வழங்க இடம் இருக்கிறதா என்று பரிசீலனை செய்ய ஏற்பாடு செய்து, ஜமீன்தாரிடம் எடுத்துச் சொல்லி அவரைக்கொண்டே சீர்திருத்தம் செய்யக் கலெக்டர் முயன்றார். கடைசியாகச் சில நண்பர்களின் உதவியால் ஜமீன்தார், பாக்கி இருக்கும் நிலவரி நிலுவைகளை வஜா செய்யவும், குளம், கால்வாய், ஏரி முதலியவைகளைச் செப்பம் செய்யவும் ஏற்பாடு செய்வதாக ஒப்புக்கொண்டார். ஜமீன் குடிகளும் ஜமீன்தாரும் சேர்ந்து ஒரு மகாநாடு உடையார்பாளையத்திற்கு ஐந்து மைலுக்கு அப்பாலுள்ள ஜயங்கொண்ட சோழபுரத்தில் நடத்துவதாகவும் தீர்மானமாயிற்று. அந்த மகாநாட்டிற்குக் காங்கிரஸ் சார்பாக நானும், ஜமீன்தாருடைய வக்கீல் காலம்சென்ற ஸர். டி. தேசிகாசாரியாரும், போலீஸ் ஜில்லா ஸுபரின்டென்டும் வரவழைக்கப்பட்டோம். போலீஸ் ஸுபரின்டென்டான காலஞ்சென்ற அம்முஸாகேப் அவர்களின் பாதுகாப்பில் ஜமீன்தார் உடையார்பாளையத்திலிருந்து ஜயங்கொண்டம் வந்து சேர்ந்தார். கர்நாடக வழக்கம் மாறாத சரிகை அங்கி, தலையில் கல்லிழைத்த சொர்னக் கிரீடம், கையில் பட்டுக் கைக்குட்டை, அலங்கரித்த உடைவாள் இவைகளுடன் ஜமீன்தார் காட்சி அளித்தார்.

தம் திவானைக்கொண்டு தாம் தாராள மனத்துடன் செய்ய இருக்கும் வரி வஜாவைப்பற்றியும், மற்றும் பல நன்மைகளைப் பற்றியும் மகாநாட்டில் எடுத்துரைக்கும்படி சொன்னார். குடிகள் ஐயாயிரம் பேர்களுக்கு அதிகமாவே

கூடியிருந்தார்கள். திவானின் பிரசங்கம் முடிந்தது. வக்கீல் தேசிகாசாரியாரும் பேசினார். கலெக்டரும் பேசினார். முடிவில் கூட்டத்தில் ஒருவர் எழுந்திருந்து, ஜமீன்தார் அளிக்க இருக்கும் வஜா பெரிய மோசம் என்றார். தம்மால் வசூலிக்க முடியாத தொகையை வஜா செய்வதில் என்ன பெருமை இருக்கிறது என்று கேட்டார். நன்மை செய்வதாகச் சொல்லியிருக்கும் பிரச்சினையைப் பற்றி இப்பொழுது எவ்விதம் திருப்தி அடைவது? ஜமீன்தார் பேச்சு யாருக்கும் உத்ஸாகம் கொடுக்கவில்லை.

எனினும் கூட்டம் கலைய ஆரம்பமாயிற்று; அம்முஸாகேப் கூட்டத்தின் மத்தியில் சென்றபொழுது கூட்டத்தில் யாரோ ஒருவன், "இந்த ஜமீன்தாரைச் சும்மாவிடக்கூடாது; ஒரு நாளும் வெளிவராதவன் இன்று இங்கே வந்திருக்கிறான். இவனை விடக்கூடாது" என்று சொல்லியது அவர் காதில் விழுந்ததாக எண்ணித் தமது கையில் இருந்த ரிவால்வரைக் கொண்டு கூட்டத்தின் மத்தியில சுடுவதற்கு முயன்றார். அவர் முயற்சியைக் கண்ட போலீஸ் ஸப்இன்ஸ்பெக்டர் தாமும் தம்மிடம் இருந்த துப்பாக்கியை எடுத்துக் கொண்டு கலைந்துகொண்டிருந்த கூட்டத்தில் புகுந்து தள்ளி அடிக்க ஆரம்பித்தார். இந்தக் களேபரத்தில் நாங்களும் கலெக்டருமாகப் போலீஸ் அதிகாரிகளைக் கட்டிப்பிடித்துக் கூட்டத்தை விட்டு வெளியே இழுத்துவந்தோம். "வெளியே கூட்டத்திற்கு வரமாட்டேன் என்று சொன்ன ஜமீன்தாருக்கு நான் பாதுகாப்பு அளிப்பதாக உறுதிகூறிக் கூட்டி வந்திருக்க, இந்த மடப் பயல்கள் அவரைத் தாக்க எண்ணினால் அவர்களைச் சும்மா விடுவதா?" என்று அம்முஸாகேப் பதறினார். எனினும் பக்கத்தில் இருக்கும் சந்தைப் பேட்டைக்கு அழைத்துச் சென்று நாங்கள் அவரைச் சமாதானப் படுத்தினோம். ஜமீன்தாரும், 'உயிர் பிழைத்தோம்' என்று அம்முஸாகேப்பின் பாதுகாப்பில் காரில் ஏறி உடையார்பாளையம் அரண்மனைக்குப் போய்ச்சேர்ந்தார்.

ஜமீன்தார் தர்பார் இவ்வளவு கோலாகலத்துடன் முடிவு பெற்றது. அன்றைத் தினம் கொலைகள் நடக்காமல் ஏழைக்

குடியானவர்களைச் சமாதானப்படுத்தி ஊருக்கு அனுப்புவது எங்களுக்குப் பெரும்பாடாகி விட்டது. எனினும் காங்கிரஸின் பால் ஏழைகளுக்கு ஓர் அபிமானம் பிறந்தது. அது இன்றைக்கும் அழியாமல் இருந்துவருகிறது.

# முதல் சிறைவாசம்

“இளவரசர் இந்தியா விஜயம்” இரண்டு தலைமுறையாக நமது நாட்டில் நடக்கும் ஒரு வைபவம். 1858 - ஆம் ஆண்டு நடந்த சிப்பாய்க் கலகம் என்று சொல்லப்பட்ட சுதந்தரப் போராட்டம் தோல்வியுற்று ஆங்கிலக் கம்பெனிக்காரர் ஆட்சி முடிவடைந்தது. சீமையிலிருந்து வியாபாரம் செய்யவந்த கம்பெனிக்காரர்கள் ஏராளமான சலுகைகளையும், வரவேற்புகளையும் ஸம்ஸ்தானங்களிலிருந்து பெற்று உபசரிக்கப்பட்டார்கள். நாளடைவில் அவர்களை அறியாமலே நமது நாட்டின் பெரும் பாகம் அவர்கள் கைக்குப் போய்விட்டது. அவர்கள் செய்த சூழ்ச்சிகளுக்கு அளவில்லை. சீமையில் இருந்த அரசாங்கம் அவர்களுக்கு உதவியும் பலமும் அளித்தது. கடைசியாக ஆங்கில ராணியார் இந்தியாவுக்கு மகாராணி ஆனார். அதன் பிறகு ஆங்கில சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக இந்தியா அமைந்துவிட்டது. ஆட்சி புரிந்த விக்டோரியா ராணியாரின் புருஷரும், பிறகு அவர் குமாரராகிய இளவரசரும், அவர் பேரராகிய இளவரசரும் நமது நாட்டிற்கு ஒரு தரம் வந்து போவது வழக்கமாயிற்று. இது பழைய காலத்து மன்னர் ஆட்சியின் மீதியான ஒரு சின்னம். தாங்கள் ஆள இருக்கும் நாட்டுக்குத் தாங்கள் பட்டம் கட்டிக்கொண்டு சக்கரவர்த்தியாகச் சிங்காதனம் ஏறுவதற்கு முன்பே வந்து குடிகளுக்குக் காட்சி அளித்துப்போவது முறை. அவர்கள் வந்து போவதால் நாட்டிற்கும் மக்களுக்கும் யாதொரு லாபமும் இல்லை. பணச் செலவும், ஆடம்பரங்களும், பதவி பட்டம் பெறுபவர்களுக்கு உத்ஸாகத்தை அளிக்கலாம். மக்களிடத்துப் பணம் வசூலித்து வரவேற்புகள் நடக்கும். மக்கள் அழைப்பின்பேரில் இளவரசர்கள் வருவதில்லை.

‘நாம் கோரியவை எல்லாம் அரசியலில் நமக்குக் கிட்டாமல் புறக்கணிக்கப்பட்டதால் இளவரசரை வரவேற்பதில் நாம்

கலந்துகொள்ளக்கூடாது' என்று காங்கிரஸ் 1921-ஆம் வருஷத்தில் தீர்மானித்தது. "இளவரசர்மேல் நமக்கு யாதொரு கோபமும் இல்லை. ஆனால் நமது வேண்டுகோள் நிராகரிக்கப் பட்டு, உல்லங்கனம் செய்யப்பட்டதால், நமது மனத்தில் இருக்கும் வருத்தத்தைப் புலப்படுத்த வேண்டும். ஆகையால் வரவேற்பு நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளக்கூடாது" என்பது தீர்மானம். காங்கிரஸ் தீர்மானம் மக்களின் மனத்தைக் கவர்ந்தது. பம்பாயிலும், சென்னையிலும் அஹிம்சா முறைக்கும் காங்கிரஸ் தீர்மானத்திற்கும் விரோதமாக மக்கள் நடந்துகொண்டார்கள். அதிகாரிகளும் குழப்பத்தை அடக்கும் முறையில் துப்பாக்கிப் பிரயோகம் செய்தார்கள். பம்பாயில் ஐம்பத்து மூவர் இறந்தனர். நானூறு பேர்களுக்குமேல் காயமடைந்தார்கள். காந்திஜி கூட்டத்தில் சென்று அமைதி உண்டுபண்ண முயன்றார். மக்களின் ஒழுங்கீனத்திற்காக அவர் ஐந்து நாட்கள் உபவாசம் இருந்து தமது துயரத்தை ஒருவாறு சமாளித்துக்கொண்டார்.

தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைமைக் காரியாலயம் அக்காலத்தில் திருச்சியில் இருந்தது. சென்னையிலுள்ள ஜில்லாக் கமிட்டியின் தலைவர்கள், இளவரசர் பகிஷ்காரத்தில் ஊக்கம் காட்டவில்லை. எனினும் தொழிலாளர் சமூகம் ஒருமுகமாகக் காங்கிரஸ் தீர்மானத்தை ஆதரித்தது. அதற்கு வேண்டிய பிரசாரம், அமைதி நிலவவேண்டிய முயற்சி எல்லாம் செய்வதற்காக ஒரு வாரம் நான் சென்னையில் தமிழ் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசி என்கிற முறையில் தங்கியிருந்து வேலை செய்தேன். அப்பொழுது சென்னையில ஜஸ்டிஸ் கட்சி ஆதிக்கம் பெற்றிருந்தது. அன்றைத் தினம் கடையடைப்புச் செய்யவேண்டும் என்று நாங்கள் முயன்றோம். அதிகாரிகளும், ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களும் கடைகளை மூடக்கூடாது என்று பாடுபட்டார்கள். கொத்தவால்சாவடி மார்க்கெட்டை மூடவேண்டும் என்பது எங்கள் கோரிக்கை. அதற்காக நானும் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரும், சிங்காரவேலுச் செட்டியாரும் சாமி வேங்கடாசலம் செட்டியாரைக் கண்டோம். எங்களுக்கு அன்று அவர் சொல்லியதை நான்

இன்றும் மறக்கவில்லை. "நாங்கள் கடையடைப்புச் செய்வதில்லை என்று தீர்மானித்துவிட்டோம். கொத்தவால்சாவடி திறந்துதான் இருக்கும் நீங்கள் அதற்கு எதிராக முயற்சி செய்வது பலிக்காது" என்று அவர் சொல்லிவிட்டார். "சரி, நாளைத்தினம் பார்க்கலாம்" என்று சொல்லித் திரும்பிவிட்டோம். அன்றிரவு கவர்னர் பிரபுவே மார்க்கெட்டிற்குச் சென்று கடைகளை மூடக்கூடாது என்று சொன்னதாகக் கேள்விப்பட்டோம்.

மறுநாள் காலையில் இளவரசர் சென்னைத் துறைமுகத்தில் இறங்கினார். வரவேற்பு, பந்தோபஸ்து முதலியவை ஆடம்பரமாகவே செய்யப்பட்டிருந்தன. வழியின் இரு புறங்களிலும் பொதுமக்கள் உட்காருவதற்குக் 'காலரி' போடப்பட்டுச் சிறு கட்டணம் கொடுப்பவர்களுக்கு இடம் அளிக்க ஏற்பாடுகள் நடந்திருந்தன. ஆனால் கூட்டம் அதிகம் கூடவில்லை. கூடின சிலரும் பணம் கொடுத்து உட்காரப் பிரியப்படவில்லை. இளவரசர் குழுவினர் வலம் வருவதற்குச் சிறிது நேரம் வரையில் காத்திருந்துவிட்டு, கன்டிராக்டர்கள் அங்கே இருப்பவர்களை வலுவில் அழைத்துக் கட்டணம் கொடாமலே உட்காரும்படி வேண்டினார்கள். அப்படியும் காலி பெஞ்சுகள் அதிகமாகக் காணப்பட்டன. உடனே பைத்தியக்கார ஆஸ்பத்திரி, ஜெனரல் ஆஸ்பத்திரி முதலிய இடங்களிலுள்ள, நடக்கக்கூடியவர்களை எல்லாம் கொணர்ந்து காலி ஸ்தானங்களை நிரப்பிவிட்டார்கள்.

"அஹிம்சா முறையைக் கைப்பற்றவேண்டும். இளவரசர் வரவேற்பில கலந்துகொள்ளப் பிரியம் இருப்பவர்களைக் கட்டாயப்படுத்தித் தடுக்கக்கூடாது" என்று பன்முறை பிரசங்கங்களிலும், துண்டுப் பிரசுரங்களிலும் விளம்பரம் செய்திருந்தோம். கலவரம் நேரிடும்போல இருந்தால் அந்த இடத்தில் 'ஹர்த்தால்' நடத்தக்கூடாது என்று காந்திஜி தெளிவாகச் சொல்லியிருந்தார். கட்டுக்கு மீறிக் கலவரம் ஏற்பட்டால் அதற்குப் பொறுப்பாளி, "இளவரசர் பகிஷ்காரக் கமிட்டியார்" என்றும், பொதுக் கூட்டங்களில் முதல் நாள் இரவு

வரையில் ஓயாது சொல்லி வந்தோம். இளவரசர் சென்னையில் இறங்கிய தினம் ஆலைகள், பள்ளிக்கூடங்கள் முதலிய எல்லாப் பொது ஸ்தாபனங்களுக்கும் விடுமுறை அளிக்கப்பட்டது. வேலைக்குப் போகவேண்டிய அவசியம் இல்லாதபடியால் ஜனங்கள் கூட்டம் கூட்டமாகப் பல தெருக்களிலும் வந்து யார் யார் வரவேற்பு வேடிக்கை பார்க்கப்போகிறார்கள் என்று பார்ப்பதற்காகக் கூடிவிட்டார்கள். நான் அன்று காலையில் சூளை, புரசைபாக்கம், பிரம்பூர் முதலிய இடங்களுக்குச் சென்றேன். தெருவெல்லாம் ஏகக் கூட்டம். வரவேற்பிற்குப் போகிறவர்கள், போகவேண்டியவர்கள் இவர்களையெல்லாம் ஜனங்கள் கேலி செய்துகொண்டிருந்தார்கள். பயந்தவர்கள் மேற்கொண்டு செல்லாமல் திரும்பிவிட்டார்கள். மற்றவர்கள் வண்டியிலோ, டிராம்காரிலோ ஏறிச் சென்றார்கள். நான் பார்த்துக்கொண்டிருந்தபொழுது கூட்டத்தில் ஒருவர் ஒரு கோலை எடுத்துக்கொண்டு, டிராம்காரின் மேற்புறத்தில் இணைக்கப்பட்டிருக்கும் கம்பியை இழுத்து டிராமை நிறுத்தி விட்டார். உடனே நாலு புறத்திலிருந்தும் கல் வீசப்பட்டது. டிராம்வண்டியின் கண்ணாடிகள் உடைந்து தெறித்துவிட்டன. டிராம் ஓடவில்லை. அதில் ஏறி இருந்தவர்கள் திடுக்கிட்டு இறங்கிவிட்டார்கள். டிராம் ஓட்டியும், கண்டக்டரும் வண்டியை அப்படியே தெருவில் நிறுத்திவிட்டு ஓடிவிட்டார்கள். கமிட்டி அங்கத்தினர்கள் ஒருவராவது அங்கே காணப்படவில்லை.

உடனே அங்கே கூடியிருப்பவர்களை அக்கிரமம் செய்யாதிருக்கும்படி வேண்டிக்கொண்டேன்; கூட்டம் கலைய ஆரம்பித்தது. அங்கிருந்து கால்நடையாகவே மவுண்ட்ரோடு சென்று வெல்லிங்டன் சினிமாவை நெருங்கியபொழுது அங்கே எல்லாம் ஒரே களேபரமாக இருந்தது. எங்கே பார்த்தாலும் சிப்பாய்களும், சோல்ஜர்களும், மூடு பீரங்கி வண்டிகளுமாக இருந்தன. சினிமாக் கட்டிடத்தில் ஜன்னல் கதவுகள், கண்ணாடிகள் எல்லாம் உடைபட்டு இறைந்துகிடந்தன. விசாரித்ததில் சினிமாவின் சொந்தக்காரர் அந்தக் கட்டிடத்தின் மேல்

மெத்தையிலிருந்து தம் கைத் துப்பாக்கியால் கூட்டத்தைச் சுட்டதாகவும், அதன் காரணமாகக் கூட்டத்தில் இருந்த ஒரு முஸ்லிம் இறந்துவிட்டதாகவும், அதனால் கோபம் மூண்ட கூட்டம் சினிமாவில் புகுந்து அட்டூழியம் செய்ததாகவும் கேள்விப்பட்டேன். அன்று முழுவதும் சென்னைத் தெருவிலெல்லாம் கூட்டம்.

வரவேற்புக்காகக் கட்டியிருந்த வளைவுகள், அலங்காரங்கள் எல்லாம் சின்னபின்னமாக்கப்பட்டும், சில இடங்களில் நெருப்பில் இடப்பட்டு எரிந்துகொண்டும் இருந்தன. நல்ல வேளையாக அன்றைத்தினம் சென்னைப் போலிஸ் அதிகாரிகள், இந்த அமளியில் தலையிட்டுக்கொள்ளாமல் வெகு பொறுமையுடன் இருந்தார்கள். அப்படி இருந்திராவிட்டால் பலர் உயிரிழக்க நேரிட்டிருக்கும். அன்றைத்தினம் கடைகளும், கொத்தவால்சாவடியும் இதுவரையில் பார்த்திராவண்ணம் அடைபட்டுக்கிடந்தன. அன்றிரவு சென்னையில் நான் கண்ட காட்சிகளையும், கூட்டத்தின் போக்கையும் பற்றி மகாத்மாஜிக்கு நீண்ட அறிக்கை எழுதிவிட்டு மன வருத்தத்துடன் படுக்கச்சென்றேன். அந்த வார "யங் இந்தியா" வில் சென்னை நிகழ்ச்சிகளைப் பற்றி வருந்திக் காந்திஜி ஒரு தலையங்கம் எழுதி மக்களைக் கண்டித்திருந்தார். அதில் என் கடிதவிவரங்களில் முக்கியமான பாகத்தையும் வெளியிட்டிருந்தார். அதைக் கண்டதும் சென்னையில் வெகு நண்பர்களுக்கு என்மேல் கோபம். பொது வாழ்வில் உண்மை எவ்விதம் வேலை செய்கிறது என்பதை ஒருவாறு இதனின்றும் அறிந்துகொண்டேன்.

காங்கிரஸ் ஒத்துழையாமைத் திட்டம் விரிவாக நடைபெற்றுவந்தது. காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்ப்பது, திலகர் சுயராஜ்ய நிதி திரட்டுவது, கள்ளுக்கடைகளை மறியல் செய்வது, கள் குடியை ஒழிக்கும்படி வேண்டுவது முதலிய வேலைகளில் காங்கிரஸ் தொண்டர்கள் ஈடுபட்டார்கள். முக்கியமாகக் கள்ளுக்கடை மறியலில் பொதுமக்களின் மனம் ஈடுபட்டது. குடிப்பவர்கள் வெட்கத்தினாலோ பயத்தினாலோ குடிக்க முன்வரவில்லை. கள்ளுக்கடை வியாபாரம் நடைபெற

வில்லை. கள்ளுக்கடை முதலாளிகள் தங்களுக்குக் குத்தகைக்குக் கொடுத்த சர்க்கார் உத்தியோகஸ்தரிடத்தில் முறையிட்டார்கள்: 'சர்க்காருக்குக் கட்டவேண்டிய பணம் கட்டமுடியாது; வியாபாரம் நடக்கவில்லை' என்று. தொண்டர்களின் மறியல் நின்றால் ஒழியச் சர்க்கார் வருமானம் சரிவரக் கிடைக்காது. சரியான வருவாய் இல்லாமல் அதிகாரவர்க்கம் அமல் நடத்தமுடியாது. தொண்டர்களோ சட்ட விரோதமாக நடந்து தண்டனைக்கு ஆளாகும் முறையில் மறியல் செய்யவில்லை. கள்ளுக்கடை ஏலம் எடுத்து விற்பனை செய்யும் முதலாளிகளில் ஒரு கூட்டம் என்னைக் கண்டு தங்கள் கஷ்டத்தைத் தெரிவித்தார்கள். காங்கிரஸ் சபைக்கு உருவான ஒரு தொகை நன்கொடை அளிப்பதாகவும் உறுதி கூறினார்கள். எப்படியாகிலும் கள்ளுக்கடை மறியல் நிறுத்தப்படவேண்டும் என்பது அவர்களது கோரிக்கை. "கள்ளுக்கடைக்காரர்களுக்காக மறியலை நிறுத்துவதா? மக்களிடம் குடிப்பழக்கத்தை நிறுத்த வேண்டும் என்பது காங்கிரஸின் தீவிரமான தீர்மானம். அது நியாயமான முறையில் நடைபெற உழைக்க வேண்டியது எங்கள் கடமை. மறியலைத்தவிர வேறு முறையில் பிரசாரமோ தடையோ சட்ட உதவியின்றிச் செய்ய முடியவில்லை. ஆகையால் மறியலை நிறுத்தமுடியாது" என்று சொல்லிவிட்டேன். போகும்பொழுது கள்ளுக்கடைக்காரர்களில் ஒருவர் மட்டும் எனக்கு எச்சரிக்கை செய்துவிட்டுப் போனார். "நீங்கள் எல்லோரும் நல்ல பதவியிலிருந்து மக்களின் நன்மதிப்பைப் பெற்றிருக்கிறீர்கள். வீணாக அதிகாரிகளின் கோபத்திற்கும், அதன் பின் நேரிடும் பலவிதமான தொல்லைகளுக்கும் ஆளாகவேண்டாம் என்று தங்களுக்குச் சொல்லிவிடவேண்டியது என் கடமை. பிறகு உங்கள் இஷ்டம்" என்பது அவர் உபதேசம்.

கள்ளுக்கடைக்காரரின் எச்சரிக்கை வீண் போகவில்லை. மறியல் செய்த ஒரு கள்ளுக்கடையை ஒரு நாள் இரவு யாரோ நெருப்பிட்டுக் கொளுத்திவிட்டார்கள். கடை எரிந்து போயிற்று. இதை யார் செய்தார்கள் என்பதைப் போலீஸ்காரர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. மறியல் செய்தவர்

களே காரணம் என்ற முடிவிற்கு அதிகாரிகள் வந்துவிட்டார்கள். சத்தியாக்கிரக முறைப்படி நெருப்பிட்ட பழி காங்கிரஸைச் சார்ந்தது. அதன் நிர்வாகஸ்தர்களுக்கு மறியல் நடத்துவதற்குப் போதுமான அளவு பொதுமக்களின் நன்மதிப்பு இல்லை என்று சொல்லக்கூடும். சத்தியாக்கிரக தத்துவத்திற்கு மூல புருஷரான காந்திஜியின் அபிப்பிராயம் அதுதான். எந்த இடத்தில் சத்தியாக்கிரக இயக்கம் நடந்தாலும், அங்கே பொதுமக்களிடம் ஒழுங்கு, நியாய உணர்ச்சி, அமைதி, சகிக்கும் தன்மை இவைகள் இல்லாவிட்டால் பொதுஜன சத்தியாக்கிரகம் செய்யக்கூடாது. அப்படிச் செய்தால அதற்குச் சத்தியாக்கிரகிகளே பொறுப்பாளிகள் என்பது அவரது கொள்கை. இதை ஒட்டியே பல தடவைகளில் சத்தியாக்கிரகத்தை நிறுத்தியும், அச்சமயம் நடந்திருக்கும் கொடுமைகளுக்குப் பிராயச்சித்தமாகத் தாம் பலதடவைகளில பட்டினி கிடந்தும், உயிருக்கு மன்றாடும் நிலையில் இருந்தும் வந்திருக்கிறார். தனிப்பட்ட ஒவ்வோர் ஆணும் பெண்ணும் ஒரு சமூகத்தில் தேவையான அளவு பொறுமையோடு, தூண்டப்பட்ட பொழுதிலும் தன் ஆத்திரத்தை அடக்கி நடக்கமுடியுமா என்பது வேறு கேள்வி. சத்யாக்கிரகி அஹிம்சா முறையில் தனது எதிர்ப்பைப் புலப்படுத்துவானேயில், தன்னைச் சுற்றிலும் அமைதி நிலவவேண்டிய பாரமும் அவனைச் சார்ந்தது. தன் உயிரைக் கொடுத்தாகிலும் குழப்பத்தை அவன் தடுக்க வேண்டும். யுத்தகளத்தில் உள்ள போர்வீரனைப் போலவே தனது உயிரை அஹிம்சா முறையில் தியாகத்திற்கென அர்ப்பணம் செய்துவிடவேண்டும். இந்த மனப்பான்மையும் சாதனையும் இல்லாவிட்டால் மனிதன் சத்தியாக்கிரகி என்று சொல்லிக்கொள்ள முடியாது. ஆகையால் கள்ளுக்கடைக்கு நெருப்பு வைத்துக் கொளுத்திய பொருப்பு திருச்சியில் எங்களைச் சாந்ததுதான்.

மறியலை நிறுத்திவிட்டோம். குடிப்பவர்களும் தங்கு தடையின்றி இவ்வளவு நாட்கள் குடிக்காமல் இருந்ததையும் சேர்த்துக் கள்ளுக்கடைப் பானைகளைக் காலிசெய்தார்கள். ஆனால்

எங்கள் தொண்டர்களுக்குத் தாங்கள் செய்தவேலை பயனற்ற தாகிவிட்டதே என்ற ஏமாற்றம் உண்டாயிற்று. கோபம் ஒரு புறம்; வெறுப்பு மற்றொரு புறம். "எவனோ நெருப்பு வைத்து விட்டுப் போனால் அதற்கு நாம் எவ்விதம் பொறுப்பாளியாக முடியும்?" என்று வாதாடினார்கள். சத்தியாக்கிரக தர்மத்தின் தத்துவத்தை அறிய அவர்களால் முடியவில்லை. முடிந்தாலும் பின்பற்றுவது அசாத்தியமாகத் தோன்றியது. நிர்வாகிகளான எங்களாலும் அவர்களது ஊக்கத்தையும், தியாக உணர்ச்சி யையும் தடுக்க முடியவிலலை. மறுபடியும் ஒரு பொதுக்கூட்டம் போட்டுக் குறிப்பிட்ட ஒரு தேதியில் மறியல் தொடங்க வேண்டும் என்று தீர்மானித்தோம். கள்ளுக்கடைகளுக்கு எவ்விதமான தீங்கும் ஏற்படாவண்ணம் தகுந்த பிரசாரமும் பாதுகாப்பும் செய்ய முயன்றோம்.

அந்தச் சமயம் காங்கிரஸ் பிரசாரம் செய்யும்பொருட்டுக் கும்பகோணம் சென்றிருந்தோம். திருச்சி போலீஸ் அதிகாரி கள் நாங்கள், "பொதுஜன அமைதியைக் குலைப்பவர்கள்" என்று தீர்மானித்து, எங்களை ஒரு வருஷத்திற்கு நன் னடத்தை ஜாமீன் கொடுக்கும்படியான சட்டத்தின்கீழ்ச் சிறை யில் வைப்பதற்கான வாரண்டு பிறப்பிக்கப்பட்டது. வாரண்டை எடுத்துக்கொண்டு கும்பகோணம் வந்த போலீஸ் அதிகாரிகள், ஏராளமான கூட்டத்தின் மத்தியில் எங்களைச் சிறைப்படுத்த முற்படாமல் இரவு கும்பகோணத்திலிருந்து புறப்பட்டுத் திருச்சி வரும் ரெயிலில் சுமார் பதினொரு மணிக்கு, சுந்தரப்பெருமாள் கோயில் ஸ்டேஷன் தாண்டிய பிறகு என்னையும் என் நண்பர் டாக்டர் சாஸ்திரியாரையும் கைது செய்தார்கள். அன்று இரவே திருச்சி சென்டிரல் ஜெயிலில் இரண்டு மணிக்கு அடைக்கப்பட்டோம்.

அன்றுவரையில் சிறைக்கூடம் என்பது எப்படியிருக்கும் என்பதை அறியாத எனக்குப் பெரிய அதிர்ச்சி உண்டாயிற்று. சிறைவாசல் கதவு திறக்கப்பட்டு உள்ளே நுழைந்தவுடன் இது வரையில் பாராத ஒரு புதிய உலகத்தில் புகுந்த உணர்ச்சி ஏற் பட்டது. ஜெயிலருடைய சோதனைகள், பெயர் பதிவு முதலி

யவை அந்த நேரத்திலும் முறைப்படி நடந்தன. எங்களைச் சிறைக்கு அழைத்துவரும் செய்தி நடுநிசிக்கு அப்புறம் கிடைத்தமையால் விடியும் வரையில், சிறையில் சமையல் செய்வதற்குக் கொண்டு போகப்பட்டவர்கள் இருந்த அறையில் நாங்கள் அடைக்கப்பட்டோம். அறையில் மூத்திர நாற்றம் சகிக்க முடியவில்லை. திடீரென்று சிறைப்பட்ட அதிர்ச்சி, விடியற்காலை நேரத்தில் மூத்திர அறையில் அடைக்கப்பட்டது, பிறகு என்னை அந்நேரத்தில் பார்க்கவந்த சிறைத் தலைமை அதிகாரியின் கண்காணிப்பு - இவைகளை எல்லாம் அநுபவித்தபிறகு உறக்கம் எங்கிருந்து வரும்? விடியும்வரையில் ஒரு கிழிந்த கயிற்றுப்பாயில் உட்கார்ந்து பொழுது போக்கினோம்.

சிறைச்சாலைத் தலைமை அதிகாரி என் நண்பர். அவர் ஆங்கிலேயர். அவருடைய ஆங்கில மனைவியார் நோயுற்றிருந்த காலத்து, ரண சிகிச்சை செய்ய என்னை அழைத்தார். என்னால் இயன்ற உதவியைச் செய்ததில் அந்தக் குடும்பத்தாரின் நட்பு எனக்குக் கிடைத்தது. ஆனால் அன்றைத்தினம் என்னைக் காண வந்தபொழுது அவர் நடந்துகொண்டது திகைப்பை உண்டாக்கியது. மனம் நொந்து அலுத்திருந்த நான் அவர் வந்தவுடன் அந்த வேளையில் அவருக்குத் தகுந்த மரியாதை செய்யவில்லை. உட்கார்ந்தபடியே அவருடன் பேசினேன். அதனால் அவருக்கு என்னிடம் அருவருப்பு உண்டாயிற்றோ என்னவோ தெரியாது. "மூத்திர நாற்றம் சகிக்க முடியவில்லையே!" என்று நான் கேட்டதற்கு, "இன்றிரவு நான் வேறு இடம் பார்க்கமுடியாது. விடிந்தவுடன் ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். மறுநாள் காலையில் வேறு இடத்துக்கு மாற்றப்பட்டோம். அச்சமயம் கூட்டம் கூட்டமாகக் கைதிகள் எங்களைத் தூரத்தில் நின்று அதிசயப் பார்வையுடன் பார்த்துவிட்டு வேலைக்குச் சென்றார்கள்.

அந்தக் காலத்தில் வகுப்புவாரி ஏற்றத் தாழ்வு இல்லை. எல்லோரும் கஞ்சித் தொட்டியிலும் களிமொத்தையிலும் பங்கு போடவேண்டிய காலம். எங்களுக்கென்று தயாரித்த

கஞ்சியைச் சூடாகக் கொண்டுவந்து கொடுத்தார்கள். ஒரு வாய் உட்கொண்டேன்; மறுவாய் விழுங்க மனம் இல்லை. ஆயுள் முழுவதும் கஞ்சியையே காணுத எங்களுக்கு இந்த ஜெயில் கஞ்சி முதல் முதலாகக் குடிக்கமுடியாமல் போனது ஆச்சரியம் அல்ல. நாளொன்றுக்குச் சட்டப்படி ஒன்றரை அணு பெறுமான ஆகாரந்தான் எங்களுக்குக் கிடைத்தது. அதிகப்படி பெறவேண்டுமானால் நோயுற்று, ஜெயில் டாக்டர் அத்தாட்சி பெற்று, சிறிது பாலோ ரொட்டியோ பெறலாம். இந்த உணவினால் முதல் இரண்டு வாரத்திற்கெல்லாம் எனக்குச் சீதபேதி கண்டுவிட்டது. ஆகாரத்தை மாற்றிப் பால் கஞ்சி குடித்ததும் நின்றுவிட்டது.

விசாரணை ஜெயிலிலேயே நடந்தது. 'நன்னடத்தைக்கு ஜாமீன் கொடுக்கவேண்டும்; இல்லாவிட்டால் ஒரு வருஷம் வெறுங்காவல் தண்டனை.' விசாரணையில் நான் கலந்துகொள்ளவில்லை. ஏராளமான பொய்ச்சாட்சிகளைப் போலீஸ்காரர்கள் தயாரித்திருந்தார்கள். என்னைப்பற்றிய சொந்த விவரங்கள் தாக்கல் செய்தபொழுது போலீஸ் சாட்சிகளின் வாக்குமூலம் முற்றும் தவருக இருந்ததால் அதைமட்டும் மாற்றிவிடும்படி கோர்ட்டாருக்குச் சொன்னேன். அந்தத் திருத்தத்தைச் செய்துகொண்டார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு சென்னைச் சட்டசபையில் திருச்சி சட்டசபைப் பிரதிநிதியும், ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவருமான தங்கவேலுப்பிள்ளை ஒரு கேள்வி கேட்டிருந்தார். 'திருச்சி மத்திய சிறையில் இருக்கும் டாக்டர் ராஜனுக்கும் அந்த ஜெயில் தலைமை அதிகாரிக்கும் வெகு நாட்களாக நட்பு உண்டு என்கிற விஷயம் கவர்ன்மெண்டாருக்குத் தெரியுமா? அப்படியானுல் அந்தச் சிறையில் டாக்டர் ராஜனை வைத்திருப்பது உசிதமா?' என்பதுதான் கேள்வி. பதில் என்ன கிடைத்தது என்பது எனக்குத் தெரியாது. சிறைப்பட்ட ஒரு மாதத்திற்குள் நானும் டாக்டர் சாமிநாத சாஸ்திரியும் கோயம்புத்தூர் மத்திய சிறைக்கு மாற்றப்பட்டோம்.

# சிறைமாற்ற நாடகம்

ஜீவராசிகளைச் சிறைப்படுத்துவது இயற்கைக்கு விரோதம். அவை, அவைகளுடைய சிருஷ்டி தர்மத்திற்கு ஏற்றவாறு உயிர் வாழ்ந்து, சந்ததிகளை வளர்த்துக் கடமையைச் செலுத்தி, துக்கத்தைக் குறைத்து, மகிழ்ச்சியைப் பெருக்கிக் காலம் கடத்துவது முறை. இதுதான் சுதந்தரம். சுதந்தரத்தில் பிறந்து வளர வேண்டிய மனிதனைக் குற்றத்திற்காகச் சிறைப்படுத்தித் தண்டனை என்று கூறுவது இயற்கைக்கு விரோதம். இதனால் குற்றம் குறையவில்லை. கொலை களவு குறையவில்லை. தீமை ஒடுங்கவில்லை. பயத்தினாலும் கொடுமையாலும் நற்குணங்கள் வளரமாட்டா. தீமைக்கு மாற்றுத் தீமையல்ல; நன்மையே தீமையைக் குறைக்கும். கொடுமையால் நன்மை உண்டாகாது. சிறை என்பது, நாகரிக உலகத்தில் மக்களுக்கு வழங்கப்படும் ஒரு பெரிய கொடுமை. இதை நாள்தோறும் நமது சமூகவாழ்வில் நன்றாகக் காணலாம். பல தடவை சிறைப்பட்டதன் பயனாக இந்த உண்மையை நான் நன்கு அறிந்துகொண்டேன்.

மக்களைக் கள் குடிக்கக்கூடாதென்று சொல்லியது என் குற்றமென ஒரு வருஷத்திற்கு நன்னடக்கை ஜாமீன் கேட்டார்கள் அதிகாரிகள். நான் அதற்கு உடன்படாததனால் ஒரு வருஷம் சிறையில் அடைக்கப்பட்டேன்.

சிறையுலகத்தின் போக்கும் வாழ்வும் விநோதமானவை. திருடியவனைத் தண்டித்துப் பிறகு திருடாமல் இருப்பதற்காகச் சிறையில் அடைக்கிறார்கள். திருடத் தெரியாதவன்கூடச் சிறையில் திருடக் கற்றுக்கொண்டுவிடுகிறான். சோம்பேறித்தனத்திற்கு உறைவிடம் சிறைச்சாலைகள். மனிதனை யந்திரம் போல நடத்தமட்டும் முறை வகுக்கப்பட்டிருக்கிறது. குறித்த நேரத்தில் உணவு, உறக்கம், வேலை இவை உண்டு. ஆனால் மனித வாழ்வு இவைகளோடு முடிந்து விடுகிறதில்லை. தனி மனிதனின்

துர்நடத்தைகளுக்கும் கொடுஞ் செயல்களுக்கும் அவன்மட்டும் குற்றவாளி என்று நினைப்பது தவறு. சமூகமும் அரசாங்கமும் ஒருவாறு குற்றவாளிகளே. ஆனால் சட்டம் தனிக் குற்றவாளிகளைத் தண்டித்துப் பெரிய சமூகக் குற்றவாளிகளை விலக்கிவிடுகிறது. ஆகையால் குற்றம் குறைவதில்லை. பல விதமாகக் காலத்திற்கு ஏற்றபடி மாறி மாறிப் பல ரூபங்களில் குற்றம் தலையெடுத்து ஆடுகிறது. இதற்கு மக்களைக் காட்டிலும் ஆட்சிமுறையே முக்கிய காரணம்.

நான் எனது முதல் சிறைவாசத்தில் பெற்ற அநுபவங்கள் இதற்குச் சான்று. கைதிகளில் உயர்வு தாழ்வு இல்லை. அந்தக் காலத்தில் ஏ வகுப்பு, பி வகுப்பு, சி வகுப்பு இல்லை. குற்றம் இன்னதென்று தெரியாமலே விசாரணை, கோர்ட்டு, வக்கீல்கள் என்னும் தொல்லைகள் இல்லாமலே சிறையிடப்பட்டவர்களும் இல்லை. "என்ன கேசிலே வந்திருக்கிறாய்?" என்றுதான் பழங் கைதிகள் முதல் முதலில் சிறையில் குசலப்பிரச்னம் செய்வார்கள். "என்ன, அடிதடியா? கொலைக்கேசா? பொம்பளை சங்கதியா?" என்றுதான் கேட்பார்கள். "கள்ளுக் குடிக்காதே என்று சொன்னால்கூடவா தண்டனை? சும்மா பொய்சொல்லாதே" என்று கண்ணைச் சிமிட்டிக்கொண்டு நகையாடுவான் அக்காலத்துக் கைதி. சிறைக்கூடச் சட்டங்களின்படி நாங்களும் அவர்களும் ஒரேமாதிரிக் கைதிகள்தாம்.

'கமான்' என்ற ஒரு பதம் சிறையுலகத்தில் வழங்குகிறது. நான் புரட்டிய அகராதிகளில் இந்தப் பதம் காணப்படவில்லை. கைதிகளில் ஒருவரையோ பலரையோ ஒரு சிறையிலிருந்து மற்றொரு சிறைக்கு மாற்றினால் அதைக் 'கமான்' என்று சொல்லுகிறார்கள். 'கமான் போகிறது', 'கமான் வருகிறது' என்றால் ஜெயில் உலகத்தில் சில கைதிகள் மாற்றப் படுகிறார்கள் என்பது பொருள். எப்பொழுது மாற்றுகிறார்கள், ஏன் மாற்றுகிறாகள், எதற்காக மாற்றுகிறார்கள்?—இந்த விஷயங்களெல்லாம் கைதிக்குத் தெரியாதவை. திருச்சிச் சிறையில் மூன்று வாரம் கழித்த பிறகு ஒருநாள் இரவு பத்து மணிக்கு நான் உறங்கிக்கொண் டிருந்தபொழுது என்

றைக் கதவைத் திறந்து என்னை எழுப்பி, "உன் சாமான்களை டுத்துக்கொள்; உன்னை வேறு சிறைக்கு அனுப்ப உத்தரவு ந்திருக்கிறது" என்றார்கள். "எந்த ஊர்ச் சிறைக்கு?" ன்று நான் கேட்டதற்கு அது தங்களுக்குத் தெரியாது ன்று சொல்லி, "ஐந்து நிமிஷத்திற்குள் தயாராகவேண்டும்" னவே, நான் புறப்பட்டேன். சிறைக்கோட்டை வாயிலில் இரண்டு மோட்டார் லாரிகள் நின்றுகொண் டிருந்தன. லாரி றைய ஆயுதம் தாங்கிய ரிஸர்வ் போலீஸ் படையினர்; வர்களுக்கு மத்தியில் எனக்கு ஒரு சிறிய இடம் தரப்பட்டது. ன் புத்தகங்கள், படுக்கை முதலியவை மற்றொரு லாரி ல் ஏற்றப்பட்டன.

திருச்சி ஜங்ஷன் ஸ்டேஷனுக்குக் கொண்டு போகப்பட் டேன். எனக்கு முன்பு மூன்று ஜோடி ஆயுதம் தரித்த போலீஸ் ாரர்கள் நடந்து சென்றார்கள். நடுவில் நானும் ஓர் ஆங்கிலப் பாலீஸ் இன்ஸ்பெக்டரும் சென்றோம். எங்களுக்குப் பின்னால் றன்று ஜோடிப் போலீஸ்காரர்கள் தொடர்ந்துவர, பிளாட் ாரத்துக்குச் சென்றோம். சிரிப்பு ஒரு புறம், வெறுப்பு மற் றொரு புறம். போலீஸ் தடபுடல்களால் ரெயிலேறக் காத் ிருந்த ஜனங்கள் எங்களை வேடிக்கை பார்ப்பதற்காகச் சுற் ிக் கொண்டார்கள். அவர்களைத் துரத்திக்கொண் டிருக்க இன் ும் சில ரெயில்வே போலீஸ்காரர்கள் கூடினார்கள்.

ஐம்பத்து நான்கு பெயர்கள் உட்காரவேண்டிய ஒரு றன்றாம் வகுப்பு வண்டி காலி செய்யப்பட்டது. அதில் ஏறி ிருந்த பிரயாணிகளைத் துரத்தி வேறு வண்டிகளில் அடைத் ார்கள் கைதிகளாகிய நாங்கள் இருவரும் போலீஸ் படை ினர் பன்னிருவரும் இதில் ஏறினோம். காலி செய்யப்பட்ட இரு பலகைகளில் நானும் டாக்டர் சாஸ்திரியாரும் உட்கார்ந் தோம். ஓடும் ரெயிலில் நாங்கள் தாவிக் குதித்துத் தப்பி ஓடி விடாமல் பார்த்துக்கொள்ளவும், பிளாட்பாரத்தில் இருப்ப ர்கள் எங்களைக் கண்டு பேசாமல் இருப்பதற்காகவும் இரண்டு போலீஸ்காரர்கள் கதவுகளுக்குப் பக்கத்திலுள்ள ஜன்னல்க ளின் ஓரமாக ஆயுதத்தோடு உட்கார்ந்துகொண்டார்கள். பாக்கி

யிருந்த பத்துப் பேர்வழிகளும் ஐரோப்பிய ஸார்ஜெண்டும் சாவகாசமாகத் தங்களுடைய ஜேணங்களைக் களைந்து, சுமையை நீக்கிவிட்டு, துப்பாக்கிக் கட்டைகளை வெகு ஜாக்கிரதையாகப் பலகைகளில் உறங்கவிட்டுக் கொட்டாவி விட்டுக்கொண் டிருந்தார்கள். இந்த ஆர்ப்பாட்டத்தைப் பார்க்க ரெயில் புறப் படும்வரையில் ஜனங்கள் எங்கள் வண்டியைச் சுற்றிலும், தூரத்தப்பட்டபோதிலும், ஓடுவதும் திரும்புவதுமாகவே இருந் தார்கள்.

எங்களைக் கோயம்புத்தூர்ச் சிறைக்குக் கொண்டுபோகி றார்கள் என்று திருச்சி ஸ்டேஷனில் தெரிந்துகொண்டோம். இந்த மாறுதலால் சர்க்காருக்கு எவ்வளவு செலவு என்பதைக் கணக்குப் பார்த்தால், அரசாங்க முறையின் மதியீனம் ஒருவாறு புலப்படும். ஐம்பத்துநான்கு பேர்கள் பிரயாணம் செய்யும் ஒரு வண்டிக்குக் கோயம்புத்தூர் போகும் வரையில் வாடகை கணக்குப் பார்த்தால் சுமார் இருநூற்றெழுபது ரூபாய் ஆகி றது. பதின்மூன்று பெயர்கள் திரும்பிவரும் செலவுவேறு இருக் கிறது. அவர்களில் ஒருவரான ஸார்ஜெண்ட் இரண்டாம் வகுப்பில்தான் பிரயாணம் செய்வார். பிறகு எல்லோருக்கும் இரண்டு நாட்களுக்குப் படி தனியே உண்டு. இவற்றையெல் லாம் கணக்கெடுத்தால் சுமார் ஐந்நூறு ரூபாய்க்குக் குறைவு இராது. எல்லாம், ஜாமீன் கொடுக்க மறுத்து, வேண்டுமென்று சிறைக்குச் சென்ற எங்கள் இருவரையும் திருச்சியிலிருந்து கோயம்புத்தூர் கடத்துவதற்காக ஏற்பட்ட செலவு! நாங்கள் தப்பி ஓடாமல் கோயம்புத்தூர்ச் சிறைக்குக் கொண்டுபோகப்பட்ட பெருமையும் பொறுப்பும் போலீஸா ரைச் சேர்ந்தன. இந்த முட்டாள்தனமான நாடகத்தைக் கண்டு நகைத்து ரஸிக்கும் உரிமை எங்களைச் சேர்ந்தது.

ஈரோட் ஸ்டேஷனில் ரெயில் மாறவேண்டும். அதற்கு இரண்டு ரெயில்கள் உண்டு. முதலில் போகும் வண்டி நாங்கள் வந்து அரைமணி நேரத்திற்கெல்லாம் புறப்படுவது. மற் றொன்று அதற்கு இரண்டு மணி நேரம் கழித்துப் புறப்படுவது. விடியற்கால நேர மாகையால், கைகால் கழுவிப் பல்துலக்கிக்

காலைக் கடன்களை முடித்துக்கொண்டு புறப்பட நினைத்தேன். ரெயில்வே ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் ஓடும் வாய்க்காலுக்குச் சென்று அவற்றைத் தீர்த்துக்கொண்டேன். காபி பலகாரங்கள் சாப்பிட்டு இரண்டாம் ரெயிலில் போவதென்று முடிவு செய்தேன். அதற்கு ஸார்ஜெண்டும் உடன்பட்டார்.

நாங்கள் ஈரோட்டில் இறங்கியதும், போலீஸ் படையினரின் படாடோபங்களைக் கண்ட பிரயாணிகள் கோயம்புத்தூருக்கு முதல் ரெயிலில் போய்ச் சேர்ந்து, அங்கே நாங்கள் கைதிகளாகக் கொண்டுவரப்படும் செய்தியைப் பரப்பிவிட்டார்கள். இரண்டாவது ரெயிலில் நாங்கள் போய் இறங்கினதும் கோயம்புத்தூர் ஸ்டேஷனில் பெருங்கூட்டம் சேர்ந்துவிட்டது. சிற்றுண்டிகளுடனும், மாலைகளுடனும் பத்திரிகை நிருபர்களும், அரசியல் கிளர்ச்சியில் ஈடுபட்டவர்களும் குறைவில்லாமல் சேர்ந்துவிட்டார்கள். போலீஸ்காரர்கள் பாடு கஷ்டமாகிவிட்டது, போலீஸ் ஸார்ஜெண்டுக்கும் எங்களுக்கும் தடுத்தும் கேளாமல், வந்திருந்தவர்கள் மாலையைப் போட்டார்கள். மற்றப் போலீஸ்காரர்களுக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டது. நாங்கள் அவ்வூர்ப் பிரமுகர் ஒருவர் கொணர்ந்த இரண்டு மோட்டார் வண்டிகளில் ஏறிக்கொண்டு சிறைக்கூடம் போய்ச்சேர்ந்தோம். வழக்கம்போல் பரிசோதனைகள் நடந்தன. போலீஸாரிடமிருந்து சிறை அதிகாரிகள்வசம் கைதிகள் மாற்றம் முதலிய சடங்குகள் முறையே நடந்து நாங்களும் சிறை புகுந்தோம். போலீஸ் கூட்டமும் திருச்சி திரும்பியது.

இந்தப் பிரயாணத்தில் போலீஸாரின் கூட்டத்தைத் தவிர வேறு விநோதம் ஒன்றும் இல்லை. ஆனால் கோயம்புத்தூர்ப் பிளாட்பாரத்தில் இருந்த பத்திரிகை நிருபர்கள் நாங்கள் அழைத்துவரப்பட்ட வைபவத்தையும், வரவேற்கப்பட்டதையும், பூமாலைகள் வழங்கியதையும், சிற்றுண்டி கொடுக்கப்பட்டதையும்பற்றிச் சென்னைப் பத்திரிகைகளுக்கு எழுதி அனுப்ப அவை விரிவாகப் பிரசுரமாயின. இந்த விவரம் பத்திரிகைகளில் வெளியானதும் சென்னை அரசாங்கத்திற்குப்

பேரதிர்ச்சி உண்டாயிற்று. தங்களுடைய சிறை ஆட்சி, நிலை குலைந்துவிட்டதாகவே அவர்கள் கருதினார்கள். கேவலம் கைதிகளாகிய எங்கள் பேரில் சீற்றங்கொள்ள இடம் இல்லை. 'நம்முடைய கைதியைப் பொதுமக்கள் வரவேற்றுக் கொண்டாடுவதா? இதற்கு ஆட்சி முறை இடம் கொடுப்பதா? மாட்சிமை தங்கிய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மதிப்பு இனி என்ன ஆகும்?' என்று நினைத்து, எங்களை அழைத்துச் சென்ற ஆங்கில ஸார்ஜெண்டின்பேரில் ஒழுங்குமுறை தவறிய குற்றத்திற்காக விசாரணை நடத்தினார்கள், கறுப்புச் சிங்கங்களாகிய நம் போலீஸ் படையினர் தங்களுக்கு இதன் பொறுப்பு ஒன்றும் கிடையாதெனவும், எல்லாம் ஸார் ஜெண்ட் துரையின் பொறுப்பில் நடந்தது எனவும் கூறிவிட்டார்கள். பாவம், ஸார்ஜெண்ட் அகப்பட்டுக்கொண்டார்! திருச்சியிலேயே வெகு நாட்களாக உத்தியோகம் செய்தவராகையால் அவர் எனக்கு நண்பர். பிள்ளை குட்டிக்காரர். பெரிய சம்சாரி. அவருடைய மக்களுக்கு என்னால் இயன்ற வைத்திய உதவி செய்திருந்ததை அவர் மறக்கவில்லை. அவருடைய பிழைப்புக்கு ஆபத்து வந்துவிட்டது. விசாரணை முடிந்தது; அவர் வேலை போய்விடாமல் தப்பித்துக்கொண்டார். ஒரு வேளை அவருடைய நிறம் அவரைக் காப்பாற்றியது போலும்!

எனது தண்டனைக் காலம் முடிந்து நான் திருச்சிக்குத் திரும்பியதும் அவர் என்னைக் கண்டு தாம் பட்ட கஷ்டத்தை மிகவும் உருக்கமாக என்னிடம் உரைத்தார். இந்தச் சிறிய முறைத் தவறுதலால் சென்னை அரசாங்கம் நிலைகுலைந்துவிடவில்லை. அவர்கள் ஏகாதிபத்தியத்துக்கு அனுவளவேனும் குறைவில்லாமல், கள்ளுக் கடைகளும், குடிகாரர்களும் அமோகமாகச் செழிப்படைந்து விளங்கினார்கள், சென்னை மாகாணத்தில் அந்த வருஷம் சுமார் நானூறு பேர்களுக்கு மேலாக என்னைப்போலச் சிறைசென்று வாடி வதங்கினார்கள்.

# சிறைவாழ்க்கை விநோதங்கள்

திருச்சி மத்திய சிறையில் தண்ணீர் குடித்துப் பழகியவர்களுக்குக் கோயம்புத்தூர் மத்திய சிறையின் கிணற்றுத் தண்ணீர் மருந்து குடிப்பதைப்போல் இருக்கும். அந்தத் தண்ணீரைக் குடித்துப் பழகுவதற்கு எனக்கு ஒரு வாரத்திற்கு மேல் ஆயிற்று. நான் இரவில் தாகத்திற்காகக் குடிப்பதற்கு நல்ல தண்ணீரென்று எண்ணி அந்த ஜெயில் தண்ணீரை எனது அலுமினியம் கூஜாவில் நிரப்பிவைப்பது வழக்கம். பாதி ராத்திரிக்குப் பிறகு அந்தக் கூஜாச் செம்பிற்குள் வெடிக்கும் சப்தம் கேட்கும். கூஜாவை உடனே திறந்து பார்ப்பதற்கோ வெளிச்சம் இல்லை. விடியும் வரையில் பத்து நிமிஷத்திற்கு ஒரு தடவையாகச் சிறு வெடிச் சப்தம் கேட்டுக்கொண்டிருக்கும். காலையில் கூஜாவைத் திறந்து, தண்ணீரை மேலாக ஊற்றிவிட்டு, அடியில் பார்த்ததில் மீதி இருக்கும் அடிப்பாகத் தண்ணீர் சாம்பல் கரைத்ததுபோலக் காணப்பட்டது. கூஜாவின் உட்பக்கத்தில் சிறு குழிகள் உண்டாகியிருந்தன. 'அலுமினியம் பாத்திரமே இந்தத் தண்ணீரின் வேகத்திஞல் கொப்புளித்து, வெடித்துக் குழியாகி விடுமாஞல் அதைக் குடிக்கும் மனிதர்களின் குடலின் கதி என்ன?' என்று நினைத்தபோது, மனத்திற்குச் சங்கடமாக இருந்தது. ஆஞல் தினசரி இரண்டாயிரம் பேர்களுக்குக் குறைவில்லாமல் இந்தத் தண்ணீரைக் குடித்து அந்தச் சிறையில் வசித்துக்கொண்டுதானே உயிருடன் இருக்கிருர்கள்?

இந்தச் சிறையின் விநோதம் என்னவென்ருல், ஒரு கைதிக்காவது மலச்சிக்கல் உபத்திரவம் இல்லை. இந்தத் தண்ணீரைக் குடித்தவுடன் புதிதாக வந்த கைதிகள் எல்லோருக்கும் இரண்டு வாரம் வரையில் பேதி ஆவது வழக்கம். தண்ணீர் பழகியவுடன் சிறிது சிறிதாகப் பேதி குறைந்துவிடும். சிறையில் இருக்கும் டாக்டர்களுக்கும் இந்தத் தண்ணீரின் குணம்

நன்கு தெரியும். ஆகையால் அதைப்பற்றி அவர்களும் கவலைப் படுவதில்லை. இந்தச் சிறையில் புகுந்து ஒரு வாரத்திற்குப் பிறகு எனக்கும் மற்றவர்களைப்போல் வயிற்றுப்போக்குக் கண்டது. கஞ்சி உணவு கிடைத்தது. ஆனாலும் டாக்டர்கள் மருந்து கொடுத்தார்கள். இரண்டு வாரத்திற்கு அப்புறம் குணமாயிற்று. மறுபடியும் ஜெயில் சோறும், கிணற்றுத் தண்ணீரும் குடித்தவுடன் பேதி மறுபடியும் தொடங்கிவிட்டது. மறுபடியும் ஆஸ்பத்திரியில் வைக்கப்பட்டேன் இம்மாதிரி ஆஸ்பத்திரிக்குப் போவதும் வருவதுமாக இரண்டு மாதங்கள் கழிந்தன.

ஆஸ்பத்திரிக் கம்பவுண்டர் மருந்து கொண்டுவந்து கொடுக்கும்பொழுது, தினசரி சற்றுநேரம் பேசிவிட்டு, வெளியுலகில் நடக்கும் விசேஷங்களைப் பத்திரிகை மூலமாக அறிந்து எனக்கு வந்து தெரிவிப்பார். அவருடைய தமையனார் சென்னையில் நடந்து வந்த 'ஸ்வராஜ்யா' பத்திரிகைக்குக் கோயம்புத்தூர் நிருபர். இருவரும் ஒரே குடும்பமாக வசித்துவந்தார்கள். சிறையில் இரண்டு வாரங்களாக வாந்திபேதி(காலரா) நோய் கண்டு சிலர் இறந்துவிட்டதாகவும், யாது காரணத்தாலோ சிறை வைத்திய அதிகாரிகள் அது காலரா நோயல்ல என்றும், வயிற்றுக் கொதிப்புக் கோளாற்றினால் பேதி ஆகிறதென்றும் சாதித்து வருகிறார்கள் என்றும் தெரிந்துகொண்டேன். என் மனத்தில் இது காலரா நோய் என்பதில் சந்தேகம் இல்லை. ஆஸ்பத்திரியில் நான் இருந்ததால் அந்த நோயின் விவரத்தையும் குணங்களையும் கம்பவுண்டர் மூலமாகத் தெரிந்துகொண்டேன். அவரிடம் என் அபிப்பிராயத்தையும் தெரிவித்தேன். அவர் மூலம் அவருடைய தமையனார் தெரிந்துகொண்டு, 'ஸ்வராஜ்யா' பத்திரிகைக்குச் சங்கதி அறிவிக்கவே, பத்திரிகைக்காரர்கள் அதை வெளியிட்டார்கள். ஆனால் அந்தச் செய்தியைப்பற்றிச் சிறை அதிகாரிகளோ மாகாண சர்க்காரோ கவலை கொண்டதாகத் தெரியவில்லை.

நோயின் வேகமோ நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது. சுமார் மூன்று வாரத்திற்குள் இருபத்தைந்து கைதிகள் இறந்து

விட்டார்கள். சிறை அதிகாரிகள் கவலைகொண்டு, சென்னை யில் கிண்டி ஆராய்ச்சிசாலைக்குத் தெரிவித்தார்கள். அவர்கள் வந்து சிறையிலுள்ள குடிதண்ணீரைப் பரீக்ஷை செய்ததில், தண்ணீர் அசுத்தமாகிக் காலராக் கிருமிகள் உண்டாகி யிருப் பதாகத் தெரிவித்தார்கள். அதன் பிறகு வெகு தடபுடலாகத் தண்ணீரைச் சுத்தப்படுத்துவதிலும் வியாதியைத் தடுக்கும் முறைகளிலும் கவனம் செலுத்தப்பட்டது. பத்து நாட்களுக் குள் நோய் மறைந்துவிட்டது. சிறை அதிகாரியின் மூடத்தனத் தினால் இருபத்தைந்து கைதிகள் உயிர்விட நேர்ந்தது. இந்தச் சாவிற்குச் சிறை வைத்திய அதிகாரிதான் பொறுப்பாளி. அவரை எவ்வளவு தடவை தூக்கில் இடவேண்டியது என்ப தைப பற்றிக் கோர்ட்டு நடவடிக்கைகள் நடந்து தீர்ப்புக் கொடுக்கவில்லை. தர்ம நியாயப்படி, சிறை வைத்திய அதிகாரி கள் எல்லோரும் கொலைக் குற்றம் செய்தவர்களே.

சென்னைச் சட்டசபையில் அந்தக் காலத்தில்கூடச் சில அறிவாளிகள் இருந்தார்கள். அவர்களில் ஒருவர் ஒரு கேள்வி கேட்டார். "'ஸ்வராஜ்யா' பத்திரிகையின் கோயம்புத்தூர் நிருபரிடமிருந்து வந்த அவ்வூர்ச் சிறையில் காலரா நோய் கண்டு கைதிகள் இறந்து வருகிறார்கள் என்ற செய்தி வெளி யாகியிருக்கிறது. அது வெளியாகி ஒரு மாதத்துக்குப் பிறகு தான் காலரா நோய் கண்டிருப்பதாகச் சிறை அதிகாரிகள் விளம்பரப்படுத்தி யிருக்கிறார்கள். இதன் உண்மை என்ன? ஏன் இந்தத் தொத்து நோயை இவ்வளவு காலம் கவனியாமல் அநேகர் இறக்கும்படி விட்டார்கள்?" என்பதுதான் கேள்வி.

"அதைப்பற்றி விசாரணை நடக்கும்" என்று சர்க்கார் அதிகாரி பதில் கூறினார். இதன் முடிவு என்னவென்றால் சிறையிலிருந்து இந்தத் துப்பு பத்திரிகைக்கு எப்படிப் போயிற்று என்றுதான் சர்க்கார் விசாரணை ஏற்பட்டது! தடுக்கக்கூடிய நோயைத் தெரியாமல் வளரவிட்டு, ஏன் கைதிகளைச் சாகடித்தார்கள் என்பதைப்பற்றி ஒரு விசாரணையும் இல்லை! தினந்தோறும் பத்துத் தடவை எண்ணி, அவ்வளவு தரம் பூட்டித் திறந்து பரிசோதனை

செய்கிறார்கள் ; ஜெயில் நேரத்தை யெல்லாம் சோதனை போடுவதிலும் எண்ணுவதிலும் போக்குகிறார்கள். அவ்வளவு கணக்கான அதிகாரம் செலுத்தும் பெரிய கோட்டை மதில்களுக்குள் நடக்கும் விஷயம், தினசரிப் பத்திரிகைகளில் எவ்விதம் வெளிவந்தது என்பதே சிறையின் தலைமை அதிகாரிக்கு உண்டான பெரும் கவலை. யாராக இருக்கலாம் என்பதுபற்றி உளவுகள் பரிசீலனை செய்யப்பட்டன. முடிவில் இந்த நோயின் தத்துவத்தை அறியக்கூடியவர் யாராக இருக்கலாமென்று பார்த்தபொழுது ஒருவேளை நான்தான் இதற்குக் காரணமாக இருக்கக்கூடும் என்ற சந்தேகம் கிளம்பியது. ஆஸ்பத்திரியில் நான் நோயுற்றிருப்பதால் இதன் விவரம் என் மூலமாக வெளியாகி இருக்கலாம் என்று எண்ணி என்னைப் பலவிதமான துன்பங்களுக்கு ஆளாக்கினார்கள்.

நான் இருந்த அறையை விட்டு ஜெயில் டாக்டர் ஆபீஸிற்கு நேர் எதிரில் இருக்கும் அறையில் என்னைக் கொண்டு போய் அடைத்தார்கள். 'இரவில ஹரிகேன் விளக்குக்கூடாது; இருட்டிலேயே இருக்கவேண்டும்' என்று உத்தரவு பிறந்தது. ஆனால் ஒருவரும் என்மேல் குற்றம் சுமத்த முன்வரவில்லை. சிறை அதிகாரியின் உத்தரவுக்குரிய காரணத்தை என்னைப் போன்ற கைதிகள் கேட்கலாமா ? எனக்கு இருக்கும் நோயைப் பற்றி வைத்தியன் என்ற முறையில் நான் ஏதாகிலும் சொல்ல முற்பட்டால் உடனே சிறைத்தலைமை டாக்டராக இருந்த மேஜர் பாரஸ்ட் (Forest I. M. S.) என்ற ஆங்கில அதிகாரிக்கு வெகு கோபம் வந்துவிடும். "நீ இங்கு டாக்டர் அல்ல ; வெறும் கைதி. அதை மறந்துவிடாதே. வாயை மூடு" என்று சீறுவார். என்னைப் பார்க்கும்பொழுதே அவருக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வரும். தம்மால் என் சிறைவாசத்தை எவ்வளவு கடினமாக்க முடியுமோ அவ்வளவும் செய்து வந்தார். சில நாட்களுக்குப் பிறகு அவர் எனது நோயைப் பற்றி ஏதாவது கேட்கவந்தால் எனக்கு உடம்பு ஒன்றும் இல்லை என்றே சொல்லிவந்தேன். எனினும் கஞ்சி உணவைத் தான் கொடுக்கவேண்டும் என்று உத்தரவு போட்டார்.

என்னைப் பரிசோதனை செய்யவேண்டும் என்று அவர் தமது அறைக்கு வருவித்தார். அங்கே சென்றதும் ஆஸ்பத்திரி வராந்தாவில் நான் நிர்வாணமாக நிற்கவேண்டும் என்றார். நான் மறுத்தேன்.

"நீ கைதி என்பதை மறந்துவிடாதே" என்றார்,

"தங்களைப்போன்ற துரையவர்கள் இருக்கும் வரையில் மறக்க முடியாது" என்றேன்.

பிறகு, "உள்ளே செல்" என்றார். சென்றேன்.

பரிசோதனை செய்வதுபோல நடித்துவிட்டு, "நீ என்ன வைத்தியப் பரீக்ஷை கொடுத்திருக்கிறாய்?" என்று கேட்டதும், "நான் ஒரு கைதி" என்று பதில் சொன்னவுடன், என்னை வெறித்துப் பார்த்துவிட்டு, "நீ போகலாம்" என்று உத்தர விட்டார், இந்தக் காட்சிக்குப் பிறகுதான் நான் தனி அறை யில் அவருக்கு எதிராக அடைக்கப்பட்டேன். இந்த அடைப் புக்குப் பிறகு அன்றிரவு சிறையில் ஒரு பெரிய களேபரம் ஏற்பட்டது.

இரவில் கணக்கெண்ணிப் பூட்டி, ஜெயிலர் கையெழுத் திடும்பொழுது கணக்கில் ஒரு கைதி குறைவாக இருந்தது. ஒரு கைதி காணப்படவில்லை என்றால் அதன் அமளியை ஜெயிலில்தான் பார்க்கவேண்டும். இரவு பத்து மணி இருக் கும். அபாயச் சங்குச் சத்தம் சிறையில் கேட்டது. எல்லா வார்டர்களும் மற்றச் சில்லறை அதிகாரிகளும் ஓடோடியும் வந்து கூடிச் சிறைக் கதவுகளை எல்லாம் நன்றாகப் பூட்டி விட்டுப் பிறகு ஒவ்வொரு நபராக எண்ண ஆரம்பித்தார்கள். ஒருமணி நேரம் எண்ணிய பிறகும் ஒரு கைதி குறைவாகவே கணக்கு வந்தது. அப்படித் தப்பி ஓடியவன் யாராக இருக்க லாம் என்று மூலை முடுக்குகளிலெல்லாம், ராந்தல் விளக்கைத் தூக்கிக்கொண்டு எல்லோரும் அலைந்துகொண்டிருந்தார்கள்.

இவர்கள் போட்ட சத்தத்தால் தூங்கிக்கொண்டிருந்த நான் விழித்துக்கொண்டேன். என் இருட்டறைக்குப் பக்க மாகப் பரபரப்புடன் ஓடிக்கொண்டிருந்த ஜெயிலர் ஸாலிஸ்

பரி துரையைக் கூப்பிட்டேன். தம்மை ஏதோ ஒரு பூதம் வந்து பயமுறுத்தியதுபோல அவர் திடுக்கிட்டுத் திகிலடைந்து, தம்முடன்கூட இன்னும் இருவரைச் சேர்த்துக்கொண்டு என் அறைக்குச் சமீபமாக வந்தார். "இந்த ஆஸ்பத்திரி ஸடோர் ரூமிலிருந்து ஏதோ குரல் இருட்டிலிருந்து என்னை அழைத்தது. எல்லோரும் கதவிற்குச் சமீபமாகப் போய்ப் பார்க்கலாம்" என்று கூறி, மற்றவர்களையும் ராந்தலுடன் என் அறைக்கு வெளியே அழைத்துவந்து நின்று, "யார், என்னைக் கூப் பிட்டது?" என்று கேட்டார்.

நான் உடனே பதில் சொல்லாமல் 'கலீர்' என்று சிரித்தேன். விளக்கைச் சமீபத்தில் கொண்டுவந்து, என்னைக் கண்டதும், "உன்னை இங்கே யார் அடைத்தது?" என்றார்.

"எல்லாம் பெரிய டாக்டர் துரையவர்கள் உத்தரவு" என்றேன்.

"தெய்வாதீனமாக உன்னைக் கண்டது என் வயிற்றில் பால் வார்த்ததுபோல ஆயிற்று. காணுமல்போன கைதி நீதான். இதுவரையில் தேடித் திரிந்து அலைந்தும் கணக்கில் ஒன்று குறைந்திருந்த நபர் தெரியவில்லை. இனி நான் வீட் டிற்குப் போய் நிம்மதியாகத் தூங்கலாம்" என்று பெரு மூச்சு விட்டுக்கொண்டு திரும்பினுர்.

"என்னை 'ஸ்டோர் ரூமி'ல் இருட்டில் அடைத்ததால் வந்த கேடு இது. இனியாகிலும் என்னை இருட்டில் அடைக்கக் கூடாது என்பதை நீங்கள் தெரிந்துகொள்ளுங்கள். இன்றைத் தினம் என்னைக் கண்டுபிடித்த வெற்றிக்குச் சின்னமாகத் தங்கள் கையில் இருக்கும் ஜெயில் ராந்தலை என் அறை வாச லில் விடியுமட்டும் விட்டுப்போங்கள்" என்றேன். அவரும் அப்படியே விட்டுப்போனுர்.

ஜெயிலில் காலராநோய் கண்டால் சிறை அதிகாரிகளில் டாக்டருடைய கவனிப்புக் குறைவுதான் காரணம் என்ற ஓர் அபிப்பிராயம் உண்டு. மாகாணச் சிறைத் தலைமை அதிகாரியே நேரில் இந்தச் சம்பவத்தை விசாரணை செய் வதற்காகக் கோயம்புத்தூர் வந்துசேர்ந்தார். இந்த

நோய் பரவியதன் காரணத்தைப்பற்றி என்னை விசாரித்தார். நான் நடந்தவற்றைச் சொன்னேன். என்னிடம் மிகவும் நயமாகப் பேசிவிட்டு அவர் போய்விட்டார். அந்த அதிகாரி வந்துவிட்டுப் போன ஒரு வாரத்திற்குள் என்னைக் 'கமான்' எடுத்துவிட்டார்கள்; அதாவது எனக்குச் சிறைமாற்றம் ஏற்பட்டது. மாகாணங்களிலுள்ள சிறைகளுக்குள் மற்றக் கைதிகளோ, சில்லறைச் சிப்பந்திகளோ, எவரும் என்னைக் காண முடியாமல் இருக்கும்படியான சிறை ஒன்றைப் பொறுக்கி, அவரே என்னை நடத்தும் விதத்தையும் விவரமாக எழுதியனுப்பி, பாளையங்கோட்டைக்கு மாற்றிவிட்டார்.

கோயம்புத்தூரிலிருந்து பாளையங்கோட்டை ஓர் இரவு ஒரு பகல் பிரயாணம். திருச்சியிலிருந்து கோயம்புத்தூருக்குப் போகும்பொழுது நடந்த நாடகம் ஒன்றும் இல்லை. மூன்று போலீஸ்காரர்களின் பாதுகாப்பில் நான் தப்பி ஓடாமல் இந்தப் பிரயாணத்தை முடித்தேன். பாளையங்கோட்டைச் சிறை அதிகாரி ஒரு தெலுங்குப் பிராம்மணர். சிறை நீதி வழுவாது அதிகாரம் செலுத்துவதில் பெயர் பெற்றவர். சிறு குமாஸ்தாவிலிருந்து ஜெயில் சூப்பிரன்டென்ட் வேலைக்கு உயர்ந்தவர். மாகாணத் தலைமை அதிகாரியின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். ஆகையால் அவருடைய பாதுகாப்பில் இளங் குற்றவாளிகள் வைக்கப்படும் இந்த 'மைனர் ஜெயி லி'ல் நான் வைக்கப்பட்டேன்.

ஏற்கனவே சிறையின் சட்டங்களை அணுவளவேனும் பிறழாது நடத்துபவர் என்று பெயர்பெற்றவரிடத்தில் மாகாணச் சிறை அதிகாரியே நேரில் எழுதி, என்னை நடத்தும் முறையை விளக்கி உத்தரவும் போட்டுவிட்டால், என்னை அவர் எப்படி நடத்தியிருப்பார் என்பதற்கு வேறு வியாக்கியானம் தேவை இல்லை. நான் பாளையங்கோட்டைச் சிறைக்குச் சென்ற மறுநாள் காலையில் அவர் என்னைக் கண்டார். "கோயம்புத் தூரில் என்ன நடந்தது? ஏன் உன்னைத் தனிவிதமாக நடத்தும் படி உத்தரவு வந்திருக்கிறது?" என்று கேட்டார். "அதைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது" என்று சொன்னேன்.

# சிறைத் தெய்வங்களின் திருவிளையாடல்கள்

பாளையங்கோட்டைச் சிறையில் எனக்கென்று ஒரு தனி முறை கையாளப்பட்டு வந்தது. கொலைக் குற்றம் செய்பவர்களுக்கு ஒதுக்கிவைக்கும் தக்க பாதுகாப்புள்ள ஒரு சவுக்கம் எனக்காக ஒதுக்கப்பட்டது. அதற்குள் நான்கு புறமும் அடைக்கப்பட்டுள்ள மூன்று அறைகள்கொண்ட ஒரு சிறிய சிறையில் நான் வைக்கப்பட்டேன். எந்தப்புறமிருந்தும் வார்டர்களோ கைதிகளோ இதை அணுக முடியாது. சவுக்கத்தின் கதவும் நான் இருக்கும் சிறிய சிறையின் கதவும் பூட்டப்பட்டுச் சாவி ஜெயிலருடைய பாதுகாப்பில் இருந்தது. ஜெயில் தலைமை அதிகாரி, ஜெயிலர், பெரிய டாக்டர் இவர்களைத் தவிர வேறு யாரும் அணுக முடியாமல் இருந்தது இது. எனக்குத் தேவையான உணவுப் பொருள்களையும், மற்ற வசதிகளையும், ஜெயிலர் நேரிலேதான் கொண்டுவந்து கொடுக்கவேண்டும். கூட்டுவது, தண்ணீர் நிரப்புவது முதலிய வேலைகளைத் தாமே நேரில் நின்று கைதிகளைக் கொண்டு முடித்துவிட்டு இரண்டு கேட்டுகளையும் பூட்டிச் சாவியை எடுத்துக்கொண்டு அவர் போய்விடுவார். பிறகு சாயங்காலம் ஒரு ராந்தலை நான் இருந்த அறைக்குமுன் வைத்துப்போவார். மூன்று அறைகளில் ஒன்று நானே சமையல் செய்துகொள்வதற்காக; மற்றொன்று என் புத்தகங்கள், வேறு சாமான்கள் வைப்பதற்காக; மூன்றாவது நான் படுப்பதற்காக. ஜெயிலர் திருமுக தரிசனம் ஒரு நாளைக்கு இரண்டு வேளையும், தலைமை அதிகாரியின் தரிசனம் இரண்டு நாளைக்கு ஒரு தரமும், ஆஸ்பத்திரிப் பெரிய டாக்டர் தரிசனம் வாரம் இரு முறையும் எனக்குக் கிடைக்கும். மற்ற வேளைகளில் மனிதர்கள் முகத்தையே பார்க்கமுடியாது.

இந்தக் காவல் தனிக்காவலா? வெறுங்காவலா? குற்றவாளிக்கான கடினக் காவல் தண்டனையுடன் சேர்ந்ததா? - இன்னதென்று எனக்குத் தெரியவில்லை.

என்னைத் தண்டித்த அதிகாரி எனக்கு வெறுங்காவல் தண்டனைதான் விதித்திருந்தார். எனினும் கொலைக்குற்றம் செய்தவனுக்கு விதிப்பதைக்காட்டிலும் கடினமான தனிக் காவல் எனக்குப் பாளையங்கோட்டையில் கிடைத்தது. கொலைக் குற்றம் செய்தவர்களுக்காவது எப்பொழுதும் இரவு பகலாகக் காவலாளிகள் ஓயாது காவல் காத்துக்கொண்டும் அவர்களுடன் பேசிக்கொண்டும் இருப்பார்கள். எனக்கோ மனித வாசனைகூட அடிக்கவொட்டாமல் தடுக்கும் விசேஷ முறை கையாளப்பட்டது. ஜெயில் சட்டத்திலேயே இம்மாதிரி நடத்த ஒரு விதியும் இல்லை.

"ஏன், உனக்குமாத்திரம் இந்த விதிகளை மாகாணச் சிறைகளின் தலைமை அதிகாரியே நேரில் ஏற்பாடுசெய்து, என்னையும் அந்த முறையிலிருந்து வழுவாமல் உன்னைக் கவனிக்கும்படி உத்தரவிட்டிருக்கிறார்? நீ கோயம்புத்தூர்ச் சிறையில் என்ன செய்தாய்?" என்று பாளையங்கோட்டைச் சிறை அதிகாரி என்னைக் கேட்டார்.

"நான் ஒன்றும் செய்யவில்லை. மாகாணச் சிறை அதிகாரியின் உத்தரவில்லாமல் காலரா நோய் கோயம்புத்தூர்ச் சிறையில் தாண்டவமாடியது. அந்த நோய் இல்லையென்று மறைக்க அந்தச் சிறை டாக்டர் முயன்றும் முடியாமல் போய்விட்டது. இந்தச் சங்கதி வெளிவந்தது என்னால் இருக்கலாம் என்கிற சந்தேகத்தின்மேல் என்னை இந்த விபரீதங்களுக்கு உட்படுத்தியிருக்கலாம்" என்று சொன்னேன். என்ன சொல்லி என்ன? சூப்பிரன்டென்டு குருநாதையா தம் குருநாதனான மாகாண அதிகாரியின் உத்தரவுக்கு மாறாக நடப்பதைக் கனவிலும் நினைக்கக்கூடிய பேர்வழி அல்ல.

பாளையங்கோட்டை, திருநெல்வேலி ஜில்லா 'மெடிகல் ஆபீஸரு'டைய தலைமைஸ்தானம். அவரே நான் இருந்த சிறைக்கு

வைத்திய அதிகாரி. அவர் டாக்டர் ஈவர்ஸ் என்ற துரை. திருச்சி ஜில்லா வைத்திய அதிகாரியாக இருந்த காலத்தில் அவர் எனக்கு நண்பரானார். அவருடைய வேண்டுகோளுக்கு இணங்க நான் பனமுறை திருச்சி ஜில்லா ஆஸ்பத்திரியில் ரண சிகிச்சையில் புது முறைகளைச் செய்து காண்பித்திருக்கிறேன். அவர் மனைவி யாரும் சீமையிலே படித்துத் தேர்ச்சி பெற்ற டாக்டர். அவர்கள் திருச்சியைவிட்டு மாற்றலாகிப் போனபிறகு சில வருஷங்களாக நான் அவர்களைச் சந்திக்கவில்லை. நான் பாளையங்கோட்டைச் சிறைக்கு வந்தவுடன் டாக்டர் ஈவர்ஸ் சில நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு, ஊருக்குப் போய்விட்டுப் பத்து நாட்களுக்குப் பிறகு வந்தார். வந்தவுடன் என்னைப் பார்க்க வந்தார். என்னைக் கண்டதும், அவர் கண்ணில் தாரை தாரையாக நீர் வந்துவிட்டது. "நீ ஒரு கைதியாகவும், நான் உனக்கு டாக்டராகவுமா இவ்வளவு நாள் பொறுத்துச் சந்திக்க வேண்டும்?" என்று சொல்லி, "எவ்விதத்திலும் நீ வெளியே போய்விட வேண்டும். ஜாமீன் கொடுத்துவிட்டு இந்தக் கொடுமையினின்றும் தப்பி ஏன் வெளியேறக்கூடாது?" என்றார்.

"அப்படி வெளியேறுவதென்றால் இந்த நான்கு மாதங்கள் சிறையில் இருந்திருக்க வேண்டியதில்லையே! என் தகப்பனார் நான் சிறையில் இருக்கும்பொழுதே இறந்துவிட்டார். இந்த உலகத்தில் அன்பு என்று சொல்லும் பதத்தின் பொருளை நான் அறிந்திருக்கிறேன் என்றால் அது அவருடைய அளவு கடந்த பிரியத்தினால்தான். அவர் இறந்த செய்தியைக் கோயம்புத்தூரில் எனக்குத் தெரிவிக்க வந்த ஜெயில் அதிகாரி அப்பொழுதே ஜாமீன் கொடுத்தால் என்னை விடுதலை செய்வதாகத் தெரிவித்தார். அதற்கே நான் உடன்படவில்லை. உங்களைப் போன்ற ஓர் அருமை நண்பரால் காப்பாற்றப்படக்கூடிய நிலையில் நான் இருப்பது என் அதிருஷ்டம் என்று நினைக்கிறேன். ஆகையால் எனக்கு அவசியம் தேவையான சில வசதிகளைத் தாங்கள் சிறை டாக்டர் என்கிற முறையில் எனக்கு அளித்தால் போதுமானது" என்றேன். அன்றுமுதல் எனக்கு ஒரு நேரம் பாலும், காலையில் காபியும் கொடுக்கும்படி அவர் உத்தரவு செய்தார்.

குருநாதையாவுக்கு இந்தச் சிபார்சு பிடிக்கவில்லை, எனினும் டாக்டர் எழுதிவிட்டார். என்ன செய்கிறது? "காபி போடத் தெரிந்தவர்கள் இந்தச் சிறையில் ஒருவரும் இல்லை" என்ற ஆட்சேபத்தைக் கிளப்பினார். "பரவாயில்லை. கொட்டையாக வாங்கி எனக்குக் கொடுங்கள். நானே தயாரித்துக் கொள்ளுகிறேன்" என்றவுடன், கடையிலிருந்து மலிவான பிஞ்சுக்கொட்டை ஒரு பொட்டலம் வாங்கி எனக்கு அனுப்பினார். அதை வறுத்தவுடன் எல்லாம் கருகிவிட்டது. காபி தயாரிக்க முடியவில்லை.

மறு வாரம் டாக்டர் வந்தபொழுது, "காபி குடிக்கிறாயா?" என்று கேட்டார். "இல்லை" என்றேன். ஏன் என்று விசாரிக்க, நான் வைத்திருந்த காபித்தூளைக் காண்பித்தேன். "உங்களுக்கு இவரைத் தெரியாது. இந்தக் காபியைக்காட்டிலும் நல்ல காபி இவர் குடித்துப் பழக்கமுண்டு. ஆகையால் இவருக்கு ஒரு டின் 'ஸ்டெயின்ஸ்' காபித்தூள் கொடுக்கவேண்டும்" என்று எழுதிவிட்டார் டாக்டர். குருநாதையா ஏதோ தம் பிதுரார்ஜித சொத்திலிருந்து எடுத்துக் கொடுப்பதுபோலக் கஷ்டப்பட்டார். ஒருவேளை தம் குருநாதராகிய மாகாணச் சிறை அதிகாரி என்ன சொல்வாரோ என்ற பயமோ, எனக்குத் தெரியாது. இந்தத் தனிச் சிறைவாசம் சில மாதங்கள் நடந்தது. அதன் பிறகு எனது தனிமையைத் தீர்க்க ஒரு சந்தர்ப்பம் நேரிட்டது.

ஒரு நாள் டாக்டர் ஈவர்ஸ் துரை என்னுடன் பேசிக்கொண்டிருக்கையில், சிறையில் கைதிகளுக்கு மலத்தில் கொக்கிப் பூச்சி உபத்திரவம் அதிகமாக இருப்பதால், அதைப் பரிசீலனை செய்து ஓர் அறிக்கை தயாரித்து அனுப்பும்படியாகச் சென்னைச் சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருப்பதாகத் தெரிவித்தார். "ஆனால் இந்தப் பரிசீலனை செய்யும் அநுபவம் எனக்கு இல்லை. ஆகையால் இந்த வேலை தெரிந்த ஒரு நிபுணரைக் கொண்டு பரிசீலனை செய்யவேண்டும் என்று பதில் எழுதிவிட்டேன்" என்று சொன்னார்.

"அந்த வேலை எனக்குத் தெரியும். அதைச் செய்து

கொண்டிருந்தால் எனக்கும் இந்தத் தனிமையில் பொழுது போக்காக இருக்கும். சர்க்காருக்கும் மாதம் ஒன்றுக்கு எண்ணூறு ரூபாய் வீதம் ஸ்பெஷல் ஆபீஸருக்குக் கொடுக்க வேண்டிய சம்பளம் லாபமாகும். சுமார் ஆறு மாத வேலை இருக்கலாம். மொத்தத்தில் 4800 ரூபாய் சர்க்காருக்கு ஆதாயம் ஏற்படும்" என்றேன்.

"நீயோ வெறும் தண்டனை பெற்றவன். மேலும் உன் விஷயத்தில் எதற்கும் மாகாணச் சிறை அதிகாரியிடமிருந்து கேட்டுக்கொண்டுதான் அவர் உத்தரவு கிடைத்ததன்பேரில் செய்யவேண்டியிருக்கிறது. வேலை செய்ய உன்னைக் கட்டாயப் படுத்தச் சட்டம் இல்லை. வேண்டுமானால் நீ இந்தப் பரிசோதனை செய்ய இஷ்டப்படுவதாக எழுதுகிறேன். அதற்கு உனக்குத் தேவையான உதவியை ஏற்பாடு செய்வதற்கும் உத்தரவு கேட்கிறேன். சாதகமாக உத்தரவு கிடைக்குமானால் உனக்குத் தெரிவிக்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

சுமார் பத்து நாட்களுக்குப் பிறகு உத்தரவு வந்தது. வேலை எனது சொந்த இஷ்டத்தின்மேல் நான் செய்ய ஒப்புக் கொண்டதாகத் தெளிவுபடுத்திக்கொண்டு, வேலையைத் தொடங்கும்படி எனக்கு உத்தரவு போட்டார். அதற்காக என் கீழ் வேலை செய்யச் சிறையின் சிறிய வைத்திய அதிகாரியைத் தினந் தோறும் குறைந்தது ஒரு மணி நேரம் எனது சிறைக்கு வரச் செய்ததோடு, பரிசோதிப்பதற்கு அவசியமான 'மைக்ராஸ் கோப்' (பூதக் கண்ணாடி) முதலிய கருவிகளையும், மலத்தைச் சேகரித்துக் கொண்டுவந்து கொடுத்து உதவிசெய்ய ஒரு தோட்டிக் கைதியையும் ஏற்பாடு செய்தார். தினந்தோறும் எஞ்சிய நேரங்களில் இந்தச் சிப்பந்திகளின் உதவியோடு வேலையை இரண்டு மாதத்திற்குள் முடித்து, அறிக்கையும் தயாரித்துக் கொடுத்தேன். இந்த வேலையினாலும், என்னுடன் வைத்தியக் கல்லூரியில் படித்த சிறை உதவி வைத்திய அதிகாரியாகிய நீலகண்டையருடைய துணையினாலும் எனது தனிமைச் சிறை வாசம் சகிக்கக்கூடியதாயிற்று.

இந்த வேலை முடிந்ததும் என் இடது கையில் ரத்தக்கட்டி

போன்ற ஒரு சிறிய வீக்கம் உண்டாயிற்று. அதன்மேல் காய்ச்சல் கண்டது. என் நண்பர் டாக்டர் நீலகண்டையர் வேறு வேலைக்கு மாற்றப்பட்டார். நான் சிறையிலேயே சுமார் இருபது நாட்களுக்குமேல் அவதிப்பட்டுக்கொண்டு கிடந்தேன். இந்தப் படுமோசமான நிலையில்கூட எனது தனிமை நீக்கப்படவில்லை. இரவில்மட்டும் ஒரு கைதியை என்னுடன் பூட்டிவைத்தார்கள். ஒருவேளை நான் இறந்து போய்விட்டால் உடனே சிறை அதிகாரிக்குத் தகவல் கொடுப்பதற்காகவோ என்னவோ தெரியாது. சிறை டாக்டரும் தம்மால் இயன்ற அளவு எனக்குச் சிகிச்சை செய்ய அரும்பாடு பட்டார். மூன்று முறை மயக்கம் கொடுத்துக் கையில் பல இடங்களில் சத்திர சிகிச்சை செய்தார். ஒன்றும் பயன்படவில்லை. காய்ச்சல் நாளுக்கு நாள் அதிகரித்து என் உடம்பும் மிகக் கேவலமான நிலைக்கு வந்துவிட்டது.

டாக்டர் ஈவர்ஸுக்கும் என்பொருட்டுக் கவலை அதிகமாயிற்று. "என் முன்னிலையில் நீ தினந்தோறும் நோயினால் அவதியுற, என்னால இயன்றதைச் செய்துங்கூட உனது உடல் நிலை கேவலமாகி, உனது உயிர் ஆபத்தான நிலையில் வாடிக் கொண்டிருப்பதைப் பார்க்க என்னால் சகிக்கமுடியவில்லை. என் பொருட்டாகவாவது நீ ஜாமீன் கொடுத்து வெளியே சென்று தக்க வைத்திய உதவி பெறக்கூடாதா? ஏன் பிடிவாதம் செய்கிறாய்?" என்றார். ஒரே ஒரு பதில்தான் அவருக்கு நான் சொன்னேன். "மாதம் பத்திற்கு மேலாக அளவற்ற துன்பத்திற்கும், கொடிய நடவடிக்கைக்கும் உள்ளாகிச் சிறை நீங்கும் காலம் நெருங்கும்பொழுது, ஜாமீன் கொடுத்து வெளியேபோய் வாழ்ந்திருப்பதில் என்ன பயன்? இருந்தாலும் இறந்தாலும் கவலையில்லை. அவமானத்திற்குரிய ஒரு கொடிய உத்தரவிற்கு உடன்பட இப்பொழுதும் என் மனம் இடங்கொடுக்கவில்லை. தயவுசெய்து என் நண்பர் என்கிற முறையில் என்னை மன்னிக்கவேண்டும். உங்களால் இயன்ற வரையில், அதிகாரிகள் இணங்கும்மட்டிலும் தாங்கள் செய்த உதவிகளுக்கு எனது நன்றி" என்றேன்.

அவரை அறியாமல் அவர் கண்களில் நீர் ததும்பியது. "என்ன வந்தாலும் சரி. உன்னை இந்தச் சிறையில் இறக்க விடமாட்டேன். இன்றே தந்தி கொடுத்து, உன்னை நாளைத் தினம் பாளையங்கோட்டை ஜில்லா ஆஸ்பத்திரிக்கு எனது தினசரிப் பார்வையில் வைத்துக்கொள்ளும்படி தாற்காலிக விடுதலை கோரி ஏற்பாடு செய்கிறேன்" என்றதும் என் மனம் ஆறுதல் அடைந்தது. மறுநாள் காலையில் டாக்டர் ஈவர்ஸும் அவர் மனைவியாரும் தங்களுடைய காரில் சிறையினின்றும் என்னைப் பாளையங்கோட்டை ஜில்லா ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார்கள்.

அங்கே ஒரு வாரம் தங்கினேன். மறுபடியும் ஆபரேஷன் செய்தார்கள்; பயன் இல்லை. காய்ச்சலும் அதிகப்பட்டுக் கொண்டே இருந்தது. கைமுற்றும் ஒரே வீக்கமும் வலியுமாகித் தோள்பட்டைவரையில் கனத்துவிட்டது. நெடுநேரம் உணர்ச்சியற்ற நிலையில் உளறிக்கொண்டு இருந்தேன். கடைசியாக எனக்கே உயிர் பிழைப்பது அரிது எனத் தோன்றியது.

பாளையங்கோட்டை ஜில்லா ஆஸ்பத்திரி, சிறை ஆஸ்பத்திரியைவிடக் கேவலம். சுவர்களிலெல்லாம் மூட்டைப்பூச்சி. இரவில் கூரையிலிருந்து மழை பொழிவதுபோல என் கட்டிலில் மூட்டைப்பூச்சிகள் உதிரும். படுக்கை, கட்டில் எல்லாம் மோசம். இந்தக் கஷ்டத்தை ஈடு செய்தன, டாக்டரின் அநுதாபமும், அவர் மனைவியாரின் உபசரணையும். ஒரு வாரக் கடைசியில் டாக்டரிடம் முடிவாக ஒரு வார்த்தை சொன்னேன்: "நான் இறக்கும் தறுவாயில் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் உயிர் போவதற்குள் ஒருதரம் சென்னை சென்று அங்கே ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஏதாகிலும் செய்ய முடியுமா என்று பார்த்துவிடவேண்டும் என்கிற எண்ணம் இருக்கிறது. என்னை அங்கே அனுப்புங்கள். இதுதான் நீங்கள் செய்யக்கூடியது" என்றேன்.

"உன்னைச் சென்னைக்கு அனுப்ப நான் நேற்றைத் தினமே யோசித்தேன். ஆனால் சிறை அதிகாரி குருநாதையா உன்னை

அங்கே அனுப்பச் சர்க்கார் உத்தரவு வேண்டுமென்றும், உன்னை ஜில்லா ஆஸ்பத்திரிக்குக் கொண்டுவருவதற்கு மாத்திரமே உத்தரவு கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் சொல்லுகிறார். நான் என்ன செய்யட்டும்?" என்றார்.

"நீங்கள் உத்தரவு பெறுவதற்குள் நான் இறந்து விடுவேன். அப்புறம் உங்கள் உத்தரவு வேண்டியதில்லை. ஏற்கனவே தாற்காலிகமாக இங்கே வரும்படியாகச் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டிருக்கிறேன். உங்கள் பாதுகாப்பில் என்னை நீங்கள் உடனே சென்னைக்கு அனுப்பி, பிறகு உத்தரவைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று நான் சொன்னதற்கு அவர் உடன்பட்டுத் தகுந்த வைத்திய உதவியுடன் என்னுடைய செலவில் மறு நாள் காலையில் என்னைச் சென்னைக்கு அனுப்பி விட்டார்.

ஜெனரல் ஆஸ்பத்திரியில் என்னுடன் லண்டனில் படித்தவரும் நண்பருமான டாக்டர் கோபிநாத் பண்டாலே ஸர்ஜனாக இருப்பதாகத் தெரிந்து, அவருடைய வார்டில் இருக்க அநுமதி பெற்று, முதல்தர உத்தியோகஸ்தர்கள் இருக்கக்கூடிய அறையில் வைக்கப்பட்டேன். இந்த வார்டுக்குத் தினசரிக் கட்டணம் பத்து ரூபாய். முன்பணம் கட்டி அங்கே சேர்ந்ததும், எனது ஞாபகம் அநேகமாகத் தவறிவிட்டது. பாளையங்கோட்டையிலிருந்து ரெயிலில் வந்ததும், ஆஸ்பத்திரி சேர்ந்ததும், டாக்டர் பண்டாலேயுடன் பேசியதும் கனவுபோல் இருந்தன. ஒன்றுமட்டும் இன்னும் நன்றாக ஞாபகம் இருக்கிறது. "எனது கை உபத்திரவம் என்னால் சகிக்கமுடியவில்லை. கை பாரம் தூக்க முடியவில்லை. உடனே ஆபரேஷன் செய்யவேண்டும். நீங்கள் செய்வதில் எனக்கு யாதோர் ஆட்சேபமும் இல்லை. அவசியமானால் அந்தக் கையைத் தோள் பட்டைவரையில் எடுத்துவிடுவதற்கும் எனக்குச் சம்மதம்" என்று சொன்னேன். "உன் கை உழைக்கும் ஆயுதம். அதை அவ்வளவு அவசரப்பட்டு எடுக்க எனக்கு மனம் வராது. தேவைக்குத் தகுந்தபடி செய்து காப்பாற்ற முயல்வேன்" என்றார் டாக்டர்.

ஆபரேஷன் நடந்தது. அன்று முதல் மூன்று நாட்கள் வரையில் எனக்கு ஞாபகமே வரவில்லை. நான்காவது தினத்தன்று நல்ல நினைவு வந்தது. கை எடுக்கப்படவில்லை. வலி குறைந்திருந்தது. அன்று டாக்டர் வந்து, "இனிக் கவலை இல்லை. உன் கை எடுபடாமலே மறுபடியும் உபயோகப்படும் நிலையில் இருக்கும்" என்றார். சிறுகச் சிறுக நோய் குணமடைந்துவந்தது.

என்னுடைய நிலையைப்பற்றிய விவரம் சென்னைப் பத்திரிகைகளில வெளிவந்தது. நான் ஆஸ்பத்திரிக்கு வந்த ஆறாவது நாள், பகல் பத்து மணிக்கு மாகாணச் சிறை அதிகாரி என்னை வந்து பார்த்தார். என்மேல் பிரியத்தினாலோ என் தேக நிலையின் கவலையினாலோ அவர் வரவில்லை என்பதை நான் சொல்லிவிடவேண்டும். காமிரன் துரைக்கு (Lt. Col Cameron, I. M. S.) அந்தக் காலத்தில் சிறைச் சாத்திர முறையில் நிபுணர் என்ற பெயர் உண்டு. என்னை ஏன் இவ்வளவு அவசரமாகப் பார்க்க வந்தார் என்பதிலிருந்து அவர் சிறைச் சாத்திர ஞானி என்பது தெரியவந்தது. "நீ சென்னைக்கு வந்து ஆபரேஷன் செய்துகொண்ட விவரத்தைத் தினசரிப் பத்திரிகையிலிருந்தே அறிந்துகொண்டேன். இதுவரையில் நீ பாளையங்கோட்டைச் சிறையில் கைதியாக இருந்தவன், எனது தகவல் இல்லாமல் இங்கே எப்படி வந்தாய் என்பது எனக்குப் புரியவில்லை. என் உத்தரவில்லாமல் நீ எவ்விதம் இங்கே அனுப்பப்பட்டாய் எனபதைத் தெரிந்துகொள்வதற்காக வந்தேன். அதிகார முறைப்படி விடுதலையாகாத ஒரு கைதி இங்கே வந்து சிகிச்சை செய்துகொள்வதென்பது மிகவும் அதிசயிக்கத் தகுந்தது. உன்னை யார் அனுப்பினார்கள்? எப்படி வந்தாய்?" என்றார்.

எனது உடல் நிலை மிகவும் கேவலமானதையும், டாக்டர் அனுப்பியதையும் சொன்னேன். எனது உடல் நிலையைப்பற்றி அவர் கவலை அடைந்ததாகத் தெரியவில்லை. நான் தகுந்த வைத்திய உதவியில்லாமல் சட்டப்படி சிறையில் இறந்திருந்தால் அவர் கலக்கமடைய மாட்டார். முறை தவறாக நான் வந்ததைப்பற்றியே அவர் கவலைகொண்டார். "அந்த டாக்

ரையும் சூப்பிரன்டென்டையும் அல்லவா விசாரிக்க வேண்டும்? நீ இங்கே ஆஸ்பத்திரியில் தங்கக்கூடாது. சென்னைச் சிறைக்குச் செல்லவேண்டும்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டார்.

ஒரு மணி நேரம் கழித்து டாக்டர் பண்டாலே என்னைப் பார்க்க வந்தபொழுது, "சிறை அதிகாரி கர்னல் காமிரன் துரைக்கு ஏன் உன்மேல் கோபம்? உன்னை உடனே 'பெனி டென்ஷியரி'க்குக் கொண்டுபோகவேண்டுமென்று வற்புறுத்து கிறாரே!" என்றார்.

"நான் இங்கே வந்தது முறை தவறானதாம். நான் பாளையங்கோட்டையில் முறைப்படி இறந்திருக்கவேண்டுமென் பது அவருடைய எண்ணம். தவறின முறையைத் திருத்தும் பொருட்டு என்னை மறுபடியும் சிறைக்கு அனுப்பவேண்டும் என்கிறார்போலும்!" என்று சொன்னேன்.

"எனினும் நீ இப்பொழுது சிறைக்குக் கொண்டுபோகக் கூடிய நிலையில் இல்லை என்று தெளிவாகச் சொல்லிவிட்டேன். அடுத்த வாரம் வருவதாகப் போயிருக்கிறார்" என்று தெரி வித்தார் டாக்டர் பண்டாலே.

அடுத்த வாரமும் வந்தது. தவறாது மாகாணச் சிறை அதிகாரியும் தரிசனம் கொடுத்தார். சிறைபுக இன்னும் தகுதி யில்லை என்று டாக்டர் பண்டாலே தெரிவித்தார். நான் ஆஸ்பத்திரியில் இருப்பதால் ஆங்கில ஆட்சிக்கே குறைவு வந்து விட்டதாக எண்ணிய இந்த அதிகாரி, ஜெனரல் ஆஸ்பத்திரிக் குத் தலைமை அதிகாரியான துரையிடம் முறையிட்டார். உடனே அவர் டாக்டர் பண்டாலேயைச் சந்தித்து, எவ் விதத்திலும் என்னை ஆஸ்பத்திரியில் வைப்பது தவறெனச் சொல்லியவுடன், ஒரு நிபந்தனையின்பேரில் என்னைச் சிறைக் குத் திருப்பக் கொண்டுபோக டாக்டர் பண்டாலே சம்மதித் தார். 'ஜெனரல் ஆஸ்பத்திரியில் எவ்விதச் சௌகரியங்க ளுடன் வைக்கப்பட்டிருக்கிறேனோ அந்தச் சௌகரியங்களுடன் அதற்குக் குறையாமல் சிறையில் வைக்கப்படவேண்டும்.

எனக்குச் சிகிச்சை ஜெனரல் ஆஸ்பத்திரியில்தான் நடக்க வேண்டும். தினந்தோறும் சிறையிலிருந்து நான் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு நடக்காமல் வண்டியில் கொண்டுவரப்பட வேண்டும். இந்தத் திட்டப்பிரகாரம் நான் 'பெனிடென் ஷியரி'க்குக் கொண்டுபோகப்பட்டேன்.

நான் விடுதலையாகவேண்டிய காலம் ஒரு மாதத்திற்கும் குறைவாகவே இருந்தது, எனினும் தினந்தோறும் சிறையி லிருந்து ஆஸ்பத்திரிக்குப் பெரிய கோலாகலத்துடன் கொண்டு வரப்பட்டேன். எனக்குமுன் ஆயுதம் தாங்கிய இரண்டு போலீஸ் ரிஸர்வ் படையினர் நடக்க, நான் ஒரு ரிக்ஷாவில் சவாரி செய்ய, எனக்குப் பின்புறம் இரண்டு ஆயுதம் தாங்கிய ரிஸர்வ் போலீஸ் படையினர் பின்தொடர, தினம் ஒன்பது மணிக்கு இந்த ஊர்வலம் 'பெனிடன்ஷியரி'யிலிருந்து ஜெனரல் ஆஸ்பத்திரிக்குக் கிளம்பும். ஜெனரல் ஆஸ்பத்திரியில் மூன்று மணிநேரம் ஆகும். பிறகு இதே ஊர்வலம் திரும்பும். இந்த மூடக் காட்சியைக் கண்டு சிரிப்பதா அழுவதா என்றே எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு விஷயத்துக்குமாத்திரம் கர்னல் காமிரனுக்கு நான் நன்றி செலுத்தவேண்டும். தினப்படி நான் வார்டுக்குக் கட்டி வந்த செலவு எனக்கு இல்லாமல் போய்விட்டது.

நான் விடுதலையாக வேண்டியதற்குப் பன்னிரண்டு நாட்கள் இருக்கும்பொழுது ஒரு நாள் எனது தினசரி ஊர் வலம் திரும்பியபொழுது, 'பெனிடன்ஷியரி' அதிகாரி என்னைக் கேட்டில் நிறுத்திவிட்டு, சிறையினின்று என் சாமான் களை வெளியே எடுத்துக்கொண்டுவந்து வைத்து, "நீ வீட்டிற் குப் போகலாம்; உன்னை விடுதலை செய்யும்படி உத்தரவு வந்து விட்டது" என்றார். இந்தத் திடீர் விடுதலை ஏன்? ஜெயில் சாத்திரம் இடம் கொடுத்ததா? இதெல்லாம் கர்னல் காமி ரனைத்தான் கேட்கவேண்டும்.

திருச்சிக்குத் திரும்பக்கூடிய நிலையில் நான் அப்போது இல்லை. சென்னையிலேயே என் உறவினர் மூலம் ஒரு சிறிய

வீட்டை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு சுமார் மூன்று மாத காலம்வரையில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றுத் திருச்சிக்குத் திரும்பினேன். கையில் காலணுக்கூட இல்லை. சம்பாதித்துச் சேர்த்த பணமெல்லாம் கரைந்துபோக, திருச்சி கன்டோன்மென்டில் ஒரு பாழடைந்து இடிந்த பங்களாவும், அதன்பேரில் பத்தாயிரம் ரூபாய் கடனும், வேலைக்கு உதவாது விறைத்திருக்கும் என் கை விரல்களுமே பாக்கி இருந்தன. இந்தக் கஷ்டங்களுக்கிடையிலும் மனத் தளர்ச்சி உண்டாகவில்லை. தேசீய உணர்ச்சி மேலும் வலியுற்றுக் கிளம்பியது. என் வாழ்நாளின் உதயம்முதல் என்னுடன் இருந்த வறுமையும், நோயினல் வலிமை குன்றிய உடல் நிலைமையும் பாக்கியிருந்தன.

இந்த நிலைமையில் 1923-ஆம் வருஷம் செப்டம்பரில் எனது தொழிலைத் திரும்பவும் தொடங்கினேன்.

# தொழிலில் ஊக்கம்

முதல் சிறைவாசத்தின் பயனாகத் தேசிய லக்ஷ்யங்களுக்கென அல்லும் பகலும் விடாது உழைத்து வந்த மனப் பான்மை மாறிவிட்டது. கடன் தொல்லை அதிகரித்துவிட்டது. தொழில் நடத்தாமல் இருந்தால் தினசரி வாழ்க்கைக்கு வருவா யில்லை. அரசியலில் ஈடுபடுவதற்குக் கதர் இயக்கத்தைத் தவிர வேறு துறைகளில் உழைப்பதற்கு இடம் இல்லை. எனவே மீண் டும் தொழிலை மேற்கொண்டேன். நான் சிறை சென்றதன் பயனோ உண்மையில் தொழிலில் எனக்குத் திறமைதான் இருந்ததோ அதை நான் சொல்ல முடியாது. ஆனால் ஒன்று நிச்சயம். தொழில் தொடங்கி இரண்டு மாதத்திற்குள் எனக் குத் தேவையானதற்கு மேல் வருவாய் கிடைக்க ஆரம்பித்து விட்டது.

நான் சிறை நீங்கி வெளிவந்து இரண்டு மாதங்களுக் கெல்லாம், தேச பக்தரும், தியாகியும், கொடைவள் ளலுமான ஸேட் ஜம்னுலால் பஜாஜ் திருச்சிக்கு வந்தார். எனது யோகக்ஷேமத்தை விசாரித்தார். கடன் பொறுப்பை யும் பங்களாவையும் தாம் எடுத்துக்கொண்டு, மாதந்தோறும் எனக்கு நூற்றைம்பது ரூபாய் கொடுத்தால் நான் கதர் வேலை யில் ஈடுபடமுடியுமா என்று கேட்டார். "கதர் வேலையை யாரும் சற்றுப் பழகிவிட்டால் செய்ய முடியும். ஆனால் வைத்தி யத் தொழிலை அப்படிக் கற்றுக்கொண்டு செய்ய முடி யாது" என்று சொல்லிவிட்டேன். எனக்கு ஓய்வு இருக் கும்பொழுதுமட்டும், தேசீய வேலை செய்துகொண்டு மற்ற நேரங்களில் எனது தொழிலை நடத்த முடிவுசெய்தேன். எனது தொழில் மறுபடியும் வளர்ந்துகொண் டிருந்த முறையே இந்த முடிவிற்கு வரக் காரணமாக இருந்தது. என் சிறந்த நண்பர் ராஜகோபாலாசாரியார் தம் வக்கில் தொழிலைத்

திரும்ப நடத்தவில்லை. என்னைக்காட்டிலும், எவ்வளவோ கேவல நிலையில் அவர் இருந்துங்கூட, அவர் தம் தொழிலைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. என்னைமட்டும் திரும்பவும் தொழில் தொடங்க வற்புறுத்தினர். திருச்செங்கோட்டுக் காந்தி ஆசிரமத்தைத் தொடங்கித் தொண்டர்களைச் சேர்த்துக் காங்கிரஸ் ஆக்கவேலையில் ஈடுபட்டார். தியாகத்தின் அறி குறியான அந்த ஸ்தாபனம், இன்னும் திறம்பட ராஜாஜி யுடன் உழைத்த தொண்டர்களால் நடைபெற்று வருகிறது.

மனிதன் செய்யக்கூடிய தொண்டில் சுயநலமற்ற சேவை மகோன்னதமானது. ஆசையை அடக்கி, தேவையை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைத்து, எளிய வாழ்க்கை யில் ஈடுபட்டு, சேவை செய்வதில் ஊக்கமும் உத்ஸாகமும் பெற்று, மன அமைதியுடன் மனிதன் உழைப்பில் ஈடுபடுவது துர்லபம். எனினும், அடிமைப்பட்ட நாடு முன்னேறுவதற்கு வேறு வழி இல்லை. அதிலும் ஆயிரக்கணக்காக வருவா யுள்ள தொழிலை நிறுத்தி, இல்லற வாழ்வில் துறவற மனப்பான்மை கொள்வது கடினம். இதைத்தான் ராஜாஜி செய்துவந்தார். பொதுஜன சேவை செய்பவர்களுடைய மேன்மையை நாம் சரிவர உணர்வதில்லை. பணம் பெற்றுக் கொண்டு அரசியல் ஊழியம் செய்வதில் என்ன இழிவிருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. உழைப்பவனுக்குச் சாப்பாடு, அவனைச் சார்ந்தவர்களின் சம்ரக்ஷணை, அவர்களின் நன்மை தீமை முதலியவைகளுக்குக் குறைந்தபக்ஷமான வருவாயாவது இல்லாமல் அவன் என்ன செய்யமுடியும்? மற்ற வேலைகளில் அவன் ஈடுபட்டிருந்தால் அதிலிருந்து கிடைக்கக்கூடிய ஊதியத் துக்குச் சமமான ஒரு வருவாயையாவது அவன் பெறவேண்டுமா, வேண்டாமா? இதில் இழிவு என்ன இருக்கிறது? ஊதியத்தை எதிர்பார்த்துப் பொதுஜன சேவை செய்வதில் இகழ்ச்சிக்கு உரியது என்ன என்று எனக்குப் புலப்படவில்லை. பிறருடைய உழைப்பால் உண்டான பொருளை விற்று வியாபாரம் செய்து, அதிலிருந்து லக்ஷக்கணக்காகக் கொள்ளை லாபம் சம்பாதிக்கும் ஒருவனை நாம் கண்ணியமாகக் கொண்டாடுகிறோம். அற்ப

ஊதியத்தைப் பெற்றுத் தன்னலமற்ற பொதுஜன சேவை செய்பவனை, ஊதியம் பெறுகிறவன் என்று மரியாதைக் குறைவாக எண்ணுகிறோம். அரசியல் தொண்டு மற்ற உழைப்பைக் காட்டிலும் மேன்மையானது, கஷ்டமானது; கொள்ளை லாபத்திற்கு இடம் இல்லாதது; தன்னலமற்றது. நாடு முன்னேற்றம் அடைவது, இந்த ஒப்பற்ற சேவையால்தான். இதைக்கொண்டு நமக்கு இருக்கும் தேசபக்தியை அளந்துவிடலாம்.

என்னுடைய நண்பர்களில் பெரிய மனிதர்களென்று எண்ணப்படும் பலர், நான் வைத்தியத் தொழிலில் திரும்பவும் ஈடுபட்டதை வரவேற்றார்கள். "உன்னைப்போலத் தொழில் திறமை வாய்ந்தவர்கள், தொழிலை விட்டுவிட்டுச் சிறை செல்வதால் நாட்டிற்கு என்ன லாபம்? நீ அளிக்கும் வைத்திய உதவியால் நோயுற்றவர்களுக்கு எவ்வளவு சுகம் கிடைக்கிறது! இதுவும் பொதுஜன ஊழியந்தானே? உன்னைப்போலக் கியாதி பெற்ற வைத்தியர்கள் நம் நாட்டில் இல்லையே. ஏராளமாகச் சம்பாதித்து அரசியல் வேலைக்கு அதை உபயோகப்படுத்துவது தான் உன்போன்றவர்கள் செய்யக்கூடிய சேவை" என்று உபதேசம் செய்தார்கள். எனினும் என் மனம் தேச சேவையையே நாடி நின்றது. கடனும் சோற்றுக் கஷ்டமும், என்னை நம்பியிருந்தவர்களைக் கடவுளை நம்பிக் கைவிடத் தைரியமில்லாமையுமே என் மனத்தைத் தொழில்செய்வதிலும், பணம் சம்பாதிப்பதிலும் ஈடுபடுத்தின.

"ஏழைகளுக்கு இலவச வைத்தியம் செய்தால் அது நல்ல சேவையாகாதா?" என்று சில நண்பர்கள் எடுத்துரைத்தார்கள். அதைப்பற்றி அன்று நான் செய்த முடிவு இன்றுங்கூடப் பிசகானதாகத் தெரியவில்லை. செய்யும் தொழிலில் ஊதியம் பெற்று, அதைக் கொண்டு தொழில் நடத்தவேண்டிய முறைகளுக்கு அவசியமான செலவு, அதற்கேற்ற சாதனங்கள், வசதிகள் எல்லாம் உரிய முறையில் செய்துகொள்வதற்கு வேண்டிய பணம் சம்பாதித்துத்தான் ஆகவேண்டும். பிறகுதான் வயிறு வளர்க்கும் சிந்தனை. அதன்பிறகு ஈட்டிய பொருளில் மூலதனம் சம்பாதிப்பது. இம்முறைகளில் வைத்தியம் செய்யவேண்

டிய அவசியத்தினுல் மாதம் குறைந்த பக்ஷம் நான் ஆயிரம் ரூபாய் முதல் இரண்டாயிரம் ரூபாய் வரையில் செலவு செய்ய வேண்டியிருந்தது. பெரிய ஆஸ்பத்திரி, உதவி வைத்தியர்கள், நர்ஸுகள், பிற சிப்பந்திகள், மருந்துச் செலவுகள், ஆயுதங்கள், உயர்தர ரண சிகிச்சைக்கான எண்ணற்ற பல சாதனங்கள் எல்லாம் வைத்துக்கொண்டு என் வேலையைத் தொடங்க வேண்டியிருந்ததால் செலவு அதிகமாயிற்று. ஆகையால் இன்னுரிடம் இவ்வளவு பணம் கேட்டு வாங்கி வைத்தியம் செய்ய வேண்டும் என்ற நிபந்தனைக்கு ஆளாகிவிட்டேன். இலவச வைத்தியம் என்பது என்னைப்போன்ற தனி மனிதனுல் தேவையான வசதிகளுடன் செய்யமுடியாதது. எனினும் தொழிலில் கருணை காட்டுவதற்கு நானே முடிவான அதிகாரியாகையால் எனது உணர்ச்சியை ஒட்டி யார் யார் என்ன என்ன முறையில் இலவசமாகவோ குறைந்த செலவிலோ சிகிச்சை பெறவேண்டும் என்று நானே தீர்ப்புக் கொடுக்கும்படி நேர்ந்தது. எனது அநுபவத்தில், பணம் கொடுக்கமுடியாதவர்களும், கொஞ்சம் கொடுக்கக் கூடியவர்களுமே தங்கள் சக்திக்குமீறிக் கொடுத்துவந்தார்கள். செல்வம் படைத்தவர்கள் தங்கள் நிலைமைக்கு ஏற்றவாறு, ஏழைகளைப்போலக் கொடுக்கவில்லை. இருந்தபோதிலும் பெருந்தொகைகள் பணக்காரரிடமிருந்து தான் பெற்றேன். அதனுல் நான் கண்டிப்பாகப் பணம் பெற்று வைத்தியம் செய்பவன் என்ற பழிச்சொல்லுக்கும் ஆளானேன். எனது மனம் சாந்தி அடையும்பொருட்டு இன்ன இன்ன விதமாகக் கருணை காட்டினேன் என்று இங்கே விளம்பரப்படுத்தவேண்டியதில்லை. நான் செய்திருக்கும் உபகாரத்துக்குப் பன்மடங்கு அதிகமாகவே எனது வருவாய் இருந்தது.

1923-ஆம் வருஷம் முதல் 1930-ஆம் வருஷம் வரையில் ஏழு வருஷ காலங்கள் நான் எனது தொழிலைச் செய்துவந்தேன். நாகப்பூர் தேசீயக்கொடி சத்தியாக்கிரகம், சட்டசபைப் பிரவேசம், பகிஷ்காரம் என்ற கட்சி பேதங்கள் முதலிய கிளர்ச்சிகளில் நான் சேரவில்லை. கதர் நிதி திரட்டியது, காந்திஜியுடன் தமிழ் நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்தது போன்ற

சில முயற்சிகளில் நடுநடுவே ஒவ்வொரு மாதம் வேலையை விட்டு விட்டு அலைந்தேன்.

இந்த ஏழு வருஷங்களில் என் ஆஸ்பத்திரி பெரியதாகக் கட்டி முடிந்தது. 1927-ஆம் வருஷத்தில் 'எக்ஸ்-ரே' முதலிய வைத்திய முறைக்கான வசதிகள் செய்து, அந்த வைபவங்களை ஆரம்பித்துவைக்கவேண்டுமென்று காந்தியடிகளைக் கேட்டுக் கொண்டேன். அப்பொழுது காந்திஜி தமிழ் நாட்டிற்கு மூன் றும் முறையாக விஜயம் செய்து நிதி திரட்டிவந்தார். அவரும் என் வேண்டுகோளுக்கு இணங்கி எனது புதிய 'எக்ஸ்-ரே' அமைப்பைத் திறந்துவைக்க இணங்கினார். திருச்சிக்கு, செப் டம்பர் மாதத்தில் ஒரு நாள் இரவு வந்தார். வழக்கம்போல என் வீட்டிலேயே நான்கு நாட்கள் தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ள ஏற்பாடு ஆகியிருந்தது. வந்து இறங்கின மறுநாள் 'எக்ஸ்-ரே' திறப்புவிழா. அன்றிரவு காந்திஜியின் சீடர் களுள் முதன்மையான ஒருவர் ஓர் ஆட்சேபத்தைக் கிளப்பி னார். "டாக்டர் ராஜன் தேச சேவை செய்து சிறை சென்றிருப் பதெல்லாம் நமக்குத் தெரியும். எனினும் அவர் தம் தொழிலை நடத்துவதற்காகப் பணம் வாங்கி வைத்தியம் செய்யும் ஒரு சிகிச்சைசாலையைக் காந்திஜி திறந்துவைப்பது நியாயமல்ல. இது ஒரு வியாபாரமுறைக்குத் தம் பெயரைக் கொடுத்து உதவியதாகும். ஆகையால் இந்த நிகழ்ச்சியில் காந்திஜி பங்கெடுத்துக்கொள்ளக் கூடாது" என்று வற்புறுத்தினார்.

காந்திஜி தாம் முன்னதாகவே இந்த வைபவத்தில் கலந்து கொள்ள வாக்களித்துவிட்டபடியால் அதனின்றும் எக்கார ணத்தைக்கொண்டும் பின்வாங்க முடியாது என்று சொல்லி விட்டார். "ஒரு சமயம் டாக்டர் ராஜன் தாமாகவே என்னை எனது ஒப்பந்தத்தினின்று விடுதலை செய்துவிட்டால், நான் விலகிவிடுகிறேன்" என்றும் கூறினார். ராஜாஜி இந்த வாதத் தின் நியாயத்தை எனக்கு எடுத்துரைத்து, காந்திஜியை இந்த வாக்குறுதியினின்றும் நானே விடுவித்து, ஸ்ரீமதி கஸ்தூரி பாவைக் கொண்டு திறப்புவிழாவை நடத்தலாமென யோசனை கூறினார். ஆனால் அதற்கு நான் இணங்கவில்லை. அதன்பேரில்

காந்திஜீ தாம் திறப்புவிழாவை நடத்துவதாகவும், ஆனால் அப்பொழுது பிரசங்கம் ஒன்றும் நிகழ்த்துவதில்லை என்றும் முடிவுசெய்தார். அவர் செய்யவேண்டிய ஒரு சிறு சொற்பொழிவை ஒரு காகிதத்தில் எழுதி, விழாவின்பொழுது தம் முன்னிலையில் படிக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டார்.

மறுநாள் காலையில் நான் திறப்புவிழாவிற்குச் செய்திருந்த ஏற்பாடுகள் எல்லாம் சரிவர நடந்தன. என் ஆஸ்பத்திரியில் போட்டிருந்த பெரிய பந்தலில் ஏராளமான கூட்டம் கூடியது. காந்திஜீ திறப்புவிழாவை நான் கோரியபடி நடத்திவைத்தபிறகு கூட்டத்திற்குத் தலைமை வகித்து மௌனம் கொண்டார். ராஜாஜீ அவருடைய சொற்பொழிவைப் படித்தார். அதன் கருத்து இன்றும் என் மனத்தை விட்டு அகலவில்லை.

"டில்லியில் ஹகீம் அஜ்மல்கானுடைய யுனானி ஆஸ்பத்திரியைத் திறந்துவைத்த நான் டாகடர் ராஜனுடைய ஆஸ்பத்திரியைத் திறந்துவைக்க மறுக்கமுடியவில்லை. இந்த ஸ்தாபனத்தில் ஏழைகளுக்கும் தொண்டு புரிய டாக்டர் ராஜன் மறுக்க மாட்டார். ஆதலால்தான் அவரை நன்கு அறிந்த நான் அவர் வேண்டுகோளை நிராகரிக்காமல், நண்பர்கள் வற்புறுத்தியுங் கூடக் கட்டுப்படாது இன்று இந்த வைபவத்தில் கலந்துகொண்டேன். மேல்நாட்டு முறையில் நடைபெறும் வைத்தியத்தில் நானும் ஈடுபட்டு, என் நண்பர்களையும் அதில் ஈடுபட வற்புறுத்தும்வரையில், இந்த வைத்திய ஸதாபனங்களில் நான் கலந்துகொள்ள மறுக்கமுடியாது" என்று காந்தியடிகள் சொல்லியது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. வைபவம் இனிது நிறைவேறியது. கிட்டத்தட்டப் பதினெட்டு வருஷங்கள் கடந்தும் இன்று நான் தொழில் செய்வதை நிறுத்தி, கிராம சேவையில் ஈடுபட்டும்கூட அந்த ஸ்தாபனம் உழைத்துவருகிறது. எந்த முறையில் தொடங்கப்பெற்றதோ அந்த நோக்கத்துக்கு இணங்கவே நடந்துவருகிறது என்று நினைக்கிறேன். அந்த ஸ்தாபனத்திற்குப் பொறுப்பாளியாக இப்போது நான் இல்லாவிடினும், இனி உலகச் சண்டை முடிந்து வேலைக்கான

சாதனங்கள் கிடைக்கக்கூடிய காலம் வரும்பொழுது, இந்த ஸ்தாபனத்தை நடத்துபவர்கள் என் எண்ணத்தை நிறை வேற்றுவிப்பார்களென்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

தொழில்முறையின் நிர்ப்பந்தங்களால் அரசியல் போராட்டங்களில் ஈடுபட எனக்கு அவகாசம் இல்லை. தொழிலையும் வருவாயையும் தியாகம் செய்துவிட்டு, அரசியலில் முழு நேரத்தையும் செலவிடவோ மனம் இல்லை. மேலும், அரசியல் போராட்டமென்பது, அவரவர் தங்கள் கட்சிகளுக்குப் பலம் தேடுவதிலும் ஆள்கூட்டம் சேர்ப்பதிலும் முனைந்திருந்தது. ஸ்தானங்களைக் கைப்பற்றுவது, தலைமை பெறுவது, மகாநாடுகளுக்குத் தலைமை வகிக்க முயல்வது, அதற்காகப் பணம் செலவழிப்பது முதலிய விஷயங்களில் பலர் ஊக்கம் காட்டினார்கள். தலைமை வகிக்க விரும்புவோர்களுக்குள் பொறாமை, குறைகூறல் முதலிய கேவல எண்ணங்கள் வளர்ந்து, போட்டியும் வசைச் சொற்களும் மிருந்துவந்தன. கதர் இயக்கம் தனி ஸ்தாபனமாக வளர்ந்து, முழுநேரமும் உழைக்கும் ஊழியர்களால் வியாபார ஒழுங்கிற்கு உட்பட்டு நடக்க ஆரம்பித்துவிட்டது. அதிகாரவர்க்கத்தோடு போர் புரியாமல் இருக்கும்பொழுது, தலைவர்களுக்குள்ளும் குட்டித் தலைவர்களுக்குள்ளும் நடந்து வந்த முறைகளைக் கவனித்தபொழுது, காங்கிரஸ் இயக்கத்தில் சேரவே எனக்கு மனமில்லாமல் போய்விட்டது. காங்கிரஸில் நான்கு அணா அங்கத்தினரைத் தவிர வேறு பதவியோ பொறுப்போ ஏற்க என்னால் முடியவில்லை. தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைமைக் காரியாலயம் திருச்சியை விட்டுச் சென்னைக்கு மாறிவிட்டது. என்னைப்பற்றியமட்டில் எனது அரசியல் வாழ்வு முடிவுற்றது என்றே சொல்லலாம். எனது வறுமை நீங்கி, அரசியல் வாழ்வில் ஏற்படக்கூடிய இடுக்கண்களிலிருந்து பிறர் உதவியின்றி என்னைக் காப்பாற்றிக்கொள்ளச் சக்தி பிறந்தது.

ஆனால் தேசத் தொண்டைப் புறக்கணித்து நிற்பது ஓர் உயர்ந்த நிலை என்று நினைத்து ஆனந்தப்படுவதற்கில்லை. பிறருக்கு வழிகாட்டும் முறையில் பெருமைப்படக்கூடியதும்

அல்ல. பிறந்தது முதலாக, உழைத்துத் திறமையாக வாழ்வு நடத்தி, பொருள் ஈட்டி, சுகமாக இருக்கவேண்டும் என்பதே எல்லோருடைய விருப்பமும். 'சிறைக்குச் செல்; பணம் சம்பாதியாதே, வறுமையை அணிகலமாகக்கொள்; மக்கள் பெண்டிர்களுடைய கஷ்டங்களைக் கவனியாதே; உன் நாட்டின் விடுதலை ஒன்றையே உனது உயிர் நாடியாகக் கொண்டு அதற்கான வேலையை அல்லும் பகலும் ஓயாது செய்து தியாகமூர்த்தியாக விளங்கு' என்றுதான் என் மனச்சாட்சி சொல்லியது. ஆனால் அதற்கேற்ற திடசித்தம் வேண்டாமா? எவ்வளவு தடவைதான் வறுமையை வரவேற்பது? 'வறுமையால் சிறுமைப்படவேண்டிய காலமும் நேர்ந்ததே. பிறர் கையை எதிர்பார்ப்பதில் உள்ள ஏளனம் கண்ணியமாகப் பொருள் ஈட்டுவதில் இல்லையே. பிறர் சுகப்படக் காண்கிறோம். அப்படி நாமும் இருக்கச் சக்தி இருந்தும் அவதிப்படுவானேன்?' என்ற பலஹீனமான எண்ணம் என் மனத்தில் உதித்தது.

ஆகையால் இன்னல் நிறைந்த அரசியல் வாழ்வை மறந்து தொழிலில் முழு மனத்துடன் ஈடுபட்டேன். வருஷந்தோறும் நடைபெறும் காங்கிரஸ் மகாநாட்டிற்குக்கூடப் போவதில்லை. ஆனாலும் அரசியல் போராட்டத்தின் போக்கு, கட்சிப் பிளவுகள், ஹிந்து முஸ்லிம் பிரச்னைகள், வட்ட மேஜை மகாநாடுகள் ஆகிய எலலாவற்றையும் ஊன்றிக் கவனித்துவந்தேன்.

காந்தியடிகளின் உப்புச் சத்யாக்கிரகமும், தாண்டி யாத்திரையும் ஆரம்பித்தபொழுது என் மனம் கலக்கமுற்றது. என் உள்ளே அமுங்கிக் கிடந்த தேசீய உணர்ச்சி கனலத் தொடங்கியது. மனம் தொழிலில் ஈடுபடும் ஊக்கத்தைக் கொள்ளவில்லை. சென்னை மாகாணக் காங்கிரஸ் கமிட்டி ராஜீநாமாச் செய்துவிட்டது. காங்கிரஸ் நிர்வாகிகள் ஓட்டம் பிடித்துவிட்டார்கள்.

அச்சமயம் ராஜாஜி சென்னையிலிருந்து திருச்சிராப்பள்ளி வந்து சேர்ந்தார். "காந்திஜி சத்யாக்கிரகம் செய்யத் தொடங்கிவிட்டார். அவர் கூறும் முறை எவ்வளவு விநோத

மாக இருப்பினும் அதன் உட்கருத்தைப் பற்றி நாம் ஒருவரும் ஆட்சேபிக்க முடியாது. நாடு விடுதலை அடையவேண்டும், அதுவும் அஹிம்சா முறையில் நாம் வெற்றி பெறவேண்டும். சென்னையில் தலைவர்கள் முன்வர மறுத்துவிட்டார்கள். நாம் வாளா இருக்கமுடியாது. காந்தியடிகளைப் பின்பற்றி நாமும் இயக்கத்திலே ஈடுபட்டு வேலை தொடங்கவேண்டியதுதான்" என்று சொன்னவுடன் மாகாணக் கமிட்டியின் பெயரால், காந்திஜியின் சத்தியாக்கிரக முறையைப் பின்பற்றக் கூடிய அங்கத்தினர்களைக் கொண்டு திருச்சியில் வேலைசெய்ய முற்பட்டோம்.

காங்கிரஸ் கமிட்டியில் அப்போது ஒரு பைசாக்கூடச் செலவிற்கு இல்லை. உடனே சத்தியாக்கிரக நிதி ஒன்றைத் திரட்டினோம். நான் கமிட்டியின் காரியதரிசியாகவும், ராஜாஜி தலைவராகவும் இருந்து வேலை தொடங்கினோம். தென்னாட்டில் உப்புச் சத்தியாக்கிரகம் எங்கே ஆரம்பிப்பது என்று பரிசீலனை செய்து, சர்தார் வேதரத்தினம் பிள்ளையவர்களின் யோசனையின்பேரில் வேதாரணியத்திலுள்ள உப்பளங்களில், சர்க்கார் உத்தரவை மீறி உப்பு அள்ள ஏற்பாடு செய்யப்பட்டது.

'ஏன் உப்பு எடுக்கவேண்டும்? எதற்காக அப்படிச் செய்யவேண்டும்? உப்புக்கும் சுதந்தரத்திற்கும் என்ன சம்பந்தம்?'—இவையெல்லாம் பொதுமக்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஆகையால் அதற்கென்று பிரசாரம் செய்வதை முன்னிட்டு, எப்படிக் காந்திஜி தாண்டிக்கு யாத்திரை புறப்பட்டாரோ அவ்விதமே ராஜாஜியின் தலைமையின்கீழ்த் திருச்சியிலிருந்து வேதாரணியம் வரையில் ஒரு யாத்திரை ஏற்பாடு செய்தோம். மிகுந்த உத்ஸாகத்துடன் என் பங்களாவிலிருந்து ஒரு நாள் விடியற்காலையில் ஐம்பது சத்தியாக்கிரகிகள் கொண்ட ஒரு படை கால்நடையாக யாத்திரை புறப்பட்டது.

# சத்தியாக்கிரகப் படையெடுப்பு

சத்தியாக்கிரகப் படையெடுப்பு விநோத அணிவகுப்பு. இந்தப் படைக்கு ஆட்களைத் தெரிந்தெடுத்துப் பொறுக்க வேண்டிய அவசியம் இல்லை. குறிப்பிட்ட வயசு, உடல் கட்டு, ஆகிருதி, பயிற்சி முதலியவை தேவையில்லை; சிறைக்குச் செல்லப் போதுமான தைரியம் வேண்டும்; ஒரு சமயம் போலீஸ்காரர்களால் அடிபட நேர்ந்தால் அதைச் சகித்துக்கொள்ளும் பொறுமை வேண்டும்; உண்மையும் ஒழுங்கும் அவசியம்; அஞ்சா நெஞ்சமும், அக்கிரமமான சட்டங்களை உடைத்து எறிவதில் ஆர்வமும் கொண்டவர்களாக இருக்கவேண்டும்.

இத்தகைய வீரர்கள் கொண்ட படையை வகுத்து, தலைமை பூண்டு, ராஜாஜி திருச்சியிலிருந்து பயணமானார். படையில் இரண்டு பெண்தொண்டர்கள் சேர்க்கப்பட்டனர். ஒருவர் சென்னையிலிருந்து வந்த தேசபக்த வீரசிகாமணியான ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதி அம்மையார். மற்றொருவர் நாகர்கோயிலிலிருந்து வந்த வயசு சென்ற அம்மையார். இவ்விருவரும் வேதாரணிய யாத்திரையை மற்றவர்களுடன் சேர்ந்து கால்நடையாகவே செய்ய மன்றாடியும், ராஜாஜி மறுத்துவிட்டார். ஆகவே இவர்களை ரெயில் மார்க்கமாக முன் கூட்டி அனுப்பவேண்டியதாயிற்று.

சுமார் ஐம்பது பேர்களுடன் புறப்பட்ட இந்தப் படை, வேதாரணியம் போய்ச் சேருவதற்குள், நூறு பேர்களுக்கு மேலாக அதிகரித்துவிட்டது. தடையில்லாமல் சேர்த்துக்கொண்டிருந்தால் ஐந்நூறுக்கு மேல்கூடப் போயிருக்கும். ஆனால் வழியில் இவ்வளவு பேர்களுக்கும் உணவும் மற்ற வசதிகளும் ஏற்பாடு செய்வது முடியாத வேலையானதால், இப்படையை நூறு பேர்களுக்குமேல் அதிகமாக்க முடியவில்லை.

திருச்சிராப்பள்ளிக்கும் வேதாரணியத்திற்கும் நேர் வழி நூறு மைல். திருவையாறு, தஞ்சாவூர், கும்பகோணம், மன்னார்குடி முதலிய ஊர்களின்வழியாக அது சென்றதால் கிட்டத்தட்ட நூற்றைம்பது மைல் தூரம் நடக்கவேண்டியதாயிற்று. பல வயசுள்ளவர்கள், பல மதத்தினர், பணம் படைத்தவர்கள், ஏழைகள், அதிக ஆங்கிலப் படிப்புப் படித்தவர்கள், சற்றே படித்தவர்கள், சந்நியாசி வேடம் தரித்துப் பன்னிரண்டு நாமம் சாத்தும் வைணவர் ஒருவர், நெட்டையாகச் சிலர், குட்டையாகச் சிலர், பம்பாயிலிருந்த கம்பெனிகளில் வேலை செய்துவரும் தென்னிந்தியக் குமாஸ்தாக்கள் சிலர் - இம் மாதிரியான பலவகையினர் அடங்கிய சேனை சத்தியாக்கிரக யுத்தத்திற்குக் கிளம்பியது. தினந்தோறும் காலையிலும் மாலையிலும் ஐந்து மைல் வீதம் நடக்கவேண்டியிருந்தது. அவரவர்களுக்குக் குறைந்த பக்ஷம் தேவையான உடை, தண்ணீர்ப் பாத்திரம், சோறு உண்ணக் கூடிய தட்டு, கையில் ஒரு சிறு மூங்கில் குச்சி, இவைகளே அவர்கள் தாங்கிச் சென்ற சாமான்களும் ஆயுதங்களும். படை வருகைக்கு அறிகுறியாக ஒரு டமாரமும், ஊது குழலும், சுதந்தர மூவர்ண ராட்டைக் கொடியும் முன் செல்லப் பின்னர் இருவர் இருவராக அணிவகுத்து நடக்க, பிரயாணம் ஆரம்பித்தது. இப்படையில் இன்னது நடக்கிறது என்று அறிந்துகொள்ளப் போலீசாரின் கையாட்கள் சிலரும் தொண்டர்களென்று கூறிச் சேர்ந்துகொண்டார்கள். சத்தியாக்கிரகப் படையில் மறைமுகமான ரகசிய நடவடிக்கைகளுக்கு இடம் இல்லாததால், போலீஸ் உளவாளிகளென்று தெரிந்துங்கூட அவர்களும் தடுக்கப்படாமல் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள்.

படையின் பிரயாணம் உல்லாசமாகவே நடைபெற்றது. போகும் வழியில் பிறருடைய கையை எதிர்பார்த்தே பிரயாணம் நடக்கவேண்டியதாயிற்று. சமையல் செய்து சாப்பிட்டுப் பிரயாணம் செய்வதானால் வெகு நாட்கள் பிடித்திருக்கும். தங்கும் இடங்களுக்கு முன்கூட்டியே தொண்டர்களை அனுப்பி அந்த அந்த ஊர்களில் உள்ளவர்களைக் கொண்டே வரவேற்க

வும், உபசரிக்கவும், சத்தியாக்கிரக நிதிக்கு வசூல் செய்யவு மாக யாத்திரை ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதற்கு எதிர் பாராத இடையூறுகள் பல ஏற்பட்டன. முக்கியமாகத் தஞ்சை ஜில்லா அதிகாரியாக இருந்த தாரன் துரை அவர்கள் இப் படையின் யாத்திரை நடக்கவொட்டாவண்ணம் தமது சக் தியையும் சட்டத்தையும் உபயோகித்தார். நடக்கவேண்டிய பிரயாணத்தில் பத்து மைல்களே திருச்சி ஜில்லாவைச் சேர்ந் தவை. மற்ற நூற்று நாற்பது மைல்களும் தஞ்சை ஜில்லாவில் நடைபெறவேண்டும். சத்தியாக்கிரகிகள் சட்ட விரோதமான கூட்டத்தினர் என்று பிரகடனம் செய்து, இக்கூட்டத்தாரை யாராவது எவ்விதமாவது உபசரித்தார்களானால் தண் டிக்கப்படுவார்கள் என்று கலெக்டர் தாரன் விளம்பரப் படுத்திவிட்டார். இதில் ஒரு விநோதம்: சட்ட விரோதமான கூட்டத்தாரைத் தம் ஜில்லாவில் போகவிட்டு, அவர்களை உப சரிப்பவர்களைத் தண்டிக்கும்படி உத்தரவு இருந்தது. நமது நாட்டினரின் கருணை, உணவிடும் தர்ம சிந்தனை, விருந்தினரைப் பேணி நடத்தும் சீலம், பரம்பரையாக ரத்தத்திலேயே ஊறித் தோய்ந்து கிடக்கும் நம் உன்னத உணர்ச்சிகள் எல்லாம் சட்ட விரோதமானவையாக மதிக்கப்பட்டுவிட்டன. சத்தியாக்கிர கத்தை எதிர்க்கும் முறையில், சட்டத்தைக் காப்பாற்றி மக் களை ரக்ஷிக்கும் கடமையை நடத்தவேண்டிய அதிகாரி, தாமே சட்டத்தையும் தர்மத்தையும் காற்றில் பறக்கவிடும்படி செய்த சக்திதான் சத்தியாக்கிரகத்தின் மகிமை. தஞ்சை ஜில்லா கலெக்டர் தாரன் துரையவர்கள், இந்த அக்கிரமமான உத்தரவை எதிர்த்துக் கோர்ட்டில் நாங்கள் வாதாட மாட் டோம் என்பதை நன்குணர்ந்த அதிகாரி; சத்தியாக்கிரக நுட் பம் தெரியாமல் இதில் குறுக்கிட்டார். தஞ்சைவாசிகளின் சீலத் திற்கும் அதிகாரியின் சட்ட வரம்பற்ற கொம்மாளத்திற்கும் போராட்டம் ஏற்பட்டுவிட்டது. சத்தியாக்கிரக யுத்தத்திற் காக ராஜாஜி வேதாரணியம் போகவேண்டியது அவசியம் இல் லாமல் போயிற்று. திருச்சியை விட்டுக் கிளம்பிய பதினைந்தா வது மைலிலேயே எதிர்பார்த்த பலன் ஏற்பட்டுவிட்டது என்று பெரு மகிழ்ச்சி. ஆனால் துன்பத்தை வலுவில் எதிர்

கொண்டு அழைக்கத் தயாராகவுள்ள சத்தியாக்கிரகிகள் பேரில் தடை ஏற்படாமல், விருந்தோம்பும் சாமான்ய மக்களிடத்தில் உள்ள அன்பையும் மனிதத் தன்மையையும் சோதனைக்கு உள்ளாக்கும் முறையில் கஷ்டம் ஏற்பட்டுவிட்டதை நினைத்து அவர் வருந்தினார். எனினும் போட்ட திட்டப் பிரகாரம் வழிநடப்பதெனவும், பட்டினியால் இறந்தாலும் தஞ்சை ஜில்லா மண்ணிடையே இறப்பதெனவும் தீர்மானித்துப் புறப்பட்டுவிட்டோம்.

முதல்நாள் திருச்சி ஜில்லாவிலே கழிந்தது. இரண்டாம் நாள் சாயங்காலம் தஞ்சை ஜில்லா எல்லைக்குள், தாரன் துரையின் ஆக்ஞைக்கு உட்பட்ட பிரதேசத்தில் புகுந்தோம். சத்தியாக்கிரகப் படை அங்கே வருவதற்கு முதல்நாளே ஜில்லா அதிகாரிகள், போலீஸ் அதிகாரிகள், கிராம அதிகாரிகள் எல்லோரும் நாங்கள் தங்கியிருக்கும் கோவிலடி என்னும் கிராமத்தில் முகாம் போட்டுவிட்டார்கள். அந்த ஊரில் நாங்கள் நுழைந்தபொழுது, 'கிராம வாசிகள் எங்களை வரவேற்கக்கூடாது, உபசரிக்கக்கூடாது, தங்குவதற்கு இடம் கொடுக்கக்கூடாது, சத்திரம், சாவடி எல்லாம் பூட்டப்பட்டுவிடவேண்டும். இந்த உத்தரவை மீறினால் தண்டனைக்கு உட்படவேண்டி வரும்' என்று அதிகாரிகள் பறைசாற்றினார்கள்.

இதையெல்லாம் அறிந்துகொண்ட நாங்கள் இதற்குத் தகுந்த பரிகாரங்களை ரகசியமாகவே முடித்தோம். தஞ்சாவூர் ஜில்லாவிலும் மிராசு பாத்தியம் உடைய காலஞ்சென்ற கொடியாலம் ரங்கசாமி ஐயங்கார், தாம் கோவிலடிக் கிராமத்தில் தஞ்சாவூர் ஜில்லாவின் பிரதிநிதியாக எங்களை வரவேற்பதாக ஒப்புக்கொண்டு, அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்து, தாமும் நேரில் வந்து ராஜாஜியை வரவேற்றார். கோவிலடியைச் சேர்ந்த ஒருவர், திருச்சி ஜில்லாவில் கிராமப்பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்தவர், அன்று அங்கே வந்து அவ்வூராரின் சார்பாகப் பூர்ண கும்பம் வைத்து வரவேற்றார். அன்று சாயங்காலம் திருச்சி ஜில்லாவிலேயே சாப்பாட்டை முடித்துக்கொண்டு சத்தியாக்கிரக கோஷ்டியார் புறப்பட்டு

விட்டபடியால், சாப்பாட்டுக் கஷ்டம் இல்லாமல் போய் விட்டது. வறண்டு கிடந்த காவேரி மணல்பரப்பில் அன்றிரவு பொதுக்கூட்டம் நடைபெற்றது. கிராமத்தார்களும், போலீஸ் கெடுபிடியால் என்ன நடக்கிறதென்று பார்ப்பதற்காக அக்கம் பக்கத்துக் கிராம வாசிகளும் ஏராளமாகக் கூடிவிட்டார்கள். இரவில் கூட்டம் முடிந்ததும், தொண்டர்கள் அந்த மணற்பரப் பில் படுத்து உறங்கிவிட்டார்கள். மறுநாள் காலையில் அவ் விடம் விட்டுப் புறப்பட்டுத் திருக்காட்டுப்பள்ளி சேரவேண் டும். காலையில் சிற்றுண்டி வழங்கப்பட்டது. சிற்றுண்டி கோஷ்டியாருக்கு வழங்கப்படும்வரையில் யார் அதைத் தயா ரித்தார்கள், எங்கே தயாரித்தார்கள் என்பனவெல்லாம் ரகசிய மாக இருந்தன. காலையில் எல்லோருக்கும் ஒரு கிண்ணம் தயிர் கொடுப்பதற்காக, தயிர்க் குடங்களைக் காவேரி மணலில் முதல் நாள் புதைத்து வைத்திருந்தனர். அவைகளை அன்று காலையில் எடுத்து எல்லோருக்கும் வழங்கினார்கள். உணவு கிட்டாமல், பட்டினியால் இந்தப் படை மேலே செல்ல விடாமல் தடுக்கவேண்டுமென்று எண்ணிய அதிகாரிகளின் முயற்சி வீணாகிவிட்டது.

சுமார் ஒன்பது மணிக்குத் திருக்காட்டுப்பள்ளியில் காவேரி மணலில் பொதுக்கூட்டம் நடந்தது. பகல் போஜனம் ஒரு பாழடைந்த பெரிய சிவன்கோயிலில், பேர் ஊர் தெரியாத கமிட்டியாரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கலெக்டர் துரையின் உத்தரவினாலும் போலீஸ் அதிகாரி களின் விளம்பரங்களினாலும் ராஜாஜியின் வேதாரணிய யாத்திரை தஞ்சாவூர் ஜில்லா முழுவதும் மிகவும் பிரசித்தி பெற்றுவிட்டது. போகிற இடங்களிலெல்லாம், எதிர்பாராத படி உபசரணை, விருந்து, ஏராளமான பொதுக்கூட்டங்கள் ஆகியவை அதிகாரிகள் திகைக்கும்படி நடந்தன. கும்பகோணத் தில், காலஞ்சென்ற, தேசபக்தர் பந்துலு ஐயர், கலெக்டர் உத்தரவை மீறியதாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சத்தியாக் கிரகிகளை வரவேற்ற குற்றத்திற்காக ஒரு மாத காலம் சிறைத் தண்டனை அடைந்தார். அதனால் மற்ற இடங்களில் மக்களின் உத்ஸாகம் அதிகப்பட்டதேதவிரக் குறையவில்லை.

மன்னார்குடிக்குச் சமீபமாயுள்ள ராஜப்பையன் சாவடியில் அவ்வூர் மிராசுதார், கோஷ்டியார் வரும்பொழுது ஊரை விட்டு வெளியேறிவிட்டார். ஆனால் அவருடைய தீர மனைவி யார் தாமே முன்வந்து கோஷ்டியாரை வரவேற்று உப சரித்தார். திருத்துறைப்பூண்டியில் மிராசுதார் ராமச்சந்திர நாயுடு உபசரித்தார்; அவர்களுக்கும் தண்டனை கிடைத்தது. எனினும் கோஷ்டியின் பிரயாணம் தடைப்படவில்லை. வேதா ரணியம் சேர்ந்து ஒரு நாள் ஓய்வு, உபவாசம், பிரார்த்தனை இவைகளை முடித்துக்கொண்டு, மறுநாள் விடியற்காலையில் ராஜாஜி உப்பளத்தில் உப்பை அள்ளினார். அன்றே அவர் விசாரணையும் நடந்தது; ஆறுமாதம் சிறைத் தண்டனையும் பெற்றார். அன்று இரவே திருச்சிராப்பள்ளிச் சிறைக்குக் கொண்டுபோகப்பட்டார்.

சத்தியாக்கிரகப் படைக்குத் தலைமை வகித்து நடத்த வேண்டி, ஸ்ரீமான் க. சந்தானம் அவர்களை நியமித்து மேல் நடத்தவேண்டிய வேலைத்திட்டத்தையும் வகுத்து ஏற்பாடு களை முன்னதாகவே ராஜாஜி செய்துவிட்டார். அதிகாரி களின் போக்கு விநோதமாகவே இருந்தது. சட்டத்தை மீறி உப்பு அள்ளும் தொண்டர்கள்மீது நடவடிக்கைகள் எடுக்க வில்லை. தலைவர்களை மாத்திரம் சிறைப்படுத்துவதென்பது அவர்கள் சித்தாந்தம். உப்பு அள்ளும் தொண்டர்களை அடித் துத் துரத்தி அவர்கள் கொண்டுவரும் உப்பைப் பலாத்கார மாகப் பிடுங்கி எறிந்து உபத்திரவம் செய்தார்கள். உப்பு அள் ளும் சமுத்திரக்கரை உப்பளங்களில் தொண்டர்கள் புகாவண் ணம் சப்பாத்தி, கருவேல் முதலிய முட்களைத் தண்ணீருக்குள் பரப்பியிருந்தார்கள். பூமியில் உப்புப் படர்ந்து தங்கியிருந் தால் அதைத் தண்ணீர் ஊற்றிக் கரைத்தும் வந்தார்கள். இப் படியாக இருபது மைல்களுக்கு மேலாகப் படர்ந்து கிடக்கும் வேதாரணிய உப்பளம் ஒரே போர்க்களமாக இருந்தது. போலீஸ் அதிகாரிகளுக்குத் தெரியாமல் தொண்டர்கள் உப்பு அள்ளுவது, அவர்களைத் தேடித் திரிந்து போலீஸ்காரர்கள் உப்பைப் பிடுங்குவது, போலீஸ் பாதுகாப்பை முறியடித்துத்

தொண்டர்கள் மூட்டை மூட்டையாக உப்பை அள்ளி வந்து தொண்டர் முகாமில் குவிப்பது, போலீஸ் அதிகாரிகள் பண்ணும் உபத்திரவங்களையும், அளிக்கும் அடி உதை இவைகளையும் பொருட்படுத்தாது அவர்களோடு எதிர்த்துப் போராடாமல் உப்பைமட்டும் விடாப்பிடியாக அள்ளிக்கொண்டு இரவு பகலாக உப்பைக் கொண்டுவந்து சேர்ப்பது- இவைகளே இந்தப் படையெடுப்பின் யுத்த நிகழ்ச்சிகள். ஆனால் சேதம் ஒன்றும் இல்லை. எவ்வளவு பொறுமையுடன் தொண்டர்கள் நடந்துகொண்டார்கள் என்பதைச் சத்தியாக்கிரக சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கவேண்டும். போலீஸ்காரர்களும் அடித்து உபத்திரவம் செய்தாலும், ஒருவரையும் சாகும்படி அடிக்கவில்லை.

இந்தப் போராட்டத்தில் மத்தியில் பல அவதிகளை அநுபவித்தவர்கள் வேதாரணிய வாசிகள். அவர்கள் வீட்டை விட்டு வெளியே வந்து தொண்டர்கள் ஊர்வலத்தைப் பார்க்கக்கூடாது. தொண்டர்களுக்கு உணவு அளிக்கக் கூடாது. தண்ணீர் கொடுக்கக்கூடாது. எவ்விதமான உதவியும் செய்யக்கூடாது. தெருக்களிலெல்லாம் போலீஸ் காவல். சத்தியாக்கிரகிகள் நடத்தும் தினசரிக் கூட்டத்திற்கு அவ்வூரார் ஒருவரும் போகக்கூடாது. அப்படிப் போனால் அவர்கள் அடித்துத் துரத்தப்பட்டார்கள். தொண்டர்களுக்கு உபயோகப்படும்படியான தயிர், பால், நெய், விறகு, வேறு சாமான்கள் இவை வரமுடியாமல் தடுக்கும்படி, விற்க வருபவர்களையும், சில்லறை வியாபாரிகளையும், கடைக்காரர்களையும் போலீஸ் அதிகாரிகள் கட்டுப்படுத்திவிட்டார்கள். பலவிதத்திலும் இந்தப் படை முகாமைக் கலைக்க அதிகாரிகள் எவ்வளவோ முயன்றும் பயன்படவில்லை.

ராஜாஜி வைத்துவிட்டுப் போன தலைவர் சந்தானம் சில நாள் தலைமை தாங்கி நடத்தியவுடன் அவரும் கைது செய்யப்பட்டுச் சிறைக்கு அனுப்பப்பட்டார். சிறைக்குப் போகுமுன் தலைவர்கள் தமக்குப் பிறகு இன்னார் வரவேண்டும் என்று ஏற்பாடு செய்வது முகாம் முறைகளில் ஒன்று. சிறைக்குப்

போவதென்று பட்டம் ஏற்றுக்கொண்டு போலீஸ் அதிகாரி களின் இஷ்டத்தைப் பொறுத்து ஒரு நாளோ ஒரு வாரமோ தொண்டர்படை முகாமில் அரசுபுரிந்து சிறைக்குச் செல்லும் நாடகம் சுமார் இரண்டு வாரங்கள் நடந்தது. முகாம் தலை வர்களென்று முடி சூட்டப்பட்டுச் சிறை சென்றவர்கள் முறையே சந்தானம், மட்டப்பாறை வேங்கடராமையர், சுப்பி ரமணியம், ஜி. ராமசந்திரன் முதலியோர். கடைசியாக வந்த ராமசந்திரனை மட்டும் கைதுசெய்யாமல் சிலகாலம் விட்டிருந் தார்கள். கைதுசெய்யாமல் அதிகாரிகளும் சத்தியாக்கிரகம் செய்ய முற்பட்டவுடன் போரின் முறையை மாற்றவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

வேதாரணிய சத்தியாக்கிரகத்திற்கு ஆதிமுதல் காரண மாக இருந்து, நடத்திவந்த என்னைக் கைதுசெய்யவேண்டும் என்று தஞ்சை ஜில்லா அதிகாரிகள் முயன்றார்கள். ஆனால் அதை ருஜு செய்வதற்கான சாட்சியம் கிடைக்காததால் தயங்கினார்கள். மேலும் நான் தொண்டர்படையோடு சேர வில்லை. நான் வேதாரணியத்திலிருந்து வந்து கேட்பவர்களுக்கு உசிதமான யோசனை சொல்லிவந்தேனே தவிர, நேராகச் சம்பந்தப்படவில்லை. சத்தியாக்கிரகிகள் வேதாரணியம் முகா மில் மலைபோல உப்புச் சேர்த்துவிட்டார்கள். அதைப் பிறருக்கு வழங்க முடியவில்லை. தொண்டர்கள் கைதுசெய்யப் படவில்லை. கடைசியாக முகாம் தலைவரும் கைது செய்யப் படாத நிலையில், இந்தப் போரை வேறு வழியில் நடத்தத் தீர்மானித்து என்னை அபிப்பிராயம் கேட்பதற்காகவும், மேல் நடவடிக்கை எடுப்பதற்காகவும் வேதாரணியம் வரும்படியாகத் தொண்டர்களிடம் சொல்லி அனுப்பினார்கள். நானும் அன் றிரவே சென்று காலையில் வேதாரணியம் சேர்ந்தேன். என் வரவை எதிர்பார்த்திருந்த போலீஸ்காரர்களும், நான் முகா மில் நுழைந்த அரைமணி நேரத்திற்கெல்லாம் என்னையும், முகாம் தலைவர் ராமசந்திரனையும், மற்றுமுள்ள தொண்டர் களையும், சிப்பந்திகளைத் தவிர எல்லோரையும் கைதுசெய்துவிட் டார்கள். வேதாரணியவாசியும், இந்த இயக்கம் அங்கே நடை

பெற ஆதிமுதல் ஒப்பற்ற துணையாக இருந்தவருமாகிய வேதரத்தினம் பிள்ளையும் சிறைக்குச் சென்றுவிட்டார். ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மீபதி அம்மையாரும் தண்டிக்கப்பட்டுவிட்டார். கடைசியாக நானும் மற்றத் தொண்டர்களும் கைதுசெய்யப்பட்டு எங்கள் முகாமும் அதிலுள்ள சகல சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன. அன்றைத்தினம் சுமார் இருநூறு பேர்களுக்குமேல் ஒரே தடவையாகக் கைதுசெய்யப்பட்டுத் தண்டனை பெற்றோம்.

நான் வேதாரணியத்தில் பிடிக்கப்பட்ட பிறகு, திருச்சியில் எனது பங்களாவைப் போலீஸார் முற்றுகைபோட்டு இரண்டு நாட்கள் தீவிரமான சோதனை செய்தார்கள். அவர்களுக்கு உபயோகப்படக்கூடிய ஒன்றும் சிக்கவில்லை. கிழிந்த காகிதக் கூடையில் சர்க்கார் உத்தியோகத்தில் இருந்த ஒரு சூபர்வைசர் (மராமத்து இலாகா) இந்த இயக்கத்திற்காக அனுப்பிய நன்கொடை ரசீது ஒன்று தவறிப்போய்க் கிடைத்தது. அதற்காக அவர் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். நாங்கள் எல்லோரும் ஒரு வருஷத்திற்குக் குறைந்த தண்டனை அடைந்தோம். முகாமில் ஆஸ்பத்திரிக்கு டாக்டராக இருந்து, ஊதியம் பெறுமல், தியாக உணர்ச்சியுடன் சேவை செய்து வந்த திருச்சி டாக்டர் (காலஞ்சென்ற) ராமசந்திர சாஸ்திரி அவர்களும் எங்களைப்போலவே தண்டனையை ஏற்றுக் கொண்டார்.

வேதாரணியம் போகும் சத்தியாக்கிரகிகள் நடு வழியில் தடுக்கப்பட்டு, அவரவர்கள் ஊர்களுக்கு ரெயிலேற்றிக் கட்டாயமாகத் திருப்பி அனுப்பப்பட்டார்கள். கால்நடையாகப் போலீஸார் கண்காணிப்பிற்குத் தப்பி சில கோஷ்டிகள் வேதாரணியம் சேர்ந்துவிட்டன. ஆனால் அங்கே உண்ண உணவின்றி, குடிக்கத் தண்ணீரின்றி அவதிப்படும்படி ஆகிவிட்டது. போலீஸ்காரர்களின் பயமுறுத்தலால் கிராமத்தார்கள் பயந்து வெளிப்படையாக முன் வந்து உதவி அளிக்கவில்லை. எனினும் நம் மக்களின் கருணை போலீஸ் பந்தோபஸ்திற்கும் மீறித் தொழிற்பட்டுவிட்டது. வேதாரணி

யம் வரும் தொண்டர்களுக்கென்று வழியிலுள்ள பெரிய மரங்களில், சமைத்துக் கட்டுச் சாதமாகக் கட்டி, இரவில் போலீஸார் கண்ணில் படாதபடி கிராமவாசிகள் தொங்கவிட்டிருந்தார்கள். பட்டினி கிடந்து வாடும் தொண்டர்கள் இவை இருக்குமிடம் தெரிந்து மரத்தில் ஏறிச் சாப்பாட்டு மூட்டையைக் கைப்பற்றிப் பசியாறினார்கள்.

முகாம் கலைந்து கிட்டத் தட்ட ஒரு மாதம் வரையில் இந்தத் தொந்தயுத்தம் வேதாரணியம் உப்பளங்களில் நடைபெற்றது. கடைசியாகப் போலீஸாரின் அடிக்கும் உதைக்கும் பயந்து இந்தத் தனி நபர் போராட்டம் ஓய்ந்தது. காந்தி இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டு நாங்களும் விடுதலை அடைந்தோம். உப்பளங்களில் ஏழைகள் உப்பை இலவசமாக ஆளுக்கு ஒரு தலைச்சுமை அள்ளும் பாத்தியதையைப் பெற்றார்கள். அடிபட்டு உதைபட்டுப் போராடிய வேதாரணியத்திற்கு நாங்கள் ராஜாஜியுடனும் சர்தார் வேதரத்தினம் பிள்ளையவர்களுடனும் ஜயகோஷத்துடனும் மகிழ்ச்சியுடனும் திரும்பிவந்தோம். பல்லாயிரக்கணக்கான ஏழை மக்கள் இலவசமாக உப்பு அள்ளும் காட்சியைக் கண்ணாரக் கண்டு களித்தோம்.

அந்த உப்புச் சத்தியாக்கிரகத்தின் வெற்றிச் சின்னம் இன்னும் மறையவில்லை. பலவித இடையூறுகளுக்கிடையே ஏழைமக்கள் இன்னும் வேதாரணிய உப்பளத்தில் வீணாகக் கரைந்து போகும் உப்பைத் தேவையானமட்டும் எடுத்து உபயோகப்படுத்தி வருகிறார்கள். இவ்வளவு வெற்றிகரமாகத் தென்னாட்டில் பெரிய சேவை செய்து மக்களுக்கு உழைத்த தனிப்பெருமை ராஜாஜி அவர்களையே சார்ந்தது.

# தேர்தல் அநுபவங்கள்

தீண்டாமை என்னும் பழக்கம் எவ்வளவு காலமாக நமது நாட்டில் பரவியிருக்கிறது என்பதை ஆராய்வதில் பயனில்லை. வெகு காலமாக இது நடைமுறையில் இருக்கிறது; நேற்றும் இருந்தது; இன்றும் இருந்துவருகிறது; இன்னும் சில நாட்களுக்கு நீடித்திருக்கும் என்றும் தோன்றுகிறது. இதை அறவே ஒழிப்பதற்காக முற்பட்ட புனிதகோஷ்டியின் பரம்பரையும் வெகு புராதனமானது. இதில் இன்று தோன்றியவர் மகாத்மா காந்தி. "தீண்டப்படாதவர்களும் இந்துக்கள்; இந்து மதத்திற்குப் புறம்பானவர்கள் அல்ல. என் உயிர் இருக்கும்வரையில், அவர்களை இந்துமதத்தை விட்டு விலக்கச் செய்யப்படும் முயற்சிகளுக்கு நான் இடங்கொடேன்" என்று உண்ணாவிரதம் பூண்டு, தம் உயிரைப் பணயம் வைத்துச் சத்தியாக்கிரகம் செய்து புனாவில் வெற்றி அடைந்தார் மகாத்மா காந்தி. இது நடந்தது 1932-ஆம் ஆண்டில். தீண்டப்படாதவர்களுக்கு, ஹரிஜனங்கள் - தெய்வத்திற்கு உகந்த மக்கள் - என்று நாமகரணமும் செய்தார். இன்றும் அப்பெயரை வற்புறுத்தி நிலைநாட்டி வருகிறார். அல்லும் பகலும் அவர்களுக்கென யாசித்து நிதி திரட்டிவருகிறார். அரசியல் துறையில் அவர்களுக்குப் பெருவாரியான பிரதிநிதித்துவத்தைக் காங்கிரஸ் மூலமாக அளித்தார். ஹரிஜன சேவா சங்கத்தை உண்டாக்கி நடத்திவருகிறார்.

"தமிழ்நாட்டு ஹரிஜன சேவா சங்கத்துக்கு நீ தலைமை வகித்து நடத்தவேண்டும்" என்று எனக்குத் தந்தி கொடுத்தார், நம் தலைவர் ஸ்ரீ ராஜாஜி. மறுக்க மனம் இல்லை. ஒப்புக்கொண்டேன். "நிதி திரட்டவேண்டும். நீயும் உன்னால் இயன்ற நிதி கொடுக்கவேண்டும். ஜி. ராமசந்திரனவர்களைக் காரியதரிசியாக வைத்துக்கொண்டு உழைக்கவேண்டும். இது உன் பணி" என்ற ஆசியுடன் இந்தப் பதவியை எனக்கு

அளித்தார். இப்பணியை ஏற்பதில் மகிழ்ச்சி அடைந்தேன். அதிலும் ராமசந்திரன்போன்ற தேசபக்தி ததும்பும் அறிவாளியின் உதவியும் கிடைத்துவிட்டால் எனது உத்ஸாகத்திற்குக் கேட்கவும் வேண்டுமா? இதுமட்டும் அல்ல. சி. து. கோபாலன் என்னும் ஒப்பற்ற உழைப்பாளி ஒருவரும் என்னுடன் சேர்ந்து வேலைசெய்ய முற்பட்டார். இந்த இளைஞர் உடம்பில் ரத்தத்திற்குப் பதிலாகக் குதிக்கும் பாதரஸம் ஓடிக் கொண்டிருக்கிறது என்பது எனது எண்ணம். ரத்தக் கொதிப்பு எடுத்தவன் ஓய்வில்லாது ஓடி ஆடித் திரிவான் என்று வைத்தியர்கள் சொல்வது உண்டு. ஆனால் கோபாலன் உடலில் ரத்தம்மட்டும் ஓடிக்கொண்டிருந்தால் வெகு நாளைக்கு முன்பாகவே அது கொதித்து ஆவியாகி வற்றிப் போயிருக்கும். இரவோ பகலோ வேலையென்று சொன்னால் ஒரு விநாடிகூடத் தயங்காமல், உணவு, உறக்கம் ஒன்றையும் கவனியாமல், தம் உடல், ஆவி எல்லாவற்றையும் வேலையில் ஈடுபடுத்திச் சலிக்காமல் பம்பரம்போலச் சுற்றி உழைக்கும் சுபாவம் உடையவர் கோபாலன். ஹரிஜன சேவாசங்கத்திற்கு உழைத்தபோதிலும், குருட்டு வைதிகப்பற்று உள்ளவர். கோவில், குளம், விபூதி, குங்குமம், ஜோஸியம், ஆரூடம் எல்லாவற்றிலும் பரமபக்தி. சாஸ்திரம் ஒரு காலத்திலும் பொய்க்காது என்ற நம்பிக்கை கொண்டவர். நல்ல வேளையாக ஆங்கிலம் கற்று மூளை கலங்கிவிடவில்லை. அவரைப்போல் எனது நம்பிக்கைக்கும் மதிப்பிற்கும் பாத்திரமான ஒருவரை நான் காணவில்லை. தமிழ்நாட்டு ஹரிஜன சேவாசங்கத்திற்கு உழைக்க அவ்விளைஞர் கிடைத்தபிறகு எனது கவலை நீங்கி விட்டது.

ஆனால் ஹரிஜன சேவை என்பது ஒரு பெரிய பாறையைக் கழுத்தில் கட்டிக்கொண்டு ஆழமான தண்ணீரில் நீந்துவதற்கு ஒப்பாகும்; ஜாதி ஹிந்துக்களின் ஏளனத்திற்கும் வெறுப்பிற்கும் ஆளாகும் ஒரு பணி அது. என் சமூகத்தாருக்கு என்பாலுள்ள மதிப்பு அடியோடு ஒழிந்துவிட்டது. இதனால் எனது தொழிலுக்குக்கூடச் சற்றுப் பங்கம் நேர்ந்தது. என்

சுற்றத்தார்கள் என்னை விலக்கிவைத்தார்கள். நன்மை தீமைகளுக்கு வர மறுத்தார்கள். எனக்கு, "தமிழ்நாட்டு ஹரிஜன்" என்ற நாமகரணம் செய்தார்கள். ஹரிஜனங்களுக்குப் பண்டைக்காலம்முதல் ஏற்பட்டிருக்கும் தொல்லை ஆழ்ந்த கடலை ஒத்தது. அதை நீக்க இந்த ஹரிஜன சேவாசங்கத்தைப் போலப் பல்லாயிரம் சேவாசங்கங்கள் இருந்தபோதிலும் போதா. தீண்டாமை என்னும் நோயைச் சக்திவாய்ந்த ஹிட்லரைச் சம்ஹாரம் செய்த ஆங்கில ஆட்சியால்கூட ஒழிக்க முடியவில்லை என்றால், அஹிம்சா மூர்த்தியான மகாத்மாவின் முயற்சியால் எவ்வளவு வெற்றி கிடைக்குமென்று வியப்படைய வேண்டியதாக இருக்கிறது. தீண்டாமை என்பது நமது நாட்டில் ஆதிக்கம் பெற்றுச் சட்டங்கள் இயற்றி ஆட்சி நடத்தும் சட்ட புத்தகத்தில் இல்லை. எனினும் கிராமங்களில் இன்னும் தீண்டாமை தாண்டவமாடிக்கொண்டுதான் இருக்கிறது. மனிதன் ஆட்சியைக் காட்டிலும் காலத்தின் ஆட்சி மிகவும் வலுவுள்ளது, நிச்சயமானது, சக்தியுள்ளது. மனிதன் காலத்திற்கு உட்பட்டவன். காலத்தின் போக்கினாலும் சத்தியத்தின் சக்தியாலும் மனிதன் எளிய முயற்சியாலுங்கூடத் தீண்டாமை மறைந்துவருகிறது.

ஒடுக்கப்பட்டவர்கள் தங்கள் குறைகளை அறிந்திருக்கவில்லை. அவைகளை நீக்க முயல்பவர்களின் உழைப்பை மதிப்பிடும் சக்தியும் அவர்களுக்கு இல்லை. மனம் குன்றி, ஊக்கம் குன்றி, வெறுப்பும் பொறுமையும் அதிகரித்து, ஈன வாழ்வில் பல நூற்றாண்டுகளாக உழலும் மனிதர்கள் மனம் திருந்த எவ்விதம் உழைக்கவேண்டுமென்று மதிப்பிட முடியவில்லை. "இவ்வளவு நாள் இல்லாமல் இப்பொழுது இந்த வேலையை எங்கிருந்து பிடித்தீர்கள்?" என்றுகேட்க ஹரிஜனங்களே முற்பட்டார்கள். "எங்களுக்குப் பசி அடங்கவேண்டும். தீண்டாமை ஒழிந்தாலும் ஒழியாவிட்டாலும் பாதகம் இல்லை. காந்திச் சாமியாரிடம் சொல்லி அவர் வசூலிக்கும் பணத்தை எங்களுக்குத் தலைக்கு இவ்வளவு என்று பிரித்துக் கொடுத்துவிடுங்கள்" என்றுகூடச் சொன்னார்கள். அப்படிக் கொடுத்தால்

அந்தப் பணம் எவ்வளவு சீக்கிரம் எங்கேசென்றிருக்கும் என்று நான் சொல்லத் தேவையில்லை. நமது சேவையைச் சரிவர மதிப்பிடக் கூடிய அறிவு அவர்களுக்கு இல்லாமல் போய்விட்டது. ஒடுக்கப்பட்டவர்களின் அறிவு இப்படி இருக்கிறது. அவர்களை ஒடுக்கி ஆளும் மேல்ஜாதியாரின் மனோபாவமோ பரிகசிக்கூடிய நிலைமையிலும் கேவலமாக இருக்கிறது. நந்தனுடைய திவ்விய சரித்திரத்தை அல்லும் பகலும் கதாகாலக்ஷேபங்களாகவும் நாடகங்களாகவும் காதால் கேட்டும் கண்ணால் கண்டும் ஆனந்தித்தும் ஹரிஜனங்களின்பால் உள்ள எண்ணம் எள்ளளவும் மாறாது வாழ்வு நடத்தும் நம்மை என்னவென்று சொல்வது! திருப்பாணாழ்வார் வைஷ்ணவ குருபரம்பரையில் ஆழ்வாராக இடம் பெற்று, ஜாதிவைஷ்ணவர்களால் கோயில் கட்டிக் கும்பிடும் மூர்த்தியாகி இருக்கிறார். இன்றும் தீண்டப்படாதவர்கள் அவரைத் தரிசிப்பதற்கு உட்புகவொட்டாமல் தடுத்து அவ்வாழ்வாரைக் கொண்டாடும் உயர்குலத்தோரின் மனப்பான்மையை என்னவென்று சொல்வது!

ஹரிஜன முன்னேற்றத்திற்கு உழைக்க உழைக்க மலை போன்ற இடையூறுகளைக் கண்டு என் மனம் திடுக்கிட்டது. முதலில் உண்டான மகிழ்ச்சி குறைந்து திகைப்பு மேலிட்டது. எனினும் ஜாதி ஹிந்துக்களே ஹரிஜன ஊழியத்தை நடத்த வேண்டும் என்று மகாத்மா காந்தி ஓயாமல் வற்புறுத்துகிறார். வற்றாத செல்வமும், குறையாத ஊக்கமும், திடசித்தமும், ஊழியம் செய்வதிலேயே இன்பம் நுகரும் மனமும் இதற்கு வேண்டியிருந்தன.

இந்தப் போராட்டத்தின் நடுவில், என்னை இந்திய சட்டசபைக்குக் காங்கிரஸ் கட்சியின் சார்பாகத் திருச்சி தஞ்சை ஜில்லாத் தொகுதிக்கு அபேட்சகராக நிற்கும்படியாகத் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியார் உத்தரவிட்டார்கள். 1934-ஆம் வருஷ ஆரம்பத்தில், காலஞ்சென்ற சத்தியமூர்த்தி இதற்கு நிற்பதாக இருந்தது. அவரைச் சென்னையில் ராமஸ்வாமி முதலியாரை எதிர்ப்பதற்காக நிற்கவைத்ததனால் நான் இங்கே நிற்கவேண்டியதாயிற்று. என்னை எதிர்த்

தவர் லேசான பேர்வழி அல்ல. ஏராளமான சொத்தும் செல்வாக்கும் பெற்றவர்; ஏற்கனவே இந்தத் தொகுதிக்கு அங்கத்தினராக இருந்தவர்; நிஜாம் ராஜ்யத்தில் உயர்ந்த பதவி வகித்துச் சம்பாதித்து, திருச்சி தஞ்சை ஜில்லாக்களில் நிலபுலம் வாங்கிய மிராசுதார்; வர்ணாசிரம சுயராஜ்ய சங்கத் தலைவர். நானோ ஹரிஜன சேவா சங்கத்தின் தலைமையை வகித்துக் கோயில்களைத் தீண்டப்படாதவர்களுக்குத் திறந்துவிடவேண்டும் என்று கிளர்ச்சி செய்துவருபவன். அந்தப் பெரியாரை எதிர்ப்பதற்கு ஒருவிதத்திலும் ஈடானவன் அல்ல. எனினும் காங்கிரஸின் சார்பாக அதன் செல்வாக்கையே பலமாகக் கொண்டு எதிர்க்கத் தலைப்பட்டேன். தேர்தல் தேதிக்கு ஆறு மாதத்துக்கு முன்பாகவே வாக்குச் சேகரிக்கும் வேலையில் புகுந்தேன். உப்புச் சத்தியாக்கிரகம், வட்ட மேஜை மகாநாடுகள் இவை நடைபெற்றுக் காங்கிரஸ்காரர் சிறை புகுந்து ஒடுக்கப்பட்டிருந்த காலம் அது. தேர்தலில் தோல்வியுற்றாலும், காங்கிரஸ் சங்கங்களை ஆங்காங்கே நிறுவித் தேசிய ஸ்தாபனத்திற்கு மறுபடியும் உயிர் ஊட்டினாலே போதுமானது என்று நினைத்தேன்.

வைதிகர்கள், பெரிய மடாதிபதிகள், வர்ணாசிரமிகள் எல்லோரும் என்னைப் பலமாக எதிர்த்து ராஜாபகதூர் கிருஷ்ணமாசாரியாரை ஆதரித்தார்கள். தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தாரும் (ஜஸ்டிஸ் கட்சியாரும்) கிருஷ்ணமாசாரியாரை ஆதரித்தார்கள். இரண்டு பார்ப்பனர்கள் சண்டையிடும்போது நடுவில் பிராம்மணரல்லாத தமக்குப் பெரும்பான்மையான பார்ப்பனரல்லாத வாக்காளர்கள் ஓட்டுக் கொடுப்பார்கள் என்று எண்ணித், திருச்சியில் வேணுகோபால செட்டியார் என்ற வியாபாரியும் போட்டியில் புகுந்து கொண்டார்.

இரண்டு ஜில்லாக்களுக்குமாகச் சேர்ந்து மொத்தம் முந்நூற்றுநான்கு வாக்குப் பதிவு நிலயங்கள். சில பதிவு நிலயங்களுக்குப் (போலிங் ஸ்டேஷன்கள்) போய்ச் சேருவதற்கே இரண்டு நாட்கள் பிடிக்கும். மழைக்காலம்; வண்டிகள் போக

முடியாத ஊர்கள் பல; முனிசிபாலிடிகள் பத்து. கிட்டத் தட்டப் பத்தாயிரம் சதுர மைல்களில் பரவிக் கிடந்தன, வாக்காளர்கள் இருக்கும் இடங்கள். பணம் கொடுத்து ஓட்டுப் பெறக்கூடாது என்பது எனது சங்கல்பம். 1919-ஆம் வருஷத்திய சட்டப்பிரகாரம் உண்டான மத்திய சட்டசபைக்குத் தேர்தல் அது ஐம்பது ரூபாய்க்குமேல் சர்க்காருக்குக் கிஸ்தி கட்டுபவர்களே வாக்காளர்கள். ஆகையால் அவர்கள் சில்லறைத் தொகைகளுக்கு ஆசைப்பட்டுத் தங்கள் ஓட்டை விற்கமாட்டார்கள் என்பது எனது எண்ணம். ஒவ்வொரு வாக்காளரையும் கண்டு பேசி, காங்கிரஸின் கொள்கையை விளக்கி அவர்களது ஓட்டை எனக்குத் தரும்படி கேட்க முற்பட்டு, இரண்டு ஜில்லாக்களில் உள்ள கிராமங்கள் தோறும் ஓயாமல் சுற்றித் திரிந்தேன். அதனின்று நம் நாட்டினரைப்பற்றிய சில உண்மைகளைத் தெரிந்துகொண்டேன். அவ்வுண்மைகள் இன்றைக்கும் பொருந்துவனவாகவே இருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

நமது நாட்டில் கிராம சமுதாயங்கள் சீர்குலைந்து போன பிறகு, மக்களுக்குப் பொது உணர்ச்சி, பொது நலம், இவைகளின் நயம், பண்பு எல்லாம் குன்றி அடியோடு அழிந்துவிட்டன. தேர்தல் என்றால் சிலருக்குமட்டுமே அதன் பொறுப்பும் நுட்பமும் தெளிவாகப் புலப்படுகின்றன. பெரும்பான்மையோருக்குப் பணம் சம்பாதிப்பதற்கு உரிய ஒரு சந்தர்ப்பம் இது என்றே தோன்றுகிறது. பிரசங்கம் கேட்பார்கள்; விஷயத்தையும் தெரிந்தமட்டும் அறிந்துகொள்வார்கள். ஓட்டுக் கொடுப்பதாகமட்டும் உறுதி கொடுக்கமாட்டார்கள். "இன்னும் எவ்வளவோ நாட்கள் இருக்கின்றன. இப்பொழுது என்ன அவசரம்?" என்பர் ஒரு சாரார். வேறு சிலர் எனக்கு ஒரு குட்டிப் பிரசங்கம் செய்வார்கள். ஒரு சிலருக்கு அந்த ஊரில் வீடு வாசல் இல்லாமல் அரசமரத்தடியில் காற்று, மழை, வெயில் எல்லாவற்றையும் பொருட்படுத்தாமல் தவம் கிடக்கும் பிள்ளையார் ஞாபகம் வந்துவிடும். தேர்தல் தேதிக்குள் அதற்குக் கோயில் கட்டவேண்டிய

அவசியம் தாங்கமுடியாமல் போய்விடும். இன்னும் சிலருக்குக் குளம், ஆற்றங்கரை இவைகளுக்குப் படித்துறைகள் கட்ட வேண்டிய அவசியம் தோன்றிவிடும்.

ஹரிஜன இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் என்னைக் கேள்விகள் கேட்பதற்கும் அவமதிப்பதற்கும் இந்தச் சமயங்கள் பொருத்தமாக இருந்தன. ஓட்டுப்பிச்சை கேட்பதற்குக் கும்பகோணம் சென்றேன். அந்த ஊரில் பெயர்பெற்ற பெரிய மனிதருடைய குமாரர் ஒருவர் மிக வியாபகர்; படித்தவர். தேசீய விஷயங்களை நன்கு அறிந்தவர். நான் அவரிடம் போனவுடனே என் தேர்தலைப்பற்றிய விவரங்கள் அடங்கிய அச்சிட்ட விளம்பரம் ஒன்றை எனக்குக் காண்பித்தார். அதைப் படித்தவுடன் என் விஷயமாக எவ்வளவு சிரத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார் என்பதை உணர்ந்து ஆச்சரியப்பட்டேன். "கும்பகோணம் தாலூகாவிலுள்ள ஓட்டுகள் எல்லாம் உங்களுக்குக் கிடைக்கும்படி இப்பொழுதே பிரசாரம் தொடங்கிவிட்டேன்" என்றார். தேர்தல் சூழ்ச்சியில் பழக்கமில்லாத நான், அவரைக் கொண்டாடிப் புகழ்ந்து எனது நன்றியைத் தெரிவித்துவிட்டு, மறுமுறை வருவதாகச் சொல்லிவந்தேன். அவர் எனது சார்பாக இவ்வளவு வேலை செய்ததெல்லாம், என்னிடமிருந்து ஒரு நல்ல தொகை பெறுவதற்கான முன் ஏற்பாடுகள் என்பது எனக்கு விளங்கவில்லை. தேர்தலுக்கு முன்பாக என் பிரதிநிதிகளை (ஏஜெண்டுகளை) அனுப்பி விசாரித்தபொழுது எனக்கு உண்மை விளங்கிற்று. எனக்காகப் போட்டிருந்த விளம்பரங்கள் வெளிக்கிளம்பவே இல்லை. அவற்றிற்குப் பதிலாக என்னை எதிர்த்த கிருஷ்ணமாசாரியாருக்கு ஓட்டுப் போடும்படி வற்புறுத்திய விளம்பரங்களை அவர் கையெழுத்துடன் அனுப்பியிருந்ததோடுமட்டுமன்றி, கும்பகோணம் தாலூகாவிற்கே தாம் அவருடைய காரியஸ்தராக இருந்து அதற்காக ஏராளமான தொகையையும் அவரிடமிருந்து பெற்றுக்கொண்டாரெனத் தெரிந்துகொண்டேன். மிகவும் ஏழையாக இருந்தவர்களில் பலர் காங்கிரஸின் பெயருக்காக உழைத்தார்கள். பணக்காரர்களில் சிலர்

பணம் பெற்றுக்கொண்டு காங்கிரஸுக்கு எதிராக உழைத்தார்கள்.

தேர்தல் சூதாட்டத்தில் விளையாடுவதற்கென்று ரூபாய் ஏழாயிரம் தயாரித்து வைத்திருந்தேன். தேர்தலுக்கு ஒரு மாதம் முந்தியே இந்த ரூபாய் செலவழிந்துவிட்டது. ஒருவருக்கும் ஒரு பைசாக்கூட லஞ்சமாகக் கொடுக்கவில்லை. சர்க்காருக்குச் சட்டப்படி கொடுக்கவேண்டிய கணக்கைத் தேர்தல் முடிந்து ஒரு வாரத்திற்கெல்லாம் கொடுத்து விட்டேன். ஆனால் அதற்கும் உண்மையில் செலவழிந்த தொகைக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. தற்கால ரேஷன் சட்டப்படி கல்யாணங்களுக்கு வரும்பொழுது ரேஷன் கார்டு கொண்டுவரும்படி அச்சிடுவதில் எவ்வளவு உண்மை உண்டோ அவ்வளவு உண்மைதான் தேர்தல் கணக்கிலும் உண்டு. இருபத்தொன்பதினாயிரம் ஓட்டர்களுக்குத் தேர்தல் விண்ணப்பம் இருமுறை அனுப்புவதற்கு என்ன செலவாகும்? பொதுக்கூட்டங்கள் கூட்டுவதற்குச் செலவு என்ன ஆகும்? முந்நூறு போலிங் ஸ்டேஷன்களுக்கு, ஒவ்வோர் இடத்திலும் இரண்டு பேர்கள் வீதம் அறுநூறு பேர்களுக்குச் சாப்பாட்டுச் செலவு, போக வரச் செலவு என்ன ஆகும்? வண்டி வாடகை, மோட்டார் செலவு இவையெல்லாம் என்ன ஆகும்? இவைகளெல்லாம் சர்க்கார் கணக்கில் அகப்படா. யோக்கியமாக, மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல் நடத்திய இந்தத் தேர்தலுக்கு ரூபாய் இருபத்திரண்டாயிரம் செலவாயிற்று என்றால் இது அதிகம் என நினைக்க இடம் இல்லை.

தேர்தலில் வெற்றி அடைந்தேன். ஏராளமான ஓட்டுகள் கிடைத்தன. என்னை எதிர்த்தவர்களில் செட்டியார் முன் பணத்தை இழந்துவிட்டார். கிருஷ்ணமாசாரியார் கிட்டத்தட்ட இழக்கும் நிலையில் இருந்தார். என் கையில் இருந்த சில்லறைத் தொகைகள் எல்லாம் போய்விட்டன. கடனும் ஏற்பட்டு விட்டது. சிம்லாவிற்கும் புதுடில்லிக்கும் வருஷத்தில் நான்கு மாதங்களுக்குமேலாகத் தொழிலை விட்டுவிட்டு, நஷ்டப்பட்டுக் கொண்டு அலைந்து திரிந்ததுதான் பாக்கி. இது தேசசேவையா?

மக்கள் பணியா? சுயராஜ்யம் பெறுவதற்குரிய முயற்சியா? எனக்கு ஒன்றும் புரியவில்லை. வெட்கம் கெட்ட ஒரு சர்க்காரைப்பன்முறை பலன் இல்லாமல் ஓட்டுப்போட்டுத் தோல்வியுறச் செய்யும் பொழுதுபோக்காகவே இது தோன்றியது. ஏதோ மலையைப் புரட்டுவதாக எண்ணிக்கொண்டு இரண்டாயிரம் மைல்கள் பிரயாணம் செய்து காலத்தை வீண் செய்து திரும்புவதாகவே எனக்குத் தோன்றியது. சட்ட சபையில் பிரசங்கங்கள், கேள்விகள், குறுக்குக் கேள்விகள், சர்க்காரை ஏளனம் செய்தல் இவையெல்லாம் நல்ல பொழுது போக்காக இருந்தன. சர்க்கார் கல்லுப்பிள்ளையாரைப்போல அசையாமல் தங்கள் வேலையை நடத்திவந்தது. சட்ட சபைத் தீர்மானத்திற்கும் அரசாங்க நடவடிக்கைகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. சர்க்கார்பக்கம் ஓட்டுச் செய்திருந்தால் அதிகாரிகளின் நன்மதிப்பும், நமக்கு வேண்டியவர்களுக்குச் சிபாரிசும் கிடைத்திருக்கும். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவனுதலால் அதிகார வேட்டையில் ஈடுபட முடியவில்லை.

நல்ல வேளையாக நான் 1936-ஆம் வருஷத்தில் எனது மத்திய சட்டசபை ஸ்தானத்தை ராஜீநாமாச் செய்த பிறகு இந்தத் தொகுதிக்குப் போட்டி இலலாமலே இரண்டு உப தேர்தல்கள் நடந்தன. அந்தமட்டில் தேர்தலில் நின்றவர்கள் அதிருஷ்டசாலிகள். போட்டி இல்லாமலே ஸ்தானத்தைப் பெற்றுர்கள். வருஷம் பத்தானுலும் அதே சட்டசபை அங்கத்தினர்கள் இன்னமும் அதே விளையாட்டை நடத்திக்கொண்டு வருகிருர்கள். புதிய சட்டமும் வரவில்லை. புதிய அரசியல் அமைப்பும் ஏற்படவில்லை. பழைய குருட்டு அரசாங்கமே தலைவிரித்து ஆடுகிறது. விமோசனம் என்றைக்கோ? இந்தியத் தாயின் விலங்குகள் தளர்வதைக் காணவில்லை!

# இதுதான் சட்டசபை!

சட்டசபையைக் காங்கிரஸ் பஹிஷ்கரித்த ஒத்துழையாமைக் காலத்தில் "சட்டசபை மட்டசபை" என்று ஒரு பாட்டு வழங்கியதுண்டு. காங்கிரஸ்காரர் சட்டசபைகளில் புகுவதால் நாட்டிற்கு யாதொரு பயனும் விளைவிக்க முடியாது என்று தீர்மானம் செய்து தேர்தலில் தலையிடாமல், வாக்காளர்களையும் தங்கள் வாக்குகளைப் பதிவு செய்யாமல் இருக்கும்படி வேண்டிக்கொண்டார்கள். 1919 முதல் 1934-ஆவது வருஷம் வரையில் காங்கிரஸின் சட்டசபை பஹிஷ்காரம் நடைபெற்றது. இந்தக் காலத்தில் சட்டசபைத் தேர்தல்கள் மும்முறை மூன்று வருஷத்திற்கு ஒரு தரம் நடந்தன. வாக்காளர்கள் சிறுகச் சிறுக ஒவ்வொரு தேர்தலிலும் அதிகமாகவே கலந்துகொண்டார்கள். சட்டசபைகள் அநேகமாகப் பிற்போக்கான அரசியற்கொள்கை உடையவர்களால் நிரம்பிவிட்டன. எஜமான் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்யும் மனப்பான்மை கொண்ட தாசகோஷ்டியாரைக்கொண்டு ஆங்கில அரசாங்கம் பொதுமக்கள் ஆதரவு பெற்றுவிட்டதாக நடித்து, உலகத்திற்கும் அவ்வாறே பறைசாற்றி வந்தது. பன்முறை சிறைப்பட்டு, அடிபட்டு, ஒடுக்கப்பட்ட காங்கிரஸ் சபைக்கு நாட்டில் அதிக ஆதரவு இல்லை என்று அதிகாரிகள் எண்ணினார்கள். அந்த எண்ணத்தை வற்புறுத்தி, சர்க்காரின் தயவை நாடிப் பிழைக்கும் அரசியல்வாதிகளும் ஒத்துப்பாடினார்கள்.

இதை நம்பி 1934-ஆம் வருஷத்தில் மத்திய சட்டசபைக்கு 1919-ஆம் வருஷத்திய மாண்டேகு செம்ஸ்போர்டு திட்டப்பிரகாரமே தேர்தல் நடந்தது. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் தனித் தொகுதித் தேர்தல்கள். ஹிந்துக்களுக்குள்ளேயே முக்கியமாக வங்காளம், பஞ்சாப், சிந்து முதலிய மாகாணங்களில் ஹிந்துமகாசபை காங்கிரஸோடு போட்டி

போட்டது. ஹரிஜனங்களுக்குச் சலுகை காண்பித்து, அதற்காகப் புனாவில் பட்டினி கிடந்து, அதன் முடிவில் ஹரிஜனங்களுக்குக் கிடைக்கவேண்டிய உரிமைகளுக்குமேலாகக் கொடுத்துவிட்ட மகாத்மா காந்தியின் தீர்ப்பினால் அம்மாகாணங்களிலுள்ள ஹிந்து மகாசபைக்காரர்களுக்குக் காங்கிரஸின்மேல் கோபம் மூண்டது. இது காரணமாகவே இன்றைக்கும் அம்மூன்று மாகாணங்களிலும் காங்கிரஸிற்குச் செல்வாக்குக் குறைவு. மத்திய சட்டசபைத் தேர்தல் முடிவில் காங்கிரஸ் தேசீயக் கட்சி(Congress Nationālist) என்ற பெயருடன் பத்து நபர்கள் கொண்ட தனிக்கட்சியை ஹிந்துமகா சபைக்காரர்கள் மத்திய சட்டசபையில் ஏற்படுத்திக்கொண்டார்கள். எல்லா விஷயத்திலும் காங்கிரஸ் கட்சியோடு சட்டசபையில் அவர்கள் வாக்குக் கொடுத்தபோதிலும் ஹிந்து முஸ்லிம் பிரச்னைகளில் தங்கள் வாக்கைக் காங்கிரஸிற்கு விரோதமாகக்கூட அளித்தார்கள். இந்தக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் எம். எஸ். ஆனே அவர்கள். காங்கிரஸ் கட்சியின் சார்பாக நாற்பத்திரண்டு பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். இந்தக் கோஷ்டிக்குத் தலைவர் புலாபாய் தேசாய்.

இந்தத் தேர்தலில் சென்னை மாகாணத்தில்தான் காங்கிரஸிற்குக் கலப்பில்லாத பரிபூரண வெற்றி. ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களான ராமஸ்வாமி முதலியார், ஷண்முகம் செட்டியார் இவர்களைப்போன்றவர்களும் தேர்தலில் தோற்றுவிட்டார்கள், வருஷம் ஒன்றுக்குச் சர்க்காருக்கு ஐம்பது ரூபாய்க்கு மேலான வரி கொடுத்துவரும் நடுத்தர வகுப்பினர்கள்கூடக் காங்கிரஸ் அபிமானிகளே என்பதில் சந்தேகம் இல்லாமல் போய்விட்டது. அப்பொழுது இருந்த வைஸ்ராய் லார்டு வெல்லிங்டன் பிரபுவுக்குக்கூட இந்த முடிவு ஏமாற்றத்தை அளித்தது. நாட்டில் காங்கிரஸ் செல்வாக்குள்ள ஸ்தாபனந்தான் என்று நிலைநிறுத்தப்பட்டது. இதனால் வாக்காளர்களுக்கும் பொதுமக்களுக்கும் உருவான நன்மை ஒன்றும்

இல்லை. என்னைப்பற்றிய மட்டில் அரும்பாடுபட்டுத் தொழில் செய்து சம்பாதித்த தொகையில் பெரும்பகுதி தேர்தல் போராட்டத்தில் செலவழிந்ததுமட்டும் அல்லாமல், மத்திய சட்டசபை அங்கத்தினர் பதவி கிடைத்ததும், வருஷத்தில் நான்கு மாதங்களுக்குமேலாகத் தொழிலை விட்டுவிட்டு டிலலியி லும் சிம்லாவிலும் சட்டசபைக் கூட்டத்துக்குப் போகவேண்டு மென்று ஏற்பட்டது. சட்டசபைக் கூட்டத்துக்குப் போக வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. எனினும் கூட்டம் தவருமல் அவசியம் வந்தே தீரவேண்டும் என்பது காங்கிரஸ் சட்டசபைக் கட்சியாரின் கட்டுப்பாடான முடிவு. ஆகையால் கூட்டத்துக் குத் தவருமல் போகவேண்டியிருந்தது.

தேர்தலில் வெற்றிபெற்றபிறகு சில நாள் வரையில் பணம் செலவழிந்துபோன கவலை ஏற்படவில்லை. வெற்றியின் வெறி உள்ளக்கிளர்ச்சியை அடக்கி வந்தது. எனக்கு வாக்குக் கொடுத்தவர்களின் பெருந்தொகையும், பத்திரிகைகளின் விமர் சனங்களும் மனத்திற்கு மகிழ்ச்சியை அளித்தன. மத்திய சட்ட சபைக் கூட்டத்துக்கு வருமாறு வைஸ்ராயிடமிருந்து உத்த ரவு கிடைத்தவுடனே மிகப் பெருமையுற்றேன். அந்தக் கடி தத்தைப் பல நிமிஷங்கள் திரும்பத் திரும்ப ஊன்றிப் படித்து ஆனந்தப்பட்டேன். டிலலிக்குப் புறப்படுவதில் ஓர் ஆர்வம். அந்தப் பிரயாணத்திற்குத் தேவையானவைகளைச் சேகரிப்பதில் கவலை. அங்கத்தினர் பதவிக்குரிய மகிமை குறையாது சகல ஏற் பாடுகளையும் செய்துகொண்டு, என் மோட்டார்கார் உட்பட, வேலைக்காரர்கள் சகிதம் புறப்படுவதில் ஊக்கங்கொண்டேன். முதல் வகுப்பில் ரெயில்வண்டிப் பிரயாணம், சிப்பந்திகளுக்குச் செலவு, டில்லியில் தினசரிப் படி, மோட்டார்வண்டிச் செலவு, ரெயில் செலவு எல்லாம் சர்க்கார் செலவில் அங்கத்தினர் களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததால் இந்தச் சுகாநுபவம் சற்றேனும் குறையக்கூடாதென்று எண்ணி டில்லி சென்றேன். நான் தங்கச் சர்க்கார் கட்டிடம் ஒன்று 'ரிசர்வ்' செய்திருந்தது. மொத்தத்தில் அங்கத்தினர் பதவியைப் பரிபூரணமாக அநுப விக்கவேண்டுமென நினைத்து அப்படியே செய்தேன்.

நான் சட்டசபைக்குள் முதல் முதலாக நுழைந்தது டில்லி யில்தான். அதன் போக்கு, முறை, அங்கத்தினர்களுக்கு உரிய அதிகாரம் இவற்றில் ஒன்றும் எனக்குத் தெரியாது. காலஞ் சென்ற தேசபக்தர் சத்தியமூர்த்தி இந்த உத்தியோகத்தில் தேர்ந்த நிபுணர். சென்னைச் சட்டசபையில் அங்கம் வகித்துப் போராடிப் பயிற்சி பெற்றவர். சட்டசபைகளுக்கென்றே பிறந்தவர் என்று சொல்லலாம். அவருக்கு இருந்த தீவிர உணர்ச்சியும், யுக்தியும், நாவன்மையும், பழக்கமும் எனக்கு இல்லை. ஆதலால் இந்த வேலையில் அவர் காட்டிவந்த முறைகளைக் கூர்ந்து கவனித்து, அவர் அறியாமலே அவரை என் குருவாகக் கொண்டேன். அவர் கேட்கும் கேள்விகளில் பலன் பிறக்குமோ இல்லையோ, பேச்சில் அநுகூலம் உண்டா குமோ இல்லையோ, எல்லாம் நிஷ்காம்ய கர்மம் என்னும் முறை யில், தமது சாமர்த்தியத்தை வாக்காளர்களும் பத்திரிகைக் காரர்களும் வியக்கும்படி அவர் உபயோகித்தது எனக்கு வியப்பை உண்டாக்கியது. அவருடைய பெருமையும் புகழும் பிறருக்கு உதவும்படி ஆதரவு அளிக்கக்கூடிய தன்மை அவரி டம் இல்லாதபோதிலுங்கூட, அவர் வாதாடும் திறமையை யாரும் இகழ முடியாது.

சத்தியமூர்த்திக்குப் பத்திரிகைக்காரர்களிடம் எப்பொழு தும் சலுகை உண்டு. அவர்களுடைய நன்மதிப்பையும் நட் பையும் பெற எல்லாவித முயற்சியும் செய்வார். தமக்கு வேண்டிய விளம்பரம் குறையாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்வார். அவருடைய பேச்சின் திறத்தினால் பத்திரிகைக் காரர்களும் அவரது சொற்பொழிவைப் பிரசுரிப்பதில் ஆர்வம் காட்டுவார்கள். கட்சித் தலைவர்களைக்காட்டிலும் அவருடைய பேச்சுக்கு விளம்பரம் அதிகம் உண்டு. சாதாரணமாக எல்லா அங்கத்தினர்களுடைய பிரசங்கங்களும் கேள்விகளும் தினசரிப் பத்திரிகைகளில் வெளியாவதில்லை. கட்சித் தலைவர்களின் பிரசங்கங்களே முழுவதும் வெளிவரும். சர்க்கார் தரப்புப் பதிலும் பிரசங்கங்களும் நன்கு வெளியாகும். என்னைப் போன்ற சில்லறைப் பேர்வழிகளுடைய நீண்ட பேச்

களுக்கு மூன்று நான்கு வரி இடமே கிடைக்கும். அதிலும் பெருவாரியான கட்சிக்காரர்களுள் ஒருவனாக இருந்தால் பேசவே சந்தர்ப்பம் கிடைப்பது அரிது.

ஒவ்வொரு கட்சியிலும் ஒவ்வொருவர் பேச அநுமதிப்பது சட்ட சபைத் தலைவரின் முறை. அதிகார வர்க்கத்தினருக்கு மட்டும் சலுகை அதிகம். சிறுபான்மைக் கட்சி அங்கத்தினர்களுக்கோ பேசும் முறை அடிக்கடி கிடைக்கும். அநாமதேயக் கட்சிக்காரர்களுக்கும் கிடைக்கும். ஆனால் காங்கிரஸ்காரர்கள் நாற்பது பேர்களுக்கு மேலாக இருந்ததால் என்னைப் போன்றவர்களுக்கு அவகாசம் கிடைப்பது அரிது. கிடைத்து, அருமையாகப் பேசினாலுங்கூடப் பத்திரிகைகளில் நன்றாக விரிவாகப் போடமாட்டார்கள். இந்தக் குறைபாடு சென்னைச் சட்டசபையில் காங்கிரஸ் ஆட்சி நடந்த காலத்தில் நன்கு வெளிப்பட்டது. காங்கிரஸ் அங்கத்தினர் நூற்றுக்கணக்கானவர்கள். எல்லோரும் நன்கு பேசக்கூடியவர்கள். எதிர்க் கட்சியினரான முஸ்லிம் லீகரும் ஜஸ்டிஸ் கட்சிக்காரரும் முப்பது பேர்கள்கூட இல்லை. வாக்கு முழுவதும் காங்கிரஸ் கட்சியின் கையில் இருந்ததால், எதிர்க்கட்சிக்காரருக்குப் பேசும் சந்தர்ப்பம் ஏராளமாகக் கிடைத்தது. பேச முடியவில்லை என்கிற குறை காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்களுக்கு உண்டு. அதேதான் டில்லி சட்டசபையிலும் நடந்தது.

கட்சித் தலைவர் புலாபாய் தேசாய்; உபத்தலைவர் கோவிந்த வல்லப பந்த்; காரியதரிசி சத்தியமூர்த்தி. இவர்களுடைய பேச்சுக்கள் விரிவாகப் பத்திரிகைகளில் வரும். மற்றவர்களுடைய பேச்சு, சுருக்கமாகத்தான் வரும். ஆனால் கேள்விகளும் பதில்களும் விவரமாக வெளியாகும். சர்க்கார் அங்கத்தினர்கள் எதிர்க்கட்சியில் முக்கியமாக இருக்கும் அங்கத்தினர்களைக் கண்டு தனிப்பட்ட முறையில் விருந்துக்கு அழைத்து, அவர்களுடன் சல்லாபம் செய்வது உண்டு. ஆனால் காங்கிரஸோ இம்மாதிரியான உறவு கொண்டாடக் கூடாது என்று திட்டம் வகுத்திருந்தது இதை இரண்டொரு சமயம் மீறி நடந்தவர்களைத் தலைவர் கண்டிக்க நேர்ந்தது. இந்தத் தடையைச்

சர்க்கார் அங்கத்தினர்கள் வரவேற்கவில்லை. தனிப்பட்ட முறையில் அங்கத்தினர்கள் தங்கள் ஓட்டைக் கொடுப்பதற்குப் பதில்உதவியாகச் சர்க்கார் அங்கத்தினர்களிடம் கோரும் சலுகைக்கு இடமில்லாமல் போய்விட்டது. காங்கிரஸ் கட்சியினர் தங்கள் வாக்கைத் தனி முறையில் உபயோகிக்கக் கட்சிக் கட்டுப்பாடு இடமளிக்கவில்லை. ஆகையால் சட்டசபை அங்கத்தினர்களுக்குச் செல்வாக்குக் கிடைக்கவில்லை. மேலும் இன்ன இன்ன தீர்மானங்களில் பாதகமாகவோ சாதகமாகவோ ஓட்டுப் போடவேண்டும் என்று கட்சிக் கூட்டத்தில் தீர்மானம் செய்துவிட்டபிறகு சபையில் அதைப்பற்றிப் பேச வேண்டிய அவசியமும் இல்லை.

கட்சி அங்கத்தினர்களின் தணிக்கை, ஓட்டுச் செய்யும் பொழுதுதான் தேவை. மற்ற நேரங்களில் அங்கத்தினர்கள் தம் இஷ்டம்போலச் சட்டசபையின் எந்தப் பாகத்திலாவது பொழுது போக்கிக்கொண் டிருக்கலாம். அகில இந்திய சட்டசபைக் கட்டிடம் அதிகச் செலவில் எல்லாவிதமான சுகபோகங்களுடனும் அமையப் பெற்ற பிரம்மாண்டமான வட்ட மாளிகை. கூட்டம் நடக்கும் இடம்தவிர, பொழுது போக்கு அறைகள், சிற்றுண்டி வசதி, சுகாதார வசதிகள் எல்லாம் அமைந்த இடம் அது. வீட்டைவிடச் சட்டசபைக் கட்டிடமே பொழுதுபோக்கிற்கு உகந்த இடம். சட்ட சபையின் புத்தக நிலை நேர்மையான முறையில் வெகு அழகாகக் கட்டப்பட்டுள்ள இடம்; படிக்கப் புத்தகங்களும் பத்திரிகைகளும் அமைந்து, எழுதத் தேவையான வசதிகளுடன், விசாலமாகக் காற்றோட்டத்துடன், படிப்போர் மனத்தில் மகிழ்ச்சியைத் தரும் மாளிகை. அதில் படிப்பதும், பொழுது போக்குவதும் எனக்கு மிகவும் ஆறுதலை அளித்தன.

வைஸ்ராய் மாளிகையில் அங்கத்தினர்களுக்கு விருந்துகள் நடக்கும். ஆனால் அங்கே செல்வதற்குக் காங்கிரஸ் கட்சியாருக்குத் தடை இருந்தது. மற்றக் கட்சிக்கு இந்த நிபந்தனைகள் இல்லை. சட்ட சபைக்கு அங்கத்தினர்கள் வந்து தீர வேண்டிய அவசியமும் இல்லை. தினசரிப் படியை வங்கிக்கொண்டு

டில்லியில் சுற்றித் திரியலாம். ஆனால் காங்கிரஸ் கட்சிக்கு மட்டும் நிபந்தனைகள் உண்டு. சபைக்கு வர முடியாமல் போனால் அதற்குக் கட்சித் தலைவரின் உத்தரவு வேண்டும். சபைக்கு வந்து சட்டசபையின் கட்டிடத்தில் எந்தப் பாகத்தில் இருந்தாலும் கட்சியின் 'கொறடா'வுக்குத் தகவல் கொடுத்துவிட வேண்டும். கட்டாயமாக வர முடியாமல் ஏதாவது அலுவல் ஏற்படுமானால் சர்க்கார் தரப்பில் எப்பொழுதும் ஓட்டுச் செய்யும் யாராவது ஒரு நபரை வராமல் இருக்கச் செய்ய வேண்டும். இதை 'ஜோடி சேர்ப்பது' (Pairing) என்று சொல்வது வழக்கம். எவ்விதத்திலும் நமது ஓட்டுப் பலம் குறையக் கூடாது என்பது இந்த நிபந்தனையின் பொருள். இவ்வளவு திட்டம், கட்டுப்பாடு இவைகளுடன் கட்சியை நடத்தி, மற்றக் கட்சிகளோடு அவர்கள் ஆதரவையும் பெற்று, சர்க்காரை ஓட்டுமூலம் தோற்கடிப்பது சுலபமான வேலை அல்ல. ஆனால் அப்படி அடையும் வெற்றியைப்பற்றிக் காங்கிரஸ்கட்சியார் பெருமை கொள்வதற்கு இடம் இல்லை.

சர்க்காருக்கு விரோதமாக எவ்வளவு அதிக வாக்குகள் கிடைத்தபோதிலும் அதற்குப் பலன் ஒன்றுதான். இந்த முடிவு சர்க்கார் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தாது. சட்ட சபையில் தீர்மானங்கள் தோற்றுவிட்டால் சர்க்கார் நடவடிக்கைகள் பாதிக்கப்படமாட்டா. வெற்றி பெற்ற சமயத்தில் ஆனந்தக் கூக்குரல் கிளப்புவதும், மேஜையைத் தட்டுவதும், "பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டு நட" என்று கொக்கரிப்பதுமே நாங்கள் அடைந்த மகிழ்ச்சி. பத்திரிகைகளின் பேரொலியும் சில நாட்களுக்கு முழங்கும். ஒன்றுக்கும் அசையாத சர்க்கார்ப் பிள்ளையார் என்றும் போன போக்கிலேயே நடந்துவரும். 'இதற்காகவா இந்தப் பாடு, இந்தத் தியாகம், இந்தச் செலவு, இந்தப் பொழுது போக்கு?' என்றுதான் எனக்குத் தோன்றியது.

வேலை இல்லாத பணக்காரர்களின் பொழுது போக்குக்குச் சரியான இடம் இது. மகாத்மா காந்தியின் கடுமையான ஒழுக்க நிபந்தனைகளுடன் நடக்கும் காங்கிரஸ் கட்சியின

ருக்கு இது இடமல்ல. முதல் வருஷத்தில், புது உணர்ச்சி, புதிய சம்பவம் முதலிய அநுபவங்களினுல் பொழுது போனது தெரியவில்லை. இரண்டாம் வருஷத்திலேயே எனக்கு அலுப்பு ஏற்பட்டுவிட்டது. அதே சட்டசபைதான் இதுவரையிலும் அலுக்காமல் சலிக்காமல் நடந்து நாடகமாடி வருகிறது. அங்கத்தினர்கள் ஒருவர் போனுல் மற்றொருவர் வந்து அந்தக் காலியிடத்தில் அமர்ந்து வருகிருர்கள். ஆனுல் அவர்களுக்குத் தேர்தல் போராட்டம் இல்லை. சுகமாக இருந்து, சுகமாகப் போய், சுகமாகத் திரும்பி வந்துகொண் டிருக்கிருர்கள். சர்க்கார் தோல்வி அடைந்து தழும்பு ஏறிவிட்டது. சற்று நேரத் தோல்வி உணர்ச்சியும் போய்விட்டது. இந்தச் சட்டசபை இருந்தாலும் இறந்தாலும் ஒன்றேதான். நாட்டிற்கும் மக்களுக்கும் இதனுல் யாதொரு பயனும் இல்லை. இதே சட்ட சபைக்குத் திரும்பவும் தேர்தல் நடத்துவது என்ன கேலிக் கூத்து? இந்த நாடகம் அதிகார வர்க்க ஆட்சியில் 1919-ஆம் வருஷம் முதல் இன்றுவரை நமது நாட்டில் நடந்துவருகிறது!

# அஞ்ஞாத வாசம்

எதிர்பாராத முறையில் எனது டில்லி சட்டசபை வாழ்வு முடிவிற்கு வந்தது. ஏராளமான பணச்செலவில் சட்ட சபையில் புகுந்தேன். தொழிலை ஒழுங்காக நடத்தி உழைத்திருந்தால் செலவழிந்த பணத்தையும் வாங்கின கடனையும் ஒருவாறு மிகுத்துவைத்திருக்கலாம். ஆனால் அதற்கு அவகாசம் எங்கே? வருஷத்தில் நான்கு அல்லது ஐந்து மாதங்கள் டில்லியிலும் சிம்லாவிலும் கழித்துவிட்டுத் திரும்பினால் நான் வருவதற்காக நோயும் நோயாளியும் காத்திருப்பார்களா? வக்கீல்களைப்போல வாய்தா பெற்றுக்கொண்டு என் 'கேசுகளைத்' தள்ளிப்போட முடியவில்லை. என்னைத் தேடிவந்த நோயாளிகள் வேறு வைத்தியர்களைத் தேடிச் சென்றுவிட்டார்கள். வருவாய் குறைந்ததோடு இந்தக் கஷ்டம் நின்றுவிடவில்லை. என் ஆஸ்பத்திரிச் சிப்பந்திகளும், உதவி வைத்தியர்களும் குறையாயாமலும், மற்றச் செலவுகள் குறையாமலும் வைத்திருக்க வேண்டியிருந்தது. "உங்களைப் போன்றவர்கள் இந்தச் சட்ட சபைகளுக்குப் போவது பல விதத்திலும் எங்களுக்கும் உங்களுக்கும் நஷ்டத்தையே உண்டுபண்ணுகிறது. உங்களுக்குத் தொழிலில் கிடைக்கும் ஊதியம் போய்விடுகிறது: எங்களுக்கு நம்பிக்கையுள்ள, பழகின வைத்தியர் ஆபத்திற்குக் கிடைப்பதில்லை. உங்களைப்போன்ற வைத்தியர்கள் தொழிலைத்தவிர வேறு ஒன்றையும் கவனிக்கக்கூடாது" என்று என் நண்பர்கள் பன்முறை வற்புறுத்தத் தொடங்கிவிட்டார்கள். அவர்கள் சொல்வதில் நியாயம் இருப்பதாகவே எனக்கும் தோன்றியது.

எனினும் எனது பொறுப்பை இருவிதத்திலும் எப்படி நிறைவேற்றுவது என்பதே என் கவலை. மாதக் கணக்காகத் தஞ்சை, திருச்சி ஜில்லா மூலை முடுக்குகளிலெல்லாம் வீடு வீடாகச் சென்று சட்டசபைத் தேர்தலில் எனக்கு வாக்குக் கொடுக்கும்படி மன்றாடி, பொது ஜனங்கள் தேர்ந்தெடுத்து

அனுப்பியபிறகு, சட்டசபைக்குப் போகாமல் இருப்பது எப்படி? வாக்காளர்கள் என்னைப்பற்றி என்ன நினைப்பார்கள்? மறுமுறை பிரசங்க மேடைகளிலும், காங்கிரஸ் கூட்டங்களிலும் நான் எப்படி நேர்மையுடன் பேசமுடியும்? தொழிலில் கவனம் இருந்தால் அரசியல் துறையில் பொறுப்பேற்று உழைக்க முன்வந்திருக்கக் கூடாது. வந்த பிறகு தொழிலைப் பற்றியும், நோயாளியின் கஷ்டத்தைப்பற்றியும் சிந்தனை செய்துகொண்டு துக்கப்படுவது நியாயமல்ல. ஒன்று, தொழிலை விடவேண்டும்; அல்லது சட்டசபைகளையும், தேர்தல்களையும், காங்கிரஸ் இயக்கத்தில் முழு நேரமும் ஈடுபடுவதையும் விட்டுவிடவேண்டும்.

இந்தத் திரிசங்கு சொர்க்கத்தில் மனம் அல்லல்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில், எதிர்பாராத ஒரு வழியில் சட்டசபையிலிருந்தும், அரசியல் துறையினின்றும் நீங்க வேண்டி வந்தது. சுமார் முப்பது வருஷங்களுக்கு மேலாக அரசியல் துறையில் பலவிதமான கஷ்டங்களுக்கு உள்ளாகி என் குடும்ப வாழ்க்கையையும் துறந்து தொழிலை விட்டுச் சிறைவாசத்துக்கு ஆளாகி, நான் அடைந்த துன்பங்கள் எல்லாம் என் மனத்திற்கு மகிழ்ச்சியைக் கொடுத்தனவே தவிர, துக்கத்தை உண்டுபண்ணவில்லை. அதைப்பற்றிச் சிந்தனை செய்யக்கூட மனம் இடம் கொடுக்கவில்லை. ஆனால் சட்டசபைக்குப் போவதில் அவ்வளவு உத்ஸாகம் உண்டாகவில்லை. அங்கே கழியும் நேரமும் பயன்படக்கூடியதாக இல்லை. சர்க்கார்த் தீர்மானங்களை எதிர்ப்பதும் திட்டங்களையும் மானியங்களையும் அநுமதிக்க மறுப்பதும் முதல் வருஷத்தில் ஒருவகை மகிழ்ச்சியைத் தந்தன. ஆனால் நமது மறுப்பும் பேச்சும் செவிடன்காதில் ஊதின சங்குபோல் பயனற்றனவாகி, அதிகாரிகளையாவது, அரசாங்கத்தையாவது பொதுமக்களின் கோரிக்கைகளுக்கு இணங்கும்படியாகச் செய்ய முடியவில்லை. உடும்புப் பிடியாகத் தங்கள் கொள்கைப்படியே நடத்திவரும் ஆட்சிமுறையில், சட்டசபையை நடத்துவது வீண் பொழுதுபோக்காகவே எனக்குத் தோன்றியது.

மனம் இப்படிக் குழப்பத்தில் ஆழ்ந்துகிடக்கும் காலத்தில் திருச்சியில் ஓர் அற்ப சம்பவம் காரணமாக, நான் ஆயுள் முழுவதும் உழைத்து வந்த இயக்கத்தினின்றும் விலகவேண்டி வந்தது. இதனால் என் மனம் எவ்விதம் புண்பட்டது என் பதை எழுத்தில் எழுதுவதென்பது முடியாது. என் மனம் புண் பட்டதைக்காட்டிலும், என் நண்பர்களின் மனத்தை எவ்வ ளவு புண்படுத்திவிட்டேன் என்பதை நினைக்கும்பொழுது எனது பிடிவாதமான நடவடிக்கையைப்பற்றி என் மனம் என்ன பாடுபடுகிறதென்பதை என்னால் விவரிக்க முடியாது.

திருச்சி நகரம் தமிழ்நாட்டில் பெயர்பெற்றது. அங்கே நகரசபையில் பல பெரியார்கள் உழைத்திருக்கிறார்கள். ஆனால் யாது காரணத்தினாலோ காங்கிரஸ் கொள்கைகளைப் பின்பற்றி அவற்றை ஆதரிக்க நகர சபையினரில் பெரும்பாலோர் முன்வர வில்லை. இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஒத்துழை யாமையின் போக்கினால் நகரசபை, ஜில்லா போர்டு முதலிய ஸ்தாபனங்களில் காங்கிரஸ்காரர்கள் போட்டியிட்டுத் தேர் தலில் கலந்துகொள்ளவில்லை. காங்கிரஸில் சேர்வதால் நகர சபைத் தேர்தலில் அபேட்சகர்களுக்கு அதிகப் பலன் ஏற்பட வில்லை. அப்பொழுது ஜஸ்டிஸ் கட்சிக்குப் பல விதத்திலும் செல்வாக்கும் பலமும் இருந்தன. சென்னைச் சர்க்காரின் ஸ்தல ஸ்தாபன அதிகாரமும் அந்தக் கட்சியாரிடமே இருந்து வந்தது. ஸ்ரீ ரத்தினவேலுத்தேவர் திருச்சியில் ஒரு பெரிய மனிதர். பொதுத் தேர்தல்கள் நடத்துவதில் தீரர். வெற்றி பெறுவதி லும் அப்படியே. கட்சிகள் சேர்ப்பதிலும், தம்மைச் சேர்ந்த வர்களின் அன்பையும் ஆதரவையும் நிரந்தரமாக நிலைநிறுத்திக் கொள்வதிலும் அவருக்கு இணை ஒருவரும் இல்லை என்றே சொல்லலாம். தம் இனத்தாரிடத்தில் பரமப் பிரீதியும் அன் பும் உடையவர். பார்ப்பனர்களை அடியோடு வெறுப்பவர். இந்த வெறுப்பு அவருடைய ரத்தத்திலேயே பல தலைமுறை களாக ஊறி இருக்கவேண்டுமென்றே தோன்றுகிறது. எனி னும் பார்ப்பன நண்பர்கள் அவருக்கு உண்டு. அவர்களுள் நானும் ஒருவன். இன்றும் அதே நட்பு எங்கள் இருவருக்கும்

உண்டு. அவர் பல வருஷங்களாக ஜஸ்டிஸ் கட்சியில் உழைத்து, திருச்சியில் அந்தக் கட்சிக்கு ஒரு தூண்போல் இருந்துவந்தார். சென்னைச் சட்டசபையில் அந்தக் கட்சியின் சார்பில் பல முறை அங்கத்தினராக இருந்திருக்கிறார். அநேகமாகத் தேர்தலில் போட்டியின்றியே பல ஸ்தாபனங்களுக்கு அங்கத்தினர் ஆகி விடுவார். பனகல்ராஜா, ஸர் பி. டி. ராஜன், சௌந்தர பாண்டியன், ராமசாமிப்பெரியார் முதலியவர்களின் நம்பிக்கையையும் நட்பையும் பெற்றவர். செல்வம படைத்தவராகையால, உழைத்துச் சம்பாதிக்கவேண்டிய அவசியமில்லை. குடும்பத்திற்கு ஒரே மகன்; தாயின் அன்பெல்லையைக் கண்டவர்; பிடிவாதக்காரர்.

அவருக்கும் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் பொப்பிளி ராஜாவுக்கும் அபிப்பிராய பேதம் உண்டாயிற்று. திருச்சி நகரசபையைப் பொப்பிளி ராஜா தம் அதிகார முறையில் கலைத்துவிட்டார். அப்பொழுது அதற்குத் தலைவராக இருந்தவர் ரத்தினவேலுத்தேவர். தாம் தலைமை வகித்த நகரசபையைக் கலைத்து, அதன்மூலம் தம் தலைமைப் பதவியையும் நீக்கிவிட்ட பொப்பிளி ராஜாவை லேசில் விடுவதில்லை என்று உறுதி கொண்ட தேவர் சென்னைச் சட்டசபையில் ஜஸ்டிஸ் கட்சியை விட்டு அதை எதிர்த்து நின்ற காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார்.

மூன்று வருஷங்கள் கழித்து, திருச்சிநகரசபை புத்துயிர் பெற்றபின் தேர்தல் ஏற்பட்ட காலத்தில் காங்கிரஸ் அதில் ஈடுபட்டது. திருச்சியில் தமக்கு இருக்கும் செல்வாக்கை மறுபடியும் நிலைநிறுத்தவேண்டித் தாம் தலைவராகவேண்டும் எனவும், அதனோடு காங்கிரஸின் செல்வாக்கையும் நகர சபை மூலமாக நிரூபிக்கவேண்டும் எனவும் தேவர் விரும்பினார். தேர்தலில் காங்கிரஸ்கட்சிக்குப் பலம் ஏற்படுத்த முயன்று அது பெரும்பான்மைக் கட்சியாக விளங்கவும் பாடுபட்டார். எனக்கும் டாக்டர் சாஸ்திரியாருக்கும் எதிர்ப்பில்லாமலே அங்கத்தினர் பதவிகள் கிட்டின. கடைசியாகத் தலைவர் தேர்தலுக்கும் தேதி குறிப்பிட்டுக் காங்கிரஸ் கட்சியின் சார்பில் தேவர் அப்பதவிக்குப் போட்டியிடுவது என்ற

தீர்மானம் உண்டாயிற்று. காங்கிரஸ் கட்சிக்கு உண்மையில் பெரும்பான்மைப் பலம் இல்லை என்பது எனது முடிவான அபிப் பிராயம். 'ஏதோ தலைவர் தேர்தலை ஒட்டிப் பலபேர் தாற்காலிக மாகக் காங்கிரஸ் அங்கத்தினர்களாக ஆக்கப்பட்டு நகரசபை அங்கத்தினர்கள் ஆகியிருக்கிறார்கள். அவர்கள் காங்கிரஸில் சேர்ந்ததால் காங்கிரஸுக்கு யாதொரு பலமும் இல்லை. தலைவர் தேர்தல் முடிந்ததும், அவர்கள் காங்கிரஸைப் புறக் கணித்துவிடுவார்கள். ஆகையால் இந்த உள்ளூர்ச் சண்டையில் காங்கிரஸ் கொள்கையைத் தலைவர் தேர்தல் போராட்டத்தில் புகுத்தக் கூடாது, என்பது என் எண்ணம். காங்கிரஸ் கட்சியில் சேர்ந்திருந்த அங்கத்தினர் சிலரின் அந்த மனோபாவம் திருச்சித் தேர்தல் பற்றியதே. தேச விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு அளவிட முடியாத தியாகங்களைச் செய்து, பலனை எதிர்பாராது தங்கள் வாழ்வையே பணயம் வைத்து உழைத்த தேச பக்தர்களின் செல்வம் காங்கிரஸ். 'திருச்சி நகரசபைத் தேர்தலில் இந்த அரிய பெரிய ஸ்தாபனம் கலந்துகொண்டால் அதற்குப் பலம் குறையுமே தவிர, அதிகரிக்காது. ஆகையால் காங்கிரஸின் பெயரால் தலைவர் தேர்தல் போராட்டம் நடத்தக் கூடாது' என்பது என் கட்சி.

இந்த விவாதம் சென்னைத் தமிழ்மாகாணக் கமிட்டிக்கு அறிவிக்கப்படவே அவர்கள் எனக்கு விரோதமாக முடிவு செய்தார்கள். என்னைச் சமாதானப் படுத்தவும் முயன்றார்கள். அதற்கு நான் உடன்படாமல் கோபம் கொண்டேன்.

'இந்தக் காங்கிரஸிற்காகத் தியாகம் செய்து என்ன பயன்? தலைவர் தேர்தல் என்ற சிறிய விஷயத்தில்கூட என் பேச்சுக்கு மதிப்பில்லாமல் போய்விட்டதல்லவா? திருச்சி நகர சபை அங்கத்தினருள் பெரும்பான்மையோருடைய காங்கிரஸ் பக்தியின் உண்மையை வெளிப்படுத்திவிடவேண்டும்' என்ற தவறான உறுதியைக் கொண்டு, சென்னைத் தமிழ்நாட்டு மாகாணசபையின் தீர்ப்பிற்கு விரோதமாக, ரத்தினவேலுத் தேவருக்குத் தலைவர் பதவி கிடைக்காமலிருக்கக் கட்சி கட்டினேன்.

என் செய்கையைப்பற்றிக் கேள்விப்பட்ட தலைவர் ராஜாஜி அவர்கள், என்னைச் சென்னைக்குத் தருவித்து எனது பிடிவாதத்தால் உண்டாகும் விபரீதத்தையும் காங்கிரஸின் கட்டுப்பாட்டுக்குப் பலஹீனம் உண்டாகும் என்பதையும் எடுத்துக்காட்டி, தேவரை எதிர்க்கக்கூடாதென்று மன்றாடினார். "இவ்வளவு நாளாக என்னுடன் காங்கிரஸ் சேவையில் ஈடுபட்ட நீயே இப்படி நடந்தால் நான் எப்படி வாளா இருக்கமுடியும்? நீ பிடிவாதம் செய்தால் நீ காங்கிரஸைவிட்டு விலகிவிடவேண்டும். உன் செய்கை பொறுமல் நானும் காங்கிரஸைவிட்டு விலகிவிடுவேன். உன்மேல் வெறுப்புக்கொண்டு நான் இவ்வாறு செய்வதாக நினைக்கவேண்டாம். நட்புக்காரணமாக உன் செயலைத் தாங்கமுடியாமல் செய்யும் தீர்மானம் இது" என்று மிக்க மனவருத்தத்துடன் சொல்லி அனுப்பிவிட்டார். திருச்சி வந்ததும் 'தலைவர் பதவிக்கு நான் போட்டி போடுவதில்லை' என்று முடிவு செய்துவிட்டுத் தேவருக்கு எதிராக நிற்பவர்களை ஆதரிக்க முனைந்தேன். அதன்படியே ராஜாஜிக்கும் தந்தி அடித்துவிட்டேன். ஆனால் அந்தத் தந்தி விவரமாக இல்லை. நான் இந்தப் போராட்டத்தினின்றும் விலகிவிட்டேனென்று பொருள்படக்கூடியதாக அது இருந்ததால், ராஜாஜியின் மனம் களிப்படைந்தது.

நான் செய்யும் வேலை தவறானது என்று ஒருவாறு என் மனம் புண்பட்ட போதிலும் என் பிடிவாதத்தை நான் கைவிடவில்லை. தேர்தல் நடந்தபொழுது தேவருக்கு எதிராகப் பொன்னையாபிள்ளை அவர்களைத் தலைவராகப் பிரேரணை செய்தேன். அவரும் காங்கிரஸ்காரரே; ஆனால் தமிழ்நாட்டு மாகாணக் கமிட்டியாரால் தேர்ந்தெடுக்கப்படாதவர். தேவர் தோல்வி அடைந்தார்.

நான் காங்கிரஸ் அங்கத்தினர் பதவியை ராஜீநாமாச் செய்துவிட்டு இந்த வேலையை ஆரம்பித்திருக்கவேண்டும். எனவே என் செய்கை கண்டனத்திற்கு உள்ளாகிவிட்டது. காங்கிரஸ் கமிட்டியார் தீர்ப்புக் கூறும் முன்னமே நான் என் டில்லி சட்டசபை ஸ்தானத்தைக் காலி செய்தேன். காங்கிரஸ்

அங்கத்தினர் பதவியையும் துறந்தேன். என் அரசியல் வாழ்வை யும் அதோடு கைவிட்டேன். நேரம் முழுவதையும் என் தொழி லில் ஈடுபடுத்தி, அரசியல் துறையில் மனம் புகாமல் தடுத்துக் கொண்டு, எனது முப்பது வருஷத்திய சரித்திரத்தையும் மறக்க முயன்றேன். உலகத்தில் எந்தப் பெரியாரின் நட்பிற்கும், நன் மதிப்பிற்கும், அன்பிற்கும் பாத்திரமாக வேண்டி இவ்வளவு காலம் உயிர் வாழ்ந்தேனோ அப்படிப்பட்ட உத்தம குண சீல ரும், அறிவுக் களஞ்சியமும், தியாகமூர்த்தியும் ஆகிய ராஜாஜி யின் மனத்தைப் புண்படுத்தினேன்; கட்டுக்கடங்காத என் முரட்டுச் சுபாவத்தைக் காண்பித்தேன்.

நான் செய்தது தவறு என்பதை ஒருவாறு உணர்ந்தாலும், போலிகள் கூட்டம் காங்கிரஸில் புகுந்து ஸ்தானங்களை வகித் துக் காங்கிரஸுக்குக் கெட்ட பெயர் கொண்டுவராமல் இருப் பதற்காகவே என் உழைப்பையும் சேவையையும் தத்தம் செய்து, எனது அரசியல் வாழ்வையும் நானே பலியிட்டதாக எண்ணினேன். பண்டித ஜவாஹர்லால் நேரு திருச்சி வந்த பொழுது என்னைக் காங்கிரஸில் சேரும்படி வற்புறுத்தி, மன் னிப்புக் கோரும்படி கேட்டுக்கொண்டதற்கும் நான் இணங்க வில்லை.

சுமார் ஒன்றரை வருஷம் இவ்வாறு அஞ்ஞாத வாசம் புரிந்தேன். ராஜாஜிக்கு இவ்வளவு தீங்கு இழைத்துங்கூட என் னிடம் அவருக்கிருந்த தயாளகுணம், நட்பு, கருணை ஆகியவை சிறிதேனும் குறையவில்லை. எங்களுடைய சச்சரவு போலி என்றுகூடச் சிலர் நினைத்தார்கள். சென்னைச் சட்டசபைத் தேர்தல் முடிந்து காங்கிரஸ் நான்கு மாதங்கள் அதிகாரம் வகிக்காமல் அரசாங்கத்தோடு போராடிய காலத்தில், காங் கிரஸ் கோஷ்டி திருச்சிக்கு விஜயம் செய்தது. திருச்சிக் காங் கிரஸ் பிரமுகர்கள் அந்தக் கோஷ்டியினர் தங்குவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். திருச்சி ஜங்க்ஷனில் அந்தக் கோஷ்டியார் வந்ததும் அவர்களை நன்கு வரவேற்று, அவர்களு டைய ஜாகைக்கு அழைத்துச் சென்றார்கள். ராஜாஜி என்னு டன் மாறுபட்டிருந்ததால் அவருக்கும் தனி இடம் ஏற்பாடு

செய்திருந்தார்கள். நான் என் காரை ஸ்டேஷனுக்கு அனுப்பியிருந்தேன். அது தெரிந்தவுடன் ராஜாஜி அதில் ஏறிக்கொண்டு என் வீட்டிற்கு வந்து, ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். நானும் என் வேலைகளை முடித்துக்கொண்டு வந்து பிற்பகலில் அவரைத் தரிசித்தேன். சென்ற விஷயங்களைப்பற்றி ஒரு வார்த்தைகூட அவர் பேசவில்லை. எப்போதும் போல மாறாமல் இருந்த நட்பையும் மகிழ்ச்சியையுமே அவர் உள்ளத்தில் கண்டேன்.

இந்தப் பெருமையை என்னவென்று சொல்வது! இது நுட்பமான மனப்பான்மையின் போக்கு. காங்கிரஸைப்பற்றியாவது, அரசியலைப்பற்றியாவது நாங்கள் பிரஸ்தாபிக்கவே இல்லை. பெரிய வேலை செய்யும்பொழுதும், ஆயிரக்கணக்கான மக்கள் கவனத்திற்குப் பாத்திரமாகும்பொழுதுந்தான் ஒருவரிடத்துள்ள சிறந்த குணங்கள் நன்கு வெளிப்படும். பெருமை, கௌரவம் இவைகளை அடைய எண்ணிப் பகிரங்கத்தில் கூடியமட்டும் தீய குணங்களை அடக்கி, நற்குணங்களை எடுத்துக்காட்டுவதே பொதுவாக மனித இயல்பு. தனியாகவும் ரகசியமாகவும் நடக்கும் செயல்களிலும் எண்ணத்திலும் இருந்தே உண்மைப் பெரியார்களின் சீலம் நன்கு வெளிப்படும்.

# பதவியும் பரிசும்

எனது அரசியல் அஞ்ஞாதவாசம் பரிபூரணமாக நிறைவேறியது. நான் அரசியல் துறையினின்று மறைந்துவிட்டதற்காக எவரும் கவலைப்படவில்லை. நானும் கவலைப்படவில்லை. தொழில்முறையைப் பற்றிய உறவு நோயாளிகளும் நானும் முடிவு செய்துகொள்ளவேண்டியதே தவிர, மற்றவர்கள் அதைப்பற்றிக் கவனிக்கவேண்டிய அவசியமே இல்லை. அரசியலை விட்டு விலகியதால் எனது தொழில் பாதிக்கப்படவில்லை. மிகவும் நன்றாகவே நடைபெற்றது. தமிழ்நாட்டு ஹரிஜன சேவா சங்கத்தின் தலைமைப் பதவி ஒன்றுதான் நான் ஈடுபட்டிருந்த பொதுஸ்தாபனம். இது, போட்டியிட்டுக் கைப்பற்றுவார் இல்லாத பதவி. காங்கிரஸை விட்டு விலகியபிறகும் இந்த ஸ்தானத்தை வகித்ததால் இதற்காக உழைக்கும் காலத்தில் பிறருடைய உதவியைப் பல விதத்திலும் நாடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்படி உதவியை நாடும்போது பல நண்பர்களிடம் நான் காங்கிரஸை விட்ட நடவடிக்கைகளை எல்லாம் சொல்லவேண்டிய அவசியம் நேர்ந்தது. ஆகையால் அந்தப் பதவியையும் விட்டுவிட முடிவு செய்தேன். இந்த ஒரு பதவியை மாத்திரம் விட்டு விலகக்கூடாதென்று ஸ்ரீ அம்ருதலால் தக்கர் போன்ற பெரியார்கள் வற்புறுத்தினார்கள். ஆனாலும் அரசியல் வாழ்க்கையினின்றும் விலக முடிவு செய்துவிட்ட எனக்கு இந்தப் பதவி வகிப்பதில் உத்ஸாகம் ஏற்படவில்லை. பிடிவாதமாக எனது ராஜீநாமாவை அங்கீகரிக்கும்படி வேண்டிப் பிறகு இந்த ஊழியத்தினின்றும் விலகிக்கொண்டேன்.

ஹரிஜன சேவையைப் போன்ற கடினமான தொண்டு உலகத்தில் வேறு ஒன்றும் இல்லை. அதிலும் மேல் ஜாதி ஹிந்துக்களே இந்தத் தொண்டில் ஈடுபட்டு அதனை ஒரு பிராயச்சித்தமாகக் கருதி உழைக்கவேண்டுமென்று மகாத்மா காந்தி பிடிவாதமாக வற்புறுத்துகிறார். அவர் கருத்தின்படி அது புண்ணியம்

வாய்ந்தது என்றபோதிலும், உழைப்பவன் தானும் ஒரு ஹரிஜன னுகும் மனோபாவம் கொண்டாலொழிய வேறு ஒரு விதத்திலும் இது ஊக்கம் அளிக்கக்கூடியது அல்ல. அரசியல் சுதந்தரத் திற்கு அடிப்படையானது மனித சுதந்தரம், சமூக சுதந்தரம் முதலியன. ஒரு புறம் தீண்டப் படாதவர்கள் என்று ஓர் இனத் தினரை மற்ருேர் இனத்தினர் அடிமைப்படுத்தும் வழக்கமும் மனோபாவமும் நாட்டில் இருக்குமாறுல் அரசியல் சுதந்தரம் வழங்கவோ, கேட்கவோ, கொண்டாடவோ முடியாது. இதை எண்ணியே நாடு அன்னிய ஆதிக்கத்தினின்று விடுபட வேண்டி யதற்கான பக்குவத்தை மக்களுக்கு உண்டுபண்ணும் பொருட்டு ஹரிஜன இயக்கத்தை அரசியலோடு சேர்ந்த தத்து வமாகக் காந்திஜி நிர்ணயித்துள்ளார். அதனுல் சுதந்தரத்திற் குப் பாடுபடும் காங்கிரஸ் ஸ்தாபனம் இந்த அடிப்படைக் கொள் கையை ஆதரிக்கவேண்டிய அவசியமும் ஏற்பட்டது.

அரசியலினின்று நான் விலக நிச்சயித்தபிறகு, ஹரிஜன சேவை செய்வதற்கான என் உறுதியும் தளர்ந்துவிட்டது. எனவே ஹரிஜன சேவையினின்றும் விலகினேன்.

இந்த அரசியல் அஞ்ஞாதவாசத்தின் நடுவில் திருவ னந்தபுரத்தில் ஹரிஜன ஆலயப்பிரவேச இயக்கம் பூர்த்தி அடைந்ததால், ஒரு முறை மகாத்மா அங்கே சென்று அனந்த பத்மநாபப்பெருமாளைத் தொழ எண்ணங்கொண்டு திருச்சி வழியாகப் பிரயாணம் செய்தார்.

சென்னையிலிருந்து திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் விடியற் காலை மூன்றரை மணிக்குத் திருச்சி ஜங்க்ஷன் வந்தது. அந்த நேரத்திலுங்கூட ஸ்டேஷனில் ஏராளமான கூட்டம் கூடி விட்டது. மகாத்மா இருந்த மூன்ருவது வகுப்பு வண்டியை அப்படியே முற்றுகை போட்டுவிட்டது. ஏறி இறங்கும் மற்றப் பிரயாணிகளுக்குத் திண்டாட்டம். ஜே சப்தமும் கூக்குரலும் காதைப் பிளந்தன. காந்திஜி இருந்த அறைக்குள் பிரவேசிக்கவோ அதை நெருங்கவோ என்றுல் முடிய வில்லை. வெகு நேரம் கஷ்டப்பட்டு அவர் இருந்த வண்டிக்குப் பின்புறமாகச் சென்று முஷ்டி யுத்தம் புரிந்துகொண்டு அவ

ரிடம் சென்றேன். எப்பொழுதும் புன்முறுவலுடன் வரவேற்கும் காந்திஜி அன்று என்னை அளவற்ற துக்கத்துடன் நோக்கி, "இந்த ஒழுங்கற்ற கூட்டத்தை இந்த நேரத்தில் ஏன் கூட்டி வந்தாய்?" என்று கேட்டார்.

"நான் காரணம் அல்ல" என்றேன். "ஒருவரையும் இங்கே கூடும்படி நான் தெரிவிக்கவில்லை. தாங்கள் இவ் வழியாகப் போவதைப் பத்திரிகைகள் மூலம் தெரிந்துகொண்டு கூடிவிட்டார்கள். நான் என்ன செய்வது?" என்றேன்.

"நீ காங்கிரஸை விட்டு விலகிவிட்டாலுங்கூட இந்தப் பொறுப்பினின்று நீங்கமுடியாது" என்று கூறிவிட்டுச் சில நிமிஷங்கள் பேசிக்கொண் டிருந்தார். ரெயில் புறப்படுவதற்கு முன் நானும் வெளியே வந்தேன். வண்டி நகர்ந்தது. வண்டியை நோக்கி, "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற சப்தம் கிளம்பியது. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டம் கலைந்தது.

என் மனம் குழப்பத்தில் ஆழ்ந்தது. காந்திஜி சொன்ன வார்த்தைகளுக்குப் பொருள் என்ன? நான் காங்கிரஸை விட்டு விலகிய செய்தி அவருக்குத் தெரிந்திருக்கிறதென்பது நன்கு புலப்பட்டது. எனினும் கூட்டத்தின் அமைதியின்மைக்கும் கலவரத்திற்கும் நான் எப்படிப் பொறுப்பாளி என்பதுமட்டும் புரியவில்லை. யோசித்துப் பார்த்தேன். காங்கிரஸில் சேர்ந்து பொதுமக்களுக்கு ஊழியம் புரிந்த ஒருவன் இந்த நாட்டில் இருக்கும்வரையில், நமது நாடு அடிமைப் பட்டிருக்கும் வரையில், அடக்கம், ஒழுங்கு, பொறுமை, இவை நமது சமூகத்தில் வேரூன்றி நாமும் பண்பட்ட மனித ஜாதி ஆகும் வரையில், எதிலிருந்து விலகினாலும் தேச ஊழியம், சமூக ஊழியம் இரண்டையும் தவிர்க்க முடியாது. காங்கிரஸ் சபையில் அங்கத்தினன் என்பதால் மட்டும் தனிப்பொறுப்பு இருப்பதாக நினைக்கக்கூடாது. தொண்டன் என்கிற முறையில், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற பெரியாரின் வாக்குப்படி நடப்பது கடமை என்பதை மகாத்மா வற்புறுத்தியதாகவே நினைத்தேன். ஆனால்

இந்த மாதிரியான சம்பவங்களை ஒட்டி, என் சந்தேகங்களை மகாத்மாவுக்குக் கடிதமாக எழுதிப் பதில் கேட்கும் வழக்கம் எனக்கு இல்லை. அவருக்கு எவ்வளவோ தொல்லைகள் கணக்கில்லாமல் இருக்கின்றன. நானும் சேர்ந்துகொண்டு அவருடைய கஷ்டத்தை அதிகமாக்க விரும்பவில்லை. எனினும் அன்று அவர் சொன்ன சொற்கள் இன்றும் என் மனத்தை விட்டு அகலவில்லை.

1937-ஆம் ஆண்டு சென்னைச் சட்டசபைத் தேர்தல் மும்முரமாக நடைபெற்றது. சென்னைச் சட்டசபையில் காங்கிரஸ் பெருவாரியான ஸ்தானங்களைக் கைப்பற்றியது. ஜஸ்டிஸ் கட்சி இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோயிற்று. இந்த அபரிமிதமான வெற்றியும், ராஜாஜியின் தலைமையில் ஏற்பட இருந்த மந்திரிசபையும் எனக்கு ஒருவித உணர்ச்சியையும் உண்டுபண்ணவில்லை. என் தொழில் ஒன்றே எனக்குப் போதுமானதாக இருந்தது. 1908-ஆம் வருஷத்தில் உதயமான அரசியல் புயல் 1936 முடிய என் மனத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்தது. அரசியல் துறையிலிருந்து விலகச் சங்கற்பம் செய்துகொண்டதுமுதல் மன அமைதி உண்டாயிற்று,

இந்த நிலை அதிக நாட்கள் நீடிக்கவில்லை. மந்திரி சபை அமைப்பதில் ராஜாஜிக்கு ஏற்பட்ட கஷ்டங்களைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. எனது தொழில் வருவாயைப் பற்றிப் பொறாமை கொள்ளக்கூடியவர் அல்ல அவர் என்பது எனக்கு நன்கு தெரியும். ஆகையால் எனது தொழிலைக் கைவிடும்படி செய்து, சென்னைக்கு இழுத்து, மாதம் ஒன்றுக்கு ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் இருத்தி, வேலை வாங்க அவர் மனம் துணிந்ததற்குக் காரணம் என்ன என்று நான் சொல்வேன்! எனக்கு அளித்த பதவிக்குப் போட்டி எவ்வளவு? சிபாரிசுகள் எவ்வளவு? தாட்சிண்யங்கள் எவ்வளவு? இவை அனைத்தையும் பொருட்படுத்தாமல் எனக்கு இருபத்துநான்கு மணி நேரங்கூட அவகாசம் கொடுக்காமல் சட்டசபை ஸ்தானத்துக்குப் போராடும் உபத்திரவங்களும் இல்லாமல், மேல் சபையில் புகுத்திச் சுகாதார மந்திரியாக, முதல் முதலாகக்

காங்கிரஸ் பொறுப்பு ஏற்றுப் பதவிவகித்த சபையில் சேர்க்கக்கூடிய மனோபாவம் எத்தகையது என்பதை நான் எப்படி விவரிக்கக்கூடும்? என்னைப்பற்றியமட்டில் அவருடைய செயல் மிகவும் பெருந்தன்மையையும், கருணைகொண்ட தாராள சிந்தையையும் வெளிப்படுத்தியதாக உணர்ந்தேன். மறுபடியும் அரசியலில் புகுந்து சேவை செய்ய ஒரு தருணம் கிடைத்ததையும் வரவேற்று மகிழ்ந்தேன்.

மந்திரிப் பதவிக்காகக் கிடைத்த ஊதியத்தை வைத்துக் கொண்டு எனது காலக்ஷேபத்தை நடத்த முடியவில்லை. இரண்டரை வருஷம் மந்திரி வேலை பார்த்ததில், எனது தொழில் வருவாய் போனதோடு நில்லாமல், கையை விட்டும் பதினையாயிரம் ரூபாய் அதிகம் செலவழிந்தது. இரவு பகலாக அலைச்சலும் உழைப்பும் ஏற்பட்டன. என் வாழ்நாட்களில் நான் என்றும் இம்மாதிரி உழைத்ததே இல்லை.

வேலையை விட்டபொழுது ஓய்வு கிடைத்தது. அதனால் மகிழ்ச்சி ஒருபுறம்; எடுத்த வேலைகளை அரையும் குறையுமாக விட்டுப்போகிறேனே என்கிற வருத்தம் மற்றொரு புறம். எனினும் ராஜிநாமாச் செய்த மறுநாள் காலையிலேயே சென்னையைவிட்டுத் திருச்சி வந்து சேர்ந்துவிட்டேன். புறப்படுவதற்குமுன் ராஜாஜியைக் கண்டு உத்தரவு பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். திருச்சியில் சென்று மறுபடியும் நான்காம் தடவையாகத் தொழில் தொடங்கலாமா என்று அவர் யோசனையைக் கேட்டேன். "திரும்பத் திரும்பத் தொழிலைத் தொடங்க அவசியம் என்ன? வேண்டிய காலம் உழைத்துச் சிறிய மூலதனமும் தேடியாகிவிட்டது. எப்பொழுதாகிலும் ஒரு சமயம் நிறுத்தவேண்டாமா? சிறிது காலம் ஓய்வெடுத்துக் கொள்வதுதானே?" என்றார். அதன்படியே தொழில் செய்வதை நிறுத்தி, நான் இல்லாத காலங்களில் எனது ஆஸ்பத்திரியை மூடிவிடாமல் வெகு காலமாகக் காப்பாற்றித் தொழிலை நடத்திய என் நண்பர்களையே நடத்துமாறு விட்டு, விவசாயத்தில் ஈடுபட என் கிராமத்தை நாடிச் சென்றேன். எந்தச் சமயத்திலும் சர்க்காருடைய யுத்த முயற்சிக்

குத் தடையாகக் கிளர்ச்சியையும், அதனால் ஏற்படக்கூடும் தண்டனையையும் எதிர்பார்த்த வண்ணமாகவே விவசாய வேலைகளைத் தெரிந்துகொள்ள முயன்றேன்.

சென்னை அரசியல், கவர்னரின் யதேச்சாதிகாரத்திற்கு உட்பட்டது. 1939 அக்டோபரிலிருந்து 1940 அக்டோபர் வரையிலும் எனக்குக் கிராம வாசம். பிறகு காந்திஜியின் தனிப்பட்ட சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. தமிழ்நாட்டில் சட்டமறுப்புச் செய்து முதலில் சிறை செல்லும் பாக்கியம் அப்போது எனக்குக் கிடைத்தது. தண்டனை கடுமையாக இருக்குமென்று எதிர்பார்த்தேன். ஆகையால் எஞ்சிய சொத்துக்களை என் வாரிசுகளுக்குப் பிரித்துக் கொடுத்து விட்டு, சட்ட பூர்வமாக என்னைப் பரம ஏழை ஆக்கிக் கொண்டேன். ஒரு வருஷம் கடுங்காவலும், ஆயிர ரூபாய் அபராதமும் நான் மந்திரியாக இருந்ததற்குப் பிரதிப் பிர யோஜனமாகக் கிடைத்தன. மூன்றும் தடவையாகப் பழைய திருச்சிச் சிறையில் புகுந்தேன். சில நாட்களுக்குப் பிறகு சிறையிலேயே விசாரிக்கப்பட்டுத் தண்டனை பெற்று வேலூர்ச் சிறைக்கு மாற்றப்பட்டேன்.

இந்த முறை சிறைவாசம் பழைய கதையாகி விட்டபடியால், எனக்குப் புதிய உணர்ச்சியோ அதிர்ச்சியோ ஒன்றும் ஏற்படவில்லை. மந்திரிப் பதவி வகித்ததனால் சிறை அதிகாரிகளும் வேண்டுமென்று கேவலமாக நடத்தத் துணியவில்லை. மற்ற மந்திரிகளும், சட்டசபை அங்கத்தினர்களும், காங்கிரஸ் தொண்டர்களும், சிறைபுக ஆரம்பிக்கவே, சிறைக் கூடங்கள் நிரம்பிவிட்டன; இடம் போதவில்லை. காலியாக இருந்த பழைய சிறைகள் எல்லாம் நிரம்பிவிட்டன. ஏ வகுப்பு, பி வகுப்புக் கைதிகள் அதிகாரிகளால் மேல் ஜாதிகளாகக் கருதப் பட்டதனால், அவர்களையெல்லாம் திருச்சியில் தனிச் சிறை ஏற்படுத்தி அங்கே மாற்றினார்கள்.

தனிப்பட்ட சத்தியாக்கிரகத்தினால் சர்க்காருடைய மனம் மாறவில்லை. முதலில் தோன்றிய பொதுமக்களின் அதிர்ச்சியும் மறையத் தொடங்கிவிட்டது. நாகரிகமுள்ள எந்த நாட்

டிலும் எப்பொழுதாகிலும் இந்தக் கேவலமான நிலை ஏற்பட முடியாது. தேசத்தின் பொறுப்பை வகித்து மந்திரியாக ஊழி யம் புரிந்தவர்களில் சுமார் எழுபது பேர்கள் தாங்கள் நடத்திய அரசாங்கத்தாராலேயே கைதுசெய்யப்பட்டுச் சிறை யிடப்பட்டதை நாகரிக உலகம் பார்த்துக்கொண்டுதான் இருந் தது. ஆங்கில யுத்தமுறை ஆட்சியும் இதைப் பொருட்படுத் தாமல் பெருமிதம் பேசி, 'சிறு நாடுகளின் சுதந்தரத்தைக் காப்பாற்றுவதே எங்கள் கடமை, என்று வாய்ப்பறை சாற்றி, இந்திய யுத்த மறுப்பை லக்ஷ்யம் செய்யாமலே அதி காரம் செலுத்திவந்தது. சிறுகச் சிறுகத் தண்டனைக் காலம் முடிந்து சிறைப்பட்டவர்கள் வெளிவந்துகொண் டிருந் தார்கள். சிறை மீண்டவர்கள் திரும்பவும் சிறைபுக வேண்டு மென்று சத்தியாக்கிரக நிபுணர் மகாத்மா காந்தி உத்தரவு போட்டார்.

# அபிப்பிராய பேதம்

1940-ஆம் ஞு தனிப்பட்ட சத்தியாக்கிரகம் செய்து சிறைப்பட்டு, தண்டனை அநுபவித்து வெளிவருபவர்கள் மறுபடியும் சிறைபுக வேண்டுமென்பது காந்தியடிகளின் உபதேசம். ஒரு வருஷகாலம் சர்க்காருக்கு யாதொரு தொந்தரவும் கொடுக்காமல், சத்தியாக்கிரகம் செய்து தனிப்பட்ட நபர்கள் காந்திஜியின் உத்தரவு பெற்றுச் சிறை புகுந்தும் பலன் ஒன்றும் காணவில்லை. சர்க்காரின் மனம் மாறவில்லை. தாங்களாகவே தண்டனைக் காலம் முடிவதற்குள் சிறைச்சாலைகளைக் காலி செய்யச் சர்க்கார் ஆரம்பித்துவிட்டது. அபராதத் தொகை செலுத்தாமலோ, வசூலிக்க முடியாமலோ இருந்தவர்களிடம் தொகையை வசூலிக்க முடியவில்லை. காந்தியடிகள் வகுத்த அஹிம்சா முறைப்படியே சிறை சென்றவர்களையும் விடுதலை செய்துவிட்டார்கள். சில பொது உடைமைக் கட்சிக்காரர்கள், 'பார்வர்டு பிளாக்' கட்சிக்காரர்கள் இவர்களை மாத்திரம் விடுதலை செய்யவில்லை. எதனுல் இந்த விபரீதப்போக்கு, பட்சாபாதம் என்பது எனக்குப் புரியவில்லை. அந்த அந்த ஜில்லாவிலுள்ள போலீஸ் அதிகாரிகளே இதற்குக் காரணம் என்பது எனது அபிப்பிராயம். எவரைச் சீக்கிரம் விடுதலை செய்துவிட்டால் தங்களுக்கு உபத்திரவம் ஏற்படக்கூடுமென்று போலீஸ் அதிகாரிகள் நினைத்தார்களோ, அவர்களை விடுவிக்கவில்லை.

நமது நாட்டில் நடக்கும் ஆட்சிமுறையின் போக்கு மிகவும் விபரீதமானது. நாகரிக நாடுகளில் நடக்கும் சட்ட அமல், நியாய முறைகள், ஒழுங்கு முதலியவைகளில் ஒன்றுமே நமது நாட்டில் இல்லை என்பதற்குப் பல உதாரணங்கள் காட்டலாம். ஆளும் வர்க்கமோ தன் இஷ்டப்படி ஆட்சியை நடத்தச் சர்வாதிகாரமும் படைத்த அரசாங்கம். நமக்குள்ளாக இருவர் அடித்துக்கொண்டு போராடினுல் கூடிய

மட்டில் சட்டப்பிரகாரம் அவர்களிடமிருந்து நியாயம் கிடைக்கும். அதிகார வர்க்கத்தோடு, அதிலும் முக்கியமாகப் போலீஸ் அதிகாரிகளோடு, தனிப்பட்ட முறையிலோ அரசியல் காரணமாகவோ மாறுபட நேர்ந்தால், அப்பொழுது சட்டம், நியாயம் இரண்டும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும், சட்ட பூர்வமாகத் தண்டனை அடைந்தவர்கள் சட்டப்பிரகாரம் அநுபவிக்கவேண்டிய காலம் முடிவதற்குமுன்பே விடுதலை அடைவதும், அவர்களுள் சிலர் யாதொரு காலவரையறையும் இன்றிச் சிறையில் கிடந்து வாடுவதும் போலீஸ் அதிகாரிகளின் அபிப்பிராயத்தையே பொறுத்திருக்கின்றன. அரசியல் கிளர்ச்சிக்கும் போராட்டத்திற்கும் சட்ட நியாயம் கிடைப்பது அரிது.

நிற்க. சிறை நீங்கிய சத்தியாக்கிரகிகள் மறுபடியும் சிறை புகுவதா என்கிற பிரச்சினை கிளம்பியது. 'அப்படிப் புகுவதானால் எந்தச் சட்டத்தை மீறுவது? குழப்பத்தை உண்டு பண்ணாமல், அமைதியாக எப்படிப் புகுவது? இப்பொழுது புகுந்து வெளிவந்ததில் லாபம் எம்மட்டில்? அதிகாரிகள் நமது கோரிக்கைக்குச் சற்றேனும் செவி சாய்த்தார்களா?' என்றெல்லாம் பேச்சுக் கிளம்பியது, மேலும் 1940-ஆம் வருஷத்துச் சத்தியாக்கிரகத்தில் சிறை புகுந்தவர்கள் நன்கு வடிகட்டின பேர்வழிகள். பெரும்பாலோர் மாஜி மந்திரிகள், சட்ட சபை அங்கத்தினர்கள், ஜில்லா போர்டுத் தலைவர்கள், நகர சபைத் தலைவர்கள், ஜில்லா காங்கிரஸ் தலைவர்கள், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் என இம்மாதிரி பொறுக்கி எடுக்கப்பட்டவர்கள்.

காந்தியடிகளின் உத்தரவின்றி எவரும் சத்தியாக்கிரகம் செய்யக்கூடாது. அவரிடமிருந்து உத்தரவு பெற்றுக் குறிப்பிட்ட முறையில்தான் செய்யவேண்டும். 'சட்ட சபைகளும் மற்றப் பதவிகளும் திரும்பவும் கிடைக்கக் கூடும். சிறை சென்று தியாகம் செய்யாவிட்டால் பதவி கிடைப்பது அருமையாகிவிடும்' என்ற எண்ணங்கள் அரசியல் வாதிகளின் உள்ளத்தில் தோன்றின. சிறை புகுவதற்கான பெரு முயற்சிகள் செய்து, அதற்காகப் போலீஸ் அதிகாரிகளின் தயவைக்கூட

நாடிச் சிறை புகுந்தவர்களை எனக்குத் தெரியும். மேலும் ஏ. வகுப்பு, பி. வகுப்புக் கைதியாகத் தண்டனை பெறச் சிலர் முயன்றார்கள் என்பதும் ரகசியமான செய்தி அல்ல. ஆனால் அதில் பிசகு ஒன்றும் இல்லை. 'சிறை சென்றோம், அதிலும் தேச விடுதலைக்காகச் சென்றோம். காந்திஜியின் உத்தரவின் பேரில் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுத் தியாகம் புரிந்து, மக்களுடைய அன்பிற்கும் ஆதரவிற்கும் பெருமைப் படக் கூடிய முறையில் பாத்திரமானோம்' என்கிற உணர்ச்சி எல் லோருக்கும் உண்டு. அதிலும் அதிகச் செல்வம் படைத் திராதவர்களுக்கும் கல்வி கேள்விகளில் தேர்ச்சி அடைந்து புகழ்பெறக்கூடிய சந்தர்ப்பம் இல்லாதவர்களுக்கும் இந்தத் தியாக முத்திரை அரசியல் உலகத்தில் பெரிய மதிப்பை உண்டு பண்ணியது. நாட்டின் விடுதலைக்குத் தியாகம் அவசியம். அந்த விஷயத்தில், கஷ்டப்படாமல் சிறை புகுந்து வெளிவருவது சுலபமாகவும், தியாக மதிப்பில் குறைவு படாததுமாகவே இருந்தது.

வெளிவந்தவுடன் மறுபடியும் சிறை புகவேண்டுமென்று காந்தியடிகள் உத்தரவிட்டவுடனே சிறை சென்றவர்களில் பலருக்கு மனக்கலக்கம் உண்டாயிற்று. என்னைப்பற்றிய மட்டில் எனக்குத் திகைப்போ பயமோ ஏற்படவில்லை. ஆனால் மறுமுறையும் முன்போலவே சிறை செல்வதன் தத்துவம் விளங்கவில்லை. என்னை அறியாமலே அடக்கமுடியாத சந் தேகங்கள் ஒன்றன்பின் ஒன்றாக மனத்தில் கிளம்பின. சத்தி யாக்கிரக தர்மத்தின் பலாபலன்கள், கணக்கெடுத்து மதிப் பிடக் கூடியவை அல்ல என்பது எனக்குத் தெரியும். நாம் மேற்கொள்ளும் முறையின் நேர்மையும், அடிப்படையான தத்துவத்தின் சத்தியமும் அதன் மூலப்பொருள். இவ்விரண் டிலும் உண்மைப் பற்றுதல் ஏற்பட்டால் முடிவைப்பற்றிக் கவனிக்கவேண்டிய அவசியம் இல்லை. முடிவு ஒன்று தவிர வேறு இருக்கமுடியாது. வெற்றி நிச்சயம். சத்தியம் பொய் யாது. ஆனால் சத்தியத்தின் உண்மையை அறிய எவ்வளவு பாடு படவேண்டியிருக்கிறது! எவ்வளவு கஷ்டங்களை அநு

பவிக்க நேரிடுகிறது! நாட்டின் விடுதலையை எல்லோரும் ஒரே நாளில் கண்டு அநுபவிக்கமுடியாது. ஆனால் விடுதலைக்காகச் சர்வ சங்க பரித்தியாகம் செய்து, கொடுந்துயரங்களுக்கு ஆளாகி, வாடி, வதங்கி அநுபவிக்கும் துயரத்தில் விடுதலை உணர்ச்சியை அநுபவித்துப் பெருமிதம் அடையவேண்டும். அதுவும் ஒரு நாளா, ஒரு மாதமா? வருஷக் கணக்கில் அநுபவிக்க வேண்டிய தியாக உணர்ச்சியை இன்பமாக மாற்றவேண்டிய முறைதான் சத்தியாக்கிரகமென்று எனக்குத் தோன்றியது. அடிமைப்பட்ட நாட்டிற்கு, அதன் மக்களுக்கு, விடுதலை சிறைச்சாலையில்தான் என்பதாகக் காந்திஜீ அடிக்கடி சொல்லியும் எழுதியும் வருகிறார். 1940-ஆம் வருஷத்துத் தனிப்பட்ட சத்தியாக்கிரகத்தில் யாதொரு பயனும் எனக்குப் புலப்படவில்லை.

'எவ்வளவோ சிறை வாசம் நடந்துங்கூட, சிறையினுள் இருக்கும்பொழுது விடுதலை உணர்ச்சி எனக்குத் தோன்றவில்லையே? என் செய்வது! சத்தியாக்கிரக தத்துவத்திற்குக் குருவாக இருக்கும் காந்திஜீயினிடம் நாம் நம் உணர்ச்சியைத் தெரிவிக்கவேண்டாமா? சிறையினின்றும் வெளிவந்ததும், அவசர வேலைகள் வெளியே இருந்தால் அதை உடனே முடித்துக்கொண்டு திரும்பவும் சிறை புகவேண்டுமென்று சொல்லுகிற அம்மகானிடம் நம் எண்ணங்களைத் தெரிவிக்க வேண்டாமா?' என்றெல்லாம் சிந்தனை செய்ய என் மனம் தூண்டியது. உடனே ராஜாஜி அவர்களிடம் இந்தப் பிரச்சினைகளைக் கிளப்பினேன். எனக்கு எழுந்த எண்ணங்கள் அவர் மனத்திலும் ஊசலாடிக்கொண்டிருந்தனவென்றே எனக்குத் தோன்றியது. அவரைக் கலந்ததும், எனது முடிவை அவர் எதிர்க்கவில்லை. என் எண்ணங்களைக் காந்திஜீ அவர்களுக்குத் தெரிவிக்கவேண்டும் என்பதை ராஜாஜியும் ஒப்புக்கொண்டார்.

1940-ஆம் வருஷச் சிறை வாசத்திற்குப் பிறகு சிறை செல்லவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. சத்தியாக்கிரகிகள் எல்லோரையும் யாதொரு நிபந்தனையுமின்றிச்

சர்க்கார் விடுதலை செய்துவிட்டது. காந்தியடிகளும் மறுபடியும் சிறைபுக வற்புறுத்தவில்லை. பாக்கி இருந்த சகல மனித உரிமைகளும் பறிக்கப்பட்டு, யதேச்சாதிகாரம் தங்குதடையின்றிக் கவர்னர்களின் ஏகபோக உரிமையுடன் நடந்தது. கம்பெனியாரின் ஆட்சிக் காலத்தில்கூட இம்மாதிரியான யதேச்சாதிகாரம் ஒரு தனி மனிதனுக்கு நாட்டில் இருந்ததில்லை. ஆனால் 1935-ஆம் வருஷத்திய அரசியல் திட்டத்தில் ஜனநாயகப் போர்வைக்குள் ஒளிந்து கிடந்த ஒரு தனி மனிதனின் ஏக போக ஆட்சிமுறை வெட்ட வெளிச்சமாக, ஒளிவு மறைவின்றி நம் மாகாணத்தில் தாண்டவமாடியது. யுத்தகால அடக்கு முறைகளும் பயங்கர ஆட்சியும் மக்களைத் திணற அடித்துக் கொண்டிருந்தன. இந்தக் கூத்தில் 1942-ஆம் வருஷ ஆரம்பத்தில் ஜப்பானும் ஜர்மனியுடன்கூடிப் போரில் ஈடுபட்டது.

ஆங்கில சர்க்கார் கிரிப்ஸ்துரையைத் தூது அனுப்பி நம்முடன் சமாதானம் பேசியது. காங்கிரஸ், முஸ்லிம் லீக், இந்து மகாசபை ஆகிய அரசியல் ஸ்தாபனங்கள் கிரிப்ஸ் திட்டத்தை ஆதரிக்கவில்லை. காங்கிரஸுடன் பேச்சு முடிவதற்குள் கிரிப்ஸ்துரை தம் கடையைக் கட்டிக்கொண்டு சீமைக்கு ஓட்டம் பிடித்துவிட்டார். அரசியல் ஏக்கம் வளர்ந்து கொண்டே போயிற்று. முஸ்லிம்களோடு சமரசம் செய்து கொண்டு அவர்களுடைய ஆதரவைப் பெற்றால் ஒருகால் அரசியல் நிலை மாறக்கூடுமோ என எண்ணி ஜின்னா ஸாகிபுவிடம் தூது செல்லவேண்டுமென்று ராஜாஜி ஒரு புதுப் பிரச்சினையைக் கிளப்பினார். யோசனைக்கு இடமில்லாமலே திடீரென்று இந்த அபிப்பிராயத்தை அவர் வெளியிட்டவுடனே அவர் நண்பர்கள் திகைத்துப் போய்விட்டார்கள். பாகிஸ்தான் கொள்கையை அவர் ஒருவாறு ஒப்புக்கொண்டு, ஜின்னா அவர்களிடம் சமரஸம் பேசலாமென எண்ணிக் காங்கிரஸை விட்டு விலகி, முயலலானார்.

ஆங்கில அரசாங்கம் பெரும்போரில் ஈடுபட்டு நமது நாட்டின் உணவையும் செல்வத்தையும் மக்களின் உயிரையும் பொருட்படுத்தாது அந்தப் போரில் உபயோகப்படுத்திவரும்

காலத்தில்கூட நாம் கோரிவரும் சுதந்தரத்தை அளிப்பதற்கு உடன்படாது காலங்கடத்தி, பிடிகொடாமல் நடத்திவரும் ஆட்சிமுறையை மக்களில் பெரும்பாலோர் வெறுத்தனர். அது காரணமாகக் காந்திஜி அவர்கள் மறுமுறையும் பொதுப்படைச் சத்தியாக்கிரகம் தொடங்கத் தீர்மானம் செய்தார். வைஸ்ராய் லின்லித்கோப் பிரபு பிடிவாதக்காரர். அகம்பாவம் கொண்டவர். அவருக்குத் தக்க பின்பலம் அப்போது பிரதம மந்திரியாக இருந்த சர்ச்சில். இருவரும் கல்லுப்பிள்ளையார்போல அசைந்து கொடுப்பதற்கு மறுத்துவிட்டார்கள். சத்தியாக்கிரகத்தைக் காந்திஜி தொடங்கிவிடக்கூடும் என்பதை எதிர்பார்த்து முன் கூட்டியே மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கைகளை யெல்லாம் தயாரித்துத் திட்டம் போட்டுவிட்டார்கள். காங்கிரஸ் சத்தியாக்கிரகம் தொடங்கவில்லை; சர்க்கார் சரியான முறையில் நாம் கோருவதற்கு இணங்காவிடில் 1942 ஆகஸ்டு மாதம் 8-ஆம் தேதியன்று சத்தியாக்கிரகம் நடத்தக் காந்திஜிக்கு அதிகாரம் கொடுத்தது.

இந்தச் சமயத்தில் சத்தியாக்கிரகம் தொடங்குவதற்கும், சரிவர நடத்துவதற்கும் போதுமான அளவு அஹிம்சை உணர்ச்சி பரவவில்லை, தக்க பலனும் கிடைக்காது என்று ராஜாஜி எண்ணினார். நானும் அவரைப்போலவே அபிப்பிராயப் பட்டேன். எங்களுடைய அபிப்பிராயத்தைக் காந்திஜிக்குத் தெரிவித்தோம். நேரில் வந்து வாதாடி அவர் மனத்தைத் திருப்பும்படி பதில் கிடைத்தது. அவர் மனத்தைத் திருப்பக்கூடிய சக்தி நம்மிடம் இல்லை என்று முடிவு செய்துவிட்டு வாளா இருந்தோம்.

இயக்கம் ஆரம்பிக்க அதிகாரிகள் இடம் கொடுக்கவில்லை. ஆரம்பித்திருந்தால் எவ்வித அடக்குமுறைகளையும் ஈவு இரக்கம் இன்றிப் பின்பற்ற உத்தேசித்து ஏற்பாடு செய்திருந்தார்களோ, அவ்விதமே செய்துவிட்டார்கள். நாங்கள் எதிர்பார்த்தபடி அஹிம்சையின் தத்துவத்தைப் பெரும்பாலோர் அறியவில்லை. அக்கிரமமான மூர்க்கத்தனம் தலைவிரித்தாடும் காலத்தில் நாட்டில் உண்டான குழப்பத்திற்கு அளவில்லை. சத்தியாக்கிரக முறை என்பதாகக் கனவிலுங்கூட மகாத்

மாவினால் எண்ணக்கூடாத பல பயனற்ற நிகழ்ச்சிகள் நடந்தன. மறைவில் இருந்துகொண்டு, காந்திஜியின் உத்தரவு என்பதாகப் பலர் மனத்தில் படும்படி போலிப்பிரசாரங்களைச் சிலர் நடத்தியதன் விளைவாக, தண்டவாளத்தைப் பிடுங்குவதும் போஸ்டாபீஸ், போலீஸ் ஸ்டேஷன், ரயில்வே ஸ்டேஷன், கோர்ட்டுகள் முதலிய இடங்களை அழிப்பதும், தந்திக் கம்பிகளைத் துண்டிப்பதுமான பல செயல்கள் சிற்சில இடங்களில் நடந்தன. அவற்றின் விளைவாக ஏராளமான குற்றமற்ற மக்கள் உயிர் நீக்கவும், கூட்டம் கூட்டமாகச் சிறையில் அடைபடவும் நேர்ந்தது. அதிகாரிகளின் போக்கு, கட்டுக்கு அடங்கினதாக இல்லை. கிராமங்களை அப்படியே தீயிலிடவும், குடிகளைக் கூட்டம் கூட்டமாக ஆடு மாடுகள் போலச் சுட்டுக் கொல்லவும், போலீசாரும், சில இடங்களில் பட்டாளத்தார்களும் பின்வாங்கவில்லை. பல ஊர்களிலுள்ள குடிகளுக்கு லக்ஷக்கணக்கான ரூபாய் கூட்டு அபராதமும் விதிக்கப்பட்டது. சிறை சென்றவர்கள் பாக்கியசாலிகள் என்றே சொல்ல வேண்டும். வெளியே இருக்க நேர்ந்திருந்தால் அவர்களும் சுட்டுக் கொல்லப்பட்டிருப்பார்கள். சிறையில் அடைக்கப்பட்ட பெரும்பாலோருக்கு விசாரணை இல்லை. சில்லறைப் போலீஸ் அதிகாரி, ஒருவனுடைய பெயரைத் தன் புத்தகத்தில் குறிப்பிட வேண்டியதுதான் தாமதம்; உடனே சிறைவாசம். இம்மாதிரி நேரிடுமென்று எதிர்பார்த்தே இந்தச் சமயம் சத்தியாக்கிரகம் தொடங்கவேண்டாமென்று மன்றாடிப் பார்த்தோம்; பயனில்லை.

# விவசாயி ஆனேன்

"பிழைப்பில்லாத வைத்தியன் விவசாயியாகக்கூடும். ஆனால் உன்னைப்போலக் கத்தி பிடித்து உயர்தர ரண சிகிச்சை செய்து நல்ல பெயரும் பெருமையும் ஊதியமும் பெற்ற டாக்டர் விவசாயியாக மாறிக் குக்கிராமத்தில் குடியேறி, அறுபது வயசுக்குமேல் மாடுகளை ஓட்டி, வரப்பில் நின்று பண்ணைநடத்தும் காட்சியை நான் கண்டதும் இல்லை, கேட்டதும் இல்லை" என்றார் என் மதிப்பிற்குரிய நண்பர், கர்மயோகி, தீரர், ஏழைக்கு இரங்கித் தம் வாழ்நாட்களை அவர்களுக்கெனவே தத்தம்செய்து அல்லும் பகலும் தள்ளாத வயசிலும் ஊக்கத்துடன் உழைத்து வரும் மகான் அமிர்தலால் தக்கர். தமிழ் நாட்டு ஹரிஜன சேவா சங்கத்தில், அதன் தலைவன் என்கிற முறையில் நான் உழைத்துவந்த காலத்தில் இப்பெரியாருடைய அன்பையும் ஆசியையும் பெற்றேன். அப்பதவியினின்று நான் விலகி நான்கு வருஷங்கள் ஆகிவிட்டன. மந்திரி வேலையினின்றும் நீங்கிச் சிறை சென்று, வெளிவந்து ஒரு வருஷத்திற்குப் பிறகு அப்பெரியாரைச் சந்தித்தபொழுது அவர் சொல்லிய சொற்கள் இவை. வேறு எவ்வளவோ பேர்கள் நான் கிராமவாசியானதையும், குடியானவர் தொழிலில் ஈடுபட்டதையும் கண்டு நகைத்ததும் உண்டு; வியப்படைந்ததும் உண்டு. ஆனால் அவைகளை நான் கவனித்ததும் இல்லை, ஒரு பொருளாக மதித்ததும் இல்லை. ஆனால் மதிப்பிற்குரிய தக்கர்பாபாவின் சொல்லை அவ்வளவு சுலபமாக மறக்க என்னால் முடியவில்லை.

ஆங்கிலம் படித்தவர்கள் கிராமத் தொண்டு செய்ய வேண்டுமென்று வற்புறுத்துவது மேடைப்பிரசங்கத்தின் எல்லையோடு நின்றுவிடுகிறது. கிராமங்களிலிருந்து நகரங்களுக்குக் குடியேறுபவர்களின் தொகை கணக்கில் அடங்காது.

ஆனால் நகரங்களிலிருந்து கிராமத்திற்குத் திரும்புவோர் தொகையோ மிகவும் குறைவு. அதிலும் நகரங்களில் தொழில் முறையில் வேரூன்றிப் பணம் சம்பாதிப்பவர்கள், கிராமங் களில் நிலபுலன் வாங்கினாலுங்கூட அங்கேயே வசிப்ப தில்லை. நகரங்களில் வருஷக்கணக்காக வசித்துச் சுக போகங்களை அநுபவித்தவர்களுக்குக் கிராமம் நரகத்திற்கு ஒப்பானது. அதிலும் உபகாரச் சம்பளம் பெறுபவர்கள் கிராமங்களில் போய்க் குடிபுகுவதென்றால் துறவறம் பூண்ட மாதிரிதான். பேசிப் பொழுதுபோக்குவதற்குத் தகுந்த பண் புடைய மக்கள் கிராமத்தில் அகப்படமாட்டார்கள். பணத் தைக் கொண்டு கிடைக்கக்கூடிய சுகபோகங்கள், வாகனாதிகள், நினைத்த மாத்திரத்தில் கிடைக்கக்கூடிய நவீன வசதிகள் ஒன்றும் இல்லாத கிராமத்தில் போய் எதற்காக வாழ வேண்டும்?

வீடுகள் எல்லாம் குச்சுக்கள். வீடு போய்ச் சேருவதற்குள் இடுப்பளவு தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கும் கால்வாய்கள் மூன்று நான்கு. களைப்பை ஆற்றிக்கொள்ள ஒரு காபி ஹோட்டல்கூட இல்லை. வெற்றிலைபாக்குக் கடைகூட இருப்பது சந்தேகம். பிள்ளைகள் படிப்பதற்கு ஒரு பள்ளிக் கூடம் இல்லை. தபாலாபீசுக்குப் போகவேண்டுமானால் மூன்று மைல் தூரம் நடக்கவேண்டும். வாரத்திற்கு இரு முறை தபால்காரன் தயவு இருந்தால் கடிதங்கள் கிடைக்கலாம். சினிமா, பாட்டுக்கச்சேரி, கிளப், கள்ளுக்கடை இவைகள் கூட இல்லாத கிராமத்தில் நகரத்துப் பேர்வழி ஒருவன் போய் வசிப்பதென்றால் அது நரகமாகத் தோன்றுமென்பதற்கு ஐயம் என்ன?

ஆனால் இம்மாதிரியான கிராமங்களே ஆயிரக்கணக்காக நமது நாடு முற்றும் பரவிக்கிடக்கின்றன. லக்ஷக்கணக்கான ஏழை மக்கள் இந்த ஊர்களில்தாம் தம் வாழ்நாட்களைக் கழித்து வருகிறார்கள். நாடு என்பது இங்கேதானே இருக்கிறது? முன் னேற்றம், சுதந்தரம், விடுதலை எல்லாம் அவர்களுக்கு ஏற் பட்டாலொழிய நாடு முன்னேறுவது எப்படி? "கிராமங்

களுக்குச் செல்லுங்கள். ஏழைகளுக்கு உழையுங்கள். கல்வி அறிவை ஊட்டுங்கள். சுக வாழ்வுக்கு அடிகோலுங்கள்" என்றெல்லாம் பல ஆண்டுகளாகப் பறை சாற்றிக் கடைசியாகத் தமது முதிர்ந்த வயசில் எளிய வாழ்வைக் கிராமத்தில் நடத்தித் தொண்டு புரிவதற்கென, முன்பின் தெரியாத மகாராஷ்டிர தேசத்தில் நாகபுரிக்குச் சமீபமாகவுள்ள சேவா கிராமத்தில் உழைத்துவரும் மகாத்மா காந்தியின் உண்மை நெறியைப் பின்பற்றுவது நகரவாசிகளுக்கு எப்படி முடியும்? இவற்றையெல்லாம் நினைக்கும்பொழுது, கிராமங்களுக்குச் செய்யவேண்டிய கடமையை, படித்தவர்களென்று பெருமை கொள்ளும் நகரவாசிகள் எவ்விதம் செய்யத் தவறிவிட்டார்கள் என்பது நன்கு புலப்படும். கிராம மக்களுக்கு உழைப்பது ஒரு புறம் இருக்க, அங்கே வசிப்பதற்கே மனங்கொள்ளாத நம் தேசபக்தர்களை என்னவென்று சொல்வது? - இம்மாதிரியான எண்ணங்கள் என் மனத்தில் ஊசலாடிக்கொண்டிருந்த காலத்தில் என்னை அறியாமலே, நான் விரும்பாமலே, எதிர்பாராமலே ஒரு கிராமத்தில் போய் மாட்டிக்கொண்டு திண்டாடும் பாக்கியம் எனக்கு ஏற்பட்டது.

பணம் திரட்ட உலகத்தில் எவ்வளவோ முயற்சி செய்கிறார்கள். கஷ்டப்பட்டுக் கிடைத்த பணத்தைக் காப்பாற்ற அதிலும் அதிகக் கவலை உண்டாகிறது. கிடைத்த பணத்தை உடனே அவ்வப்பொழுது செலவிட்டால் காப்பாற்றும் கவலை ஏற்படாது. தொழிலில் பணம் அதிகமாக நான் சம்பாதித்த போதிலும் அது கையில் சேராமல் போய்விட்டது. அரசியலில் ஈடுபட்டதுதான் இதற்குக் காரணம். அப்படியிருந்துங்கூட ஒரு சமயத்தில் என் வசம் ஒரு சிறு தொகை சேர்ந்திருந்தது. அதை அறிந்துகொண்ட ஒரு வியாபாரி, அந்தத் தொகையைத் தமக்குக் கடனாகக் கொடுத்து உதவும்படி வேண்ட, நானும் அதற்கு இசைந்தேன். நூற்றுக்கு முக்கால் வீதம் வட்டியும், ஈடாக இருபத்தையாயிரம் ரூபாய்க்குச் சரியான நிலங்களும் காட்டச் சம்மதித்தபடியால், அந்தத் தொகையைக் கடனாகக் கொடுத்தேன். நிலங்களின் யோக்கியதையைப் பற்றி எனக்கு

ஒன்றும் தெரியாதாதலால், என் சொந்தக்காரர் ஒருவரைக் கொண்டு மதிப்பிடச் செய்து, தொகையைக் கொடுத்தேன். கடன் கொடுத்த சில மாதங்களுக்கெல்லாம் வேதாரணியம் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ராஜாஜியோடு ஈடுபட்டுத் தண்டனை அடைந்து சிறை சென்றுவிட்டேன். கடன் வாங்கிப் போனவர் வட்டியோ முதலோ ஒன்றும் கொடுக்கவில்லை. அதற்குள்ளாகக் கோர்ட்டு நடவடிக்கைகள் நான் எடுக்க மாட்டேனென்றும், சத்தியாக்கிரகி ஆகிவிட்டபடியால் என்னிடமிருந்து யாதொரு தொல்லையும் ஏற்படாதென்றும் அந்த வியாபாரிக்குச் சிலர் உபதேசம் செய்தார்கள். முடிவில் வருஷங்கள் மூன்றாகியும் முதல், வட்டி ஒன்றும் வராதபடியால் சிவில் கோர்ட்டு நடவடிக்கைகள் நடந்து, நிலங்களை ஏலத்திற்குக் கொண்டுவரும்படி நேர்ந்தது. எனக்குச் சேரவேண்டிய முப்பத்திரண்டாயிரம் ரூபாய்க்கும் தீர்ப்புக் கிடைத்தது, நிலங்களை ஏலத்திற்குக் கொண்டுவந்தேன். ஏலம் எடுப்போர் ஒருவரும் இல்லை. அப்பொழுதுதான் ஈடு வைத்த நிலம் நான் கொடுத்த தொகை பெறாது என்பதைத் தெரிந்துகொண்டேன். நானே கோர்ட்டு விலையான இருபத்துமூவாயிரத்திற்கு எடுக்கும்படி நேரிட்டது. இதிலிருந்து அறிந்துகொண்ட சில முடிவுகளை நான் சொல்லியே தீரவேண்டும்.

முதலாவது, பணம் சம்பாதித்தாலும், காப்பாற்ற எனக்கு வகை தெரியவில்லை.

இரண்டாவது, வட்டிக்கு ஆசைப்பட்டு, ஆள முடியாத, பழக்கமில்லாத, பெறுமானமில்லாத நிலங்களை வாங்கிக் கொள்ளும்படியான நிலையை அடைந்தேன்.

மூன்றாவதாக, கடன் கொடுத்த பணம் வராமல் நஷ்டமாகப் போனபோதிலும் பாதகம் இல்லை. அதற்குப் பதிலாகப் பெறுமானமில்லாத, இருநூறு ஏக்கர் நிலத்தை வாங்கிக் கொண்டு, விளைந்தாலும் விளையாவிட்டாலும், உழுதாலும் உழாவிட்டாலும், குடியானவன் கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும், வருஷம் ஒன்றுக்கு ரூபாய் அறுநூறு சர்க்கா

ருக்குக் கிஸ்தி கட்டவேண்டிய அவஸ்தையையும் விலைக்கு வாங்கிக்கொண்டேன்.

விற்க முடியாத ஒரு நிலத்தைப் பலவித வில்லங்கங்கள், முன் உள்ள பாத்தியதைகள், எல்லாம் உட்பட இருபத்தையாயிரம் ரூபாய்க்கு என் தலையில் கட்டிவிட்டு வியாபாரி ஓடிவிட்டார். முதல் போனாலும் போகட்டுமென்றால், சர்க்கார் வாயிதாவை வஜா செய்யமாட்டார்கள். நிலத்தை விற்கப்போனால் இனாமாகக் கொடுத்தாலுங்கூட வாங்குவோர் இல்லை. இந்த நிலையில் நானும் ஒரு மிராசுதார் ஆகிவிட்டேன். நிலத்திலிருந்து வருஷ வருமானம் எண்ணூறு ரூபாய் பெறுமானமுள்ள நெல்; சர்க்கார் வாயிதா அறுநூறு ரூபாய். எஞ்சியுள்ள இருநூறு ரூபாயும் நிலங்களை மேற்பார்வை பார்த்து வசூலிப்பவர் சம்பளம். இது தவிர, சுமார் பத்தாயிரம் ரூபாய்வரையில் இழக்கும் வில்லங்கங்கள் கோர்ட்டு விவகாரத்தில் ஈடுபட்டிருந்தன. கிடைத்த விலையை வாங்கிக்கொண்டு நஷ்டத்துக்கு விற்றுவிட்டு வாளா இருந்திருக்கலாம். ஆனால் புதிய நீர்ப் பாசனத் திட்டம் ஒன்று சீக்கிரத்தில் வருவதற்கான ஏற்பாடுகள் இருந்ததால், விற்பதைப்பற்றிச் சில நாட்கள் தாமதித்து யோசனை செய்துகொள்ளலாமென்று நிலங்களை விடாது பிடித்துக்கொண்டு விவகாரங்களையும் நடத்திப் போராடிவந்தேன்.

என்னுடையவையான இருநூறு ஏக்கர் நிலங்களில் நாற்பது ஏக்கர் நிலங்களே சுமாரான சாகுபடிக்கு ஏற்றவை. அதிலும் இருபத்தைந்து ஏக்கர் வாய்க்கால் பாசனமும், பாக்கியுள்ள பதினைந்து ஏக்கர் இறைவை நன்செய்யுமாக இருந்தன. ஏக்கர் ஒன்றுக்குப் பத்துக் கலம் நெல் விளையும். என் பட்டாப் பிரகாரம் நான் நன்செய்த் தீர்வை செலுத்தும் நிலங்கள் நாற்பத்தாறு ஏக்கர்கள். இவற்றில் விவசாயத்திற்கே உபயோகமில்லாத களர் நிலங்கள் பன்னிரண்டு ஏக்கர்கள். எஞ்சியுள்ள முப்பத்துநாலு ஏக்கர்கள் சர்க்காராலேயே மூன்றாந்தர நிலமாக வகுக்கப்பட்டு அதற்குள்ள வாயிதா வசூலிக்கப்பட்டு வந்தது. புன்செய் நிலங்கள் நூற்று

ஐம்பத்துநான்கு ஏக்கர்கள்; மானாவாரிப் புன்செய் என்பதாக வகுக்கப்பட்டுச் சுமார் இருநூற்று ஐம்பது ரூபாய் வருஷந் தோறும் தீர்வையாகச் செலுத்தவேண்டியவை. இதிலிருந்து ஒரு பைசாக்கூட வருவாய் இல்லை, கிராமத்தாருடைய கால்நடைகள் மேய்ந்துகொண்டு முள்காடுகள் நிறைந்து, பூமி மழையினால் ஆங்காங்கே கரைந்து வெண் சரளைக்கற்கள் வெளிக் கிளம்பிவிட்டன. நிலம் மலைச்சரிவின் அடிப்பாகத்தில் இருந்ததால் மழைத்தண்ணீர் நிலத்தை அறுத்துக்கொண்டு மண்ணைக் காவிரியாற்றில் சேர்த்துப் பூமியைப் பாழாக்கிக் கொண்டிருந்தது. இருந்தபோதிலும் 'நான் ஒரு மிராசுதாராகி விட்டேன்' என்கிற பெருமை என் மனத்தில் வளர்ந்து வந்தது. இருநூறு ஏக்கர் பூமிக்குச் சொந்தக்காரனாகியும், அதிலிருந்து வருமானம் என்று சொல்லக்கூடிய முறையில் ஒன்றும் கிடைக்காவிட்டாலும், ஊரில் தங்குவதற்கு ஒரு சாண் குச்சுக்கூட இல்லாமலிருந்தும் ஏதோ மனத்தில் ஒரு புதிய உத்ஸாகம் என்னை அறியாமலே வளர்ந்துவந்தது.

விவசாயம் என்பதைக் கனவில்கூட அறியாத நான் விவசாயப் புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்தேன். படித்த புத்தகங்களில் ஒன்றாவது, விவசாயம் பயனற்ற ஒரு தொழில், பாடுபடுவதற்குத் தகுந்த ஊதியத்தை அளிக்கக்கூடியதல்ல என்று சொல்லவில்லை. 'எந்த நிலத்தையும் பண்படுத்தக்கூடும். நன்றாக விளைச்சலை அதிகப்படுத்த முடியும். ஏழை மக்களைக் காப்பாற்றி, ஆதரித்து, கால்நடைகளை நன்கு பராமரித்துப் பாடுபட்டால் மனிதனுக்குப் போதிய அளவு உணவையும் உத்ஸாகத்தையும் கொடுக்கக்கூடிய தொழில் விவசாயம்' என்றே அவை கூறின. நான் அதை முற்றும் நம்பினேன். 'இந்த வருஷம் இல்லாவிட்டால் அடுத்த வருஷம் ; அது தவறினால் அதற்கடுத்த வருஷம், என்று மேலும்மேலும் நம்பிக்கை வளர்ந்து வந்ததோடு, எனது தொழிலிலிருந்து கிடைக்கும் வருவாயையும் நிலத்தில் போடுவது நலமெனத் தோன்றியது. கடன் கொடுத்துக் கண்ட பலனை அநுபவித்தவனாகையால் கிடைத்த பணத்தை உடனே லாபகரமாக இல்லாவிட்டாலும் நிலத்தில்

போட்டுவைத்தால் எப்பொழுதாவது ஒரு சமயம் நமக்காகிலும், நம் சந்ததியார்க்காகிலும் பயன்படும், அவர்களைக் கைதூக்கி விட உதவும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. காந்தியடிகளும், மற்றப் பெரியோர்களும் வேளாண்மையின் பெருமையையும், படித்தவர்கள் கிராமவாசிகளுக்கும் கிராமங்களுக்கும் செய்ய வேண்டிய கடமைகளையும்பற்றி அடிக்கடி வற்புறுத்திச் சொல்லாலும் செயலாலும் அறிவுறுத்தியதையும் நான் மறக்கவில்லை. காந்திஜி கிராமங்களில் தங்கி, எளிய வாழ்வு நடத்தி, தன்னலமற்ற தொண்டில் ஈடுபட்டுத் தம் வாழ்நாட்களை நடத்திவருவதையும் நேரில் கண்டுவந்த நான், அவரைப் பின்பற்றவேண்டும் என்ற உணர்ச்சி மிகுதியால், என்னுடைய கிராமத்தை எவ்விதப் பாடுபட்டாகிலும் சீர்ப்படுத்த வேண்டுமென்கிற முயற்சியைத் தளராது மேற்கொண்டேன். அதிருஷ்ட வசத்தால் நான் எதிர்பார்த்தபடி புதிய கால்வாயும், வற்றாத தண்ணீர்ப் பாசனமும் எங்கள் ஊருக்கு ஏற்பட்டன. இதுவே எனது முயற்சிக்குத் தூண்டுகோலாயிற்று.

எங்கள் ஊர் மக்களின் நிலை மிகவும் விபரீதமானது. ஊர் சிறிய கிராமமாக இருந்தபோதிலும், ஆங்கில அரசு அகராதியில், ஹாம்லெட் (Hamlet) என்று ரிவின்யூ ரிஜிஸ்டரில் தாக்கல் செய்யப்பட்டிருந்தபோதிலும், ஒரு புனித க்ஷேத்திரம். சுமார் நானூறு அடி உயரமுள்ள ஒரு மலையும், அதன் உச்சியில் பாடல் பெற்ற ஒரு சிவஸ்தலமும் உள்ளன. அது புராதன ஸ்தலம் என்பதற்கு அறிகுறிகள் பல உள. எனினும் மலைமேல் மிகுந்த கஷ்டத்துடனும், பொறுமையுடனும், பக்தியுடனும் சதுரமாகச் செதுக்கப்பட்ட கற்களால வெளி மதில் கட்டப்பட்டு, அதன் மேல்பாகம் சில இடங்களில் காலகதியாலும், பக்திக் குறைவாலும், இடிந்து சரிந்துகொண்டிருப்பதே அதன் புராதனத்திற்குப் போதிய சான்று. மலை உச்சியில் தெய்வத்தை நாட்டுவது நம் மக்களின் பண்பு. தெய்வத்தின் உயர்வையும் உண்மையையும் மனிதன் நிமிர்ந்து நோக்கித் தனது உள்ளத்தை ஆகாசத்துடன் பிணைத்து, உயிரின் லக்ஷ்யத்தை ஒருவாறு உருவப்படுத்தி, உயர்நிலை

எய்தச் செய்யப்படும் முயற்சி அல்லவா ? மலையின் அடிவாரத்தில் அகண்டகாவேரி ஓடுகிறது. மலையில் இருக்கும் திருஈங்கோய்நாதனின் திருவடிகளுக்குத் திருமஞ்சனம் செய்துகொண்டு ஓடுகிருள் காவேரி. ஒரு காலத்தில் மக்கள் நிறைந்த புனித க்ஷேத்திரமாக இது இருந்திருக்க வேண்டும். காவேரியின் வட கரையிலுள்ள இம்மலை காவேரிக் கரையில் வந்து மோதிக்கொண் டிருக்கிறது.

இதன் அமைப்பில் ஓர் அழகு உண்டு. திருஈங்கோய் மலை என்னும் கிராமம் முந்நூறு ஏக்கர் விஸ்தீரணம் கொண்டது. மலைக்கு எதிரே பரவியிருக்கும் காவேரியின் விஸ்தீர்ணம் முந்நூறு ஏக்கர்கள். மலையின் அடிவாரச் சதுரம் முந்நூறு ஏக்கர்கள். மலையில் இருக்கும் மரகதாசலேசுவரராகிய திருஈங்கோய்நாதருக்கு ஐவேஜி உண்டு. சர்க்காரிடமிருந்து வருஷம் ஒன்றுக்கு ரூபாய் நானூறு கிடைக்கிறது. இதர நிலங்கள் கிராமங்கள் இவைகளிலிருந்து சுமார் ஆயிர ரூபாய் கிடைக்கிறது. கோவில் சிப்பந்திகளுக்குக் குறைவில்லை. சுமார் ஆயிரம் ஏக்கர் புன்செய் நிலங்கள் இனமாக இந்த ஊழியர்களுக்கு உண்டு. தங்களுடைய இனம் நிலங்களில் கவனம் செலுத்திப் பாடுபடாமல் தலைமுறை தலைமுறையாக அவற்றைக் குடியானவர்களிடம் ஒப்படைத்து விட்டு, ஏதோ அந்தப் பாட்டாளிமக்கள் படும் பாட்டில் ஒரு சிறு பாகம் பெற்றுக்கொண்டு, காலந்தள்ளி வருபவர்கள், கோவில் ஊழியர்கள். அவர்களுக்குச் சொந்தமான நிலத்தில் அவர்கள் பாடுபடாமல் போனபோதிலும், தெய்வத்தினிடமாவது உண்மைப் பக்தி கொண்டு ஊழியம் செய்கிருர்களா என்று பார்த்தால் அதுவும் இல்லை. தெய்வத்தினிடத்துப் பக்தி, பயம் இரண்டும் இருந்தவரையில் இனம் நிலத்தை உழுது பண்படுத்திப் பாடுபடும் குடியானவர்கள், இனம்தாரருக்குச் சிறிது தொகையை வருஷந்தோறும் கொடுத்துவந்தார்கள். தெய்வபக்தியும் பயமும் குறைந்தவுடன் இனம்தாரர்களுக்குச் செலுத்தவேண்டிய • தொகையைக் குடியானவர்கள் கொடுக்க மறுத்துவிட்டார்கள். இனம்தாரர்

களுக்குத் தங்கள் நிலம் எங்கே இருக்கிறது என்பதுகூட மறந்துபோய்விட்டது. குடியானவனிடமிருந்து எவ்வளவு அதிகம் பற்றலாமோ அவ்வளவும் பற்றலாமென எண்ணி அவர்களுக்குச் செய்நேர்த்தி முதலானவைகளுக்கு எவ்விதத்திலும் உதவி அளிக்காமல், குத்தகைத் தொகையை அதிகம் கேட்கவும், நில அநுபவத்தை மற்றவர்களுக்கு மாற்றவும் முற்பட்டார்கள். குடியானவர்கள் நிலம் தங்களுடையதே என்று சொல்லி இனும்தாரர்களைக் கிட்டவும் அணுக முடியாமல் தடுத்து விட்டார்கள். கோர்ட்டில் விவகாரம் நடந்து கொண்டிருக்கிறது. கோவில் ஊழியர்கள் வக்கீல்மார்களையும், முன்சீப்களையும் பூஜை செய்து வருகிறார்கள். தலைமுறை தலைமுறையாகக் கோவிலை நம்பி, விவசாயத்தைக் கைவிட்ட மக்களுக்குத் திடீரென்று விவசாயத்தில் ஈடுபட மனம் வரவில்லை. மனம் வந்தாலும் கை கால்கள் வேலை செய்ய மறுக்கின்றன. பாவம்! என்ன செய்வார்கள்! இந்தத் துர்ப்பாக்கியமான நிலையில்கூடத் தெய்வத்தினிடம் இந்த ஊழியர்களுக்குப் பக்தி இல்லை. சாப்பாடு சுகமாகக் கிடைக்கும்படி செய்யாத தெய்வத்தினிடத்து நம்பிக்கை கொள்ளவில்லை போலும்!

மலையின்மேல் பெரிய கோவில்; அடிவாரத்தில் சிறிய கோவில். இந்த இரண்டு கோவில்களுக்கும் ஊழியம் செய்பவர்களே இந்தக் கிராமத்தில் உயர்ந்த ஜாதியார். பூணூல் போடும் குருக்கள் குடும்பம் நான்கு. மேளகாரர்களில் எட்டு ஜதை; அதாவது முப்பத்திரண்டு பேர்கள். சுவாமிக்குப் பொட்டுக்கட்டி, ஊர்வேசிகளாக, வறுமை, வியாதி, மூடத்தனம், குருட்டுப் பழக்க வழக்கம் இவைகளில் ஊறிக்கிடக்கும் விலைமாதர்கள் முப்பது பேர்களுக்கு அதிகம். தவிர, கோவில் பரிசாரகன், பண்டாரம், காவல் போன்றவர்களும் இந்தச் சோம்பேறிக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள். சுமார் நானூறு மக்கள் அடங்கிய இந்தக் கிராமத்தில் சுமார் நூறு பேர்களுக்கு உழைத்துப் பாடுபடும் சக்தி இருந்துங்கூடச் சோம்பேறிகள், மேளகாரர்கள் எட்டு ஜதை இருந்துங்கூடச் சுவாமிக்குத் தினசரி மேளம் இல்லை. ஏதாவது விசேஷகாலங்களில்,

கேட்க முடியாத, கர்ண கடோரமான சத்தத்தை உண்டு பண்ணுவார்கள். தாசிகளும் உத்ஸவங்களில் பிரசன்னமாகித் தங்களை விளம்பரப்படுத்திக்கொள்ளுவார்கள். குருக்கள் மாருடைய ஆகாரத்தையும், கல்வி கேள்விகளையும் பற்றி என்ன சொல்வது? இந்த உயர்தரமான மக்களின் மேல்ஜாதி உணர்ச்சியைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை.

இந்த ஜனசமூகத்தின் மத்தியில், பிரபல வைத்தியனாக இருந்து, காங்கிரஸில் ஈடுபட்டுச் சத்தியாக்கிரகம் செய்து, தீண்டாமையை ஒழிக்கப் பன்முறை சிறை சென்று, அரசாங்க மந்திரியாகச் சிலகாலம் உத்தியோகம் வகித்த நான் முதுமைப் பருவத்தில் என்னை விவசாயியாக எண்ணி இந்தக் கிராமத்தில் வாழ்வதற்குப் போய்ச் சேர்ந்தது ஒரு பெரிய விந்தை. எனது வரவை உத்ஸாகத்தோடு கிராமவாசிகள் வரவேற்கவில்லை. முதலாவது, நான் ஒரு பெரிய மனிதன் என்கிற அச்சம். வைதிக ஆசார விவகாரங்களில் கிராமத்தாருடைய மனப் பான்மைக்கு உகந்தவாறு நடந்துகொள்ளாமல் இருப்பது இரண்டாவது குற்றம். என் நிலங்களைப் பேணிப் பண்படுத்திக் கவனித்து வருவதால் கொள்ளை அடித்துக்கொண்டு சோம்பேறி களாகப் பிடுங்கித் தின்று வாழ்நாளை நடத்திய அந்தக் கிராம வாசிகளுக்கு அன்பு எப்படி ஏற்படும்? ஐந்து வீடுகள் (பெரிய குச்சுகள்) அடங்கிய அக்கிரகாரத்தில் வீடு கட்டிக் கொண்டு, தீண்டாமையை நன்கு கடைப்பிடித்து, ஹரிஜனங் களைத் தெருவில்விடாமல் அடித்துத் துரத்திக்கொண்டு வாழ்வை நடத்தாமல், ஹரிஜனங்கள் தடையில்லாமல் நட மாடும் தெருவில் சென்று வீடு கட்டிக்கொண்டு அவர்களோடு நெருங்கிப் பழகி அவர்களை என் வீட்டில் வேலை முதலியவை களைச் செய்யவிட்டுக்கொண்டு இருந்தால் என்னை எவ்விதம் அந்த ஊரார் மதித்து நடத்துவார்கள்? அந்த ஊர் வேசி களுக்குக்கூட என்னிடம் நன்மதிப்பு இல்லை என்றால், மற்றவர் களைப்பற்றிக் கேட்பானேன்? உபயோகமற்ற காடாக இருந்த போதிலும் அந்த ஊரின் மூன்றில் இரண்டு பாகத்திற்குச் சொந் தக்காரன் என்கிற முறையில்தான் நான் அங்கே கால்ஊன்ற வேண்டி இருந்ததே தவிர, அந்த ஊராரின் அன்பினால் அல்ல

# களரும் திருந்தும்

"டாக்டர் ராஜன், நீங்கள் எவ்வளவோ பணம் சம்பாதிக்கிறீர்கள். அதை உபயோகப்படும்படியான முறையில் காப்பாற்றி வைத்துக்கொள்ளவேண்டும் நான் ஐரிஷ்காரன். ஒரு விவசாயியினுடைய மகன். ஆகையால் உங்களுக்கு யோசனை கூறுகிறேன். நீங்கள் உங்கள் கிராமத்திலுள்ள நிலங்களுக்கு ஒரு திட்டம் போட்டு, தண்ணீர் விடும்படி கேட்டிருக்கிறீர்கள். இதில் போட எண்ணியிருக்கும் தொகையை வீணாக்க வேண்டாம். இந்தியாவில் இப்பொழுது நடக்கும் விவசாயம் லாபகரமானதாக இல்லை. எனக்குத் தண்ணீர் கொடுப்பதைப்பற்றி ஆக்ஷேபம் இல்லை. ஆனாலும் என் அபிப்பிராயத்தைத் தெரிவித்தேன்" என்றார் சர்க்கார் உயர்தர எஞ்ஜினீயர் மிஸ்டர் ஓபிரையன் துரை. நல்ல அனுபவம் வாய்ந்த புத்திமதி. ஆனால் எனது துயரத்தை அவர் எப்படி அறியக்கூடும்? விளைந்தாலும், விளையாவிட்டாலும், வருஷம் தவறாது ரூபாய் இருநூற்றைம்பது சர்க்கார் கிஸ்தி செலுத்திவந்தால் அல்லவா அவருக்குத் தெரியும். நூற்றைம்பது ஏக்கர்கள் தரிசு நிலம்! மாடுகள் மேய்ப்பதற்குக்கூடப் புல் முளைக்காது. கறுத்த கட்டையான முள்செடிகள் நிறைந்த 'சித்தக் காடு'. இனாமாகக் கொடுத்தாலும் வாங்குவோர் இல்லாத புன்செய். மழைபெய்தால் ஒரு சொட்டுத் தண்ணீர்கூடத் தங்கி நிற்காத மலைச்சரிவின் அடிவாரம், மேலிருக்கும் மண் கரைந்து, சிறு கால்வாய்களாக அறுத்து ஓடியிருக்கும் பள்ளங்கள். இதற்கு எங்கிருந்தாகிலும் தண்ணீர் கொண்டு வந்து, பூமியைச் செய்நேர்த்தி செய்து, பயிராக்கினால் எவ்வளவு நலமாக இருக்கும்! அந்தக் காலத்தில் உணவு உற்பத்தியைப் பற்றி ஏன் என்று கேட்பார் இல்லை. வாயிதாவை மட்டும் ஈவு இரக்கமில்லாமல் பைசா பாக்கி

இல்லாமல் சர்க்கார் கறந்துவிடும். விவசாய இலாகா என்று ஒன்று இருப்பது கிராமத்தில் ஒருவருக்குமே தெரியாது.

திருச்சியில் என் நண்பர் குழந்தைசாமிப்பிள்ளை என்பவர் விவசாய இலாகாவில் டிபுடி டைரெக்டர் வேலை பார்த்து வந்தார். அவரை எனக்கு நன்கு தெரியும். அவரைக் கிராமத்திற்கு அழைத்துவந்து, நிலங்களைக் காண்பித்தேன். நான் கண்டு, கேட்ட பல அதிகாரிகளுள் அவர் ஒருவரே, "விவசாய அபிவிருத்தி செய்யக்கூடும். பலன் உடனே கிடைக்காவிட்டாலும் கட்டாயமாகப் பலன் கிடைக்கும்" என்று தைரியம் கூறியவர். நான் போட்டிருந்த திட்டத்தை முற்றும் ஆதரித்ததோடு, அதற்காகப் பல விதமான புள்ளி விவரங்கள் தயாரித்து இன்ன வருஷத்தில் லாபகரமான பயிர் கிடைக்குமென்று உறுதி கூறினார். அவருடைய உதவியும் யோசனைகளும் இல்லாவிட்டால் இந்த வேலையை நான் மேற்கொண்டிருக்க முடியாது. "என்ன குழந்தைசாமிப் பிள்ளை அவர்களே! தங்கள் பேச்சைக் கேட்டேன். இந்த வருஷம் ஐயாயிர ரூபாய்க்கு மேலாகச் செலவு செய்தேன், வருவாய் மோசமாக இருக்கிறதே!" என்பேன். "பூமியில் போட்டது ஒரு நாளும் வீண் போகாது. இந்த வருஷம் இல்லாவிட்டால் அடுத்த வருஷம் உண்டு. போன தடவை வருவாய் இல்லையே என்பதற்காக இந்த வருஷம் செய்ய வேண்டியதை நிறுத்திவிடாதீர்கள். நிறுத்தினால் போட்ட பணம் வீணாகிவிடும்" என்று உடனே சொல்லுவார்,

எனது கிராமத்து நீர்ப்பாசன முறை மாறி, தண்ணீர்த் தட்டில்லாமல் வருஷம் முழுவதும் வாய்க்காலில் தண்ணீர் வரத்தொடங்கியது. இது என் மனத்திற்கு உத்ஸாகத்தைக் கொடுத்தது. இதனால் பழைய நன்செய் நிலங்களைச் சீர்திருத்தவும் சாஸ்திரமுறைப்படி -விவசாய இலாகாவின் சிபார்சின்படி- விவசாயம் செய்யவும் முற்பட்டேன். கவலையேற்றம் வைத்து வாய்க்காலிலிருந்து நான்கடி உயரத்திற்குத் தண்ணீர் ஏற்றி விவசாயம் செய்துவந்த இருபத்தொரு ஏக்கர்களில் கவலை ஏற்றத்தை மாற்றி, பத்துக் குதிரை

ஆற்றல் உள்ள 'பம்பு' ஒன்று வைத்துக் 'குருட் ஆயில் என்ஜின்' வைத்து நிலங்களுக்குத் தேவையான தண்ணீர் பாய்ச்ச ஏற்பாடு செய்தேன். தடையில்லாமல் தண்ணீர் ஏராளமாகப் பாயவே, கவலையேற்றத்தின் கவலை ஒழிந்தது. களர் நிலங்களைச் சீர்திருத்துவது அடுத்த வேலையாயிற்று. பல புத்தகங்களைப் புரட்டிப் பார்த்தேன். சிறு பரிசைஷகளை நிலத்தில் செய்தேன். பல அநுபவ உபதேசங்களையும் கேட்டேன். கொஞ்சம் பணச்செலவிற்குப்பின் சில முடிவுகளுக்கு வந்தேன்.

(1) களர் நிலங்களைக் கைவிடக் கூடாது. கைவிடுவது வெட்டித் தேடிப் பார்க்கக் கூடிய புதையல்களைத் தேடாமல் கைவிட்டுவிடுவதற்கு ஒப்பானது.

(2) அவசரப்பட்டு ஒரே வருஷத்திற்குள் பலனை எதிர்பார்ப்பதும் தவறு. சிறுகச் சிறுகப் பொறுமையுடன் வேலை செய்யவேண்டும்.

(3) ஒரே அடியாக ஒரே தடவையில் பணத்தைச் செலவழித்துச் சீர்திருத்தம் செய்ய முற்பட்டால், செலவு நல்ல புதுநிலத்து விலைக்குமேல் ஆகிவிடும். இது விவசாய முறையில் எல்லோரும் செய்யமுடியாதது. செய்தாலும் விவசாய முறைக்குப் பொருந்தாது.

(4) களர் நிலங்கள் பக்குவப்பட்டுவிட்டால், அதே தரமுள்ள மற்ற நிலங்களைக்காட்டிலும், நல்ல மாசூல் கொடுக்கும்.

(5) குறைந்த செலவில் சமீபத்தில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு பூமியின் தன்மையை மாற்றவேண்டும்.

களர்நிலச் சீர்திருத்தத்தில் அடிப்படை முறை நல்ல வடிகால் வைத்தல். அது ஆழமான வடிகாலாக இருக்கவேண்டும். களர் உப்புக்கொதித்து மேல்நோக்காமல் அடிப்பாகத்தில் வடியும்படியாக வடிகால் வெட்டவேண்டும். நல்ல தண்ணீரை விட்டுக் கொதிக்கும் உப்பைக் கழுவிவிட வேண்டும். அழுகிக் கொண்டிருக்கும் சேற்றின் அடியில் பச்சைக் குச்சிகள், தழை,

சிறிய கட்டைகள் முதலியவற்றை இரண்டு வருஷமாவது புதைக்கவேண்டும். தக்கைப் பூண்டுச் செடியை நன்றாக வளர்த்து. அதைச் சேற்றில் கனமாகப் புதைக்கவேண்டும். கரும்புச் சக்கை, வாழைக் கட்டை, பழஞ் சுண்ணும்பு ஆகியவைகளைக் கொட்டிக் கலக்கிச் சேற்றில் புதைக்கவேண்டும். இப்படிச் செய்தால் களர் நிலங்கள் சுத்தப்படுகின்றன. இவைகளில் தக்கைப்பூண்டுபோல உபயோகமுள்ளது வேறில்லை. அநேகமாக என் நிலங்கள் தக்கைப்பூண்டு வளர்த்துப் புதைத்துவந்ததாலேயே மேம்பட்டு வந்தன. இப்போது நன்செய் நிலங்களில் களர்த் தொல்லை முற்றும் ஒழிந்துவிட்டது.

இதற்குச் சுமார் நான்கு வருஷங்கள் ஆயின. செலவு ஏக்கர் ஒன்றுக்கு நூறு ரூபாய்க்கு அதிகம் இல்லை. இப்பொழுது விற்கும் நிலங்களின் விலையைக் கொண்டு மதித்தால் ஏராளமான பெறுமானம் இதற்கு ஏற்பட்டிருக்கிறதென்றே சொல்லலாம். பூமி என்னை ஏமாற்றவில்லை.

பழைய நன்செய் நிலங்களான பன்னிரண்டு ஏக்கர்கள் களர் மாறிச் சுத்தப்பட்டது மனத்திற்கு ஆறுதல் அளித்தது. ஆனால் முள்காடாக இருந்த நூற்றைம்பத்துநான்கு ஏக்கர்களை வைத்துக்கொண்டு என்ன செய்வது? ஏதாவது ஒரு யுக்தி செய்து தண்ணீர் கொண்டுவந்து விவசாயம் பண்ண முடியுமா? புன்செய்க் காடுகளில் ஆங்காங்கே கிணறுகள் வெட்டி அவற்றிலிருந்து விவசாயம் பண்ணலாம். ஆனால் நூற்றைம்பது ஏக்கர்கள் பாயக் கிணறுகள் வெட்டுவது சுலபமல்ல. ஒரு கிணற்றுக்கு மூன்று ஏக்கர் வீதம் பாய்ந்தாலுங் கூடக் குறைந்தது ஐம்பது கிணறுகள் வேண்டும். கிணறு ஒன்றுக்குக் குறைந்தது ஐந்நூறு ரூபாய் தேவை. அதோடு ஐம்பது ஜோடி மாடுகள், ஆட்கள் எல்லாம் தேவை. ஒரு தனி மனிதன் செய்யக்கூடிய வேலையல்ல இது. புன்செய் நிலத்திற்கும் கிராம வாய்க்காலுக்கும் எழுநூறு அடி தூரம் இருந்தது. வாய்க்காலிலிருந்து ஒரு கிளை வெட்டி அதை ஒரு சிறிய குளத்தில் எப்பொழுதும் கொட்டிக்கொண்டிருக்கும்படி செய்து, அந்தக் குளத்திலிருந்து 'பவர் பம்பு' மூலம் தண்ணீ

ரைப் பதினைந்து அடி உயரம் ஏற்றிப் பாய்ச்சமுடியுமா என்று யோசனை செய்தேன். அப்படிச் செய்தால் புன்செய் நாற்றைம்பது காணிகளில் குறைந்தது நாற்றுறு ஏக்கர்களுக்குத் தண்ணீர் பாய்ச்சி, சீர்திருத்தம் செய்து, மாசூல் எடுக்கலாம் என்று முடிவுசெய்து, அதற்குத் தேவையான தண்ணீர் கொடுக்கவேண்டுமென்று எஞ்ஜினீயர் ஓபிரையன் துரையிடம் சென்றேன். அச்சமயந்தான் மேலே குறிப்பிட்ட புத்திமதியை அவர் சொன்னார்.

அந்தக் காலத்தில், 1933-ஆம் வருஷத்தில், அதிக உணவு உற்பத்தியிலாவது, தரிசு நிலங்களைப் பண்படுத்துவதிலாவது அரசாங்கத்துக்குக் கவலையில்லை. வருவாய் அதிகரிக்க வழி இருக்குமா என்பதே அவர்கள் கவலை. அது கிடைக்கும் என்பதாக நான் உறுதிகூறிப் பலவித ஆட்சேபத்துக்குப்பிறகு, என் செலவில் தண்ணீர் கொண்டுவரும் வேலையை ஏற்றுக் கொண்டேன். ஏக்கர் ஒன்றுக்குத் தண்ணீர்த் தீர்வையாகச் சாகுபடி ஒன்றுக்குப் பதினைந்து ரூபாய் வீதம் கொடுத்தால் உத்தரவு கிடைக்குமென்று பதில் கிடைத்தது. எப்படியாவது தண்ணீருக்கு உத்தரவு கிடைத்தால் போதும் என்று எண்ணி எந்த நிபந்தனைக்கும் இசைந்தேன். அதிகாரவர்க்கத்தின் நன் மதிப்பைப் பெறாதவன் நான். வேதாரணியம் உப்புச் சத்தியாக்கிரகத்தின்போது, தஞ்சாவூர் ஜில்லா கலெக்டராக இருந்த தாரன் துரைக்கு என்னைப்பற்றித் தெரிந்துகொள்ள அவசியம் ஏற்பட்டிருந்தது. நான் தரிசு நிலங்களுக்குத் தண்ணீர் கேட்ட காலத்தில் அவர் ரெவின்யூபோர்டு அங்கத்தினர் பதவியில் இருந்தார். என்னுடைய மனு அவர் மூலம் முடிவாகவேண்டி இருந்ததாகவும், அதனால் எனக்கு எவ்வளவு கடுமையான நிபந்தனைகள் போடக் கூடுமோ அவ்வளவும் போட்டபிறகே உத்தரவு கிடைத்ததெனவும் கேள்விப்பட்டேன்.

காடுகளைச் சீர்திருத்தம் செய்யக் கூலியாட்களை வைத்தால் செலவு அதிகமாவதோடு, சீக்கிரம் நடைபெறாது என்றும் அறிந்து 'பவர்'க் கலப்பை (Tractor)—இருபத்தேழு குதிரை ஆற்

றல் உள்ளது—ஒன்றை நாலாயிரம் ரூபாய்க்கு வாங்கினேன்; ரூட் ஆயிலில் ஓடுவது. உழுவதைத்தவிரத் தண்ணீர் இறைப் பதற்கும் இது உபயோகப்பட்டது. ஒரு வருஷத்திற்கு அப்பால் தண்ணீர்ப் பம்பிற்கு மின்சாரம் கிடைத்தவுடன், டிராக்டர் உழுவதற்குமட்டும் உபயோகப்படுத்தப்பட்டது. சுமார் ஒன்பது வருஷங்கள் உழைத்தபிறகு 1945-ஆம் வருஷம் பவர்க் கலப்பையை விலைவாசி உயர்வால் சிறிது லாபத்துக்கே விற்றுவிட்டேன். பவர்க் கலப்பை உபயோகத்தைப்பற்றிய அபிப்பிராயங்கள் பல எனினும் எனது அனுபவத்தை ஒட்டிச் சில முடிவுகளுக்கு வந்தேன். அது உபயோகமுள்ளதா இல்லையா என்பதைப்பற்றி அபிப்பிராயபேதத்திற்கு இட மில்லை. நிச்சயமாக நல்ல உபயோகம் உண்டு; சில வேலைகளுக்கு இன்றியமையாதது என்றே சொல்லிவிடலாம்.

(1) நாள் ஒன்றுக்குக் குறைந்தது எட்டு மணி நேரம் வேலை செய்யலாம். அதற்குள் குறைந்தது பத்து ஏக்கர் புன் செய் நிலத்தை அரை அடி ஆழம் பூமியைப் பெயர்த்து மண்ணைப் புரட்டிச் செடிகளை வேரோடு களைந்து உழுதுவிடும்.

(2) இப்படி உழுவதற்குப் பூமியில் நல்ல ஈரம் இருக்க வேண்டும். முள்செடிகள், மரத்தின் வேர்கள், பாறைகள் இவை இல்லாதபடி உழும் நிலம் சுத்தப்பட்டிருக்கவேண்டும்.

(3) ஒரே உழவு விவசாயத்திற்குப் போதுமானது.

(4) ஈரம் இருக்கவேண்டி இருப்பதால், மழைபெய்து மூன்று அல்லது நான்கு நாட்களுக்குப் பிறகு உழவேண்டும். மழை இல்லாவிட்டால் தண்ணீர் பாய்ச்சி மேல் ஈரம் காய்ந்த பிறகு உழவேண்டும்.

(5) விடாது மழைபெய்துகொண் டிருந்தால் உழ முடி யாது.

(6) சேற்றில் உழமுடியாது.

(7) ஏக்கர் ஒன்றுக்கு உழவுச் செலவு யுத்தகாலத்தில் ரூபாய் எட்டும், யுத்தத்திற்கு முன்பு ரூபாய் இரண்டுமாக இருந்தது. எட்டு ரூபாய் கொடுத்தாலுங்கூட மாடு கட்டி உழு வதைக் காட்டிலும் இது லாபகரமானதுதான். இருந்த

போதிலும் பவர்க் கலப்பை உழவு சாதாரணக் குடியான வனால் முடியாத காரியம். இதற்குக் காரணங்கள் பல உள:

(1) நன்செய் நிலங்களுக்கு இது உபயோகப்படாது.

(2) கலப்பை வாங்குவதற்கு வேண்டிய முதல் குடியான வர்களிடம் இல்லை. தற்சமயம் இதன் குறைந்த விலை பத்தாயிரம் ரூபாய் இருக்கலாம்.

(3) வேலை செய்யாத காலத்தில் செலவு இல்லாவிட்டா லும், இதை ஓட்டுபவர்களுக்குச் சம்பளம் கொடுத்து இதைச் சுத்தம் செய்து, காப்பாற்றவேண்டிய செலவைச் செய்தே ஆகவேண்டும். பவர்க் கலப்பை உழவுவேலை செய்தாலும், மற்ற வேலைகளை மாட்டைக்கொண்டுதான் செய்யவேண்டியிருக் கிறது. தண்ணீர் இறைப்பு முதலியவற்றிற்கு மாடுகள் தேவை. மாடுகள் நிலத்திற்குத் தேவையான எருவைக் கொடுக் கின்றன. இது குடியானவனுக்கு அவசியமான மூலதனம்.

(4) பவர்க் கலப்பை தேயத் தேயப் புதிய கலப்பைகள் வாங்கவேண்டும். சாதாரணமான கலப்பைக் கொழுவைப் புதி தாகச் செய்துபோடவே தற்சமயம் ஐந்து ரூபாய் ஆகிறது. ஆனால் பவர்க் கலப்பையோ தற்சமயம் விலைக்கே நம் நாட்டில் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைத்தாலும் கலப்பை ஒன்றுக்கு ஐம்பது ரூபாய்க்குக் குறைவில்லை. பவர்க் கலப்பைகளை பழுது பார்ப்பதற்குப் போதிய வசதிகள் நம் நாட்டில் இல்லை.

(5) பவர்க் கலப்பையில் போடும் முதலைத் திரும்பவும் எடுக்கமுடியாது. நாளடைவில் தேய்ந்து சில வருஷங்களுக்கு அப்புறம் செலவுக்கணக்கு எழுதவேண்டியதைத்தவிர வேறு வழியில்லை.

இந்தக் காரணங்களால் அமெரிக்கா, ருஷ்யா முதலிய இடங்களைப்போல நம் நாட்டில் தனி நபர்கள் இந்தக் கலப்பையை • வைத்துக்கொள்ள முடியாது. அதற்குத் தகுந்த மூலதனம், செப்பனிடும் சாதனங்கள் முதலியவை

இல்லை. தற்சமயம் இருநூறு டிராக்டர்கள் சர்க்கார் வசம் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால் அவைகளுக்குத் தேவையான கலப்பைகள் இல்லை. இனி அவற்றை அமெரிக்காவிலிருந்தோ இங்கிலாந்திலிருந்தோ வருவித்துப் பிறகுதான் டிராக்டர்கள் வேலை செய்யமுடியும் என்று சொல்லுகிறார்கள். புது நிலங்களைச் சாகுபடி செய்ய டிராக்டரைப்போல உபயோகமுள்ளது ஒன்றுமில்லை. எனினும் நம் நாட்டு ஏழைக் குடியானவர்கள் இதை உபயோகப்படுத்த முடியாது.

# வந்து பழகுங்கள்

நமது நாட்டில் ஏழு லக்ஷம் கிராமங்கள் இருக்கின்றன. ஜனத்தொகையில் நூற்றுக்கு எண்பது பேர்களுக்கு அதிகமாகவே அங்கே வசிக்கிறார்கள். நாட்டிற்குத் தேவையான உணவு முழுவதும் அங்கேயே உண்டாகிறது. கிராமம் முன்னேற்றம் அடையாவிட்டால் நாடு முன்னேற்றம் அடையாது. இவையெல்லாம் மேடைப்பிரசங்கம் அல்ல; பத்திரிகை விளம்பரங்கள் அல்ல; கலப்பில்லாத உண்மை; உண்மையினின்றும் மாறுபடாத உண்மை. நகரங்களிலுள்ள பள்ளிக்கூடங்களில் படித்துவரும் ஏராளமான இளைஞர்களுக்கு நாட்டுப்பழக்கம் தேவையான அளவிற்கு இல்லை. "கிராமங்களுக்குத் திரும்பிப் போ (Back to the Villages)" என்று எல்லோரும் எழுதுவதும் பேசுவதும், தேசபக்திக்கு அறிகுறியாக, "கிராமத்திற்குப் போ; ஏழைகளுக்குத் தொண்டு செய்; அவர்கள் வாழ்வை உயர்த்து" என்று சொல்வதும், பட்டணங்களில் பொதுக்கூட்டங்களிலும், பள்ளி மாணவர்களிடையேயும் இத்தகைய விஷயங்களைக் கேட்பதும் வழக்கமாகிவிட்டன. ஆனால் கிராமத்தை விட்டு வெளியேறிப் பல வருஷங்கள் பட்டணங்களில் வேலை செய்து பழக்கம் முதிர்ந்த நகரவாசிகள் திரும்பவும் கிராமத்திற்கு வருவதே இல்லை. பட்டணத்தில் வேலை முடிந்தபிறகு சர்க்கார் ஊழியம் புரிந்த காரணத்தால் உபகாரச் சம்பளம் பெற்றுச் சுக வாழ்வு நடத்துபவர்களுங்கூடக் கிராமங்களில் போய்த் தங்குவதில்லை.

ஆனால் இவர்களைக் குறைகூறுவதில் பலனில்லை. கிராமம் பட்டணத்திலிருந்து முற்றும் மாறுபட்டது. கிராமவாசம் செய்வதென்றால் ஒரு புதிய தேசத்தில் குடியேறுவதுபோலத்தான். சிறையில் பல நாட்கள் தங்கிப் பழக்கப்பட்ட கைதிகூட

மறுபடியும் சிறைக்கு வருவதையே பழக்கமாக்கிக்கொண்டு விடுகிருன். கவலையற்ற வாழ்வு, மணிக் கணக்குப்படி அள விட்ட சாப்பாடும் உறக்கமும், சட்ட விரோதமான சுக போகங்களைத் திருட்டுத்தனமாகப் பெறுவதில் ஒரு மகிழ்ச்சி, இதே பொழுதுபோக்கு. இது வருஷக்கணக்காகச் சிறையில் பழகிவிட்டால், அந்தக் கைதிக்கு விடுதலையே பரம தண்டனை. வெளியில் வந்தால் சில நாட்கள் சுற்றித் திரிவான். கவலையற்றுத் திருடித் தண்டனை அடைந்து மீண்டும் சிறைக்கு ஆனந்தமாகத் திரும்பிவிடுவான். பட்டிப் பழக்கமுள்ள கால் நடைகள் என்ன செய்கின்றன? எவ்வளவு சுகமாக அவற்றை வேறு இடங்களில் வைத்திருந்தாலும், அவிழ்த்துவிட்டால் போதும்; பழைய பட்டிக்கு ஓட்டம் பிடிக்கும். இது இயற் கைக் குணமா பழக்கத்தால் ஏற்பட்டதா? இரண்டுமே காரணம்.

பகுத்தறிவுள்ள மனிதனும் இயற்கைக் குணத்தி லிருந்து தப்பமுடியாது. ஆகையால் கிராமத்திற்கு வர இயலாமல் பட்டணத்தில் மடிந்து கிடப்போரை எப்படிக் குறைகூற முடியும்? எனினும் நாடு சுகமடைய வேண்டு மானல் கிராமங்கள் உயிருடன் இருக்கவேண்டாமா? உண வில்லை; இருக்கும் உணவோ போதவில்லை; தரிசு நிலங்கள் ஏராளமாகப் பண்படுத்தக் காத்துக்கொண் டிருக்கின்றன. மக்களின் எண்ணிக்கைக்கும் குறைவில்லை. ஆண்டாண்டு தோறும் அபரிமிதமாக ஜனத்தொகை ஏறிக்கொண்டே வரு கிறது. பிச்சை கேட்டுக்கொண்டு இந்திய அசாங்கம் உல கெலாம் சுற்றித் திரிந்துகொண் டிருக்கிறது. அமெரிக்கா, கானடா முதலிய இடங்களில் கால்நடைகளுக்குப் போடும் தீனியைக் குறைத்தாகிலும் தானியங்களை நமக்குக் கொடுக்க வேண்டுமென்று கெஞ்சுகிறோம். சட்டசபைகளில் உணவுப் பேச்சிற்குப் பஞ்சமில்லை. ஆனல் பேச்சினல் தானியம் உண் டாவதில்லையே!

பட்டணங்களில் சாக்கடைகளிலும் ஓட்டைக் குச்சுகளி லும் வசிக்கும் நகரவாசிக்கு, நல்ல கட்டுமஸ்தாகத் திடகாத்

திரத்துடன் இயற்கை வனப்போடு விளங்கும் கிராம வாசியைக் கண்டால், பட்டிக்காட்டான் என்கிற ஏளனமான உணர்ச்சி உண்டாகிறது. உண்மை அறியாத கிராமவாசிகளுக்கோ பட்டணத்தானுடைய வேஷத்தையும் பேச்சையும் கண்டு பிரமை உண்டாகிறது. பட்டணத்து வியாபாரியும், தொழிலாளியும், வக்கீலும், வைத்தியனும் பசையுள்ள பட்டிக்காட்டான் எப்போது தங்கள் வலையில் சிக்கிக்கொள்வான் என்று எதிர்பார்த்தவண்ணம் வாழ்நாளைக் கழிக்கிறார்கள். அப்படியிருந்தும் கிராமவாசிகள் தங்களைச் சின்ன மனிதர்களாகவும், பட்டணத்தில் இருப்பவர்களைப் பெரிய மனிதர்களாகவும் நினைக்கிறார்கள். கஷ்ட காலக்ஷேபம் செய்து நகரங்களில் வாழும் வக்கீல்கள், குடித்தனக்காரன் கிராமவாசியாகவும் பொருளுள்ளவனாகவும் இருந்தாலுங்கூட அவனைச் சின்ன மனிதனாகவோ முட்டாளாகவோ பாவிக்கிறார்கள். கிராமத்தானுக்கும் நகரத்தானுக்கும் சம அந்தஸ்து இல்லை. இதற்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாது. தற்காலம் உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி என்று சொல்லப்படும் பாகுபாடு எவ்வளவு பொருந்தாததோ, அதைப்போலவேதான் கிராமத்தானுக்கும் பட்டணத்தானுக்கும் உள்ள தராதரமும் பொருந்தாது. இந்த எண்ணங்களோடு, ஆங்கிலப் படிப்பும் கூடச் சேர்ந்துவிட்டால் உயர்வு தாழ்விற்குக் கேட்கவேண்டியதில்லை. இந்தத் தவறான உணர்ச்சி மாறுபட்டாலொழிய, பட்டணத்தான் கிராமங்களுக்கு வரவேமாட்டான்.

விவசாய டிபுடி டைரெக்டராகிய ஸ்ரீ. ராமநாதையர் ஒரு சமயம் எனது கிராமத்திற்கு வந்திருந்தார். விவசாயத்தில் ஊக்கமுள்ள உத்தியோகஸ்தர்களில் அவர் ஒருவர். அவருக்குக் கிராமம் இருக்கிறது; நிலபுலன்களும் உண்டு.

அவர் சொல்லிய பல உண்மைகளில் பின்வருவதும் ஒன்று; "இந்த நாட்டில் ஆண் பிள்ளைகளையாகிலும் வற்புறுத்திக் கட்டாயப்படுத்திக் கிராமவாழ்விற்குப் பழக்கிவிடலாம். ஆனால் பெண்பிள்ளைகளை ஈடுபடுத்துவது முடியாத வேலை. அவர்களைச் சரிக்கட்டிக் கிராமத்தில் தங்கும்படி

செய்துவிட்டால், ஆண் பிள்ளைகளைப்பற்றிக் கவலையே இல்லை. கிராமங்களில் குடியேறும் தத்துவம் நம் ஸ்திரீகளின் மனோ பாவத்தைப் பொறுத்தது. அவர்கள் கிராமத்திற்கு வந்து விட்டால் கிராமக் குடியேற்ற முயற்சி வெற்றிபெறும்." பிறகு, "நீங்கள் உங்களுடைய மகளையும் மருமகளையும் எவ்விதம் கிராமத்தில் தங்கி விவசாய வேலைகளில் ஈடுபடச் செய் தீர்கள்?" என்று ஒரு கேள்வி போட்டார். "எனக்குக் கஷ்டம் ஒன்றும் இல்லை. வைத்தியத் தொழில் செய்யும் பொழுதே கிராமமும் நிலமும் ஏற்பட்டுவிட்டன. மந்திரி வேலையை ராஜீநாமாச் செய்தவுடன் வைத்தியத்தொழிலையும் கைவிட்டேன். தொழில் வருவாயும் நின்றுவிட்டது. சுமார் மூன்று வருஷங்களுக்குமேலாகத் தனியாகவே வேலைக்காரர் களை வைத்துக்கொண்டு கிராமத்தில் வசித்துவந்தேன். திருச்சி கன்டோன்மென்டில் உள்ள எனது பங்களாவை யாருடனும் கலந்து ஆலோசிக்காமல் சர்க்காருக்கு வாட கைக்கு விட்டுவிட்டேன். அதனால் எனது குடித்தனம் வெளி யேறவேண்டி வந்தது. கடைசியில் மிஞ்சியது கிராம வீடுதான். நிர்ப்பந்தத்தால் இங்கே வந்து சேர்ந்தார்கள்" என்று சொன் னேன். நான் உள்ள இடம் நல்ல நீர் வளமுள்ளது. மூன்று வாய்க்கால்களில் வருஷம் முழுவதும் தண்ணீர் வற்றாமல் ஓடுகிறது. அகண்டகாவேரிக் கரையில், பெரிய ஊராகிய முசிறிக்குச் சமீபமாக உள்ள கிராமம். இதில் குடியேறு வதற்கே இவ்வளவு தாமதமும் கட்டாயமும் தேவையானால் மற்ற ஊர்களைப்பற்றிக் கேட்பானேன்?

நம் கலாசாலைகளிலும் பள்ளிக்கூடங்களிலும் படிக்கும் மாணவ மாணவிகளுக்கு அத்தாட்சிப்பத்திரம் அளிப்பதற்கு முன்பாக அவர்கள் பள்ளிப்படிப்பு முடிந்தவுடன் ஒரு வருஷ காலமாவது கிராமசேவையில் ஈடுபடவேண்டும் என்ற கட் டாயத்தை ஏற்படுத்தவேண்டும். அப்பொழுதுதான் ஒருவாறு இந்தக் கிராமக் குடியேற்ற இயக்கம் முன்னேற்றமடையும். நாட்டில் உணவுப் பஞ்சம் குறையவேண்டும். அதற்குக் கிராமங்கள் வளம்பெறவேண்டும். அறிவாளிகள், செல்வம்

படைத்தவர்கள் இவர்கள், சோம்பேறிகளாக இராமல் பூமியில் உழைத்துப் பாடுபடவேண்டும். உழைப்பிற்குத் தகுந்த பலன் கிடைக்கும். வீண் ஆடம்பரங்களையும் உருப்படாத செலவுகளையும் மறந்து தேக உழைப்பின் சுகத்தையும் நன்மையையும் அறியவேண்டிச் சிக்கன வாழ்வு நடத்தினுல் கிராமங்களில் உழைப்பதில்கூடப் பணம் சேர்க்கலாம்.

'கிராமத்தில் உள்ளவர்களைவிட நாம் மேலானவர்கள், கல்வி கேள்விகளில் உயர்ந்தவர்கள்' என்ற அறிவீனமான எண்ணத்தை விட்டுவிடவேண்டும். பகட்டான உடை உடுத்து, செயற்கை அழகைப் பாராட்டிப் பழகும் நகர வாசிகள், குறைந்த உடை உடுத்து ஏழமை, அறியாமை இவைகளில் உழன்றபோதிலும் இயற்கையின் குழந்தைகளாய் நோயற்ற வாழ்வும் உடல் உறுதியும் கொண்டு, நமக்கு உணவை உண்டாக்கும் புனிதவேலையில் ஈடுபட்டு உழைக்கும் கிராமவாசிகளிடத்து அன்பும் மதிப்பும் கொள்ளவேண்டும். எழுத்து வாசனையே இல்லாவிட்டாலும், பல விஷயங்கள் அவர்களுக்குத் தெரியும். நாம் அவற்றைத் தெரிந்து கொள்வதற்கு அவகாசமும் சந்தர்ப்பமும் இல்லை. இவர்களை அவமதிக்கக்கூடாது.

தமிழனைப்போலச் சுயமதிப்புள்ள ஏழை மனிதனை உலகத்தில் வேறு எங்கும் காணமுடியாது. அன்பிற்கும் மரியாதைக்கும் அவன் ஈடுபடுவான். வெறும் மிரட்டலுக்குப் பயப்படமாட்டான். தான் செய்யும் வேலையைத் தன்னை அடக்கி ஆளும் எஜமானன் செய்யமுடியாது என்பது அவனுக்கு நன்கு தெரியும். பழைய மூடப் பழக்க வழக்கங்களில் தோய்ந்து கிடப்பான். ஜாதிக் கட்டுப்பாட்டின் கொடுமைக்கு அடிமைப்பட்டு வாடுவான். அவைகளை எளிதில் உதறித் தள்ள மாட்டான். புதியனவற்றை உடனே கைப்பற்றமாட்டான். நன்மை என்று அறிந்துகொண்டால் அதை விடாப்பிடியாகப் பிடித்துக்கொள்ளுவான். மேல் ஜாதி, கீழ் ஜாதி என்பது அவனுடைய ரத்தத்திலேயே பரம்பரையாக ஊறிய உணர்ச்சி. தீண்டாமை ஒழியவேண்டும் என்ருல் அது எப்படி முடியும்

என்று ஆச்சரியப்படுவான். அவனுடைய ஏழைமைக்கு ஏற்ற களவு அவனிடம் இல்லை. தெருவில் ஏதாவது பொருள் கிடந்தால் அதைக் கூசாது எடுத்துக்கொள்வான். அதில் தவறு இருக்கிறதென்ற உணர்ச்சி அவனுக்கு இல்லை. எனினும் உலகத்தில் அவனைவிட நாணயத்திற்குக் கட்டுப்பட்ட மனிதனைக் காணமுடியாது. கிராமங்களில் ஆயிரக்கணக்கான பெறுமானமுள்ள தானியமும் ஆடு மாடுகளும் ஒருவனுடைய காவலில் வருஷக்கணக்காகக் கிடக்கும். திருடவேண்டு மானால் ஒரு நிமிஷத்தில் ஊரில் உள்ள ஏழைகள் விரும் பினால் செய்யக்கூடும். ஒருவேளை உணவு கூடக் கிடைக்காமல் பட்டினிகிடந்தாலும் ஈனத்தொழிலில் இறங்கமாட்டான்.

இந்த உண்மை பட்டணங்களில் இருப்பவர்களுக்கு விளங்குவதில்லை. இவ்வளவு புதிய செய்திகளைக் கற்றுக் கொண்டால்தான் கிராமத்தில் வாழமுடியும். இதில் முடியா தது ஒன்றும் இல்லை. மனம் மாறுபட்டு உண்மையை அறிய வேண்டும். ஒருசமயம் உயர்ந்த பதவியிலுள்ள நீதிபதி ஒருவர் எனக்கு ஒரு கடிதம் எழுதினார். "நான் சமீபத்தில் வயசு கார ணமாக எனது நீதிபதி ஸ்தானத்தை விட்டு ஓய்வு பெறப் போகிறேன். நல்ல கிராமமாக, காவேரிக்கரை ஓரமாக அக்கம்பக்கத்தில் பிராம்மணர்கள் வசிக்கும் அக்கிரகாரம் இருக்கும்படியான ஊர் வேண்டும். நான் வைதிக உணர்ச்சி யுடன் நிம்மதியாகக் காலம் கழிக்க எண்ணம் கொண்டிருக் கிறேன். தங்கள் நிலங்களை விற்கப்போவதாகக் கேள்விப்பட் டேன். என்ன விலை? மற்ற சௌகரியங்கள் எப்படி? என்னை நேரில் தங்களுக்குத் தெரியுமாதலால் எனக்கு விவரமாகப் பதில் எழுதவேண்டும்" என்று எழுதியிருந்தார். அவருக்கு நான் எழுதிய பதில் இது:

"நான் இருக்கும் ஊரில் அக்கிரகாரம் உண்டு. சிவன் கோவில் இருக்கிறது, பெருமாள் கோவில் இல்லை. அக்கிர காரத்தில் நான்கு குருக்கள் வீடுகளும் ஒரு கணக்கப்பிள்ளை வீடும் உண்டு. மற்றப்படி வேறு பிராம்மணர்கள் இல்லை. என் வீடு அக்கிரகாரத்தில் இல்லை. சிவன்கோவிலுக்கு முன்பாகச்

சந்நிதித் தெருவில் இருக்கிறது. அக்கம்பக்கத்தில் பிராம்மணர் கள் இல்லை. ஹரிஜனங்கள் என் வீட்டுக்கு வருவதற்கும் வீதி யில் வருவதற்கும் இடையூறில்லாமல் இருப்பதற்காக என் வீட்டை இங்கே கட்டியிருக்கிறேன். நான் பழகுவது என்னு டைய பண்ணை ஆட்களுடனும் கூலிவேலை செய்யும் ஆண் பெண் களுடனுந்தான். இஷ்டப்பட்டால் நான் தனிமையாகவும் இருக்கலாம். கஷ்டப்பட்டு உழைத்தால்தான் பண்ணையை நடத்தமுடியும். வேலைக்காரர்களை நம்பிவிட்டு, வீட்டிற்குள் உட்கார்ந்து ஜபதபம்முதலிய அனுஷ்டானங்களில் ஈடுபட் டிருந்தால் பண்ணை நஷ்டமாக முடியும். தங்களுக்கு இஷ்ட மிருந்தால், தாங்கள் ஒரு நடை இங்கே வந்து பார்த்தபிறகு இந் தக் கிராமத்தைப்பற்றி யோசனை செய்யலாம்'' என்று எழுதி னேன். இதற்குப் பதிலே இல்லை. நான் பதில் வரும் என்று எதிர்பார்க்கவும் இல்லை.

கிராம சமுதாயத்தில் கிராமக் குடிகளுடன் பழகி உழைக்க முன்வராதவர்களால் கிராமத்திற்கு லாபம் இல்லை. பணத் துடன் கிராமத்திற்குச் சுக ஜீவனம் நடத்த வருபவர்களிடம் உள்ள பணத்தைப் பெறுவதற்குமட்டும் குடிகள் அவர் களை அண்டுவார்கள். மற்ற எந்தவிதத்திலும் அவர்களால் கிராம முன்னேற்றம் ஏற்படாது.

# மந்திரி ஆனேன்

1937-ஆம் வருஷத்தில் ஜூலைமாதம் 11-ஆந் தேதி வழக்கம்போல விடியற்காலையில் உடற் பயிற்சி செய்து முடித்துவிட்டு, எனது அறையை விட்டு வெளிவந்தேன். வந்ததும் சாந்தமும் புன்சிரிப்பும் சதா தாண்டவமாடிக்கொண் டிருக்கும் முகத்துடன் கூடிய நண்பர் ஸ்ரீ நரசிம்மனைக் கண்டேன். எதிர்பாராதவர் திடீரென வந்த தால் எனது மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஸ்ரீ ராஜாஜி அவர் களிடமிருந்து எனக்கு ஒரு முக்கியமான கடிதத்தை வாங்கிக் கொண்டு காலை ரெயிலில் வந்ததாகத் தெரிவித்தார். ஸ்ரீ நரசிம் மன் ஸ்ரீ ராஜாஜியின் புதல்வர். சிறுவயதிலேயே தாயை இழந்துவிட்டதால், தந்தையையே அன்னையாகக் கொண்ட இளைஞர். "தபாலில் போடக்கூடாத ஓர் கடிதம்; அண்ணு இதை நேரில் கொடுக்கும்படி சொன்ஞர், நீங்கள் இதைப் படித்து யோசனை செய்து தங்கள் முடிவைத் தந்திமூலம் உடனே தெரிவிக்கும்படி சொல்லியிருக்கிருர்" என்ருர். கடி தத்தைப் படித்தேன். மனம் திடுக்கிட்டது. கடிதம் சிறியதாக இருந்தாலும் விஷயம் பெரியது. "சில நாட்களாகச் சென்னை மாகாண மந்திரிசபை கூட்ட முயன்றுவருகிறேன். என்னுடன் ஒத்துழைத்துப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக்கூடியவர் களைத் தெரிந்தெடுப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இந்த மந்திரி சபையில் நீயும் ஒருவனுகச் சேருவதற்கு மனம் உண்டா? ஆழ்ந்த யோசனைக்குப்பிறகுதான் இந்தக் கடிதம் எழுதத் துணிந்தேன். பதவி சுமார் ஆறுமாதகாலம் நீடிக்கக்கூடும்.

சம்பளம் மாதம் ஐந்நூறு ரூபாய்தான். உன் சம்மதத்தைத் தந்திமூலம் உடனே தெரிவிப்பதோடு, நேரில் அடுத்த ரெயிலில் வந்துசேர்ந்தால் நலமாக இருக்கும்." இதுதான் கடிதத்தின் முக்கிய பாகம்.

1936-ஆம் வருஷத்துடன் எனது அரசியல் வாழ்வு ஓர் முடிவை அடைந்துவிட்டது. அதற்கு நானேதான் காரணம். நான் வேண்டுமெனச் செய்த குற்றத்தை வேறு எந்த வகையிலும் நீக்க முடியாததால், காங்கிரஸ்மூலம் செய்துவந்த அரசியல் சேவையைக் கைவிட்டேன். எனது தொழில் எனது தேவைக்கு மீறிய பொருளை அளித்துவந்தது. எனினும் மனத்துக்கு ஆறுதல் இல்லை.

இந்த மந்திரிசபைக்குத்தான் என்ன போட்டி! எவ்வளவு பொரிசுகள், ஜாதிப் பிரதிநிதித்துவங்கள், மதங்களை ஒட்டிய கட்சிகள்; தாழ்த்தப்பட்ட ஜாதியாகையால் அதற்குத் தனிப் பிரதிநிதி; உயர்த்தப்பட்ட வகுப்பு, அதனால் அதற்கு வேறு பிரதிநிதி. இப்படிப் பார்க்கப்போனால் சட்டசபை அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு காரணத்தினால் மந்திரிசபையில் இடம்பெற நியாயம் உண்டு. ஆனால் மந்திரி சபைக்கு ஓர் அளவும் உண்டு. அதில் எவ்வளவு அதிகப்படியான பேர்களைச் சேர்க்க முடியுமோ அவ்வளவு பேர்களைச் சேர்க்கவே திட்டம் போட்டார் ராஜாஜி. ஆனால் சுமார் இருபது வருஷகாலம் ஒத்துழையாமைத் திட்டத்தின் பயனாக விலகிநின்ற காங்கிரஸ், முதல் முதலாக நிர்வாகப் பொறுப்பை ஏற்கும் நாளில், சட்டசபை அங்கத்தினனாகக்கூட இல்லாதவன், தேர்தல் காலங்களில் விலகி நின்றவன், காங்கிரஸ் ஒழுங்கை மீறியவன், ஆகிய என்னை அவர் அழைத்துப் பதவி வகிக்கச் சொன்னது எனக்கு வியப்பை உண்டாக்கியது.

என்னிடமுள்ள அன்பு மிகுதியால் செய்தாரா? நான் அவருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருப்பேன் என்று எண்ணினாரா? சுகாதார இலாகாவிற்குப் பொருத்தமானவன் என்று நினைத்தாரா? அது எனக்குத் தெரியாது.

பல தடவை சத்தியாக்கிரகம் செய்து, ஏராளமான வருவாயை இழந்து, அல்லற்பட்டுக் கடைசியாக அரசியல் தளைகளிலிருந்து விலகிக்கொண்டு வயது முதிர்ந்த காலத்தில் பசிக்கவலைக்கு இடமில்லாமல் சிறிது பொருளைச் சேமித்துவைக்கும் முறையில் ஈடுபட்ட எனக்குப் போதும் போதாதுமான சம்பளத்தில் குறிப்பிட முடியாத ஓர் குறுகிய காலத்திற்கு உயர்ந்த பதவியை வகிப்பது, கவலைக்கு இடமில்லாமல் போகவில்லை. ஆனால் ராஜாஜியின் மனோதிடத்தைக் கண்டு திகைத்துவிட்டேன். தாம் செய்யும் திட்டம் பலனைக் கொடுக்கும் என்ற முடிவான எண்ணம் மனத்தில் வேரூன்றி இருந்தாலொழிய அவர் என்னைக் கூப்பிட்டிருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தேன். அன்று சாயங்காலத்திற்குள்ளாகச் செய்யக்கூடிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு நரசிம்மனுடன் சென்னைக்குப் புறப்பட்டேன். நான் சென்னை சென்றது என் வீட்டார்களைத் தவிர மற்றவர்களுக்குத் தெரியாது. மறுநாள் காலையில் ராஜாஜியுடன் ஒரு மணி நேரம் பேசிய பிறகு பதவியை ஏற்க முடிவுசெய்தேன். அதற்கு மறுநாளே மந்திரியும் ஆனேன். பதவி வகித்த பலன்: அந்த வாரத்தில் சஸ்திர சிகிச்சை செய்ய ஏற்பாடு செய்திருந்த ஆறு நோயாளிகளுக்கு அதைச் செய்யமுடியாமல் போயிற்று.

சட்டசபை அங்கத்தினர்களில் பெரும்பாலோர் தேசீய இயக்கத்தில் என்னுடன் தோழர்களாக உழைத்தவர்கள். எனினும் கனவில்கூட நான் ராஜாஜியின் மந்திரிசபையில் சேரக்கூடுமென அவர்கள் நினைக்கவில்லை. என்னுடைய சேர்க்கையினால் ராஜாஜியின் செல்வாக்கு எவ்வளவு பாதிக்கப்பட்டது என்பதை என்னால் சொல்லமுடியாது. நான் ராஜாஜியாக இருந்தால் அவர் செய்த துணிவான வேலையை நான் செய்திருக்க முடியாது. அவர் எனது அரசியல் வாழ்விற்குப் புத்துயிர் அளித்தார். ஆனால் அன்றோடு என் தொழிலும் முடிவடைந்துவிட்டது. தடைப்பட்டுத் தடைப்பட்டு, தப்பிப் பிழைத்து நான் கையாண்ட வைத்தியமுறையும், பொருளீட்டுவதும் நின்றுபோனதோடு, இன்று உணவுப் பொருள் உண்

டாக்கும் உழைப்பாளியாக என்னைக் கிராமவாழ்விற்குக் கொண்டு வந்தும் நிறுத்தியது. இந்த மாறுதலால் இன்று எனக்கு யாதொரு மனக்குறைவும் உண்டாகவில்லை.

தேசத்தொண்டை ஆற்றுவதற்கு ஓர் அரிய சந்தர்ப்பத்தை எனக்கு அளித்த ராஜாஜியவர்கள்பால் நான் என்றும் கடமைப்பட்டவனாகிவிட்டேன். அவரது தயையையும், பெருந்தன்மையையும், தூய மனப்பான்மையையும் நான் என்றென்றைக்கும் மறக்கமுடியாது. என் மனத்தில் பன்முறை தியாக உணர்ச்சியையும், விடாமுயற்சியையும் வேரூன்றச் செய்தவரும் அவரே. இரண்டரை வருஷ காலம் நெருங்கிப் பழகியபிறகு அவரிடத்தில் எனக்கு என்றும் அழியாத பக்தியும்மரியாதையும் நிலைத்தன. இது என் வாழ்வில் ஒரு பெரிய லாபம்.

1937-ஆம் ஆண்டு ஜூலை-மீ 14-ஆம் தேதியன்று சென்னையில் காங்கிரஸ் மந்திரி சபை வேலைசெய்யத் தொடங்கியது. அன்று முற்பகல் மந்திரிகள் பதின்மரும் சென்னை மாகாண தவர்னர் பிரபுவின் முன்னிலையில் சர்க்கார் மாளிகையில் ராஜ விசுவாசப்பிரமாணம் செய்தோம். அன்றிரவு 7½-மணிக்கு என்னைச் சென்னை மேல்சபைக்கு அங்கத்தினராகக் கவர்னர்பிரபு நியமனம் செய்தார். அதனால் நான் சட்டசபைத் தேர்தலுக்கு நிற்கவேண்டிய தொல்லையும் ஒழிந்தது. ஒரு மாகாண கவர்னரைத் தனியாகச் சந்தித்தது இதுதான் முதல் தடவை. அதற்கு முன் கவர்னர் மாளிகையை நான் வெகு தூரத்திலிருந்து பார்த்திருக்கிறேனே அன்றி உள்ளே போனதில்லை. மவுண்ட்ரோட் பக்கத்திலுள்ள வாசலின் இருபுறமும் குதிரைமீதேறிக் காவல் புரிவதற்காகவோ அலங்காரத்திற்காகவோ நிற்கும் இரண்டு இந்தியச் சிப்பாய்களைத் தாண்டி உள்ளே போனபொழுது ஒரு புதிய உணர்ச்சி உண்டாயிற்று. 'நான் மந்திரியாக உள்ளே போகிறேன்' என்கிற ஞாபகம் என்னைவிட்டு ஒழியவில்லை. கவர்னர்மாளிகை, ஒரு பெரிய தோட்டத்தின் மத்தியில் அழகாக அமைக்கப்பட் டிருந்தபோதிலும் அது பழைய காலத்துக் கட்டிடம்.

எனது வருகையை முன்னதாகவே அறிவித்துக் குறிப்

பிட்ட நேரத்தில் நான் வந்தவுடன் கவர்னருடைய அந்தரங்கக் காரியதரிசி என்னை வரவேற்று ஓர் ஆசனத்தில் அமரச் செய்தார். நான் வந்த செய்தியைக் கவர்னருக்குத் தெரிவித்து விட்டு என்னை மேலே அவருடைய அறைக்குக் கூட்டிச் சென்றார். கை குலுக்கி வரவேற்று என்னிடம் சிறிதுநேரம் பேசிய பிறகு என்னை மேல்சபையில் அங்கத்தினராக்கி அதற்குரிய பிரமாணம் செய்யும்படி சொன்னார். எனது முதல் அபிப்பிராயம் கவர்னர் கள்ளம் கபடற்ற பெரிய மனிதர் என்பதுதான். கடைசிவரையில் அதே அபிப்பிராயந் தான். பழகும்பொழுது அவரிடம் அதிகாரத் தன்மை வெளி வராமல் மனிதத் தன்மை மிகுந்திருந்ததை அறிந்தேன். ராஜாஜி பொறுப்பை ஏற்பதற்குமுன் அதிகாரமுறையில் சிக்கலான இடையூறுகள் எழாதவண்ணம் தெளிவுபடுத்து வதற்காகச் சுமார் ஆறுமாத காலம் வரையில் இந்தியா மந்திரி, வைஸ்ராய், இவர்களோடு வாதாடிக் கடைசியாக மந்திரிசபையைக் கூட்டியது தெரிந்த விஷயம். வங்காளம், சிந்து முதலிய மாகாணங்களில் சமீபத்தில் கவர்னர்கள் மந்திரி சபைகளை மாற்றவும் கலைக்கவும் ஏற்பட்ட நிகழ்ச்சிகளி லிருந்து, ராஜாஜி எவ்வளவு முன்யோசனையுடன், கவர்னருக்கும், மந்திரிகளுக்கும் உள்ள முறையை ஒழுங்கு படுத்தினார் என்பது நன்கு விளங்கும்.

1935-ஆம் ஆண்டு கிடைத்த அரசியல் அமைப்பு நமது நாட்டினர் விரும்பியதல்ல. மூன்று வட்டமேஜை மகாநாடுகளை ஏராளமான செலவில் லண்டனில் கூட்டி, பிரதிநிதிகளை ஆங்கில சர்க்கார் தாங்களே பொறுக்கி எடுத்து, சீமைக்கு வந்த இந்தியர்களை ஒருவரை ஒருவர் மோதவிட்டு ஜாதிமதப் பூசல்களைக் கிளப்பி ஒற்றுமையான ஒரு திட்டம் வகுக்க முடியாமல் செய்துவிட்டு, பிறகு தாங்களாகவே ஒரு திட்டத்தைத் தயாரித்தார்கள். அதிகாரத்தை மாகாணங்களில் பொது ஜனங்களுக்கு மாற்றும் தோரணையில் கவர்னருக்கு ஏகபோகப் பொறுப்பைச் • சட்ட பூர்வமாக உண்டாக்கிவிட்டார்கள். இங்கிலாந்தில் அரசியல்முறையில் மன்னருக்கு ஏற்பட்டிருக்

கும் பொறுப்பை ஒத்தது எனக் கவர்னர்களைக் குட்டி மன்னர் களாகச் செய்துவிட்டார்கள். உண்மையில் மந்திரிகள் ஆலோ சனையாளர்களே. ஆனால் பொதுமக்களின் பெயரால் ஆட்சி நடத்தும்பொழுது மந்திரிகளின் பொறுப்பிலுள்ள விஷயங் களில் கவர்னர் தலையிடக்கூடாது என்ற ஒரு வழக்கத்தை ஏற் படுத்தி, நிர்வாகம் நடைபெற வேண்டுமென்பதற்காக ராஜாஜி பாடுபட்டார். கவர்னர் எர்ஸ்கின் பிரபு இருந்தவரையிலும், காங்கிரஸ் மந்திரிசபை இருந்தவரையிலும் இந்த ஒப்பந்தம் சரிவர நடந்துவந்தது. ஆனால் இதிலும் பலவிதச் சங்கடங்கள் நேர்ந்தன. பல விஷயங்களில் வைஸ்ராய்க்கும், இந்தியா மந்திரிக்கும் நடுவில் ஓர் தபால்பெட்டிபோலவே கவர்னர் நடக்கவேண்டி இருந்தது. அரசியல் திட்டம் வகுத்தவர்கள் நன்கு தேர்ந்த சட்ட நிபுணர்கள். 'மக்களை அடக்கி ஆள் வதற்கு வேண்டிய சக்தி முழுவதும் தங்கள் வசம் இருக்கும் படி செய்துகொண்டு, பல தொல்லைகளுக்கும், கஷ்டங்களுக்கும் மந்திரிகளே காரணமென்று பொதுமக்கள் மனத்தில் தோன்றும் முறையில் திட்டம் வகுக்கப்பட்டிருந்தது. இதற்கு ஓர் உதாரணமே போதுமானது. ஐரோப்பிய ஆங்கிலேய, அதி காரிகளை நீக்கவோ அவர்களது ஊதியத்தைக் குறைக்கவோ, அவர்களை வைத்திய இலாகாவில் ஒரு ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவிற்கு மாற்றவோகூட, மந்திரிக்கு அதிகாரம் இல்லை. ஆனால் இந்த இலாகாவின் பொறுப்பு முழுவதும் மந்திரியைச் சார்ந்தது. இந்த ஜில்லாக்களில் ஆங்கிலேய வைத்தியர்கள் இருக்கவேண்டுமெனச் சீமையிலிருந்து இந்தியா மந்திரி உத்தரவு பிறப்பித்திருக்கிறார். இங்கிருக்கும் வெள்ளை ஐரோப்பியர்கள் மந்திரியின்கீழ் வேலை பார்க்கவேண்டும். இந்த வைத்தியர்கள் பிசகாக நடந்தால் அந்த இடத்திற்கு எவ்வளவு கெட்டிக்காரக் கறுப்பு அல்லது வெளுப்பு இந்தியரையும் போடக்கூடாது. இம்மாதிரியான எண்ணற்ற சிக்கல்களோடு பொருந்தியது மாகாண ஆட்சிமுறை.

சென்னை மாகாண ஆட்சியின்கீழ் வேலை செய்யும் ஆங்கி லேயர் சுமார் நூறு பேர்கள் இருக்கலாம். இந்த நூறு பேர்

களுக்கு எட்டு ஜில்லாக்களில் மாதம் சுமார் ஆயிரம் ரூபாய் சம்பளத்திற்குக் குறையாமல் வெள்ளைக்கார டாக்டர்கள் இருக்கவேண்டும். இந்த வெள்ளைக்காரர்கள் ஜில்லா அதிகாரத்திலும் இருக்கவேண்டும். இவர்கள் இருக்கும் இடங்கள் நியாயமாக நமது நாட்டினருக்குக் கிடைக்கவேண்டியவை. வெள்ளைக்கார டாக்டர்கள் சமீபத்தில் இல்லாவிட்டால் அவர்கள் எங்கே இருக்கிறார்களோ அந்த இடத்திற்குச் சர்க்கார் செலவில் ஆங்கிலேய நோயாளிகள் போகவும், போக முடியாவிட்டால் சர்க்கார் செலவில் ஆங்கில டாக்டர்களைத் தாங்கள் இருக்கும் இடத்திற்குத் தருவிக்கவும் அதிகார முறையில் சலுகை காட்டப்பட்டு வருகிறது. இவ்வளவு வசதிகளும் செய்திருந்தும்கூட எட்டு ஜில்லாக்களில் ஆங்கில டாக்டர்களை இந்த நூறு பேர்வழிகளுக்கு வைத்தியம் செய்வதற்காக வைத்திருக்கவேண்டுமென்று கட்டாயமான ஏற்பாடும் செய்யப்பட்டிருக்கிறது.

இதனுடைய நுட்பம் ஒன்றே ஒன்றுதான். "ஆங்கில நோயாளிகளுக்கு ஆங்கில டாக்டர்கள்தாம் வைத்தியம் பார்க்கவேண்டும். இதனால் நமது மக்களுக்கு எவ்வளவு இடையூறுகள் நேரிடினும், அதைப் பொருட்படுத்தக் கூடாது." அடிமைத்தனத்தின் தளைகள் எவ்விதம் நமது வாழ்க்கையில் அரசியல்மூலம் ஊடுருவிச் சென்றுவருகின்றன என்பதற்கு இதுபோன்ற நிகழ்ச்சிகள் எண்ணற்றவை, சட்டபூர்வமாகவே ஏற்பட்டவை பெரும்பாலானவை. மற்றவை இந்தியாமந்திரியின் உத்தரவின்பேரில் வழங்கிவருகின்றன.

அரசாங்க அமைப்பு, திட்டங்கள் எல்லாம் வெகு நாட்களாக யதேச்சாதிகார முறையில் வழங்கப்பட்டன. 1919-ஆம் வருஷத்தில் வகுக்கப்பட்ட திட்டத்தின்கீழ்ச் சில இலாகாக்கள் இந்தியர்களின் தலைமையின்கீழ் மாற்றப்பட்டன. 1935-ஆம் ஷை சட்டப்பிரகாரம் எல்லா இலாகாக்களும் மாகாணங்களில் இந்தியர்கள் கைக்கு மாற்றப்பட்டன. இந்த அரசியல் முறைப் பொறுப்பு, சர்வாதிகாரத்துடன் கவர்னர் ஆட்சியாக அமைக்கப்பட்டு, சட்டசபைகளுக்கு உத்தரவாத

மூள்ள மந்திரிகளின் சார்பில் விடப்பட்டது. ஒருபுறம் சட்ட சபைகளுக்குப் பதில் சொல்லும் பொறுப்பு மந்திரிகளுக்கு வந்தது. நிர்வாகத்தை மக்களுக்கு லாபகரமான முறையில் மாற்றி அமைக்கமுடியாத பலவித நிபந்தனைகளுக்கும் உத்தரவுகளுக்கும், நெடுநாளாகக் கையாளப்பட்ட வழக்கத்திற்கும் மாறுபடாமல் நடத்தவேண்டிய அவசியமும் மந்திரிகளுக்குப் புதுத் திட்டத்தில் சேர்ந்தது. இந்தத் திட்டத்தின்கீழ் ராஜாஜியின் மந்திரிசபை வேலை துவக்கியது.

# புதிய அநுபவங்கள்

மந்திரிசபை கூட்டி வேலையில் அமர்ந்தபோது நிகழும் நடவடிக்கைகள் எனக்குப் புதியனவாக இருந்தன. பகல் 11 மணிக்குக் கவர்னர் மாளிகையில் ராஜவிசுவாசப் பிரமாணம் செய்தவுடன் எங்களுக்கு உத்தியோகமுறையில் வேலை ஆரம்பமாயிற்று. சென்னைச் சர்க்காரின் பிரதம காரியதரிசி எங்களைக் கவர்னர் மாளிகையினின்று கோட்டையிலுள்ள காரியாலயங்களுக்கு அழைத்துச் சென்று அங்கிருக்கும் அறைகளில் எங்களுக்கு எந்த எந்த அறைகள் விருப்பமோ அவைகளை வைத்துக் கொள்ளும்படி ஒவ்வொன்றாகத் திறந்து காண்பித்தார். நாங்களும் அவ்வாறே வைத்துக்கொண்டோம். பிறகு எங்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு கயிற்றில் கட்டி இரண்டு சாவிகளைக் கொடுத்து, "இதை நீங்கள் வெகு ஜாக்கிரதையுடன் வைத்துக் கொள்ள வேண்டும். சர்க்கார் காரியதரிசிகளிடமிருந்து மந்திரிகள் பார்வைக்கு வரவேண்டிய பல ரகசிய தஸ்தாவேஜிகளைப் பெட்டிகளில் வைத்துப் பூட்டி அனுப்புவார்கள். இந்தப் பெட்டிகளின் சாவியின் ஜோடி அந்த அந்த மந்திரிகளுடைய காரிய தரிசிகளிடத்தில் இருக்கும். அவர்கள் பூட்டி அனுப்பும் பெட்டிகளைத் திறக்கும் மறுசாவிகள் இவை. இந்த இரண்டு சாவிகளையும் உங்கள் கையைவிட்டு யாரிடத்திலும் கொடுக்கக்கூடாது" என்று எச்சரிக்கையும் செய்தார் இதை வேத வாக்கியமாகவே நான் ஏற்றுக்கொண்டேன். வேலையை ராஜிநாமா செய்யும்வரையில் வேறு ஒருவரிடத்திலும் சாவிகளைக் கொடுக்கவில்லை. ஆனால் இந்தப் பெட்டிகளில் வரும் ரகசியக் காகிதங்கள், உத்தரவுகள் நடவடிக்கைகள் ஆகியவை வெளியிடும்வரையில் எவ்வளவு தூரம் பிறருக்குத் தெரியாமல் இருந்தன என்பது வேறு விஷயம். அதைப் பற்றிப் பின்பு தெரிவிக்கிறேன்.

ஒவ்வொரு மந்திரியும் தமக்கென இரண்டு நம்பிக்கையுள்ள குமாஸ்தாக்களை நியமனம் செய்துகொள்ளலாம் என்றும், தங்களுக்கு இஷ்டமும் நம்பிக்கையும் உள்ளவர்களான ஆறு சேவகர்களை வைத்துக்கொள்ளலாம் என்றும், அப்படித் தகுந்தவர்கள் கிடைக்காவிட்டால் சர்க்கார் காரியாலயத்திலிருந்தே தேவையானவர்களைக் கொடுக்கமுடியுமென்றும் சொல்லிவிட்டுச் சர்க்கார் பிரதம காரியதரிசி விடைபெற்றுச் சென்றுவிட்டார். நான் என் அறையைவிட்டு வெளியே சென்றதும் வரிசையாக ஐம்பது சேவகர்கள் உடை தரித்துக்கொண்டு வராந்தாவில் நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லோரும் பழைய மந்திரிகளிடம் வேலை பார்த்தவர்கள். நாங்கள் அவர்களை அமர்த்திக் கொள்ளுகிறோமா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்வதற்காகக் காத்திருந்தார்கள்.

என் அறையின் பின்புறத்து வழியாக மிக்க பணிவுடன் எட்டி எட்டி ஸலாம் செய்துகொண்டு ஒருவர் என்னிடம் பேச விரும்பினார். அவர் வெகு வருஷங்களாக மந்திரியினிடம் குமாஸ்தாவாக வேலை செய்தவர். என்னிடத்தில் நான் விரும்பினால் தாம் இருக்கப் பிரியப்படுவதாக அவர் சொன்னதன்பேரில் அவரை எனது குமாஸ்தாவாக வைத்துக்கொள்ள முடிவுசெய்தேன்.

"பியூன்கள் கூட்டம் இவ்வளவும் நமக்குத் தேவையா?" என்று புன்சிரிப்புடன் ராஜாஜி கூறிவிட்டுத் தமக்கு மூவர் போதுமென்றும் சொல்லிவிட்டார். நான் என் குமாஸ்தாவிடம் எவ்வளவு பேர் அவசியமெனக் கேட்டபொழுது குறைந்தது ஐவராவது தேவையாக இருக்கும் என்று சொன்னார். எனினும் நான்கு பியூன்கள் போதும் என்று தீர்மானித்து முன்மந்திரிகளிடத்து வேலையில் இருந்த நால்வரை எடுத்துக் கொண்டேன். எனக்குத் தேவையான மற்றொரு குமாஸ்தாவை நான்கு வாரத்திற்குப் பிறகுதான் அமர்த்திக்கொண்டேன்.

எனது குமாஸ்தாவோடு சற்று நேரம் பேசியபின், நான் வேலையை அன்றே செய்ய முற்படவேண்டுமென்றும், இல்லா

விட்டால் பிறகு வேலை சேர்ந்து செய்வது கஷ்டமாக இருக்கு மென்றும் தெரிவித்தார். வேலையைத் தொடங்குவதற்குமுன் ராஜாஜி எனக்குக் கூறிய புத்திமதி ஒன்றை நான் மறக்கவில்லை. "சர்க்கார் காரியதரிசியிடமிருந்து வரும் எல்லாக் காகிதங்களை யும், சரிவரப் படித்து உத்தரவு போடவேண்டும். சந்தேகம் ஏதா வது இருந்தால் காரியதரிசியை வருவித்து எல்லா விவரங் களையும் அவரிடம் தெரிந்துகொள்ளவேண்டும். காகிதங்களை எப்படிப் பைசல் செய்யவேண்டுமோ அதைக் குமாஸ்தாவிடம் காட்டி, அவர் அபிப்பிராயம் கேட்கவோ தெரிந்துகொள் ளவோ கூடாது. எல்லாக் கட்டுக்களையும் நீங்களே நேரில் பார்த்து விஷயம் தெரிந்துகொண்டு வேலை செய்யவேண்டும்" என்று சொன்னார். அன்று முதல் வேலையை விடும்வரையில் அந்த எச்சரிக்கையைத் தவறாது கவனித்து வேலை பார்த்துவந்தேன். நான் என் ஆசனத்தில் அமர்ந்து அரைமணி நேரம் ஆன பிறகு என் உத்தரவின்பேரில் பெட்டிகள் என் அறைக்கு வர ஆரம்பித்துவிட்டன.

சர்க்கார் காரியாலயக் காகிதக் கட்டுக்களைப் பார்த்திராத எனக்கு அவை எனது அறையில் வந்து இறங்கும் காட்சி யைப் பார்ப்பதே விநோதமாக இருந்தது. ஒவ்வொரு கட்டுக் காகிதங்களும் ஒழுங்காக மடியாமல் கெட்டியான அட்டை களில் வைக்கப்பட்டிருந்தன. தேதிவாரியாகச் சீட்டுக்கள் ஒட்டி, ஒரே ஒரு விஷயத்தைப்பற்றிப் பலவிதமான குறிப்புக் களுடன் சுலபமாகப் படித்து அறிந்துகொள்ளக்கூடிய நிலைமையில் இருந்தன.

மந்திரிகளின் பொறுப்பைப்பற்றி ராஜாஜி எனக்குக் கூறிய எச்சரிக்கை என் மனத்தை உறுத்திக்கொண்டே இருந் தது. தவறிக் கையெழுத்திட்டுவிட்டால் அதனால் என்ன கெடு தல் நேருமோ என்கிற பயம். மந்திரிகளின் கையெழுத்து முடிவானதாக இருந்தால் அந்தக் கட்டும் முடிவடைந்து 'ரிகார்டு' அலமாரிக்குக் குடியேறிவிடும். அதனின்று பிறக்கும் உத்தரவுகள்மட்டும் தேவையானவர்களுக்கும் பொதுமக்க ளுக்கும் அறிவிக்கப்படும். கட்டுக்களில் விவரிக்கப்பட்டிருக்கும்

விஷயங்களின் ஜோடனை வெகு அழகாக இருக்கும். சர்க்கார் காரியதரிசிகளின் காரியாலயத்தில் வேலை செய்பவர்களின் பயிற்சியையும், அவர்கள் செய்யும் வேலையின் ஒழுங்கையும் கவனிப்பவர்கள் அந்த அந்த இலாகாவின் நிரந்தரக் காரியதரிசிகள். இவர்களில் பெரும்பாலோர் உத்தியோக முறையில் நன்கு ஊறியவர்கள். ஐ. சி. எஸ். என்ற அதிகார வர்க்கத்தைச் சார்ந்தவர்கள்; படிப்பிலும், வேலைத்திறனிலும் மேம்பட்டவர்கள். ஒவ்வொரு விஷயத்திலும் எப்படிக் குறிப்புகள் எழுதவேண்டுமெனவும் அறிந்தவர்கள். சர்க்காரின் கொள்கை, போக்கு, இவைகளுக்குத் தகுந்ததாக, இடைஞ்சலாக இருக்கும் குறிப்புக்களை நீக்கி, சாதகமாக இருப்பவைகளை மேற்கோளுடன் கூட்டி, அலங்காரம் செய்து அந்த அந்த இலாகா மந்திரியின் உத்தரவிற்கு வைக்கப்பட்டிருக்கும். மந்திரிகள் கையெழுத்துப் போடும் இடமும் குறிப்பிடப்பட்டிருக்கும்.

இந்தத் தயாரிப்பைக் கண்டு முதலில் வியந்தேன். பிறகு கட்டுக்களை ஊன்றிப் படிக்கும் ஆவல் உண்டாயிற்று. அரசியல் பிரச்னையில்லாத தினசரி நடைமுறையில் போகவேண்டிய உத்தரவுகள் சில நாட்களுக்குள் பழக்கமாகிவிட்டன. இந்த வேலையை மந்திரிகள் செய்யவேண்டிய அவசியமே இல்லை என்பது என் அபிப்பிராயம். அரசியல் பிரச்னை சம்பந்தமானதும், சட்ட சபைகளுக்குப் பதில் சொல்லவேண்டியதுமான கட்டுக்களையே ஊன்றிப்பார்க்கவேண்டும். இந்தக் கட்டுக்களின் ஜோடனையும் பழைய சட்டங்களுக்கு ஒத்ததாக இருந்ததால் புதிய சட்டப் பிரகாரம் வேலை நடத்தும் முறையில் ஒவ்வொரு விஷயத்தையும் ஆதியோடந்தமாகக் கவனித்துக் குறைகளைக் கண்டுபிடித்துத் திருத்தியமைப்பது அவசியமாக இருந்தது.

மந்திரி வேலையை இரண்டுவிதமாகப் பார்க்கக்கூடும் என்ற முடிவுக்கு வந்தேன். சிரமப்படாமல் குறிப்பிட்ட இடத்தில் கையெழுத்திட்டுக் கட்டுக்களை அரைமணி அல்லது ஒரு மணி நேரத்தில் தீர்த்துவிடுவது ஒருமுறை. ஒவ்வொரு கட்டையும் முழுவதும், படித்து மனத்தில் எழும்

சந்தேகங்களைக் காரியதரிசியுடன் கலந்து பேசி, விவரம் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்த உத்தரவைப் போடுதல் மற்றொரு முறை. பின் சொல்லிய முறைக்குக் காலம் பிடிக்கும். சில சமயங்களில் ஒரு கட்டைப் படித்து, விஷயம் தெரிந்து கொள்வதற்கே இரண்டு மூன்று நாட்கள் ஆகிவிடும். கால தாமதமாகிறதே என்று கவனிக்கமுடியாது. நியாயமான உத்தரவு போடுவதுதான் ஒழுங்கு என்று நினைத்து இரவும் பகலுமாக முதல் மூன்று மாதங்கள் வேலை செய்யவேண்டியிருந்தது. ஆனால் இந்தப் பயிற்சியினால் பின்னால், கட்டுக்களைச் சீக்கிரத்தில் முடிவுசெய்ய முடிந்தது. என் பொறுப்பில் வேலை செய்த பிரிவுகள் மூன்று. ஒன்று வைத்திய இலாகா ; இரண்டாவது சுகாதார இலாகா ; மூன்றாவது தர்ம ஸ்தாபனங்கள். முதல் இரண்டு சம்பந்தப்பட்டவரையில் என் காரியதரிசியை விட எனக்குத் தொழில் ஞானமும், அநுபவமும் அதிகமாக இருந்தன. அதனால் காரியதரிசி செய்யும் சிபாரிசுகளைத் திருத்தி ஒழுங்குபடுத்துவதும் அவசியமாயிற்று.

இரண்டு வாரத்திற்கு ஒருமுறை மாகாண ஜனன மரண ஜாப்தா ஒன்று என் கையெழுத்துக்கு வரும். அந்த அந்த ஜில்லாக்களிலிருந்து வரும் கணக்குகளைத் தொகுத்து, மாகாணம் முழுவதும் ஜில்லாவாரியாகத் தொத்து நோய்களின் கணக்கு, அதனால் மரிக்கும் நபர்களின் தொகை, இவைகளை விளம்பரப் படுத்துவதற்காகத் தயாரிப்பது இது. நியாயமாக இது விளம்பர. இலாகாவிற்குத்தான் போகவேண்டும். மரண ஜாப்தா சுகாதார மந்திரியைச் சேரவேண்டியதாக இருந்தாலும் பொது மக்களுக்குத் தெரிவிக்கப்படும் முறையில் விளம்பர மந்திரியிடம் போகவேண்டும். முதல் இரண்டு மாதங்கள் இந்தக் கணக்கைப் பார்த்தேன். படிக்கப் படிக்க மனம் வெதும்பியது. தலையெழுத்துப்போல அவரவர்களுக்கு ஏற்பட்டபடி மக்கள் பிறக்கவோ இறக்கவோ நேரிடுகிறது என்கிற எண்ணம் எனக்கு இல்லை. 'தொத்து நோய்களை மனிதனால் தடுக்க முடியும். அநேக நாடுகளில் தடுக்கிறார்கள். ஐரோப்பா முதலிய நாடுகளில் பெரியம்மை,

குஷ்டரோகம்போன்ற நோய்கள் அறவே ஒழிந்து விட்டன. நம் நாட்டிலும் அவ்வாறு செய்யமுடியும். செய்வது அரசாங்கத்தாரின் கடமை' என்பது என் கொள்கை. இந்த ஒரு காரணத்திற்காகத்தான் இந்தக் கணக்கைச் சுகாதார மந்திரி பரிசீலனை செய்வது கடமையாகும். இந்த மனப் பான்மையுடன் மாதம் இருமுறை பார்த்துவந்ததில் என் மனம் துயரமுற்றது.

ஒரு நாள் சாயங்காலம் தினசரிப் பத்திரிகையில், குண்டூரில் காலரா நோய் பரவியிருப்பதாகவும் அதனால் மூன்று வாரமாக அநேகர் இறந்துவிடுவதாகவும் படித்தேன். அன்று நான் உத்தியோக முறையில் படித்த தொத்துநோய் மரணக் கணக்கில் குண்டூர்க் கணக்கைக் காணவில்லை. மறுநாள் காலையில் சுகாதார இலாகாத் தலைமை அதிகாரியை டெலிபோன்மூலம் கூப்பிட்டு, "குண்டூர்க் காலரா சமாசார விவரம் என்ன?" என்று கேட்டேன். தமக்கு ஒன்றும் தெரியாதெனவும், பகல் பத்து மணிக்குமேல் ஆபிஸிற்குப்போய் விவரம் தெரிவிப்பதாகவும் சொன்னார். "நேற்றுச் சாயங்காலப் பத்திரிகைகளைப் படித்தீர்களா?" என்று கேட்டதற்கு, "இல்லை" என்று பதில் கிடைத்தது. 'மூன்று வாரமாகத் தொத்து நோய் பரவி மக்கள் மடிந்துகொண் டிருக்கும் விவரம் சுகாதார இலாகாத் தலைவருக்குத் தெரியாது. அப்படியானால் எனக்கு வரும் மரணக் கணக்கினால் என்ன பயன்? கையெழுத்திற்கும் நோயின் கொடுமைக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையே!' என்று எனக்குத் தோன்றியது. ஆகவே ஜனன மரண ஜாப்தாவில் கையெழுத்திடுவது பொருளற்ற ஒரு சடங்கு என்ற முடிவிற்கு வந்தேன்.

சுகாதார இலாகாத் தலைவர் மறு நாள் பகல் பன்னிரண்டு மணிக்கு என்னை டெலிபோனில் கூப்பிட்டார். தொத்து நோய்களைப்பற்றிக் கவனிக்கும் தமக்குக் கீழுள்ள அதிகாரியை விசாரித்ததில் அவருக்கும் தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை என்றும், உடனே விசாரிக்க ஏற்பாடு செய்து எனக்குச் செய்தி அனுப்புவதாகவும் கூறினார். இதைக் கேட்டதும் என்

மனத்தில் எழுந்த கோபத்திற்கு அளவில்லை. எனினும் என்ன செய்வது? சுகாதார இலாகாத் தலைமை அதிகாரியை உடனே என்னை வந்து நேரில் பார்க்கும்படி சொன்னவுடன் அவரும் வந்து சேர்ந்தார். அவரிடம் எனது வருத்தத்தைத் தெரிவித்து இனி இந்த மாதிரியான மடமையைப் பொறுக்க முடியாது என்று சொல்லி நான் குண்டூருக்கு நேரில் சென்று விஷயம் அறிந்துகொள்ளப் போவதாகச் சொன்னேன். என்னுடைய சொற்கள் அந்த அதிகாரிக்கு ஆச்சரியமாகத் தோன்றின. 'மந்திரியே தொத்து நோய் பரவியிருக்கும் இடத்திற்குத் திடீரென்று புறப்படுவதா? இது என்ன புதுமை?' என்று தோன்றும்முகபாவத்துடன், தாம் அன்றிரவே குண்டூர் போவதாகவும் நான் மறுநாள் இரவு புறப்பட்டு வரலாம் என்றும், தாம் முன் சென்று எனக்கு வேண்டிய புள்ளி விவரங்களைத் தயாரித்து வைப்பதாகவும் சொல்லிவிட்டு அன்று இரவே குண்டூர் சென்று விட்டார். மறுநாள் இரவு நானும் குண்டூர் போகுமுன் காரியதரிசி ஆபீசில் கிடைக்கக்கூடிய விவரங்களையும் குண்டூர் கலெக்டருடைய யாதாஸ்து முதலியவைகளையும் பார்வையிட்டுக் கையில் எடுத்துக்கொண்டு குண்டூர் போய்ச் சேர்ந்தேன்.

ரெயில்வே ஸ்டேஷனில் ஜில்லாக் கலெக்டரும் சுகாதார வர்க்கத்தினரும் காலை ஆறு மணிக்கு என்னை வரவேற்றார்கள். கலெக்டர் துரை நான் பார்க்கவேண்டிய இடங்களையும், இன்ன இன்ன ஏற்பாடுகள் நடந்திருக்கின்றன என்பதையும் தெரிவித்தார். ஆனால் அந்தத் திட்டத்தைப் பின்பற்ற இஷ்டமில்லாதவனாகக் கலெக்டரைத் தனியே அழைத்து, நானும் அவருமாக ஒரு காரில் ஏறிக்கொண்டு புறப்பட்டோம். மற்றச் சுகாதார அதிகாரிகள் எங்களைப் பின்பற்றி வந்தார்கள். கலெக்டரிடத்தில்மட்டும், "குறிப்பிடப்பட்டுள்ள ஜாபிதாபிரகாரம் நான் போக விரும்பவில்லை. நான் சொல்லும் இடங்களுக்குத் தாங்கள் காரை ஓட்டிச் செல்லுங்கள். மற்றவர்களும் நம்மைப் பின்பற்றி வரட்டும். முதல்முதலாக இந்தப் பட்டணத்தின் கக்கூஸ்களில் மிகப்

பெரிதானதும், ஜனநெருக்கடியான இடத்தில் இருப்பதாகவும் உள்ள இடத்திற்குப் போகவேண்டும்" என்று சொன்னேன். நான் கேட்டுக்கொண்டபடியே கலெக்டரும் சுகாதார இன்ஸ்பெக்டர் ஒருவருடைய உதவியின் பேரில் கக்கூஸிற்கு முன் தமது வண்டியை நிறுத்தினார். முதல்நாள் இரவு மழை பெய்து பூமி ஈரம் காயாமல் இருந்தது. உத்தியோக முறையில் போடப்பட்டுள்ள திட்டத்தில் இந்த இடம் நான் பார்க்க வேண்டுமென்று குறிப்பிடவில்லை. அதனாலோ சுகா தார அதிகாரிகள் பார்வைக் குறைவினாலோ அந்தக் கக்கூஸ் இருந்த நிலை குண்டூர் நகரம்மட்டும் அல்லாது ஜில்லா முழுவதிலும் காலராநோய் பரவுவதற்குப் போதியதாக இருந்தது. கக்கூஸிலிருந்து மலம் கரைந்து ரோடெங்கும் நிறைந்து உள்புக வழியில்லாமல் துர்நாற்றம் பரவி வீசிக் கொண்டிருந்தது. மூன்று வார காலமாகக் காலரா பரவி நூற்றுக்கணக்கான மக்கள் மாண்டுகொண் டிருந்த அந்நாளில், தொத்துநோய் பரவுவதற்குக் காரணமான கக்கூஸ்கள் இந்த நிலையில் இருந்ததைக் கண் ணுற்றேன். மாகாண அதிகாரிக்கும் இந்நிலையைச் சுட்டிக் காட்டினேன்.

மக்களுக்கு வழங்கப்படும் குடிதண்ணீர் சாஸ்திர முறையில் சுத்தப்படுத்தப்பட்டு வருகிறதா என்று கேட்டதில், அப்படியே செய்யப்படுவதாகத் தெரியவந்தது. "சரி. அப்படியானால் அந்தக் குடிதண்ணீர்க் குளத்துக்குப் போகலாமா?" என்றேன். கலெக்டர் வண்டியை ஓட்டிப் போய்க் குளத்தங்கரையில் நிறுத்தினார். அங்கிருந்த சுகாதார அதிகாரியை அந்தக் குளம் எவ்விதத்தில் சுத்தப்படுத்தப்படு கிறது என்பதைக் காண்பிக்கும்படி கேட்டேன். அரை மணி நேரம் அவர் செய்த வேலையை நாங்கள் எல்லோரும் கவனித் தோம். கொஞ்சம் மருந்துத் தண்ணீரினால் குளத்தைக் கெடுத் தாரே ஒழிய அக்குளத்திலிருந்து வெளியாகும் குடிதண்ணீரை அவர் சுத்தம் செய்யவில்லை. அவருக்குச் செய்யத் தெரிந்த தும் அவ்வளவுதான். அவருக்கு மேல்பார்வையாளராக

நானூறு ரூபாய் சம்பளம் வாங்கும் முனிசிபல் சுகாதார அதிகாரிக்குத் தம் கீழுள்ள சிப்பந்திகளுக்குக் கற்றுக் கொடுக்கத் திறமையுண்டோ என்பதை அங்கே பரீக்ஷிக்க எனக்கு இஷ்டம் இல்லை.

பிறகு ஹரிஜனங்கள் வசிக்கும் சேரிக்குப் போய்ச் சேர்ந்தோம். நான் அங்கே போனதும் எதிர்பாராதது தான். சேரியில் இறங்கியவுடன் குடிதண்ணீர்க் கிணறுகள் எவ்வளவு இருக்கின்றன என்று கேட்டேன். இரண்டு இருப் பதாக முனிசிபல் அதிகாரி சொன்னார். அவற்றைத் தினந் தோறும் மருந்துபோட்டுச் சுத்தம் செய்வதாகவும் உறுதி கூறினார். ஒரு கிணற்றருகே போய் அங்கே தண்ணீர் இழுத் துக்கொண் டிருந்த வயதான கிழவியி ஒருத்திடம், 'இந்தக் கிணற்றுக்கு மருந்துபோட்டு எப்பொழுது சுத்தம் செய் தார்கள்?" என்று கேட்டேன். தெலுங்கில் அவள், "மாதம் ஒருமுறை அல்லது இரண்டு முறை செய்கிறார்கள். கடைசி யாகச் செய்து இப்பொழுது பத்து நாட்களுக்குமேல் ஆகிறது" என்றாள். காலராநோய் சேரியில் பரவியிருக் கிறதா? எவ்வளவு பேர் இறந்திருப்பார்கள்?" என்று அந்தக் கிழவியைக் கேட்டேன். அதன் விவரம் தனக்குத் தெரியாதென்றும், சமீபத்தில் இருக்கும் குடிசையில் நாலு பேர்களுக்குமேலாக நோய்வாய்ப்பட்டு அவதிப்பட்டுக்கொண் டிருப்பதாகவும் சொன்னாள்.

முனிசிபல் சுகாதார அதிகாரி அந்த வட்டத்தில் ஒரே ஒரு கேஸ் ரிபோர்ட் ஆகியிருப்பதாகச் சேரியில் புகும்பொழுது சொன்னார். இதன் உண்மையைத் தெரிந்துகொள்ள, நானும் கலெக்டரும், மாகாண சுகாதார அதிகாரியும், முழங்கால் மண்டியிட்டுக் கையால் நகர்ந்து அந்தக் குடிசைக்குள் சென் றோம். அந்தக் குடிசையில் கண்ட காட்சி எனக்கு இன்னும் மறக்கவில்லை. ஐந்து பேர்கள் அடங்கிய குடும்பம் ஒன்று; அந்த ஐந்து பேரும் அந்தக் குடிசையில் கயிற்றுக் கட்டிலி லும் தரையிலுமாக நோய்வாய்ப்பட்டு நினைவில்லாமல் கிடந் தார்கள். சிறுவர்கள் மூவரில் இருவர் உயிர் போய்விட்ட

பிணங்கள். மற்ற மூவரும் பிணமாகிக்கொண் டிருந்தார்கள். "சுகாதார அதிகாரிகள் வந்தார்களா? மருந்து ஏதாவது யாராவது கொடுத்தார்களா?" என்ற கேள்விக்குப் பதில் சொல்லுவோர் இல்லை. முனிசிபல் சுகாதார அதிகாரிக்கு இங்கே நோய் பரவும் விவரமே தெரியவில்லை. இவ்வளவு சோதனை போதும் என்று முடிவுசெய்து பரிவாரங்களுடன் முனிசிபல் முசாபரி பங்களாவுக்கு ஒன்பது மணிக்குப் போய்ச்சேர்ந்தேன்.

உடனே அந்த ஊரிலுள்ள எல்லா டாக்டர்களுடனும் நான் கலந்து பேச விரும்பி, அவர்களை அழைத்தேன். அரை மணி நேரத்தில் அவர்களும் வந்தார்கள். ஊரில் பரவியிருக்கும் நோயின் கொடுமையை நான் கண்டவாறு அவர்களுக்கு எடுத்துரைத்து, "நீங்கள் எல்லோரும் உங்கள் உங்கள் வார்டுகளிலுள்ள கிணறுகளைச் சுத்தம் செய்வதற்குப் பொறுப்பு ஏற்றுக்கொள்ளவேண்டும். நோய் வராமல் தடுக்க எல்லோருக்கும் ஊசித்தடைமருந்து குத்தவேண்டும்" என்று சொன்னேன். இதுவரையில் தங்களை எந்த அதிகாரியும் உதவி கேட்கவில்லை என்றும், மக்களுக்கு ஆபத்தில் உதவத் தாங்கள் எல்லோரும் காத்திருப்பதாகவும் சொல்லி, அன்று பிற்பகலிலேயே தாங்கள் கூடி, வேலையைப் பங்கிட்டுக்கொண்டு சுகாதார அதிகாரிகளுடன் உழைப்பதாக வாக்குறுதி அளித்தார்கள். மாகாண சுகாதார இலாகாத் தலைவரை அந்த ஊரிலேயே சிறிது நாள் தங்கி, வியாதியைப் பரவவிடாமல் செய்யவேண்டிய வேலைகளைப் பூர்த்திசெய்துவிட்டு வரவேண்டுமென உத்தரவிட்டுவிட்டு, அன்று பிற்பகல் காலரா ஆஸ்பத்திரியையும் அங்கே நடக்கும் முறைகளையும் பார்வையிட்ட பிறகு நானும் ஒரு தடவை ஊசி குத்திக்கொண்டு கலெக்டரிடம் விடைபெற்றுப் புறப்பட்டு மறுநாள் காலை சென்னை வந்துசேர்ந்தேன்.

சுமார் ஒருவாரம் வரையில் எனது கவலை நீங்கவில்லை. நோய் குறையும் செய்தி ஒருவாரத்திற்குப் பிறகு தெரியவந்தது. தினசரி நிலைமையைத் தந்திமூலம் எனக்குத் தெரிவிக்க ஏற்பாடு செய்திருந்ததால் நோயின் நிலைமையைக் கவனித்துவர முடிந்தது. இரண்டு வாரத்திற்குள்ளாகக் குண்டூரைப் பிடித்த நோய் நீங்கியது.

நான் சென்ற பிறகு கையாண்ட முறைகளை முன்னரேகையாண்டிருந்தால் ஆயிரக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றியிருக்கலாம் என்பது என் முடிவு. இவ்வளவு சாவுகளுக்கும் அந்த ஊர்ச் சுகாதர உத்தியோகஸ்தர்களும், மாகாண சுகாதார நிலயமும் அதன் அதிகாரிகளும், அந்த இலாகாத் தலைவனுன நானும் காரணம் என்பது உண்மை. தமது கடமையைச் செலுத்தத் தவறினவர்களை விசாரணை செய்து தகுந்தபடி தண்டிக்குமாறு ஏற்பாடு செய்தேன். நான் சென்னையில் இருந்துகொண்டே தபால்மூலம் உண்மையை அறிந்திருக்க முடியாது. குண்டூரிலிருந்து சுகாதார அதிகாரியால் அனுப்பப்படும் அறிக்கைகளைமட்டும் நான் பார்த்திருந்தால், யாருடைய குறையும் தெரிந்திராது. நல்லவேளையாக அந்த ஜில்லா கலெக்டர் நல்ல விவேகியாக இருந்ததால் உண்மை நிலையைக் கவர்மென்டாருக்குத் தெரிவித்ததோடு சுகாதார அதிகாரியின் திறமையின்மையையும் குறிப்பிட்டு அறிக்கை அனுப்பியிருந்தார். இதனின்று நான் செய்யவேண்டிய வேலையின் திட்டமும் என் மனத்திற்குத் தெளிவாயிற்று.

(1) தொத்துநோய்களினின்று மக்களைக் காப்பாற்றுவது அரசாங்கத்தாரின் கடமை. அதற்காக வேண்டிய சட்டமும் செய்யவேண்டும். சுகாதாரச் சட்டம் இயற்றியதற்குக் காரணமாக இருந்ததும் இந்தச் சம்பவந்தான்.

(2) சுகாதார இலாகாவின் வேலை, நோயைப் பரவவிடாமல் தடுப்பதும், நோய் வரும் முன்னரே எச்சரிக்கை செய்வதும்.

(3) சர்க்காரிப் பற்றில்லாத டாக்டர்களையும் உடன் உழைக்க வற்புறுத்தி, அவர்களுக்குத் தேவையான உதவியையும் சுகாதார அதிகாரிகள் செய்யவேண்டியது.

# ராஜாஜி மேற்கொண்ட பொறுப்பு

"குண்டூர்க் காலரா நோயின் கடுமையைப் பம்பாயிலிருந்து திரும்புங்காலையில் நானே நேரில்போய்ப் பார்த்து வரலாமென்று நினைத்தேன். அதற்குள்ளாக நீயே பார்த்து விட்டு வந்தது நல்லது" என்றார் ராஜாஜி. தமது இலாகாக் களின் வேலை அவருக்கு அளவிடமுடியாமல் இருந்தது. அவருக்கு அனுப்பப்படும் பொருள் இலாகா, உயர் தரப்பட்ட ஊழியர்கள் இலாகா, மற்ற மாகாண, இந்திய கவர்ன்மென்டார்கள் சம்பந்தப்பட்ட சகல கட்டுக் கள், எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் ஊன்றிப் படித்து, அவற்றிற்கேற்ற குறிப்புகள், கேள்விகள், முடிவுகள் எழுது வதில் அவருக்கு இணை ஒருவரும் இல்லை என்றே சொல்லலாம். அவருடைய குறிப்புகள் சர்க்கார் இலாகாக்களுக்குப் பெரிய வியப்பை உண்டாக்கின. வக்கீல் தொழில் செய்து, அரசியல் உலகத்தில் புரண்டு உழைத்துவந்த அவருக்கு அரசாங்கக் காரியாலய நடவடிக்கைகள் எவ்விதம் வேலைக்கு வந்த முதல்நாளே புரிந்தன என்பதுதான் இந்த வியப்பிற்குக் காரணம்.

மந்திரி வேலைக்குப் பகுத்தறிவு, நியாய உணர்ச்சி, தேசீயக் கட்சிப் பற்றுகளிலிருந்து விலகி நிற்கும் மனத்துடன் சீர்தூக்கிப் பரிசீலனை செய்யும் முறை இவைகளெல்லாம் தேவை. தம் உணர்ச்சிகளை இயன்றமட்டில் அடக்கிவைத்துக் கொள்ளும் தன்மை வாய்ந்த ராஜாஜி முதல் மந்திரியாக வேலை செய்தபொழுது எவ்வளவு தூரம் இப்பெருந்தன்மையைப் பின் பற்றினார் என்பது இவருடன் ஒத்துழைத்த சிலருக்குத்தான் தெரியும். ரூபாய் ஐந்நூறே சம்பளமாக வாங்கிக்கொண்டு

பிரதம மந்திரி உத்தியோகத்தில் உழைத்த ஊக்கத்தையும் விடாமுயற்சியையும் மற்ற எந்தத் தொழிலிலாவது அவர் செலவிட்டிருப்பாரேயாகில் அவருக்குக் கிடைத்திருக்கக் கூடும் புகழுக்கும் செல்வத்துக்கும் அளவு கூறமுடியாது. அவர் வேலைத்திறன் அவர் இலாகாக்களோடு நின்றுவிட வில்லை. மற்ற ஒன்பது மந்திரிகளின் பொறுப்பையும், மந்திரி சபையின் ஒருமித்த நடவடிக்கைகளின்மூலம் ஆட்சி நடத்த வேண்டிய முறையில், தாமே வகித்துவந்தார். மந்திரிசபை சம்பந்தமான காரியங்கள் ஒருபுறம், கவர்னரும் அவரது காரிய தரிசிகளும் சம்பந்தப்பட்ட வேலைகள் மற்றொருபுறம், பொது மக்கள் சேவையும், அவர்களுக்குச் சேவை புரிவதற்கு என ஏற் படுத்தப்பட்ட அதிகாரிகளின் போக்கும், சட்டசபைகளுக்கான வேலைகளும் இவைகளையெல்லாம் சரிவர நடத்தவேண்டிய முறைகளும் இன்னொரு புறம் ; எல்லாம் இவரைச் சார்ந்தன. இருப்பினும் நோய்வாய்ப்பட்ட மக்களிடத்து இவர் காட்டிய கருணையும் கவலையும் எனக்குத் தூண்டுகோல்போல் ஆயின.

"நம் கீழ் வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களுக்கு நம்மிடத்து அன்பும் ஆதரவும் வேண்டும். நமது வேலை அவர் களுடைய நன்மதிப்பின்றி நல்ல பயனை அளிக்காது. அவர்கள் செய்யவேண்டிய வேலையில் நாம் கண்டிப்பாக இருந்தாலும் அவர்கள் பல வருஷங்களாகக் குறிப்பிட்ட ஒரு முறையில் வேலை செய்துவந்தவர்கள் என்பதை நாம் மறக்கக்கூடாது. ஆகையால் அவர்களை நடத்தும் முறையில் முன்பின் நடவடிக்கைகளையும் கவனித்துச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும்" என்பது ராஜாஜி யின் கொள்கை. இதை அடிக்கடி என்னிடம் வற்புறுத்துவார். "குண்டூரில் இருந்துவந்த சுகாதார அதிகாரிக்கு வேலை தெரிய வில்லை. அவருடைய திறனின்மையால் நூற்றுக் கணக்கான மக்களை நாம் இழந்துவிட்டோம். இப்படிப்பட்ட அதிகாரி பொதுஜன விரோதி" என்பது என் முடிவு. ஆனால், 'அவர் பதினெட்டு வருஷங்கள் வேலை செய்திருக்கிறாரே; அவர் பேரில் இதுவரையில் தவறு ஏற்பட்டதாக 'ரிகார்டுகள்' ஒன்றும் இல்லையே; இந்த விஷயத்தில் தவறு எப்படி ஏற்பட்டது

என்பதை விசாரித்துப் பிறகு என்ன செய்யலாமென்று தீர்மானிக்கவேண்டும்' என்பது ராஜாஜியின் முடிவு.

வைத்தியத்தில் நல்ல அநுபவம் ராஜாஜிக்கு உண்டு. வைத்தியர்களிடத்தில் ஒரு காலத்தில் அவருக்கு அபார நம்பிக்கையும் இருந்தது. தீராத ஒரு நோயால் பல வைத்தியர்களிடம் பல வருஷங்கள் அவதிப்பட்டிருக்கிறார். கடைசியாகத் தமது புத்தியினால் அதனின்றும் விடுபட்டார். சுகாதார முறைகளை நன்கு உணர்ந்தவர். நோய் வந்து அவதிப்படுவதைக்காட்டிலும் அது வராமல் தடுப்பது நல்ல முறை என்பதும் அவருக்கு நன்றாகத் தெரியும்.

மந்திரிகளும், சட்டசபைகளும் பொதுமக்களின் நன்மைக்காகவே ஏற்படுத்தப்பட்டன. ஆட்சியென்பது ஒரு வண்டியை ஒத்தது. அந்த வண்டியை ஓட்டுபவர்கள் மந்திரிகள். அதில் கட்டப்படும் மாடுகள் அதிகார வர்க்கத்தார்கள். வண்டியில் ஏறிப் பிரயாணம் செய்பவர்கள் பொதுமக்கள். வண்டியைச் சரிவர ஓட்டிப் பிரயாணிகளைப் போகும் இடத்திற்கு ஒழுங்காகக் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டியது மந்திரிகள், சட்டசபையினர் இவர்களின் பொறுப்பு. மாட்டின் தன்மையை அறிந்து, அதை நடத்துபவன் நல்ல கெட்டிக்கார வண்டியோட்டி ஆகிறான். மாட்டைக் கொண்டிமாடாக ஆக்கி, வண்டியையும் பிரயாணிகளையும் கவிழ்த்து விடுபவன் நல்ல வண்டியோட்டி ஆகமாட்டான். நல்ல பாதை செய்து பாலங்கள் போட்டுப் பிரயாணத்தைப் பயமில்லாமல் செய்பவை சட்டசபைகள். இன்ன இன்ன முறையில் நாம் வேலை செய்யவேண்டுமெனப் பலமுறை ராஜாஜி, மந்திரிசபையிலும் சட்டசபையிலும் சொல்லியிருக்கிறார். பத்து வண்டி ஓட்டிகள் சேர்ந்து நடத்தியதுதான் சென்னை அரசாங்க ஆட்சி. இதேமுறையில் நாங்கள் வேலை செய்தோம். ஆட்சியாகிய பிரயாணத்தில் வண்டியோட்டிகளில் சிற்சில சமயங்களில் அபிப்பிராய பேதம் இருந்ததுண்டு. ஆனால் அவை வண்டியைக் கவிழ்த்துவிடக்கூடிய முறையில் நடைபெறவில்லை. இந்த விபத்துக்கள் ஏற்படாவண்ணம் பாதுகாத்துவந்த பெருமை ராஜாஜியையே சாரும்.

அரசாங்க முறைக்கு அடிப்படையான தத்துவம் வரவு செலவுக் கணக்கு. பல துறைகளில் வரக்கூடிய வருமானம், பல இனங்களின் செலவு, செலவிற்குத் தகுந்தாற்போல வருமானம் அதிகரிப்பது, புதிய செலவுகளைப் பரிசீலனை செய்வது இவையெல்லாம் மந்திரிசபையின் வேலை. இதற்காக இலாகாவில் தயாரித்திருக்கும் வரவு, செலவு இவைகளை நன்கு பரிசோதிப்பது அந்த அந்த மந்திரிகள் செய்யவேண்டிய வேலை.

பொக்கிஷமந்திரியான ராஜாஜியிடம் செலவிற்குப் பணம் பெறவேண்டுமானால் தகுந்த காரணங்களை எடுத்துக் காட்டி வாதாடினால்தான் பணம் கிடைக்கும். சர்க்கார்பணத்தைக் கொடிய கருமிபோலப் பாதுகாத்து வந்தார். யாதொரு வகையிலும் பணவருவாய் இல்லாத இலாகா என்னுடையது தான். ஆனால் செலவிடவேண்டிய இனங்களோ ஏராளம். சுமார் பத்துப் பதினைந்து நாட்களுக்கு ராஜாஜி வீட்டில் மந்திரிசபை இரவிலும், காலை நேரங்களிலும் கூடும். பகல் நேரத்தில் மந்திரிகள் செய்யவேண்டிய வேலைகள் இருக்குமாதலால் இரவு சாப்பாட்டிற்குமேல் கூடும். வரவு செலவுத் திட்டம் போட்டு முடியும்வரையில் இப்படிக் கூடவேண்டும். அவர் வீட்டில் நாற்காலி, மேஜை முதலிய சாதனங்கள் இல்லை. எல்லோரும் பாயில் உட்கார்ந்து சுவரில் சாய்ந்து கொள்ளவேண்டும். தங்கள் இலாகா சம்பந்தப்பட்ட செலவு விவரம் வரும்வரையில் காத்திருக்கும் மந்திரிகள் சிலர் குறட்டை விட்டுத் தூங்கிவிடுவதும் உண்டு. பிறகு அவர்களைத் தட்டி எழுப்பி அவர்கள் கணக்கைப் பரிசீலனை செய்வதுண்டு.

ஆனால் ராஜாஜிமட்டும் தூங்கமுடியாது. கணக்கு முடியும் வரையில் அவர் தூங்கமாட்டார். அண்ணன் தம்பிகள் தங்களுக்குக் கிடைக்கவேண்டிய தாய பாகத்திற்குக் கட்சியாடிச் சண்டைபோடுவதுபோலவே, எங்கள் எங்கள் இலாகாவுக்கு வேண்டிய தொகைக்கு நாங்கள் ஒவ்வொருவரும் சண்டை போடுவோம். நிதி அங்கத்தினரிடத்தில் தனம் இருந்தபோதிலும், அதைக் செலவிடாதிருப்பதற்கான முறையில்தான் அந்த இலாகாக் காரியதரிசி குறிப்புக்கள் எழுதியிருப்பார். அக்குறிப்

புக்களுக்கு ஏற்பச் சற்றும் விட்டுக்கொடுக்காமல் ராஜாஜி வாதாடுவார். ஆஸ்பத்திரிக் கட்டிடங்கள் வேண்டும் என எல்லா ஜில்லாக்களிலிருந்தும் மதிப்பிட்டு லக்ஷக்கணக்காகத் தொகை ஒதுக்கவேண்டுமென என் காரியதரிசி பலமாகச் சிபாரிசு செய்திருப்பார். நானும் அவை வேண்டுமென வாதாடுவேன். "என்ன ராஜன்! வியாதிக்கு வைத்தியம், வைத்தியர்கள், மருந்துகள் தேவையா? கல்லும் சுண்ணும்பும் தேவையா? ஏன் பணத்தை அரண்மனைபோன்ற பெரிய கட்டிடங்களில் கொட்டவேண்டும்? நமது நாட்டினர்கள் மிக்க ஏழை; பெரிய சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் வசதிகள் எல்லாம் அவர்களுக்குப் புதியவை; அநுபவித்த வழக்கம் இல்லை. பணத்தை நோய்க்குத் தகுந்த சிகிச்சை செய்வதிலும், அவை வாராதிருக்கும் காப்பு முறைகளிலும் செலவிட்டால் ஏழைகளுக்கு லாபம் உண்டு; நமக்கும் பெருமை உண்டு" என்று உபதேசம் செய்வார்.

ஆனால் அவர் வெறும் உபதேசத்துடன் நின்று விடவில்லை. முதல்வருஷச் செலவுத் திட்டத்தில் அரிய சமூகத்தொண்டு ஆற்றும் முறையில் பணச்செலவைக் கவனியாது பணத்தை ஒதுக்கிவைத்தார். "கட்டிடத்தில் செலவிடுவதைக் குறைக்கவேண்டும். ஏழைகளுக்கு ஆஸ் பத்திரி கட்டுகிறேனென்று அரண்மனைகள் கட்டவேண் டாம். நமது மக்கள் உயிர் வாழ்வதற்கு, நோயற்ற வாழ்வு எய்துவதற்கு மிக்க அவசியமானது நல்ல குடிதண்ணீர். நமது ஏழைகள் வசிக்கும் கிராமங்களில் அநேக இடங்களில் குடி தண்ணீர் கிடைப்பது மிகவும் கஷ்டம். அதிலும் சுத்தமான தண்ணீர் கிடைப்பது அதைக்காட்டிலும் அரிது. அதற்காக வருஷந்தோறும் எவ்விதக் கஷ்டத்திலுங்கூடப் பதினைந்து லக்ஷ ரூபாய் போட்டு ஒரு நிதி சேமித்து வைப்போம். நமது மாகாணம் முற்றும் நல்ல குடிதண்ணீர் கிடைக்கும்படி யான திட்டத்தை நீ ஏற்பாடு செய்யவேண்டும். இந்த ஒரு தொண்டு நீ செய்தால் உன் மந்திரிவேலையை என்றென் றைக்கும் மறக்கமுடியாது" என்று சொல்லிவிட்டு, திட்டம்

வகுக்கப்படாத ஒரு புதிய இனத்தைச் சேர்த்து நிதியை உண்டாக்கியவர் ராஜாஜி.

பணம் கிடைத்தவுடன் அதைச் சம்பாதிப்பதற்குப் பட்ட கஷ்டமெல்லாம் பறந்துவிட்டது. தொகை கிடைத்த ஆனந்தம் ஒரு புறம். அதை ஒழுங்காகச் செலவிட்டுப் பலன் கிடைக்கும்படியான ஒரு திட்டத்தை நிறுவி, மக்களைக் காப்பாற்றும் பொறுப்பும் அதன் கவலையும் மற்றொருபுறம். இந்த இருவித அவஸ்தைகளுடன் முதல்வருஷ வரவு செலவுத் திட்டம் என் வசமுள்ள இலாகாவிற்குப் போடப்பட்டுச் சட்டசபையால் அங்கீகரிக்கப்பட்டது. 'நல்ல குடி தண்ணீர் இவ்விதம் இருக்க வேண்டும். இப்படி சுத்தம் செய்து குடிக்கவேண்டும். தண்ணீர் கெடாமல் பாதுகாக்கவேண்டிய முறை இன்னது' என்பது எனக்குத் தெரியும். ஆனால் நமது மாகாணத்திலுள்ள கிராமங்களில் எங்கெங்கு எவ்விதமான தண்ணீர் கிடைக்கும்? கிடைக்கக்கூடிய தண்ணீரைக் குடிப்பதற்காகக் காப்பாற்றும் முறையை மக்கள் அறிந்துகொள்வது எப்படி? குடிப்பதற்கென வைக்கப்பட்டிருக்கும் தண்ணீர் கெட்டுவிட்டால் அதனின்று உண்டாகும் விபத்துக்களை நினைக்கும் பொழுதே எனது மனம் திகிலடைந்தது. சுகாதார இலாகாவை எனக்கு விவரங்கள் தெரிவிக்கும்படி கேட்டேன். எனது அவசரத்திற்கும் அதிகாரிகளின் வேலைப்போக்கின் நிதானத்திற்கும் ஒத்துவருமா? அவர்களுக்கு இவ்விஷயங்களில் போதுமான பயிற்சியில்லை. விசாரணை எவ்விதம் நடத்தவேண்டும்? தண்ணீர் எவ்விதம் இருக்கவேண்டும்? யாரைக் கொண்டு வேலையை நடத்துவது? யார் அவைகளைக் காப்பாற்றுவது? என்பதற்கெல்லாம் துரைத்தனத்தாரின் அபிப்பிராயம் என்ன? உத்தரவு என்ன?' என்றெல்லாம் டிபார்ட்மென்டார்கள் எனக்குப் பதில்கேள்வி விடுத்தார்கள். முடிவில் எல்லாவற்றையும் கவனிக்கவேண்டிய பொறுப்பு என்னையே சார்ந்துவிட்டது. துள்ளிக்குதிக்கும் மாட்டிற்குச் சரியான தொழுவம் ஏற்படுத்திவிட்டார் ராஜாஜி. கண்டபொழுதெல்லாம், 'தண்ணீர்த் திட்டம் எப்படி இருக்கிறது?' என்று விசாரிக்கவும்

தொடங்கிவிட்டார். கிராமங்களில் எவ்விதமான குடிதண்ணீரை எவ்விதம் பெற்று மக்கள் உயிர்வாழ்ந்து வருகிறார்கள் என்ற விஷயத்தை முதலில் தெரிந்துகொள்ள வேண்டியதாயிற்று. அதன்பேரில்தான் திட்டம் வகுக்கமுடியும் என்று நிச்சயித்தேன்.

உலகத்தைச் சிருஷ்டித்த இறைவன் மக்களையும் அவர்கள் உயிர் வாழவேண்டிய சாதனங்களையும் உண்டாக்கியிருக்கிறான். அவைகளைத் தேடிப்பிடித்து, நன்முயற்சியால் மனிதன் அடையவேண்டிய முறையில் உலகம் நடக்கிறது. தண்ணீர் இல்லாத பாலைவனத்தில் புல், பூண்டு, ஜீவராசிகள் இல்லை. இயற்கை நீர்த்துறைகளை அண்டி மனித வர்க்கம் குடிகொண்டு உயிர் வாழ்கிறது. சில இடங்களில் நீர் சுலபமாகக் கிடைக்கிறது. சில இடங்களில் கஷ்டப்பட்டுத் தண்ணீர் சம்பாதிக்கவேண்டி இருக்கிறது. தண்ணீர் கிடைக்குமிடத்தில், குடிதண்ணீரைச் சுத்தமாக வைக்கவேண்டியிருக்கிறது. கிடைக்கக் கஷ்டமாக இருக்கும் இடங்களில் சுலபமாகக் கிடைக்கும் வழியை உண்டாக்குவதும் அரசாங்கத்தின் பொறுப்பு. இவ்வளவிற்கும் பொதுமக்களுக்குச் சுகவழிகளில் நல்லுணர்ச்சியும், ஞானமும் வேண்டும். ஞானத்திற்குப் படிப்பு, பயிற்சி இரண்டும் தேவை. நல்லுணர்ச்சிக்குப் பழக்கம் தேவை. பாமர மக்களுக்குத் தத்துவத்தின் நியாயம் புலப்படாது. இது செய்யலாம், செய்யக்கூடாது என்று வரையறுக்கவேண்டியதும் அப்படியே. வரம்பு தவறாமல் நடக்கும் முறையை வகுப்பதும் அதிகாரிகள் சட்டபூர்வமாகச் செய்யவேண்டியவை.

மக்களுக்குப் பயிற்சி எவ்விதம் அளிப்பது என்பதைப்பற்றி யோசனைசெய்து, ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் மூலம் சிறுவர்களுக்குச் சுகவழிகளைக் கற்பிக்கலாமென எண்ணினேன். இதற்கு இரண்டு தடைகள். முதலாவது நம் நாட்டில் எல்லாப் பிள்ளைகளும் ஆரம்பக் கல்வி கற்பதில்லை. கற்பிக்கப் போதிய ஏற்பாடுகளும் நமது நாட்டில் இல்லை. இரண்டாவதாக, இப்பொழுதிருக்கும் பள்ளிக்கூடங்களில் பயிற்சி

துவக்கலாம் என்றாலோ, உபாத்தியாயர்களுக்கே சுகாதார அறிவு இல்லை. முதல் முதலில் ஆசிரியர்களைப் பழக்கிய பிறகு தான் மாணுக்கர்களைப் பயிற்றமுடியும். இதற்காகப் படிப்பு இலாகா அதிகாரியுடன் கலந்து யோசனை செய்ததில், இப்பொழுது இருக்கும் கல்வி நிலையில் தங்களுக்கு ஏற்பட்டிருக்கும் அலுவல்களை நிறைவேற்றுவதற்கே கஷ்டமாக இருப்பதால் மேற்கொண்டு அதிகப் பொறுப்பை ஏற்க முடியாதென மறுத்துவிட்டார்கள். ஆனால் அவர்கள்மீது பழிசொல்லி என்ன பலன்? நூற்றைம்பது வருஷமாக ஆட்சிபுரிந்த அதிகார வர்க்கம், நம்மில் நூற்றுக்குப் பத்துப் பேருக்குக்கூடப் படிக்கும் திறமையை உண்டுபண்ணவில்லை. அவர்கள் நியமித்த அதிகாரிகளில் நூற்றுக்குப் பத்துப் பேரே உருப்படியான வேலையைச் செய்யக்கூடும். நமது மக்கள் கடைத்தேறும்வகையில் ஆட்சி புரியவேண்டுமானால், வருவாயை அதிகரிக்கவும், அதைப் பலனுள்ள முறைகளில் செலவழிக்கவும் நமது பிரதிநிதிகளுக்குச் சக்தி உண்டாக வேண்டும். அதுவரையில் இந்தத் திண்டாட்டம் முடிவடையாது. எனினும் பொறுப்பைச் சக்திக்குத் தக்கபடி நிறைவேற்றுவது கடமையென எண்ணியே சட்டபூர்வமான அதிகாரத்தைச் சுகாதார அதிகாரிகளுக்கும், ஒழுக்கத்தை மக்களுக்கும் சட்டசபை மூலமாக அளிக்கச் சுகாதாரச் சட்டம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

மந்திரிகளுள் ஒருவருடைய இலாகாவின் கட்டுக்களை மற்றொருவர் தருவித்துப் பார்ப்பதற்கு அதிகாரம் உண்டு. பார்ப்பதோடுமட்டும் அல்லாமல் அதில் தங்களுக்குத் தோன்றிய குறிப்புக்களை எழுதுவதற்கும் உரிமை உண்டு. ஆனால் கட்டுக்களை வரவழைக்கவேண்டுமானால் அந்த அந்த இலாகாவின் மந்திரியினுடைய சம்மதத்தைப் பெற்றபிறகுதான் செய்ய வேண்டும். இப்படிக் குறிப்புக்கள் எழுதுவதில் அபிப்பிராய பேதம் ஏற்படுமானால் அதைப் பற்றி மந்திரிசபைக் கூட்டத்தில் கவர்னர் முன்னிலையில் விவாதித்து, வாக்கு எடுப்பது வழக்கம். அதில் கணக்குப்படி அதிகப்படி வாக்குகள் எதற்குக்

கொடுக்கப்படுகிறதோ அதன்படி முடிவு செய்யப்படும்.

இதனின்று ஒருமுறை நன்கு புலப்படும். அரசாங்கத்தை நடத்தும் பொறுப்பு மந்திரிசபையாருடையது. எல்லாம் மாகாண கவர்னர் உத்தரவின்பேரில் நடப்பதாகச் சட்டமானாலும், நடைமுறையில் மந்திரிகளுடைய முடிவான அபிப்பிராயத்தை அநுசரித்தே கவர்னர் உத்தரவு இருக்கும். இருந்தபோதிலும் அவரவர்களுடைய இலாகாவிற்கு அவரவர் தாம் பொறுப்பாளி. ஒருவர் விஷயத்தில் மற்றொருவர் தலையிடுவதில்லை. கவர்னர் இஷ்டப்பட்டால் எல்லோருடைய இலாகாவிலும் தலையிடலாம். ஆனால் பெரும்பாலும் அப்படிச் செய்வதில்லை. ஒரு விஷயத்தில் அதிகார வர்க்கத்தாருக்கும் மந்திரிகளுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால் அந்தக் கட்டு, பிரதம மந்திரிக்குப் போகும். சம்பந்தப் பட்ட இலாகா மந்திரிக்கும், பிரதம மந்திரிக்கும், அல்லது ஓர் இலாகா மந்திரிக்கும் மற்றோர் இலாகா மந்திரிக்கும் அபிப்பிராயபேதம் உண்டானால் இது கவர்னரும் மந்திரிகளும் அடங்கிய ஆலோசனை சபையில் வாக்கு எடுப்பதன் மூலம் தீர்மானிக்கப்படும். இதிலிருந்து மந்திரிசபை வேலை எவ்வளவு கட்டுப்பாட்டுடன் நடைபெறவேண்டும்? அப்படி நடைபெறாவிட்டால் அதிகாரம் எவ்வளவு சீர்குலைந்து மக்களுக்குத் துன்பம் உண்டாகக்கூடும்? என்பது எளிதில் விளங்கும். பிரதம மந்திரியைத் தகுந்தவராகச் சட்டசபையார்கள் பொறுக்கி எடுத்துவிட்டால் பிறகு மற்றவர்களைப் பிரதமர் பொறுக்க வேண்டும். இந்த முறையில் எவ்வளவு கவலையும், எவ்வளவு ஒற்றுமை உணர்ச்சியும், தேசபக்தியும், தம்மால் பொறுக்கப் பட்ட மந்திரிகளிடம் இருக்கவேண்டும் என்பதை உணர்ந்து தேர்ந்தெடுக்கும் பொறுப்பை அவர் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறதென்பதும் நன்கு விளங்கும்.

# மொட்டைக் கடிதங்கள்

காங்கிரஸ் மந்திரிசபைகள் பொதுமக்களின் பிரதிநிதி என்ற உணர்ச்சி நாட்டில் வெகுவாகத் தேர்தல் காலத்திலேயே பரவிவிட்டது. அது காரணமாகத் தனிப்பட்ட நபர்களின் துன்பங்களுக்கும், சமூகத் தொல்லைகளுக்கும் விடுதலை உடனே பெற்றுவிடுவோம் என்கிற எண்ணமும் மக்கள் மனத்தில் குடி கொண்டது. நிலவரி குறையவில்லையே என்பர் மிராசுதார்கள். கள்குடியும், கள்ளுக்கடைகளும் ஒழியவில்லையே என்று வருந்துவாள் குடியனைக் கணவனாகப் பெற்ற ஏழைக் குடும்பக்காரி. தீராத கடனில் ஈடுபட்டுக் குடி முழுகிப்போகும் தறுவாயில் இருக்கும் குடிமக்கள், "பரம்பரையாக நம்மைத் துன் புறுத்திவரும் கடன்பாரத்திற்கு விமோசனம் கிடைக்கவில்லையே!" என்று ஏங்குவார்கள்.

இம்மாதிரி அவரவர்களுக்குள்ள பலவிதமான துன்பங்களும் காங்கிரஸானது நிர்வாகத்தை ஏற்றவுடன் தீர்ந்துவிடும் என்னும் எண்ணம் பொதுமக்களுக்கு இருந்ததனால் எங்களுக்கும் கவலை அதிகரித்தது. காங்கிரஸ் பதவி வகிக்க முடிவு செய்த பொழுது, சுதந்தரம் அடைய நாம் கோரின அரசியல் அமைப்புத் திட்டம் நமக்குக் கிடைக்கவில்லை. அச்சுத் தளர்ந்து போன ஒரு பழைய ஓட்டைக் கட்டை வண்டியைத்தான் நாங்கள் ஓட்டவேண்டியிருந்தது. வண்டி மாடும், பழைய மாடுகளே. வண்டியைக் கவிழ்க்காமல், மாட்டையும் அதன் சக்திக்கு மீறி ஓட்டிப் படுக்கவிடாமல், வண்டியில் ஏறி இருப்பவர்களுக்குக் கஷ்டம் நேரிடாமல் ஓட்ட வேண்டிய பொறுப்பு மந்திரிகளுக்கு ஏற்பட்டது. மக்கள் அதிகாரிகளின்மீது குறைகூறும் பொழுதும் பழைய குறைகள் பல மாறுமல் இருக்கும்பொழுதும் மந்திரிகளின் துர்ப்பாக்கிய நிலைமையை மக்கள் கவனிக்கவில்லை. ஆனால் அது மக்களுடைய பிசகு அல்ல. நெடுநாட்

களாக வாய்திறவாது அநுபவித்த கொடுமையைத் தாங்கமுடி-யாமல் ஏக்கமுற்ற காட்சியே இது.

ஒரு நோயாளி சர்க்கார் ஆஸ்பத்திரியில் வைத்தியம் பார்த்துக்கொள்ளப் போகிறான். அங்கே ஆட்சிமுறை மாறிய சின்னம் ஒன்றும் அவன் அறியும்வகையில் அவன் கண்ணிற்குத் தென்படுவதில்லை. அதே டாக்டர்தாம் அங்கே உட்கார்ந்து கொண்டு நோயாளிகளை எப்பொழுதும்போல விரட்டி அதிகாரம் செலுத்துகிறார். சில்லறையை விரும்பி மருந்து கலப்பவர்கள், புண்ணைக் கட்டுபவர்கள் எல்லோரும் வெகுநாளாகக் கையாண்டுவரும் முறைகளையே பின்பற்றி வருகிறார்கள். சில்லறை கொடுக்க முடியாமல் தவிக்கும் ஏழை துடுக்காகப் பேசுபவனாக இருந்தால், "என்ன ஐயா, காங்கிரஸ் ஆட்சி வந்தது. ராமராஜ்யமே வந்துவிட்டது என்று கூச்சல் போட்டார்களே. ஏழையின்பாடு தீர்ந்த வழியைக் காணவில்லையே!" என்று சத்தம் போடுவான். எழுதப்படிக்கத் தெரிந்தவனாக இருந்தால் உடனே மந்திரிக்கு ஒரு புகார்க் கடிதம் எழுதிவிட்டுத்தான் வீடு திரும்புவான். இம்மாதிரியான கடிதங்கள் முதலில் அதிகமாக வரவில்லை. நாளடைவில் கட்டுக்கட்டாக வரத்தொடங்கின. இவைகளைப் பாரமல் அப்படியே குப்பைக்கூடையில் தள்ள எனக்கு இஷ்டம் இல்லை. எனக்கு அனுப்பிய கடிதங்களின் பிரதிகள் ராஜாஜிக்கும் போகும். அவைகளை எனது பார்வைக்கு அவர் அனுப்பிவிடுவார். இம்மாதிரியே ஒவ்வொரு மந்திரிக்கும் வந்து கொண்டிருந்தன. அதைப்பற்றி விசாரணை செய்யும்படி காரியதரிசிகளுக்கு அனுப்பினேன். அந்த விசாரணை நடந்து, எனக்கு விவரம் தெரிவதற்குச் சுமார் மூன்று மாதங்கள் சென்றன. இதன் முடிவு தெரிந்து நியாயம் வழங்குவதற்குள் நோயாளியின் நோய் ஒரு விதமாக முடிந்துபோயிருக்கும்! முடிவு தெரிந்து பயன்படாமலும் போய்விடும். முறையிட்டவன் தனது முறையீட்டை மறந்துகூடப் போயிருப்பான். ஏன் அவ்வளவு தாமதம் என்று விசாரிக்கப் புகுந்தேன். அதற்குக் காரியதரிசி கால அட்டவணை ஒன்று தயார் செய்து விவரம் எனக்கு அனுப்பினார்; அது பின் வருமாறு :—

"மந்திரி ஆபீசிலிருந்து புறப்பட்ட கடிதம், 'வெகு அவசரம்' என்ற குறிப்புடன் (பச்சை லேபிள் அல்லது சிவப்பு லேபிள் ஒட்டி) அந்த இலாகா ஸூப்பிரன்டிடம் போவதற்கு இரண்டு நாள். அவர் அதைக் கவனிக்கும் குமாஸ்தாவிடம் அனுப்பி, அவர் அதை மெடிகல் விஷயமாயிருந்தால் ஸர்ஜன் ஜெனரல் ஆபீசிற்கும், சுகாதார டைரெக்டர் ஆபீசிற்கும் தேவஸ்தானங்கள் சம்பந்தமாக இருந்தால் தர்மபரிபாலன போர்டுத் தலைவர் ஆபீசிற்கும் அனுப்ப ஐந்து நாட்கள். சென்னை அரசாங்கக் கோட்டையைவிட்டுக் கிளம்புவதற்குள் ஒரு வாரம் ஆகிவிடும். பிறபட்டு அது அந்தத் தலைமைக் காரியாலயங்களில் சஞ்சரிக்கத் தொடங்கும். அங்கிருந்து சம்பந்தப்பட்ட ஜில்லா அதிகாரிக்கு அனுப்பப்படும். மாதம் இருபது நாள் சுற்றித் திரியவேண்டிய ஜில்லா அதிகாரியின் 'காம்பு'க்குப் போய் அங்கிருந்து குற்றம் நடந்த இடத்திற்கு விசாரிக்கப் புறப்பட்டு, விசாரணை முடிந்து ரிபோர்ட்டு, திரும்பவும் சென்னை வந்துசேர இரண்டு மாதங்களுக்குக் குறையாமல் ஆகிவிடும். அவசரக் கட்டுகள் ஒவ்வொரு குமாஸ்தாவிடமும் இரண்டு நாட்களுக்குமேல் தங்குவதில்லை. இவ்வளவு வேகமாகச் சென்றும் மந்திரி ஆபீசுக்குத் திரும்பிவர மூன்று மாதங்கள் ஆகிவிடுகின்றன. இப்பொழுதிருக்கும் நிலையில் புதிய மந்திரிகள் வந்ததனால் ஆபீசுகள் எல்லாம் இராப்பகலாக ஓய்வில்லாமல் வேலை செய்கின்றன. இதைவிட வேகமாகப் போவது முடியாது. இப்பொழுது இருக்கும் சிப்பந்திகளை அடிமுதல் நுனிவரையில் பதின்மடங்கு அதிகரித்தால் ஒரு மாதத்திற்குள் கட்டுகள் திரும்பக்கூடும். ஆனால், 'அதன் செலவு சர்க்கார் வரவுசெலவுத் திட்டத்திற்குள் அடங்குமா? அப்படிச் செய்வதால் பயன் உண்டாகுமா?' என்பதை அரசாங்கம் யோசனை செய்யவேண்டும்."

இந்தப் பதிலைக் கண்டு திகைத்துவிட்டேன். காரியதரிசி அனுப்பிய திட்டமும் நியாயமானதாகத்தான் தோன்றியது. ஏழை மக்கள் முறையீட்டிற்கு வேறுவிதமான பரிகாரம் தேடவேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தேன். புகார்க் கடிதங்

களில் கையெழுத்துப் போட்டு விலாசத்துடன் இருப்பவைகள் சில. பெரும்பாலானவை கையெழுத்தில்லாத மொட்டைக் கடிதங்கள். இதுவரையில் மொட்டைக் கடிதங்கள் சத்தமில்லாமல் குப்பைத் தொட்டிகளுக்குப் போவது வழக்கம். அநேகமாகக் கையெழுத்திட்ட கடிதங்களும் அதே கதியைத் தான் அடைந்துகொண்டிருந்தன. நாங்கள் எல்லாவற்றையும் விசாரணைக்கு அனுப்பத் தொடங்கியவுடன் எங்கள் கீழிருந்த அதிகார வர்க்கத்திற்கு வேலை அதிகரித்துவிட்டது. அவர்களும் முணுமுணுக்கத் தொடங்கினார்கள். இது விஷயமாக ராஜாஜியைக் கலந்து ஆலோசனை செய்ததில், கஷ்டத்தைக் கவனியாமல் விசாரணை செய்தே ஆகவேண்டுமென அவர் முடிவுசெய்தார். பல முறையீடுகள் ஆதாரமற்றனவாகவே இருந்தன. அதிகாரிகள்பேரில் துவேஷத்தினால் தனிப்பட்ட நபர்கள் தங்கள் மனக்கொதிப்பைத் தீர்த்துக்கொள்ளும் முறையில் சில இருந்தன. வெகு சில உண்மையானவையாகவும், வெகு நாட்களாகக் கையாண்டுவரப்பட்ட ஊழல்களைக் கூறுவனவாகவும் இருந்தன. குப்பை கூளங்களைக் கிளறியபொழுது பலவித உண்மைகள் தெரியவந்தன. குடியரசு முறையில்தான் இவைகள் வெளிவருமே ஒழிய, பொறுப்பற்ற ஆட்சிமுறையில் தலைகாட்டா. தங்கள் கட்சியைச் சார்ந்த மந்திரிகள் பதவி வகிப்பதால், தங்களுக்கு இதுவரையில் கிடைக்காத ஒரு மதிப்பும் அதிகாரமும் வந்துவிட்டதாக எண்ணி, அதைச் சில்லறை அதிகாரிகள் கவனித்துத் தக்கபடி நடந்துகொள்ளாததனால் அவர்கள் பேரில் குறை கூறும் வழக்கம் சில காங்கிரஸ்காரர்களுக்கு உண்டாயிற்று. திருச்சிக்குச் சமீபமாயுள்ள ஓர் ஊரில் நடந்த சம்பவம் இதற்கு ஒரு சான்று :

ஒரு கிராமத்தில் அடிதடி சண்டை காரணமாக ஒரு ஹரிஜனனுக்குக் காயம் ஏற்பட்டது. அவன் அந்த ஊரிலுள்ள ஜில்லா போர்டு காங்கிரஸ் அங்கத்தினரிடம் சென்று முறையிட்டான். அவனை அந்த ஊரிலுள்ள ஆஸ்பத்திரிக்கு இந்த ஜில்லா போர்டு அங்கத்தினர் அழைத்துச் சென்றார். தேவையான சிகிச்சையை டாக்டர் செய்தபோதிலும், காங்கிரஸ்

ஆட்சி நடக்கும்போது அந்த ஊரில் செல்வாக்குள்ள ஜில்லா போர்டு அங்கத்தினரைத் தக்க வினயத்துடனும் மரியாதையுடனும் டாக்டர் நடத்தவில்லை என்று அவர் மனத்தில் பட்டது. காயத்தைப் பரிசீலனை செய்து கோர்ட்டில் விவகாரம் தொடங்குவதற்கு ஆதாரமாக ஒரு ஸர்டிபிகேட் (அத்தாட்சி) வேண்டுமென்று அந்த டாக்டரைப் போர்டு அங்கத்தினர் கேட்டார். அதற்குத் தமது கூலி (Fees) ஐந்து ரூபாய் என்று டாக்டர் கேட்டதும் இவருக்குக் கோபம் வந்துவிட்டது. 'ஐந்து ரூபாயைக் கேட்க அவருக்கு நியாயம் இல்லை; இது ஒரு வகை லஞ்சம்' என்பது அங்கத்தினர் அபிப்பிராயம். டாக்டர் தம் தொழில் உரிமை இது என்று சொல்லிப் பணம் இல்லாமல் அத்தாட்சி கொடுக்க மறுத்துவிட்டார். இருவருக்கும் பேச்சுத் தடித்தது. வேலை நேரத்தில் கூட்டம் கூடிவிட்டது. ஒருவரை ஒருவர் அவதூறாகப் பேசினார்கள். முடிவில் டாக்டர்பேரில் சர்க்காருக்குப் புகார் செய்யப்பட்டது. ஜில்லா போர்டு அங்கத்தினர் நான் திருச்சி வந்திருந்தபொழுது என்னை நேரில் கண்டு தாம் அவமதிக்கப்பட்டதையும் டாக்டருடைய கேவலமான நடத்தையையும்பற்றி என்னிடம் முறையிட்டார். டாக்டர் பணம் கேட்டதில் பிசகில்லை என்று நான் சொன்னேன். அவருக்கு என்பேரில் கோபம் வந்துவிட்டது.

"என்ன ஐயா? ஒரு பரம ஏழை; தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்தவன். அவன் அடிபட்டான் என்பதாகத் தெரிந்தும் அத்தாட்சிக்குப் பணம் கேட்பதா?" என்று சொல்லி அந்த டாக்டர் பேரில் மற்றும் ஏராளமான குறைகளையும் விவரித்தார். "போலீஸ்காரர்கள் கொண்டுவரும் கேஸ்களுக்கு மாத்திரந்தான் பணமில்லாமல் அத்தாட்சி கொடுக்கப்படும். தனி நபர்கள் கேட்டால் 'பீஸ்' பெற்றுக்கொள்ள டாக்டர்களுக்கு உரிமை உண்டு" என்று நான் சொல்லியும், அவர் என்னிடம் தம்முடைய முறையீட்டை எழுதிக்கொடுத்து விசாரிக்கவேண்டும் என்று வற்புறுத்திவிட்டு என்பேரில் வருத்தத்துடன் சென்றார். நான் அதை விசாரணை செய்யும்படி அதிகாரிகளுக்கு அனுப்பிவிட்டேன். விசாரணையில் டாக்டர்

பேரில் குற்றம் இல்லை எனவும், ஒரு பொதுஜன ஊழியரை வேலை நேரத்தில் கேவலமாகப் பேசிச் செருப்பை எடுத்து அடிக்க ஜில்லா போர்டு அங்கத்தினர் முயன்றாரெனவும் முடிவாயிற்று. தமக்கு நடந்த அநீதியை நியாயஸ்தலத்தில் சென்று வாதாடச் சர்க்கார் உத்தரவு அளிக்க வேண்டும் என்று டாக்டர் கோரினார். அதன்படியே, கோர்ட்டில் வாதாட டாக்டருக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது. முடிவில் வழக்கை விசாரித்த அதிகாரி ஜில்லா போர்டு அங்கத்தினர் குற்றவாளி என்று கண்டு அவருக்கு இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார். அதன்விளைவாக, காங்கிரஸ் ஆட்சிமுறையின்பேரிலும், மந்திரிகளில் முக்கியமாக என்பேரிலும் அந்த ஜில்லா போர்டு அங்கத்தினருக்குத் தீராப் பகை உண்டாகிவிட்டது.

மொட்டைக் கடிதங்களில் ஒன்றை விசாரணைக்கு அனுப்பியதில் பல வருஷங்களாக நடந்துவந்த ஒரு விபரீத நிகழ்ச்சி வெளியாயிற்று. 'ஏன் இவ்வளவு காலம் இது கேட்பார் இல்லாதபடி நடந்துவந்தது? ஒளி மறைவில்லாமல், வெளிப்படையாக நடந்தும் இந்த அநீதி ஏன் ஒருவருடைய கவனத்திற்கும் வரவில்லை? இந்த உண்மையான ஊழலைப்பற்றி எழுதியவர் ஏன் கையெழுத்தில்லாமல் மொட்டைக் கடிதமாக எழுதினார்?' என்பதற்கெல்லாம் என்னால் காரணம் கூறமுடியாது. கூறுவதும் பயனற்ற வேலை.

சுமார் பத்து வருஷங்களுக்குமுன்பு தொடங்கிய நிகழ்ச்சி அது. நடந்த இடம் நாகபட்டினம் துறைமுகம். நமது நாட்டு ஏழைக் குடிமக்கள் பட்டினியால் வாடி வதங்கிப் பிழைக்க வழிதெரியாமல் சிலர் தனியாகவும், சிலர் மனைவி மக்களுடனும் அக்கரைச் சீமைகளில் கூலி வேலைசெய்து வயிறு வளர்ப்பதற்காகத் தங்கள் கையில் கஷ்டப்பட்டு வெகு நாட்களாகச் சேமித்திருக்கும் சிறு தொகைகளை எடுத்துக்கொண்டோ கடன் வாங்கிக்கொண்டோ, மாதம் இருமுறை பயணமாகும் கப்பல்களில் ஆயிரக்கணக்காகப் போவது வழக்கம். மலேயா, சிங்கப்பூர், பினாங்கு, சைகோன், மோரிஷ்ஸ் முதலிய நாடுகளுக்குச் செல்வார்கள். வறுமைக்கு உடன் பிறந்தவைக

ளான தொத்துநோய்களும் அவர்களுடன்கூடக் கப்பலேறிச் செல்லும். அங்கிருக்கும் மக்களுக்கு இந்தத் தொத்து நோய் பரவி அவர்கள் இறந்துவிடக்கூடுமாதலால், நாக பட்டினத்தில் கப்பல் ஏறும் முன்பாகத் துறைமுக டாக்டர் களால் பரிசோதிக்கப்பட்டுத் தடை ஊசி மருந்துகள் போட்டுக் கொண்டு, நோயற்றவர்கள் என்று அத்தாட்சி கொடுக்கப் பட்ட பிறகே கப்பலில் இடம் கிடைக்கும். இப்படிச் செய்வத ளுல் பிரயாணிகள் நாகபட்டினத்திலேயே அங்கிருக்கும் விடுதி களில் ஒரு வாரம் அல்லது பத்து நாட்கள் தங்கிப் பிறகு புறப்படவேண்டியதாயிற்று. தங்களிடம் மிகுதியிருக்கும் சிறு நகைகளை விற்ளே அடகு வைத்தோ பணம் திரட்டி வரும் ஏழைகள், பத்து நாட்கள்வரையில் படிச்செலவு செய்து கொண்டு நாகபட்டினத்து விடுதிகளில் தங்கிப் புறப்படுவ தற்கு முடிவதில்லை. கப்பல் கம்பெனியாரின் ஏஜெண்டுகள் ஒரு டாக்டரை நியமித்து அவர்மூலம் தொத்துநோய்த் தடை செய்து, அத்தாட்சி பெற்றுப் பிறகு பிரயாணிகளைக் கப்ப லேற்றி வந்தார்கள். இந்தியா கவர்ன்மென்டார் துறைமுகச் சுகாதார அதிகாரிகளைக் கொண்டே அத்தாட்சி கொடுக்கும் வேலை செய்யப்படவேண்டுமெனத் தீர்மானித்தபிறகு இந்த வேலை நாகபட்டினம் துறைமுகச் சுகாதார அதிகாரிகளிடம் வந்தது. இதனுல் கப்பல் கம்பெனியாரின் டாக்டருக்கும் சுகாதார அதிகாரிகளுக்கும் வரும்படி விஷயத்தில் மனத்தாங் கல் ஏற்பட்டது. சென்னை மாகாணச் சுகாதார அதிகாரியின் முயற்சியால் ஒரு சமரசம் ஏற்பட்டது. அதனுல், ஆங்கில வைத்திய முறையில் தேர்ச்சி பெற்று, தொழில் நடத் தும் டாக்டர் யாராயிருந்தாலும் தடுப்பு அம்மை குத்தி அத்தாட்சி கொடுக்கலாம், கப்பல் கம்பெனி டாக்டரும் கொடுக்கலாம் என முடிவு செய்யப்பட்டது. இதனுல் கிடைக் கும் லஞ்சத்தில் ஒரு பெரும் பகுதியைக் கப்பல் கம்பெனி டாக் டர்மூலமாகச் சென்னைக் கவர்னமென்டாரால் ஏற்படுத்தப்பட் டிருக்கும் துறைமுகச் சுகாதார அதிகாரி பெற்றுக்கொள்வது என ஓர் ஒப்பந்தமும் ஏற்பாடாயிற்று.

இந்த வேலையில் லஞ்சத்திற்கு இடம் எங்கிருந்து வந்தது என்பதுதான் மக்கள் தெரிந்துகொள்ள வேண்டியது. பத்து நாட்கள் தங்கிச் செலவுசெய்யாமல், அம்மை குத்திக்கொள்ளாமலே அத்தாட்சிபெற்றுக் கப்பல் ஏறிவிட்டால், பிரயாணிகளுக்குப் பணம் மிச்சமாகும். அதில் ஒரு பங்கைக் கப்பல் கம்பெனி டாக்டர்களுக்கோ சுகாதார அதிகாரிகளுக்கோ கொடுத்துவிட்டு ஓர் அத்தாட்சிக் கடிதத்தைப் பெற்றுக் கொள்வதில் பிரயாணிகளுக்குத் தொல்லை குறைவு. கப்பலேறித் தாய்நாட்டைவிட்டு வயிற்றுப் பிழைப்பிற்காக ஓட்டம் பிடிக்கும் ஏழை மக்களுக்குத் தடுப்பம்மை குத்திக்கொள்வதில் பயத்தைத்தவிர வேறு நம்பிக்கை இல்லை. அநேகமாக எல்லோரும் கையெழுத்துக்கூடப் போடத் தெரியாதவர்கள். படிப்பு, பயிற்சி, பழக்கம் ஒன்றும் இல்லாதவர்கள். ஆங்கில வைத்தியப் படிப்பை முடித்து மாகாண வைத்திய ரிஜிஸ்தரில் பெயரைத் தாக்கல் செய்துகொண்ட டாக்டர்கள் எல்லோரும் அத்தாட்சி கொடுக்க அதிகாரம் பெற்றூர்கள். இதன் விளைவு விநோதமாக இருந்தது.

நாகபட்டினம் துறைமுகத்தில் பல இடங்களில், "இங்கே தடுப்பம்மை குத்தி அத்தாட்சி கொடுக்கப்படும்" என்ற விளம்பரங்களுடன் அநேக சிறிய குடிசைகள் தோன்றின. மாதம் இருமுறை கப்பல் புறப்படும் இரண்டு நாட்கள் முன்னதாகவே டாக்டர்களின் ஏஜெண்டுகளும் டாக்டர்களுமாக அம்மை குத்தாமலே அத்தாட்சிகளை விற்கப் போட்டி வியாபாரம் நடத்துவார்கள். பேருக்கு ஓர் ஊசிப்பெட்டியும், ஒரு மருந்து சீசாவும் குடிசைகளில் இருக்கும்; அம்மை குத்துவதே இல்லை. 'அத்தாட்சி' வியாபாரந்தான் நடக்கும். சமீப ஊர்களில் இருக்கும் டாக்டர்களிடம் போய் நூறு அத்தாட்சிக் கையெழுத்துக்கு இவ்வளவு என்று கொடுத்து வாங்கிக் கப்பல் புறப்படும் சமயத்தில் அவற்றை விற்றுத் தரகர்கள் பணம் சம்பாதித்து வந்தார்கள். இந்தப் பண விஷயமாகக் கம்பெனி டாக்டருக்கும் துறைமுகச் சுகாதார அதிகாரிகளுக்கும் சச்சரவு ஏற்பட்டது. இதைத் தீர்க்க

மாகாணச் சுகாதார அதிகாரியாகிய ஆங்கில ஐ. எம். எஸ். ஒருவரும் அவருடைய இந்திய உதவியாளரான டாக்டரும் மத்தியஸ்தம் செய்து சுகாதார இலாகாவுக்கு இவ்வளவு பாகம் கொடுத்துவிடவேண்டுமென்று தீர்ப்புக் கூறினர். இந்த வியாபாரம் ஐந்து வருஷங்களுக்கு மேலாகவே நடந்துவந்தது. விவரம் நாகபட்டினத்திலிருந்து வந்த கையெழுத்திடாத மொட்டைக் கடிதத்தினால் தெரியவந்தது. இந்த விவரங்களைத் தஞ்சைக் கலெக்டர் நேரில் விசாரித்து சென்னைக் கவர்ன்மென்டுக்கு அறிக்கை அனுப்பினார்.

கடிதத்தில் கண்டிருந்த ஒவ்வொரு தகவலும் உண்மை என்று தெரிந்தது. நம் நாட்டு நிகழ்ச்சி இவ்வாறு இருக்க, இறங்கும் துறைமுகத்திலுள்ள அதிகாரிகள் எவ்விதம் இந்த அத்தாட்சிகளுக்கு மதிப்புக் கொடுத்தார்கள் என்பது நகைக்கத் தகுந்த விஷயம். இந்தியாவிலிருந்து கொண்டு வரப்பட்ட அத்தாட்சி எதையும் அவர்கள் நம்பவில்லை. கப்பலை விட்டு இறங்கியதும், அங்கே ஒரு வாரம் துறைமுகத்தில் உள்ள விடுதிகளில் ஏழைப் பிரயாணிகளை நிறுத்தி, தாங்களே தங்கள் வைத்திய அதிகாரிகளைக் கொண்டு தடுப்பம்மை ஊசி குத்தி மற்றுமுள்ள ஏற்பாடுகளையும் செய்தபிறகுதான் இவர்களை அவர்கள் தம் நாட்டில் புக உத்தரவு அளித்தார்கள்.

சென்னை மாகாணச் சுகாதாரத் தலைவரே தீர்ப்புக்கொடுத்த உத்தரவை, நடத்திவைக்க வேண்டியது தமது கடமை என்று எண்ணி நாகைத் துறைமுகச் சுகாதார அதிகாரிகள் பகிரங்கமாகவே லஞ்சத்தைப் பெற்று இதற்குச் சர்க்கார் வருமான வரியையும் செலுத்தி அதற்கான ரசீதையும் பெற்று வந்தார்கள். 'இந்த வரும்படியில் மாகாண அதிகாரிகளுக்குப் பங்கு எவ்வளவு? உதவி அதிகாரிக்கு எவ்வளவு?' என்ற சரியான புள்ளி விவரம் தஞ்சைக் கலெக்டர் விசாரணையில் கிடைக்கவில்லை. மாகாணச் சுகாதார அதிகாரி தாம் பிரத்தியேகமாக நடத்திய விசாரணையில் துறைமுகச் சுகாதார அதிகாரிகள் சுமார் இருபத்துநாலாயிரம் ரூபாய்வரையில் பெற்றிருப்பதாகக் கணக்கெடுத்தார். இவ்வளவும் லஞ்சம் என்ற முடிவுக்கு வந்து, சென்னைப் பப்ளிக் ஸர்விஸஸ் கமிஷன் (Madras Public Ser-

vices Commission) மூலம் விசாரிக்க ஏற்பாடு செய்ததில் இரண்டு துறைமுகச் சுகாதார அதிகாரியும் ஓர் உதவி மாகாணச் சுகாதார அதிகாரியும் குற்றவாளிகள் என்ற முடிவு ஏற்பட்டது. அதற்குத் தகுந்த தண்டனையும் அவர்களுக்குக் கிடைத்தது. ஒரு சிறிய மொட்டைக் கடிதத்தின் பலனாக நாகபட்டினம் துறைமுகத்தின் ஊழல் வெளிவந்தது. அதற்குப் பிறகு நாகபட்டினத்தில் அத்தாட்சிப் பத்திர ஏலமும் அதன் மூலம் நடந்த வியாபாரமும் நின்றன. இதன்பிறகே எல்லாக் கடிதங்களையும் ஒன்று தவறாது விசாரணைக்குக் கொண்டுவந்து தான் முடிவு செய்யவேண்டும் என்கிற ஒரு தீர்மானமும் செய்ய முடிந்தது.

# ஜட்ஜ் நியமன விவகாரம்

"சென்னை ஹைகோர்ட் ஜட்ஜை நியமனம் செய்பவர் யார்?" என்பதைப்பற்றிக் கவனிக்கவேண்டிய அவசியம் ஒருமுறை ஏற்பட்டது. காங்கிரஸ் மந்திரி சபை அதிகாரம் வகிக்கத்தொடங்கிய பின்பு, முதல் வருஷத்திலேயே இரண்டு நீதிபதிகளுக்கு மேலாக நியமிக்கப்பட்டுவிட்டார்கள். பிரதம மந்திரியின் சிபாரிசின் பேரில் கவர்னரும், வைசிராயும் கலந்து இதைச் செய்திருக்கலாம் என்று சில மந்திரிகள் எண்ணினார்கள். அதைப்பற்றி எங்களுக்குள் விவாதம் நடந்தது. கடைசியில் பிரதம மந்திரிக்குக்கூடக் கவர்னர் யாரைச் சிபாரிசு செய்திருக்கிறார் என்று தெரியாது என்பது வெளியாயிற்று. நியாய ஸ்தலங்களின் நிர்வாகம், ஒழுங்கு, வேலை இவைகளுக்கெல்லாம் மந்திரி சபைக்குச் சட்டரீதியாகப் பொறுப்பு உண்டு. ஆனால் மாகாண உயர்நீதி மன்றத்திற்கு ஜட்ஜுகளாக யாரைப் பொறுக்கி எடுக்கலாம் என்று மந்திரி சபையை ஆலோசனைகூடக் கேட்க அவசியமில்லாத முறையில் 1935-ஆம் வருஷச் சட்டம் இருக்கிறது! நிர்வாக முறையில் நீதிபதிகளை அவர்களுடைய யோக்கியதைக்குத் தகுந்தவாறு பொறுக்கவேண்டும். சட்டம் இயற்றுவது சட்டசபைகளின் வேலை. சட்டசபையின் நோக்கத்தை அறிந்து சட்டங்களைக் கையாளுவது நீதிபதிகளின் வேலை. சட்டசபையார் இயற்றும் சட்டங்களுக்கு விரோதமான உணர்ச்சி உடையவர்களை நீதிபதிகளாகக் கவர்னரோ அவர் சிபாரிசின்மேல் வைசிராயோ நியமித்துவிட்டால் ஆட்சிமுறையை நடத்துவது கஷ்டமாகிவிடும். மந்திரிசபையைக் கலந்து ஆலோசியாது பிரதம நீதிபதி ஒருவருடைய சிபாரிசின்பேரில்மட்டும்] கவர்னர் மூலம் ஜட்ஜுகளை வைசிராய் நியமிப்பது பொதுஜன அபிப்பிராயத்திற்கு விரோதமான செயல் என்பது எங்கள் முடிவு.

இதைப்பற்றி ராஜாஜி வெகு சிரமப்பட்டுத் தக்க ஆதாரங்களுடன் வாதாடினார். நாங்கள் எல்லோரும் ஒரே மனத்துடன் ஒரு முடிவிற்கு வந்தோம்; 'ஹைகோர்ட் நீதிபதிகளை நியமிக்கும் விஷயத்தில் மந்திரி சபையைக் கலந்து ஆலோசித்த பிறகே கவர்னர் சிபாரிசு செய்யவேண்டும். எங்களது சிபாரிசைத் தக்க காரணங்களைக் காட்டி நிராகரித்து மற்றவர்களை நியமிக்க வைசிராய்க்குச் சட்டபூர்வமான அதிகாரம் இருப்பினும் அது பெயரளவில்தான் நடைபெற வேண்டும்.'

சீமையிலிருக்கும் இந்தியா மந்திரிக்கு எங்கள் முடிவைத் தெரிவிக்கவேண்டும் என்று தீர்மானித்தோம். கவர்னரும் இதற்கு உடன்பட்டார். மூன்று மாதங்களுக்குப் பிறகு இந்தியா மந்திரி எங்கள் கோரிக்கையை நிராகரித்துவிட்டதாகக் கவர்னர் தெரிவித்தார். இது காரணமாக மந்திரி வேலையை ராஜீநாமாச் செய்து சட்டசபைகளைக் கலைத்துவிட்டுப் பொதுமக்கள் அபிப்பிராயத்தை ஒரு புதுத்தேர்தல் மூலம் அறிவதா என்கிற பிரச்னை கிளம்பிற்று. ராஜாஜி ராஜீநாமாச் செய்யவேண்டுமென வற்புறுத்தினார்.

மனித சமூகத்திற்கு இன்றியமையாத, ஜீவாதாரமாக உள்ள சில உரிமைகள் உண்டு. அவற்றைச் சட்டம் இயற்றுவதற்கு முன்பாகவே, "மனித உரிமைகள்" என்ற நியாயத்தால் சட்ட மாறுபாடுகளின் எல்லைக்குள் அகப்படாமலே சித்தாந்தம் செய்வது ஜனநாயக ஆட்சிமுறையின் அடிப்படையான கொள்கை. ஆனால் இந்தியாவிற்கு வழங்கப்பட்ட 1935-ஆம் வருஷச் சீர்திருத்தம் இம் மனித உரிமைகளை உருப்படுத்தவில்லை. தாங்களாகப் பெரிய மனசுடன் இந்தியர்களுக்கு ஒரு பகுதி அதிகாரத்தை உயிரை முறிக்கும் வரையறைகளுடன் வழங்கினார்களே தவிர ஒரு தேசியக் கிளர்ச்சியின் வன்மையால் இதை வழங்கவில்லை. ஆகையால் குடியரசைப் பாதுகாக்கும் நோக்கம் அதில் இல்லை.

இந்த நிலையில் மக்களின் அடிப்படையான சுதந்தரத்தைக் காப்பாற்றக் கூடியவை நீதி மன்றங்களும் சட்ட சபைகளுமே ஆகும். இதற்கு ஓர் உதாரணம் காட்டினால்

நான் சொல்வது நன்கு விளங்கும். இந்தச் சமூகத்தில் தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்பது காங்கிரஸின் அடிப்படையான நோக்கம். தேர்தல் காலத்திலும் அதற்கு முன்பும் இதைப்பற்றிக் காங்கிரஸ் தீவிரமாகப் பிரசாரம் நடத்தி வந்தது. இந்தக் கொள்கையை ஒட்டியே ஆலயப் பிரவேச மசோதா சட்டசபையில் நிறைவேற்றப்பட்டுச் சட்டமாகி விட்டது. மதுரை மீனாட்சியம்மன் கோவிலில் ஹரிஜனங்களும், இதுவரையில் உட்புகமுடியாமல் விலக்கப்பட்ட இந்துக்களும் உள்ளே சென்று மற்றவர்களைப்போலவே தரிசனம் செய்யச் சட்டம் இடமளித்தது. கூடியமட்டும் சந்தேகத்துக்கு இடமில்லாமலும் மறைவான கற்பனைகளுக்கு இடங்கொடாமலும் இருக்கும்வண்ணம் ராஜாஜி சட்டத்தைத் தக்க சட்ட நிபுணர்களைக் கொண்டு தயாரித்துச் சட்டசபையில் நிறைவேற்றினார். மதுரைக் கோர்ட்டுகளில் சநாதனிகள் ஓர் யுக்தி வாதத்தைக் கிளப்பினார்கள். இன்ன இன்ன இடங்களில் இன்ன இன்ன ஜாதியார்கள் நின்று தரிசிக்கலாம் என்கிற வழக்கத்தை மீறிக் கோவிலில் இதுவரையிலும் புகாத தீண்டப்படாதவர்கள் எல்லோரையும் உட்புகச் செய்யச் சட்டத்துக்கு அதிகாரம் இல்லை என்பது அவர்கள் கட்சி. தீண்டப்படாதவர்கள் எவ்விதத்திலும் எவ்விடத்திலும் வரக்கூடாதென்னும் கொள்கையையுடைய சநாதனிகள் பொதுமக்களின் உணர்ச்சியின்மூலம் சட்டத்தை மாற்ற இயலாததால் கோர்ட்டின்மூலம் குதர்க்கவாதம் கிளப்பிச் சட்டத்தின் போக்கை மாற்றிவிட முயன்றார்கள். இரண்டொரு கோர்ட்டுகளில் நீதிபதிகளின் மூளையில் குழப்பத்தையும் உண்டாக்கினார்கள். காங்கிரஸ் மந்திரிசபை எதிர்வாதம் நடத்தவேண்டி வந்தது.

இம்மாதிரியான இடையூறுகள் பல நீதிமன்றங்களில் ஏற்படலாம். சட்டசபைகளின் நோக்கத்தையும், சட்டத்தின் கருத்தையும் அறிந்து அதன்படி நீதி வழங்கவேண்டிய பொறுப்பு நீதிபதிகளுக்கு இருக்கவேண்டும். அதற்கு மாறாக நீதிபதிகள் தீர்ப்புச் செய்தால் சட்டத்திற்கும் ஆட்சிமுறைக்

கும் பலமில்லாமல் போய்விடும். இதை எண்ணியே உயர்தர நீதிமன்றத்தில் நியமிக்கப்படும் நீதிபதிகளைச் சிபாரிசு செய்யும் உரிமை தனக்கு வேண்டும் என்று மந்திரி சபை கேட்டது.

இதற்கு எதிர்வாதமும் உண்டு. 'சட்டத்திற்கு அரசன் முதலாக எல்லோருமே கீழ்ப்படிந்தே நடக்கவேண்டும். அதிகாரம் வகிப்பவர்களும் சட்டத்தை மீறக்கூடாது. நீதிபதிகள் சட்டத்தைப் பரிபாலிப்பவர்கள். அவர்களைச் சட்டத் திறன் ஒன்றையே கொண்டு நியமிக்கவேண்டும். அவர்கள் நீதி வழங்கும்பொழுது சர்க்கார் என்றும், மந்திரி என்றும், பொருள் படைத்தவர்கள் என்றும் ஏழைகளென்றும் உள்ளத்தில் உணர்ச்சிகொள்ளக்கூடாது. அவர்களை அரசன் அல்லது அரசனுடைய பிரதிநிதியே நியமிக்கவேண்டும். அதுதான் முறை' என்று சொல்லக்கூடும். ஆனால் இந்த முறை ஜனநாயகம் அன்று. குடியரசில் உயர்ந்த நீதி வழங்கக்கூடியவர்கள் குடிகளே. அந்த முறையில் வகுக்கப்படும் சட்டங்களே நீதியாகும். சட்டங்கள் அநீதமாக இருந்தாலும் நடைமுறையில் சாத்தியமில்லாமல் போனாலும் அந்தக் குறையை நீதிபதிகள் எடுத்துக்காட்டவேண்டும். இதைத் திருத்தியமைக்கும் வேலையை மக்களின் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபைகளே செய்ய வேண்டும். மாகாண சுய ஆட்சி என்று பறை சாற்றுவதும், குற்றங்கள், தவறுகள் ஏற்படின் அவை தங்கள் பொறுப்பு அல்ல என்று சாதிப்பதும் மத்திய கவர்ன்மெண்டார் போக்கு. திருஷ்டாந்தமாக வங்கப் பஞ்சத்தில் மாகாண மந்திரிகள்மீது முழுக்குற்றத்தையும் டில்லி சர்க்கார் சுமத்தினார்கள்.

மாகாண சுய ஆட்சியின் பொறுப்பிற்கு ஒரு முக்கிய அம்சமாகிற சென்னை ஹைகோர்ட்டிற்கு நீதிபதிகளை நியமிக்கும் விஷயத்தில் மந்திரிசபையைக் கலந்து ஆலோசியாமல், பிரதம நீதிபதி சிபாரிசின் பேரில் கவர்னரும் வைசிராயுமாக நியமிப்பது ஒழுங்கில்லை என்பது எங்கள் வாதம். எங்கள் வேண்டுகோள் நிராகரிக்கப்பட்டது. மந்திரி வேலையை ராஜிநாமாச் செய்ய ராஜாஜி எண்ணினார். மந்திரி

சபையில் சிலர் இந்த விஷயத்தைக் கொண்டு நமது பொறுப்பை விட்டுவிடுவது உசிதமல்ல என்று யோசனை கூறினார்கள்.

இப்படியாக, மந்திரி வேலைகளை ராஜிநாமாச் செய்யும்படி காங்கிரஸ் உத்தரவு வரப் பல மாதங்களுக்கு முன்பே அதிகாரத்திலிருந்து விலகும் பிரச்னை சென்னை மந்திரிசபையில் ஏற்பட்டது. ஒரு சமயம் சட்ட சபையில் ராஜாஜி பேசும்பொழுது மந்திரிசபையின் மனப்பான்மையை வெளியிட்டிருக்கிறார். "பொதுமக்களின் ஊழியர்களாக மந்திரிகள் வேலை செய்யும் பொழுது அவர்கள் என்றென்றும் நீடித்து ஆட்சிபுரிவதாகவே எண்ணித் திட்டங்கள் வகுக்கவேண்டும். ஆனால் இந்த எண்ணத்தைக்கொண்டு எவ்விதத்திலும் எவ்வாறாயினும் பதவியில் ஒட்டிக்கொண்டிருக்கவேண்டுமென முடிவுகொள்ளக்கூடாது. அவசியம் நேரிடின் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் வேலையை விட்டுப் போகவும் ஆயத்தமாக இருக்கவேண்டும்' என்று சொல்லியுள்ளார். இதே மனப்பான்மையில் பதவி வகித்த இரண்டரை வருஷங்களும் தொண்டு செய்துவந்தோம்.

# கேட்டதுண்டா ?

மந்திரி சபையை நடத்தியதில் ராஜாஜியின் போக்கு ஒப்பற்ற ஓர் எடுத்துக்காட்டு. தமக்கு ஏற்படும் துயரம், துன்பம், பகைமை, பொறாமை, அவதூறு எல்லாவற்றையும் தம்முள் அடக்கும் தன்மை இவருடைய இயல்பு. இந்த மனோபாவம் இணையற்ற பெரிய பதவி வகிக்கும் காலத்தில் இவரிடம் தீவிரமாகக் காணப்பட்டது. கறுப்புக் கண்ணாடியால் தமது கண்ணோட்டத்தை மறைத்துவிடுகிறார் என்று இவருடைய விரோதிகள் அடிக்கடி கூறுவதுண்டு. அது ஒரு விதத்தில் உண்மை. அதாவது தம்மை இழிவுபடுத்தவோ அவமானப்படுத்தவோ எண்ணித் தம்மைக் கேவலமாக யாராவது பேசினாலுங்கூட அவைகளைப் புன்சிரிப்போடு விழுங்கிவிடுவார். இந்தச் சாகசத்தை உலகில் எவ்வளவு பேர் செய்யமுடியும்? தாம் பிரதம மந்திரியாக இருப்பதான உணர்ச்சியும் ஞாபகமும் அவருக்கு இருந்ததாக நினைக்க இடமில்லை. எல்லா மந்திரிகளிலும் மிகக் குறைந்த அவகாசம் அவருக்குத்தான். அவருக்கென்று தனிப்பட்ட இலாகா ஒன்றும் இல்லாமல் இருந்தால்கூட அவருக்கு ஓய்வு இருந்திருக்கமுடியாது. அப்படியிருந்தும் கனத்த பொறுப்பைக் கொண்ட மூன்று இலாகாக்களை அவர் ஒப்புக்கொண்டு நடத்தி வந்தார்; இரு சட்டசபைக்கான வேலைகள்வேறு. சுகாதாரச் சட்டம் ஒன்றைத் தவிர, சட்டசபையில் இயற்றப்பட்ட மற்றச் சட்டங்கள் அனைத்தும் அவராலேயே நிறுவப்பட்டன. இவ் வேலைகளுக்கு நடுவில் பொது மக்களுடைய இயக்கங்களுள் ஒன்றுக்காவது தவறாமல் போய் நடத்திவைத்து வந்தார்.

இவ்வளவு பளுவான வேலைகள் இருந்தும் தமக்கு என மற்ற மந்திரிகளைக் காட்டிலும் அதிகமான உதவிகளை அவர் தேட மறுத்துவிட்டார். அவருக்கு இருந்த வேலைக்

கடுமையால் மற்ற மந்திரிகளுடைய வேலையில் தலையிட அவருக்கு அவகாசமும் இல்லை; மனமும் இல்லை. மற்றவர்களுடைய பிசகுகளைத் தாமே ஏற்று மந்திரி சபைக்குக் குறைவு வராதபடி காத்துக்கொண்டு வந்தார். மந்திரிகளுக்குள் மிகக் குறைந்த பிரயாணம் செய்தவர் அவர்தாம். அவர் காங்கிரஸ் தீர்மானங்களை அணுவளவும் தவறாது பின்பற்றி வந்தார். மந்திரிசபையில் சேர எனக்கு அவர் எழுதிய கடிதத்தில், "உன் சம்பளம் மிகச் சொற்பம்; வேலையும் ஆறுமாதத்திற்குமேல் நீடிப்பது சந்தேகம். எனினும் நீ வந்தால் நலம்" என்று கண்டிருந்தார். வெளியூர்களிலிருந்து வரும் மந்திரிகளுக்குச் சென்னையில் வீடு பார்க்கும்படி தமது நண்பர் ஒருவருக்குச் சொல்லியபொழுது, "மந்திரிகளுக்கு 50 ரூபாயிலிருந்து 75 ரூபாய்க்குமேல் போகாமல் வீடு பார்க்கவேண்டும். ராஜனுக்குமட்டும் நூறு ரூபாய்க்குக் குறையாமல் பார்க்கவேண்டும்" என்றார். இது என்பேரில் பிரியத்தினாலாவது பிறர்பேரில் அன்புக் குறைவினாலாவது சொல்லிய பேச்சல்ல. நான் பெரிய பங்களாவில் பல வருஷங்கள் வசித்ததனாலும், சம்பளத்தையே நம்பிக் காலம் கடத்தவேண்டிய அவசியம் இல்லாதிருந்ததனாலும் இவ்விதம் சொல்லியிருக்க வேண்டுமே தவிர வேறு காரணம் எதுவும் இருக்க முடியாது.

மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கும் முறையைப் பற்றிய புகார் ஒன்று நடந்தது. காங்கிரஸ் மந்திரி சபைக்குப் பொறுப்பாளிகள், அவர்களைச் சட்டசபைக்குப் பொறுக்கிய வாக்காளர்கள். யாருக்காவது மந்திரி சபை பதில் சொல்லவேண்டியிருந்தால் அது வாக்காளர்களுக்கே. ஆனால் காங்கிரஸ் அமைத்த திட்டத்தை ஏற்று அதன் பேரில் வாக்குகள் வாங்கி அபரிமிதமான வாக்குகளால் சட்டசபையில் ஆதிக்கம் பெற்றமையால் வாக்காளர்களுக்குமட்டும் அல்லாமல் காங்கிரஸ் நியமித்த பார்லிமென்டரி போர்டாருடைய கண்காணிப்பிற்கும் அதன் மூலமாக மகாத்மா காந்தியின் தணிக்கைக்கும் சபை உட்படவேண்டியிருந்தது.

சென்னையிலிருந்து ஒருவர் அவருக்கு எழுதிய கடிதத்தில் சென்னை மந்திரிசபையார் மாதம் ஐந்நூறு சம்பளம் பெறு வதைப் பற்றியும் புகார் செய்திருந்தார். மகாத்மாஜீ ராஜா ஜிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் பின்வருமாறு குறித்திருந் தார்: "நீங்கள் மந்திரிசபை நடத்துவதில் என் கொள்கை களுக்கு மாறாகச் சில நிகழ்ச்சிகள் நடந்திருப்பதைக் குறிப்பிடு கிறேன்: முதலாவது காங்கிரஸின் தீர்மானப்படி உயர்ந்த சம்பளம் மாதம் ஐந்நூற்றுக்குமேல் வாங்கக் கூடா தென்று இருந்தும், நீங்கள் எடுப்பிலேயே உயர்தரச் சம்பளத்தை ஏற்படுத்திக்கொண்டு விட்டீர்கள். இது நியாய மாகத் தோன்றவில்லை. இரண்டாவதாக, சர்க்கார் செலவில், அதாவது பொதுமக்கள் செலவிலிருந்து, ஒவ்வொரு மந்திரிக்கும் சட்டசபைத் தலைவருக்கும் ஒரு புதிய மோட்டார்கார் வாங்கி யிருக்கிறீர்கள். மூன்றாவது அதற்காகும் செலவிற்காக மாதம் ஒவ்வொருவருக்கும் நூற்றைம்பது ரூபாய்வீதம் படியும் ஏற்படுத்திக்கொண் டிருக்கிறீர்கள். என் இஷ்டப்படி மந்திரி சபை ஏற்பட்டால் நான் மாதம் ஒன்றுக்கு எழுபத்தைந்து ரூபாய்க்குமேல் கொடுக்கமாட்டேன். மோட்டார்கார் வாங் கிக் கொடுக்கமாட்டேன். உத்தியோக ஸ்தலங்களுக்கு நடந்தோ பஸ் அல்லது டிராம் வண்டிகளிலோதான் போக வேண்டும் என விதிப்பேன்" என்று எழுதியிருந்தார். சென்னை மாகாண மந்திரிகள் எவ்வளவு எளியவர்களாக இருந்தாலும் மாதம் எழுபத்தைந்து ரூபாய்க்குள் மந்திரியாக வேலை பார்க்கமுடியும் என்று எனக்குத் தோன்றவில்லை.

இம்மாதிரி ராஜாஜிக்குக் காந்திஜியினிடமிருந்தும், பார்லி மென்டரி போர்டாரிடமிருந்தும் எண்ணற்ற தொல்லை கள் ஏற்பட்டுக்கொண் டிருந்தன. என் அபிப்பிராயப்படி இதற்கு விமோசனம் ஒன்றேதான்: காந்திஜீ அவர்களே ஒரு சிறிய மாகாணத்தைத் (ஒரிஸ்ஸா போன்றது) தாமே எடுத்துக்கொண்டு நடத்திக்காட்டினாலொழிய வேறு வழி இல்லை என்பதே.

கேட்டதுண்டா?

மந்திரிகளைப் பொதுமக்கள் தங்கள் சொந்த வேலைகளுக்காகவும் பொதுவிஷயங்களுக்காவும் அடிக்கடி பார்க்க விரும்புவது வழக்கம். பொதுஜன ஆட்சிமுறையில் தனிப்பட்ட ஒவ்வொருவனும் மந்திரியை அணுகத் தனக்கு அதிகாரம் உண்டு என்றே எண்ணினன். ஆகையால் மந்திரிகளைக் காண வருபவர்களின் தொகை ஏராளமாயிற்று. அக்கப்போர்க் கடிதங்களையும் கையெழுத்து இல்லாத மொட்டைக் கடிதங்களையும் விடப் பன்மடங்கு இது அதிகரித்தது. 'கடமைப்பட்டுள்ள வேலைகளைச் செய்து முடிப்பதா, சென்னை மாகாணத்திலுள்ள ஒவ்வொருவரின் முறையீட்டையும் தாங்களே நேரில் கவனிப்பதா?' - எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

ஒரு நாள் காலையில் என் நண்பர்கள் சிலர் சேலத்திலிருந்து நகரத் தண்ணீர் விநியோக விஷயமாக என்னை நேரில் சந்தித்து வற்புறுத்துவதற்காக வந்தார்கள். நான் இது விஷயத்தைப் பற்றி அவர்களிடம் அடிக்கடி பேசி, என்னால் இயன்றதைச் செய்துவந்திருப்பது அவர்களுக்குத் தெரியும். மணி பதினென்றுக்குக் கவர்னர் மாளிகையில் அன்று மந்திரிசபைக் கூட்டம். அதற்குப் போவதற்காக நான் அவசரமாகக் காலைச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு புறப்பட வேண்டியிருந்தது. வந்த நண்பர்களைக் காக்க வைக்கவேண்டி நேர்ந்தது. அதனால் அவர்களுக்குச் சற்று மனக்கலக்கம் ஏற்பட்டது. வெளியில் வந்து வண்டியில் ஏறப் போகும்போது, வந்த காரியம் என்ன என்று கேட்டேன். அவர்கள் சேலம் தண்ணீர் வசதி விஷயந்தான் என்றார்கள். சற்றுத் தங்கியிருந்து கவனித்துக் கேட்க அவகாசம் இல்லை. ஆகையால் சற்றுக் கேலியாகவே, "என்னால் காவேரி நதியைத் திருப்பிவிட முடியுமா?" என்று கேட்டேன். நான் கேட்டது தவறு என்றாலும் அவர்கள் என்பேரில் குறை கூறி ராஜாஜியிடம் முறையிட்டார்கள். இப்படிப்பட்ட சம்பவங்கள் பல.

தமது சொந்த விஷயமாக ராஜாஜியைச் சந்திக்க ஒரு வியாபாரி விரும்பினர். அதற்கு அவர் இடங்கொடுக்கவில்லை. ஒரு நாள் இரவு சென்டிரல் ஸ்டேஷனில் இரண்டாம் வகுப்பு

வண்டியில் ராஜாஜிக்குப் படுக்க இடம் 'ரிஸர்வ்' செய்யப்பட்டிருப்பதைப் பார்த்த இந்த வியாபார நண்பர், காலியாக இருந்த எதிர்ப் படுக்கைக்குத் தாம் ஒரு சீட்டு வாங்கி ரெயில் புறப்படும் சமயத்தில் அந்த இடத்தில் அமர்ந்தார். ரெயில் புறப்பட்டுக் கொஞ்ச தூரம் சென்றதும் வியாபாரி வெகு நாளாகக் காத்துக் கொண்டிருக்கும் தமது சொந்த அலுவலைப்பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டார். வண்டி அடுத்த ஸ்டேஷனில் நின்றவுடன் ராஜாஜி காலியாக இருந்த ஒரு முதல் வகுப்பு வண்டியைத் தமக்காக ரிஸர்வ் செய்துகொண்டு வியாபாரியிடமிருந்து ஓடி மறைந்து தப்பித்துக்கொண்டார். முதல் வகுப்புத் தனி வண்டிப் பிரயாணம் வேறு எந்தவிதத்திலும் பயன்படாவிட்டாலும் இம்மாதிரி உபத்திரவத்தினின்று தப்புவதற்குப் பயன்பட்டது!

ராஜாஜி சென்னையில் தியாகராயநகரில் ஒரு சிறிய வீட்டில் ஐம்பது ரூபாய் வாடகையில் குடியிருந்துவந்தார். பிரதம மந்திரியானபிறகும் அதே வீட்டில்தான் வசித்தார். தமது வீட்டு வாசலில் வில்லைபோட்ட சேவகர் யாரும் காத்திருக்கக் கூடாது என்று உத்தரவிட்டார். இதன் விளைவாக அவர் வீடு அவருக்குச் சிறைக்கூடமாயிற்று. வாசல் கதவை எப்பொழுதும் தாழிட்டு வைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. அவர் மகன் நரசிம்மனோ, குமாஸ்தாக்களில் யாராவது ஒருவரோ அடுத்த அறையில் இருந்துகொண்டு, வருபவர்களைக் கண்டு பேசி ராஜாஜியைக் கலந்துகொண்டு உள்ளே அநுமதிப்பது வழக்கமாகிவிட்டது. ஹிந்தி எதிர்ப்புக் கூட்டத்தாருடைய தொல்லைகளுக்காக அவர் வீட்டிற்கு எதிர்ப்புறம் ஐம்பது கஜத்திற்கு அப்பால் ரிஸர்வ் போலீஸ் படை எப்பொழுதும் காவல் செய்துகொண் டிருந்தது.

இந்த அமளிக்கு நடுவில் ஏதோ ஓர் ஏழைப் பள்ளிக்கூட உபாத்தியாயினிக்கு வேலை போய்விட்டது; பிள்ளைகுட்டிக்காரர். அவர் ராஜாஜியின் வீட்டு வாசலில் தவங்கிடந்து, ராஜாஜி ஆபீசிற்குப் போகப் புறப்படுமுன் வாசற்படியில் குறுக்கே படுத்துக்கொண்டு சத்தியாக்கிரகம் செய்தார். வாசலில் கார்

கேட்டதுண்டா?

காத்துக்கொண் டிருந்தது. இந்த அம்மாள் சாதகமான பதில் பெருமல் வழிவிட மறுத்தாள். ராஜாஜி வீட்டின் பின் புறமாகச் சென்று தெருவை அடைந்து சத்தமில்லாமல் கால் நடையாகவே கோட்டையிலிருக்கும் தமது காரியாலயத்திற்குப் புறப்பட்டு விரைந்து நடந்தார். சிறிது தூரத்திற்கு அப்பால் காரில் போய்க்கொண் டிருந்த நண்பர் ஒருவர், ராஜாஜியைத் தமது வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய்க் கோட்டையில் விட்டார். இந்த மாதிரியான மந்திரியையும், சபையை யும் பற்றி யாராவது கேட்டதுண்டா, கண்டதுண்டா?

•

# சிக்கல்கள்

ஆட்சிமுறை மாற்றி அமைக்கப்படுவது அநேகமாக ஒரு புரட்சிகாரணமாகவே ஏற்படும். இது சரித்திரம் அறிந்த விஷயம். மக்களுக்கு ஒரு சிறு பகுதி அரசியல் ஆதிக்கம் வந்தவுடன் நமது மாகாண மக்கள் மனமும் மாறியது; ஆனால் கடும் புரட்சிகள் உண்டாகவில்லை; எனினும் சிறிய புரட்சிகள் உருவெடுத்தன. தொழிலாளர் உலகத்தில் இது காணப்பட்டது. மக்களின் பெருவாரி வாக்குகளால் அதிகாரம் பெற்ற மந்திரி சபை ஏழை மக்களுடைய நெடுநாளைய குறைகளையெல்லாம் தீர்த்துவிடவேண்டும் என்கிற எண்ணம் நியாயமானதுதான். ஆனால் எல்லாவற்றையும் ஒரே காலத்தில் எப்படிச் செய்வது? மந்திரி சபைகளுக்கு உட்பட்ட அதிகார வர்க்கத்தின் ஊதியத்தைக் குறைத்தது அதிகாரிகளின் உள்ளத்தில் வருத்தத்தை உண்டுபண்ணியது. அதிலும், சீமையிலிருக்கும் இந்தியா மந்திரியாலும் மத்திய கவர்மென்டாராலும் பெரிய பதவிகளில் நியமிக்கப்பட்ட அதிகாரிகளின் சம்பளத்தைத் தொடுவதற்குக்கூட மந்திரிகளுக்குப் புதிய சட்டம் இடம் கொடுக்கவில்லை. ஆகையால் மாகாண கவர்மென்டின் நியமனத்திற்கு உட்பட்ட சிறிய அதிகாரிகளின் சம்பளத்தைத்தான் குறைக்க முடிந்தது.

அந்நிய ஆட்சியின்கீழ் உழைக்கும் அதிகார வர்க்கத்தினருக்கு மிதமிஞ்சிய சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. இது ஏகாதிபத்தியத்தின் ஒரு மர்மம். சுரண்டல் கொள்கையின்பேரில் கட்டப்பட்ட ஆட்சிமுறையில் நம் நாட்டினரில் செல்வாக்கு வாய்ந்த ஒரு பகுதியினரைப் பங்காளிகளாக எடுத்துக்கொள்வது ஏகாதிபத்தியத்திற்கு அளவற்ற சக்தியை அளித்து வருகிறது; ஆகையால் அவர்கள் பதவியை அசைக்கவொட்டாமலும், வருவாயில் குறைவில்லாமலும் இருக்கும்படி

திட்டம் செய்திருக்கிறார்கள். மந்திரிகள் தலையிட முடியாதபடி யான முறைகளும் இந்தப் புதிய சட்டத்தில் ஏற்பட்டுள்ளன.

ஓர் உயர்ந்த உத்தியோகஸ்தர் சரியாக வேலை பார்க்கிற தில்லையென எனக்கும், என் காரியதரிசிக்கும் நன்கு தெரியும். "இந்தக் கேவலமான அதிகாரியை ஏன் நீக்கிவிடக்கூடாது?" என்று நான் கேட்டேன். அதற்கு என் காரியதரிசி ஒரு பதில் அளித்தார். அது எனக்கு இன்றும் மறக்கவில்லை. "உயர்தர அதிகாரியின்மேல் குற்றம் சாட்டி ரூபிப்பதைக் காட்டிலும் நூறு சாதாரணக் குற்றவாளிகளைத் தூக்கிலிடுவது சுலபம்" என்று சொன்னார். அது முற்றும் உண்மை என்பது எனக்கு நன்கு தெரிந்தது. "இந்த அதிகாரக் கோட்டையில் இருப்பவர்களை ஒன்றும் செய்யவில்லை. ஏழைகளாகிய எங்கள் பேரில்தான் பாய்ந்துவிட்டார்கள்" என்று சிறிய மாகாண அதி காரிகள் மனம் வருந்தினார்கள். ஆட்சி முறையில் முதலிலேயே இந்த வெட்டைப் புகுத்தி எங்கள் கீழிருக்கும் இந்திய அதி காரிகள் மனத்தைக் கொதிக்க வைத்துவிட்டோம். இதனால் உயர்தர அதிகாரிகளின் ஏளனத்திற்கும் மறைமுகமான இகழ்ச்சிக்கும் ஆளானோம். விவசாயக் கடன் ரத்துச் சட்டத்தினால் இந்திய முதலாளிகளின் மனம் வெறுப் புற்றது. பயனடைந்த விவசாயியும் போதிய அளவு எங்களை ஆதரிக்கவில்லை. இதற்குமேல் வியாபார வரி, புகையிலை வரி, பெட்ரோல் வரி முதலியவைகளால் சம்பந்தப்பட்ட முதலாளி கள், வியாபாரிகள் இவர்களுக்கு எங்கள் பேரில் கசப்பு ஏற்பட்டது. பாக்கி இருந்த சிலர் ஆதரவும் ஹரிஜன ஆலயப் பிரவேசச் சட்டத்தினால் போய்விட்டது. இதனிடையே ஹிந்தி எதிர்ப்பு, தொழிலாளர்களின் தீவிர இயக்கம், வேலை நிறுத்தம், ஆலைகள் மூடுவது, வேலையில்லா மல் திண்டாடுவது எல்லாம் மும்முரமாக எழுந்தன.

காங்கிரஸ் பதவிக்கு வந்தவுடன் எல்லோருக்கும், எல் லாக் குறைகளும் ஒரே காலத்தில் தீர்ந்துவிடவேண்டும் என்று ஆத்திரம். நாங்கள் பதவியிலிருந்த ஒரு வருஷத்திற்குள் எழுபத் தைந்து ஆலைகளில் வேலை நிறுத்தம், தொழிலாளர் சங்கத்

தலைவர்களின் ஆத்திரம், பிடிவாதம், இவைகளைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. ரெயில்வேத் தொழிலாளர் சங்கத்தில் வெகு காலமாகக் தொடர்பு கொண்டிருந்து, எங்களுடன் தொழில் இலாகா மந்திரியாயிருந்த ஸ்ரீமான் வி. வி. கிரி அவர்களே வருந்தும்படி வேலை நிறுத்தங்கள் நடந்தன. அவைகளில் பெரும்பாலானவை தொழிலாளருக்குச் சாதகமான முறையில் தீர்க்கப்பட்டன. கூடியமட்டும் ஆலைச் சொந்தக்காரர்களும் ஏஜெண்டுகளும் ஒத்துழைக்க முன்வந்தார்கள். அவற்றில் இரண்டு ஆலைகளின் வேலை நிறுத்தம் கவனிக்கத் தக்கது.

மதுரை ஹார்வி மில்களில் வேலை நிறுத்தம் ஏற்பட்டது. அரசாங்கத்தாருடைய சமரசத் தீர்ப்பை முதலாளிகள் ஒப்புக்கொள்ள மறுத்து வேலை துவக்கினார்கள். ஆலையில் வேலை துவக்கக்கூடாதென 144-ஆம் எண் சட்டத்தின் கீழ்த் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது ஆலையைத் திறக்க முடியவில்லை இந்திய சரித்திரத்தில் முதல் முறையாக ஆங்கில ஏஜெண்டுகளால் நடத்தப்படும் ஆலைக்குத் தடை உத்தரவு கொடுத்த பெருமையோ சிறுமையோ சென்னைக் காங்கிரஸ் ஆட்சிக்குக் கிடைத்தது. தடை உத்தரவு பிறந்த மறுநாளே உடன்படிக்கை ஏற்பட்டுவிட்டது. தொழிலாளர்கள் தாங்களே வேலை செய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

மற்றொன்று, சென்னையில் இருந்த சூளை நூல் நூற்கும் ஆலைச்சாலை விஷயம். இதிலும் முதலாளி, தொழிலாளி சச்சரவு தான். முதலாளிகள் இந்தியர்கள், வடநாட்டினர், மார்வாரி சமூகத்தினர். இவர்களுடனும் சமரசப் பேச்சு நடந்தது. ராஜாஜியும் கிரியும் எவ்வளவோ முயன்றும் தொழிலாளர்கள் இசைய மறுத்துவிட்டார்கள். தொழிலாளர் தலைவர்களை எவ்வளவு வற்புறுத்தியும் அவர்களும் உடன்படவில்லை. தொழிலாளிகள் கேட்பதற்கெல்லாம் இணங்கினால் தாங்கள் ஆலையை லாபகரமாக நடத்தமுடியாது என்று முதலாளிகள் சொல்லிவிட்டார்கள். முதல் இரண்டு மாதம் ஆலை வேலை செய்யாமல் மூடப்பட்டது. சுமார் ஐயாயிரம் தொழிலாளர்கள் சோற்றுக்கு அவதிப்

பட்டார்கள். கடைசியாக ஆலையை மூடிவிட முதலாளி கள் முடிவு செய்தார்கள். அப்போதும் தொழிலாளிகள் இணங்க மறுத்துவிட்டார்கள். ஆலையும் அடியோடு மூடப் பட்டுவிட்டது. ஓர் இந்திய முதலாளியும் தொலைந்தார்; ஐயாயிரம் தொழிலாளர்களும் பிழைப்பற்று வாடினர். நான்கு மாதங்கள் சென்ற பிறகு தொழிலாளர்கள் முதலாளிமார் களின் நிபந்தனையை ஒப்புக்கொண்டு வேலை செய்ய முன்வந் தார்கள். ஆனால் முதலாளிகள், நான்கு மாதம் நஷ்டப்பட்ட பிறகு, இவ்வளவு தொல்லை கொடுக்கக்கூடிய தொழிலாளர் களைக் கொண்டு ஆலையை நடத்துவதைக் காட்டிலும் மூடிவிடு வதே மேல் என்று முடிவு செய்துவிட்டார்கள். ராஜாஜி எவ்வ ளவோ முயன்றும் ஆலை திறக்காமலே போய்விட்டது. தொழி லாளர்களுக்கும் இதனால் புத்தி வந்தது.

நாடு இருக்கும் நிலையில் முதலாளியை ஒழித்துவிடும் முயற்சி யால் தொழிலாளர்களுக்கு நன்மை உண்டாகாது. தொழிலா ளிகளுக்குச் சலுகை காட்டக் கூடிய ஆட்சி முறையில் முதலா ளியின் முதுகை ஒடிக்க முயலாமல், முடியும் வரையில் தங் களுக்குரிய நியாயமான ஊதியத்தை அதிகாரத்தின் செல்வாக் கைக்கொண்டு பெறவேண்டும். இந்தியக் கைத்தொழில்களை அறவே ஒழித்துவிடும் முயற்சியில் இறங்கக் கூடாது என்பதே இந்த மந்திரிசபை பெற்ற அநுபவம். இது எவ்வளவு தூரம் தொழிலாளர் சமூகத்தினர் அவர்கள் உரிமையைப் பெற உத விற்று என்பதை எளிதில் சொல்லமுடியாது. யுத்தம் காரண மாக அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, மந்திரிகள் தம் பதவியை விட்டு விலகவேண்டுமென்று தீர்மானித்துவிட்டது. அதற்கப்புறம் ஆலை வேலைநிறுத்தம் என்பதே மறைந்து போய்விட்டது.

1935-ஆம் வருஷத்துப் புதிய சீர்திருத்தத்தால் மாகாண சுய ஆட்சி கிடைத்துவிட்டதென இந்தியா மந்திரியும் அதிகார வர்க்கத்தினரும் ஓயாது பறைசாற்றினர். அவர்களது பொறுப் பற்ற தன்மையும், அறிவீனமும் காரணமாக இருக்க அதை ஒப் புக்கொள்ளாமல் மாகாண சுய ஆட்சியின் பேரில் பழியைச்

சுமத்தினார்கள். வங்காளத்தில் உணவில்லாத கோர நிகழ்ச்சிக்குப் பொறுப்பு மாகாண சர்க்கார்தாம் என்று கூசாமல் பார்லிமென்டில் சொல்லுகிறார்கள். இந்தியா மந்திரி இப்படி உளறிக்கொட்டினார். உண்மையில் மாகாண சுயஆட்சி நடத்தும் பொறுப்பு கவர்னர் ஒருவரிடமே ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. மந்திரிகளுக்கு ஓர் உத்தரவும்போட அதிகாரம் இல்லை. எல்லாம் கவர்னர் கையெழுத்தின்கீழ் நடைபெறுகிறது.

பழங்காலத்து மன்னர்களிடம் சர்வ அதிகாரமும், அவர்களுக்கு யோசனை கூறுவதற்கு அமைச்சர்களும் இருந்ததுபோலவே மாகாண சுய ஆட்சியும் நிறுவப்பட்டிருக்கிறது. சட்டசபைக்குச் சட்டம் செய்யும் அதிகாரம் இருக்கிறது. ஆனால் அந்தச் சட்டம் கவர்னரின் முத்திரை பெற்றுத்தான் சட்டமாகவேண்டும். சட்டசபையின் உதவி இல்லாமல் ஆலோசனையாளர்களைக் கொண்டு ஆட்சி நடத்தும் கவர்னர்களுக்கும், பழைய காலத்தில் ஆட்சி நடத்திய மன்னர்களுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. கவர்னர் தாமே சட்டம் செய்கிறார்; வரி விதிக்கிறார்; சட்டங்களை ரத்து செய்கிறார்; சட்டங்களையெல்லாம் கடந்து நிர்வாகம் நடத்தும் பொறுப்பையும் வகித்து நடத்துகிறார். இவ்விதமாக நடத்த 1935 - ஆம் ஆண்டு சட்டம் இடங்கொடுக்கிறது. இது ஏதோ சில காலங்களுக்கு மட்டுமே என்பதும் இல்லை. வருஷந்தோறும் பார்லிமென்ட் சபை இந்த யதேச்சாதிகாரத்தை அங்கீகரித்துத் தனது பொறுப்பைத் தீர்த்துக்கொள்ளுகிறது. இச்சட்டம் அமலில் இருந்த காலத்தில்கூட யதேச்சாதிகாரம் ஒருவாறு மறைமுகமாகவே வேலை செய்துவந்தது. இதற்கு உதாரணம் சிந்து, வங்காளம், ஒரிஸ்ஸா முதலிய மாகாணங்களில் அடிக்கடி பார்த்தோம். 1935-ஆம் ஆண்டுச் சட்டம் கவர்னரும், மந்திரிகளும், சட்டசபைகளும் ஒருமித்து நடத்தும் முறையை அடிப்படையாகக் கொண்டபோதிலும் கவர்னர் யதேச்சாதிகாரத்திற்குப் பல சந்தர்ப்பங்களும், இடமும் ஏற்படுத்தியே நிறுவப்பட்டிருக்கிறது.

சர்க்கார் காரியாலயம் இரு பிரிவாகச் சென்னையில் வேலை செய்தது. பெரும் பகுதி மந்திரிகளின்கீழ் அவரவர்களுக்கு

ீ அளிக்கப்பட்ட இலாகாக்களில் வேலை செய்தது. இது கவர்னருக்கென ஒரு தனிக் காரியாலயம் உண்டு. அதற் தனியே சிப்பந்திகளும், காரியதரிசிகளும் வைக்கப்பட்டார் கள். கவர்னர் பரிசீலிக்கவேண்டிய சகல நடவடிக்கைகளையும் பார்த்து, கவர்னருக்கு அறிவுறுத்தும் வேலையை இந்தக் காரியா லயம் மேற்கொண்டது. பல தடவை மந்திரிகளுடைய முடிவான யோசனைகளை மறுபடியும் பரிசீலனைசெய்து புதிய சிபாரிசு களை இது செய்ய நேர்ந்தது. சில சமயங்களில் விட்டுப்போனவை களைக் கவனிக்கும் முறையில் கவர்னர் கையெழுத்திட்டுத் திரும்பவும் எங்களுக்கு அனுப்பினர். இதற்கெல்லாம் இடம் கொடுத்துச் சட்டம் இயற்றப்பட்டிருந்தது.

மாகாண ஆட்சியின் பொறுப்பு முழுவதும் கவர் னரின் முடிவான அபிப்பிராயத்திற்கும் தீர்ப்புக்கும் உள் ளடங்கியது. ஆகையால் தம் இஷ்டப்பட்டபடி எந்த விஷயத்திலும் தலையிடக் கவர்னருக்கு அதிகாரம் உண்டு. ஊழியர்களின் (சர்விஸ் ஆட்கள்) நிலையைப் பரிசீலிக்க, அவர்கள் குறையை மாற்ற, நீக்க, எல்லாவற்றிற்கும் மந்திரிகளைக்காட்டிலும் மேற்பட்ட அதிகாரம் அவருடையது. இந்தச் சிக்கல் ஒழுங்காக நடைபெற அவருடைய நட்பும் நல்லுறவும் வேண்டும். பிரதம மந்திரி ராஜாஜியும், கவர்னர் எர்ஸ்கின் பிரபுவும் ஏகமனசோடு வேலை செய்ததால் அவர்க ளுடைய காரியாலயங்களும் அவர்கள் கருத்தை அறிந்து தக்க படி நடந்தன. சென்னையில் அநேகமாக இம்முறையில் ராஜாஜி யின் சிறந்த பகுத்தறிவினால் வெகு நாட்களுக்குப் பிளவு உண்டாகாமல் வேலை நடந்தது.

நாங்கள் வேலையை விடுவதற்குச் சில மாதங்களுக்கு முன்னாக, கவர்னர் காரியாலயத்தில் சில அதிகாரிகள் வேலை மாறினார்கள். மிஸ்டர் ரூதர்போர்டு துரை கவர் னரின் காரியதரிசியானார். அதன் பிறகு கவர்னர் காரியால யத்திற்கும், எங்களுக்கும் கடிதப் போக்குவரவும், சர்க்கார் கட்டுக்கள் போக்குவரவும் அதிகமாயின. விபரீதமான சில வியாக்கியானங்களும் கிளம்பின. எனினும் ராஜாஜி இவைக

ளைத் தகுந்தபடி கையாண்டு வந்ததால் நிலைமை கைமீறிவிட வில்லை. வேலை வெற்றிகரமாகவே நடைபெற்று வந்தது. நாங்கள் நிறைவேற்றப் போட்டிருந்த திட்டங்களுள் பல குறையாகவே நின்றுவிட்டன. ஸ்ரீமான் பிரகாசம் கொண்டு வரவிருந்த ஜமீன் குடிகள் சட்டம், இந்து தர்ம பரிபாலன சீர் திருத்தச் சட்டம், தொழிலாளர் சம்பந்தமான பல சட்டங்கள் எல்லாம் வெகு தூரம் வேலை நடந்திருந்தும் திடீரென்று ராஜீநாமாச் செய்ய நேரிட்டதால் நிறைவேறாமல் நின்றுவிட்டன. சட்டங்களில் விவசாயிகள் கடன் சட்டம், சுகாதாரச் சட்டம் இரண்டும் பின்வந்த கவர்னர் ஆட்சி முறையில் மாற்றி அமைக்கப்படவில்லை. ஆலயப்பிரவேசச் சட்டம் காங்கிரஸ் மந்திரிகளைத் தவிர மற்றவர்களால் நிறைவேற்ற முடியாதது; அது பல நிபந்தனைகள் கொண்டது. அவைகளைத் தாண்டுவதற்குப் பொதுமக்களின ஊக்கம், விடாமுயற்சி, ஆர்வம் எல்லாம் தேவை. யுத்த காலத்தில், சக்தி முழுவதையும் யுத்தத்தில் செலவிட வேண்டிய மனோபாவமுள்ள ஆட்சியில், அதிலும் பொதுமக்கள் ஆதரவில்லாத ஆட்சியில், இந்தச் சட்டம் நிறைவேறாது. இந்தச் சட்டத்திலுள்ள நிபந்தனைகளின் பலத்தினாலேயே பல சட்டங்களையும் திட்டங்களையும் மாற்றிய கவர்னர் ஆட்சி இந்தச் சட்டத்தைத் தொடவில்லை.

முற்றும்

*